# தமிழில் சிறு பத்திரிகைகள்




வல்லிக்கண்ணன்

# தமிழில் சிறு பத்திரிகைகள்

வல்லிக்கண்ணன்

மணிவாசகர் பதிப்பகம்
31, சிங்கர் தெரு, பாரிமுனை.
சென்னை-600108.

முதல் பதிப்பு : டிசம்பர், 2004
திருவள்ளுவர் ஆண்டு : 2035

**விலை : ரூ. 120.00**
மணிவாசகர் வெளியீட்டு எண் : 1136

**நினைவில் வாழும்**
**நிறுவனர்**
**ச. மெய்யப்பனார்**

டாக்டர் ச. மெய்யப்பன், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் முன்னாள் தமிழ்ப் பேராசிரியர்.

பல்கலைக்கழகங்கள் பலவற்றில் இவர் அறக்கட்டளைகள் நிறுவியுள்ளார்.

'வள்ளுவம்' இதழின் நிறுவன ஆசிரியர்.

குன்றக்குடி அடிகளார் '**தமிழவேள்**' என்றும், தருமபுரம் ஆதீனத் தலைவர் '**செந்தமிழ்க் காவலர்**' என்றும் விருதுகள் வழங்கிச் சிறப்பித்துள்ளனர்.

'பதிப்புச்செம்மல்' என அறிஞர்கள் இவரைப் பாராட்டுவர்.

கிடைக்குமிடம் :
**மணிவாசகர் நூலகம்**

12-B, மேல சன்னதி, சிதம்பரம்- 608001. ✆:230069
31, சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை-600108. ✆:25361039
5, சிங்காரவேலுதெரு, தி. நகர், சென்னை-600017. ✆:24357832
110, வடக்கு ஆவணி மூல வீதி, மதுரை-625001. ✆:2622853
15, ராஜ வீதி, கோயமுத்தூர்-641001. ✆:2397155
28, நந்தி கோயில் தெரு, திருச்சி-620002. ✆:2706450

அச்சிட்டோர் : மணிவாசகர் ஆப்செட் பிரிண்டர்ஸ், சென்னை – 600 021,
தொலைபேசி : 25954528

# காணிக்கை



பதிப்புச் செம்மல்

## ச. மெய்யப்பனார்

21.6.1933 - 28.6.2004

# முன்னுரை

தமிழ்ச் சிறுபத்திரிகைகளின் வரலாறு சுவாரஸ்யமான பல உண்மைகளை வெளிப்படுத்தக் கூடியது. இலட்சிய நோக்குடைய ஒரு சிலரது விடாப்பிடியான முயற்சிகளையும், மவுனப் போராட்டங்களையும், அவர்கள் ஏற்றுக்கொள்கிற சிரமங்களையும் எடுத்துக்காட்டுவது அது. அதேசமயம அவர்களது தோல்வியையும் (தோல்வி என்ற சொல் சரியில்லை என்று தோன்றினால், செயல்முடக்கம் மற்றும் செயலற்ற தன்மையையும்) இவ்வரலாறு பளிச்செனப் புலப்படுத்துகிறது.

சிறுபத்திரிகைகளின் வரலாறு முழுவதும் உற்சாகமான பத்திரிகை எழுச்சிகளையும், அவற்றின் 'சென்று தேய்ந்திறுதல்' களையும், முடிவில் 'அன்வெப்ட், அன்ஹானர்ட் அன்ட் அன்சங்' என்ற தன்மையில், அவை கவனிப்பற்று - பாராட்டுரைகளின்றி - நினைவு கூர்வாருமின்றி மறைந்து போக நேர்வதையும் கொண்டிருக்கிறது.

ஆனாலும், தெரிந்துகொண்டே கடினமான பாதையைத் தேர்ந்தெடுத்து,. குன்றாத ஊக்கத்தோடும் குறையாத தன்னம்பிக்கை யோடும், ஒன்றைச் சாதித்து முடிக்க வேண்டும் என்ற பிடிவாதத்துடனும் செயல்பட்டவர்களின் கதையாகவும் இருக்கிறது இந்த வரலாறு.

ஒவ்வொரு சிறுபத்திரிகையின் முதலாவது இதழ் வெளியிடுகிற அறிவிப்பு எவ்வளவு நம்பிக்கையை, எவ்வளவு ஆசைக் கனவுகளை, எதிர்பார்ப்புகளை எல்லாம் முழக்கமிடுகிறது! ஆனால் அவை பொய்த்துப் போகும்படி காலம் விளையாடி விடுகிறது. தன்னம்பிக்கையோடும் உற்சாகத்தோடும் உழைக்க முனைந்தவர்களின் செயல்பாடுகள் பலவும் மறதிப்பாழில் மக்கிப் போகின்றன.

அது நியாயமில்லை, ஏதோ ஒரு உத்வேகத்தில் பணிபுரியத் துணிந்தவர்களின் சோதனைகள் மற்றும் சாதனைகள் குறித்து, அவர்களுக்குப் பின்வருகிறவர்கள் - அதே பாதையில் நடைபோட வேண்டும் என்று ஆசைப்படுகிறவர்கள் - தெரிந்துகொள்ள வேண்டியது அவசியம் ஆகும். அவர்களது செயல் முயற்சிகளை ஓரளவுக்காவது பதிவு செய்ய வேண்டியதும் அவசியம்தான்.

இந்த எண்ணத்தோடுதான் நான் 'தமிழில் சிறு பத்திரிகைகள்' கட்டுரைத் தொடரை எழுதலானேன். 'தீபம்' பத்திரிகை எனக்குத் தாராள இடம் தந்தது.

என விருப்பம் போல், கட்டுப்பாடின்றி, எழுதுவதற்கு 'தீபம்' ஆசிரியர் நா. பார்த்தசாரதி இடம் தந்திராவிட்டால் 'சரஸ்வதி காலம்', 'புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும்', 'பாரதிக்குப்பின் தமிழ் உரை நடை', 'தமிழில் சிறு பத்திரிகைகள்' ஆகிய பயனுள்ள கட்டுரை வரிசைகள் பிறந்திருக்க மாட்டா. அமரர் நா. பா. அவர்களுக்கும், 'தீபம்' இதழுக்கும் என் நன்றி என்றும் உண்டு.

இது தமிழில் வெளிவந்த சிறுபத்திரிகைகள் அனைத்தையும் பற்றிச் சொல்கிற முழுமையான வரலாறு இல்லை. என் கவனிப்பை ஈர்த்து, என் உள்ளத்தில் பதிவுகளை ஏற்படுத்திய, முக்கியமான பத்திரிகைகள் பற்றிய தகவல்களே இவை. கனமும் ஆழமும் கொண்ட புதுமையான சோதனை முயற்சிகள் பல எனக்குத் தெரியவராமலே போயிருக்கலாம். அப்படி விடுபட்டிருக்கக் கூடியவற்றுக்கு எனது அறியாமைதான் காரணம் ஆகும். மற்றப்படி அத்தகைய முயற்சிகளை அலட்சியப்படுத்துவதோ, புறக்கணிப்பதோ என் எண்ணமில்லை என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

அந்தக் குறையை இப்போது மணிவாசகர் பதிப்பகம் தீர்த்து வைக்கிறது. இதை அழகான நூல் வடிவில் கொண்டுவரும் மணிவாசகர் பதிப்பகத்துக்கும், அன்புடன் உதவிய நினைவில் வாழும் பதிப்புச்செம்மல் ச. மெய்யப்பனார் அவர்களுக்கும் என் நன்றி.

**வல்லிக்கண்ணன்.**

# உள்ளுறை

# அறிமுகம்

இலக்கிய ஈடுபாடு உள்ளவர்களுக்கும், தரமான வாசகர்களுக்கும் சிறு பத்திரிகை என்ற சொல் எதைக் குறிக்கிறது என்பது நன்கு புரியும்.

ஜனரஞ்சகமான, அதிக விநியோகம் உள்ள, பெரிய முதலீட்டுடன் பெரும் அளவில் நடத்தப்படுகிற, வியாபார ரீதியான பத்திரிகைகளுக்கு முற்றிலும் மாறானவை சிறு பத்திரிகைகள். Little Magazines எனும் ஆங்கிலச் சொல்லின் தமிழாக்கம்தான் இது.

சிறு பத்திரிகைகள் லட்சியப் பிடிப்பும் கொள்கையில் உறுதியும், சோதனை முயற்சிகளில் ஈடுபாடும், புதுமைகளை வரவேற்பதிலும் வளர்ப் பதிலும் உற்சாகமும், புதிய திறமைகளைக் கண்டு ஊக்கம் தருகிற போக்கும் கொண்டவை.

சிறு பத்திரிகைகள் ஆயிரக்கணக்கில் கூட விநியோகம் பெறுவ தில்லை. பெற முடிவதும் இல்லை. அநேகப் பத்திரிகைகள் சில நூறு பிரதிகளை மட்டுமே சர்க்குலேஷனாகக் கொண்டு வாழ்ந்து, சாதனைகள் புரிந்திருக்கின்றன.

சந்தா பலத்தை நம்பி, எதிர்பார்த்து, ஆரம்பிக்கப்பட்டாலும் கூட, நாளடைவில் சிறு பத்திரிகைகளுக்குப் போதுமான சந்தா பலமும் இல்லா மல் போய்விடுவதே நடைமுறை. ஆகவே, தனி நபர் ஒருவர் அல்லது ஒரே ரகமான நோக்கும் போக்கும் உள்ளவர்களாகக் கருதிக்கொள்கிற தனிநபர்கள் ஒரு சிலரின், உழைப்பையும் உற்சாகத்தையும் பொருள் உதவியையும் கொண்டுதான் சிறு பத்திரிகைகள் வாழ்ந்து வளர வேண்டியிருக்கின்றன. இவர்களது பொருள் பலம் தொடர்ந்து ஊட்டம் கொடுக்க இயலாமல் போகிறபோது பத்திரிகைகள் மெலிகின்றன; மெல்லத் தேய்கின்றன; காலம் கடந்து தோன்றுகின்றன; இறுதியில் மறைந்தும் போகின்றன.

தனிநபர் நடத்துகிற பத்திரிகை என்றால், அவருக்கு உற்சாகமும், பிடிவாதமும், பணத்தை எப்படியாவது தேடிப் பத்திரிகையில் ஈடுபடுத்து கிற தெம்பும், நஷ்டத்தைத் தொடர்ந்து தாங்கிக் கொள்கிற திராணி யும் இருக்கிற வரை அந்தச் சிறு பத்திரிகை நீண்ட காலம் நீடிக்க முடிகிறது.

தனிநபர் நிர்வகிக்கிற சிறு பத்திரிகையில் சௌகரியங்களும் உண்டு; அசௌகரியங்களும் உண்டு. பத்திரிகை நடத்துகிறவர் விசால நோக்கும், பிறரது கருத்துக்களை மதிக்கும் இயல்பும், திறமையாளர்களின் நட்பையும் ஒத்துழைப்பையும் தொடர்ந்து பெறக்கூடிய சாதுரியமும், தனது எண்ணங்களையும் ( கலை, இலக்கிய, அரசியல் மற்றும் பல்வேறு ) கொள்கைகளையும் மட்டுமே வலியுறுத்திக் கொண்டிருக்கிற வறட்டுப் பிடிவாதம் இல்லாத சுபாவமும் பெற்றிருந்தால், அவருடைய பத்திரிகை பலரது ஒத்துழைப்பையும் பெறுவது சாத்தியமாகிறது. நன்மைகள் புரியவும் முடிகிறது.

அப்படி இல்லாது போனால்—ஆசிரியர் குறுகிய நோக்குடனேயே விஷயங்களைக் கவனிப்பவராக இருந்தால், பிறரது கருத்துக்களுக்கு மதிப்பு கொடுக்காமலும், மற்றவர்களது திறமையை ஏற்றுக் கொள்ளாமலும் தனது நோக்கும் கொள்கைகளுமே சரியானவை ( இலக்கியத்தை வளம் செய்யக் கூடியவை ) என்ற நம்பிக்கையோடு செயல் புரிபவராக இருந்தால், ஆரம்பத்தில் பத்திரிகைக்குக் கிடைத்த அன்பர்களையும் ஆதரவாளர்களையும் அந்தப் பத்திரிகை இழந்து விடுகிறது. அந்தப் பத்திரிகை ஆசிரியரின் நண்பர்களே விரோதிகளாகவும் பரிகசிப்பவர்களாகவும் மாறிவிடுகிறார்கள்.

ஒரு சிறு பத்திரிகையின் அன்பர்களும் ஒத்துழைப்பாளர்களும் அந்தப் பத்திரிகையின் போக்கில் அதிருப்தி கொள்கிறபோது தனிக் குழுவாய்ப் பிரிந்து தனியாக ஒரு சிறு பத்திரிகை தொடங்குவதும், பின்னர் அந்தக் குழுவிலிருந்து விலகிச் சிலபேர் வேறு சிலரோடு கூடி இன்னொரு பத்திரிகை ஆரம்பிப்பதும் சிறு பத்திரிகை வரலாற்றில் சகஜ நிகழ்ச்சிகள். இத்தகைய பத்திரிகைகளின் ஆயுசு ஒன்றிரண்டு இதழ்கள் அல்லது ஒரு வருடம், இரண்டு வருடம் என்றே அமைகிறது.

தனித் தனி கோஷ்டிக்கு என்றும், ஊருக்கு ஊர் என்றும், அவ்வப் போது சிறு பத்திரிகைகள் தமிழ்நாட்டில் நிறையவே தோன்றின. வந்த வேகத்தில் மறைந்தும் போயின.

அவற்றில் பல எந்தவிதமான பாதிப்பையும் ஏற்படுத்தி விடவில்லை. எழுத முயன்ற சில இளைஞர்கள்— நாங்களும் எழுத்தாளர்கள் என்று நிரூபிக்க ஆசைப்பட்ட சில ஆரம்ப சூரர்கள்—தங்கள் மன அரிப்பைச் சொறிந்து கொள்ள ஏற்பட்ட தற்காலிக சாதனங்களாகவே அவை முடிந்துள்ளன.

போட்டி உணர்ச்சியாலும், பொறாமை காரணமாகவும், தாக்க வேண்டும் என்ற துடிப்பினாலும், நம்மாலும் சில சாதனைகள் புரிய முடியும் என்ற கம்பீர ஜன்னியின் விளைவாகவும், அவனும் இவனும்

பத்திரிகை போடுறானே— நாமும் நம்ம ஊரிலேயே ஒரு பத்திரிகை நடத்தலாமே என்ற தினவினாலும் இன்னோரன்ன பலதரப்பட்ட உந்துதல் களினாலும் சிறு பத்திரிகைகள் தமிழில் பிறந்துள்ளன; பிறக்கின்றன. சில சீசன்களில் அதிகமாகவும் சில காலகட்டங்களில் அபூர்வமாகவும் தலைகாட்டுகின்றன. எப்படியோ, எல்லாக் காலத்திலும் இந்தவித முயற்சி கள் நடந்து கொண்டுதான் வருகின்றன.

இவ்வித முயற்சிகளில் பெரும்பாலானவற்றையும் கவனிக்கையில், அவற்றில் அநேகம் பேப்பர் வியாபாரிக்கும், அச்சாபீஸ்காரருக்கும், பிசினஸ் தேடிக் கொடுத்த முயற்சிகளாகவே முடிந்துள்ளதை உணர இயலும். பல, காகிதத்துக்கும் காசுக்கும், மனித உழைப்புக்கும் நேரத்துக் கும், படிப்பவரின் காலத்துக்கும் ஏற்பட்ட ( நஷ்டங்கள் ) கேடுகள் என்று கணக்கிடப் பெறவேண்டிய தன்மையில்தான் உள்ளன.

இலக்கியத்தில் பல்வேறு துறைகளின் வளர்ச்சிக்கும் வளத்துக்கும், கனமான சிந்தனைகள் பரவுவதற்கும், திறமைசாலிகள் தங்கள் திறமை களை வளர்த்துக் கொள்வதற்கும்— இப்படிப்பட்ட பல முயற்சிகளுக்கும் சிறு பத்திரிகைகள் நன்கு உதவ முடியும்; உதவியும் இருக்கின்றன.

சிலருடைய திறமை முளையிட்டு புஷ்டியோடு வளர்வதற்குத் துணை புரியும் நாற்றங்கால்களாகச் சிறு பத்திரிகைகள் விளங்கியிருப்பதையும் வரலாறு காட்டுகிறது.

இலக்கியத்துக்கு மட்டுமல்லாது, பல்வேறு கலைகளுக்கும் அறிவியல் துறைகளுக்கும் அரசியல், பொருளாதாரம் மற்றும் தொழில் பிரிவுகளுக் கும் சிறு பத்திரிகைகள் தோற்றுவிக்கப்பட்டிருக்கின்றன.

ஆனாலும், 'தமிழில் சிறு பத்திரிகைகள்' என்ற தலைப்பில் நான் இலக்கியப் பத்திரிகைகளை மட்டுமே கவனத்தில் கொள்கிறேன்.

இவ்வாறு எல்லையை வெகுவாகக் குறுக்கிக் கொண்டு விட்டாலும் கூட, இதைக் குறைவறச் செய்து முடிப்பது சிரமங்கள் நிறைந்த காரியமே ஆகும். தமிழ்ப் பத்திரிகைகளின் முறையான வரலாறு எதுவும் தொகுத்து எழுதப்படவில்லை. பலவிதமான பத்திரிகை முயற்சிகள் பற்றிய குறிப்புகளும் கிடைக்க வழியில்லை. பத்திரிகைகளைச் சேகரித்துப் பாது காக்கும் நிறுவனங்கள், நிலையங்களும் தமிழ்நாட்டில் இல்லை.

புகழ்பெற்ற நூல் நிலையங்கள்கூடத் தமிழ்ப் பத்திரிகைகளை நல்ல முறையில் பாதுகாத்து வைக்கவுமில்லை. வரலாற்றுச் சிறப்புப் பெற்ற

பெரிய பெரிய பத்திரிகைகளே பரிதாபப்படும்படியான நிலையில் அலட்சிய மாகவும் அக்கறையில்லாமலும் போட்டு வைக்கப்பட்டிருக்கிற பெரிய நூல் நிலையங்களில் இலக்கியப் பத்திரிகைகள் ஒரு மூலையில்கூடச் சிறு இடம் பெறாதது வியப்புக்கு உரிய விஷயம் இல்லைதான். இந்நிலையில், 'சிறு பத்திரிகைகள்' அங்கே சேகரித்து, பாதுகாக்கப்பட வேண்டும் என்று எதிர்பார்ப்பது வீண் நினைப்பேயாகும்.

இருப்பினும், என்னால் இயன்றதைச் செய்யலாமே என்றுதான் இம்முயற்சியில் ஈடுபடுகிறேன்.

# 2. சில முன்னோடிகள்

மொழியில் மறுமலர்ச்சி ஏற்படுத்தவும், இலக்கியத்தில் புதுமையும் வளமும் சேர்க்கவும் விரும்பும் படைப்பாளிகள், தங்கள் சோதனை முயற்சிகளை எல்லாம் பிரசுரிப்பதற்குத் தங்களுக்கென்று தனிப் பத்திரிகை தேவை என்று கருதுவது இயல்பாக இருந்து வருகிறது. வசதி உள்ள வர்கள் ஏதாவதொரு காலகட்டத்தில் சொந்தமாக ஒரு பத்திரிகையைத் தொடங்கி நடத்துவதும், அதுவே பெரும் சோதனையாக அமைந்து விடுவதும் நியதியாக அமைந்துள்ளது.

சொல்லில், பொருளில், சொல்லும் முறையில் புதுமைகள் சேர்ப்ப தில் ஆர்வம் கொண்டிருந்த மகாகவி சுப்பிரமணிய பாரதியார் 'இந்தியா', 'சக்கிரவர்த்தினி' என்ற பத்திரிகைகளை நடத்தினார்.

தமிழ் நாவலுக்கு முதன் முதலாக இலக்கிய அந்தஸ்து அளித்த படைப்பாளி எனும் சிறப்பைப் பெற்றுள்ளவர் பி. ஆர். ராஜமையர். 'கமலாம்பாள் சரித்திரம்' என்ற நாவலை எழுதிய அவர் 'விவேக சிந்தா மணி' என்றொரு பத்திரிகையை நடத்தியிருக்கிறார். அதில் அவர் தொடர்கதை, கட்டுரைகள் முதலியன எழுதினார்.

ராஜமையர் காலத்திலேயே வாழ்ந்து, 'பத்மாவதி சரித்திரம்' நாவலை எழுதிப் புகழ்பெற்ற பெருங்குளம் ஆ. மாதவையா சமூக சீர்திருத்த நோக்குடன் வேறு பல நாவல்களும் 'குசிகர் குட்டிக் கதை' களும் எழுதி னார். தமது எழுத்துக்களைப் பிரசுரிப்பதற்காக அவர் 'பஞ்சாமிர்தம்' என்ற பத்திரிகையை நடத்தினார். இது 1924–ல் பிரசுரமாயிற்று என்று தெரிகிறது.

தமிழ்ச் சிறுகதைக்கு முக்கிய வடிவம் தந்த முதல்வரும், தமிழ் இலக்கிய விமர்சனத்தின் முன்னோடியுமான வ. வே. சு. ஐயர் உலக இலக்கியங்களில் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தார். உலக இலக்கியங்களைத் தமிழ்நாட்டினருக்கு அறிமுகப்படுத்துவதற்காகவும், தமிழிலும் மேல்நாட்டு இலக்கியங்களுக்கு இணையாகக் கூடிய படைப்புக்களை ஆக்க வேண்டும் என்ற ஆசையோடும் அவர் 'பால பாரதி' என்ற பத்திரிகையைத் தொடங்கி நடத்தினார்.

வ. வே. சுப்பிரமணிய ஐயர் நாட்டின் விடுதலைக்குப் பாடுபடுவதைத்

தமது முக்கிய லட்சியமாகக் கொண்டிருந்தார். அதே அளவுக்கு, தமிழ் மறுமலர்ச்சியிலும், இலக்கியம், கலைகள் வளர்ச்சியிலும் அவர் அக்கறை காட்டினார்.

இந்நோக்கங்களைச் செயல்படுத்தும் திட்டத்தோடு அவர் சேர்மா தேவியில் குருகுலம் நிறுவினார். அங்கிருந்துதான் 'பாலபாரதி' வெளி வந்தது. (சேர்மாதேவி என்ற ஊரின் சரியான பெயர் 'சேரன்மாதேவி' ஆகும் ).

" தனது இணையற்ற பேராற்றல் குலைந்து போயிருக்கும் தமிழுக்கு அதன் இயற்கையான முதன்மை ஸ்தானத்தைத் தந்து, புராதனக் கலை களைப் போலவே இக்காலத்துக் கலைகளுக்கும் அதைப் பெரியதோர் நிலையமாக ஆக்க வேண்டுமென்பதும், மக்களுக்குப் பூரணமான கல்வி—அதாவது, இலக்கியக் கல்வியோடு விசுவ கர்ம கலைகளும் கற்பிக்க வேண்டுமென்பதுமே. அந்நோக்கத்திற்கேற்ப, இப்பத்திரிகையில் சீனத்தினின்று பெருதேசம் வரையிலுள்ள சகல நாடுகளிலும் பூத்த இலக்கியங்களைப் பற்றிய ஆராய்ச்சிகளை வெளிப்படுத்த முயலுவோம். புதிய கதைகளையும், உயர்ந்த பாஷாந்திரங்களையும் கலாப்பிரியர் ஆனந்திக்கும்படி இப்பத்திரிகை தாங்கி நிற்கும் " என்று ஐயர் அறிவித் துள்ளார். பழைய இலக்கியங்களில் ஆர்வம் காட்ட வேண்டிய அவசியத் தையும் அவர் வலியுறுத்தினார்.

இப்பத்திரிகைகள் எல்லாம் சிலகாலமே வெளிவந்தன. பரவலான விநியோகம் பெற்றிருக்கவுமில்லை. எனினும், எந்த நோக்கத்துக்காக அவை தோன்றினவோ, அதை இறுதிவரை செயல்படுத்தி வாழ்ந்தன.

இப்பத்திரிகைகளின் ஒன்றிரு இதழ்கூட இப்போது யாரிடமாவது இருக்குமா என்பது சந்தேகம்தான்.

'விவேக சிந்தாமணி' இதழை நான் பார்த்ததில்லை. 'பஞ்சாமிர்தம்' பத்திரிகையின் ஒன்றிரு இதழ்களையும் 'பால பாரதியின்' இதழ்கள் பலவற்றையும் பார்க்கவும் படிக்கவும் எனக்கு 1936—ல் வாய்ப்பு கிட்டியது.

'பாலபாரதி' இலக்கியத் தரமான பத்திரிகையாக இருந்தது. கதை, இலக்கியம் பற்றிய கட்டுரைகள் என்று பல்வேறு விஷயங்களும் அதில் இடம் பெற்றிருந்தன.

அடுத்து 'சுதந்திரச் சங்கு' என்ற பத்திரிகையைக் குறிப்பிட வேண்டும். சங்கு சுப்பிரமணியன் அதன் ஆசிரியர். 1930களின் ஆரம்ப வருடங்களில், காலணா விலையுள்ள வாரப் பத்திரிகையாக அது வளர்ந்தது.

காந்திய லட்சியத்துடன், தேச விடுதலைப் போராட்டத்தில், 'சங்கு' தீவிர மான பங்கு ஆற்றியது. விறுவிறுப்பும் வேகமும் நிறைந்த கட்டுரைகளே அதில் வந்து கொண்டிருந்தன. அதன் விளைவாக, பிரிட்டிஷ் ஆட்சியின் அடக்குமுறைக்கு அது இலக்காயிற்று.

பின்னர், 1932–ல் 'சுதந்திரச் சங்கு' மீண்டும் தோன்றியது. "தமிழ்த் தொண்டுதான் சங்குக்கு மூச்சு" என்று அறிவித்து வளர்ந்த அது மாதம் இருமுறை வெளிவந்தது. தி. ஜ. ரங்கநாதன் ( தி. ஜ. ர. ) அதன் துணை ஆசிரியராகப் பணியாற்றினார்.

சமூகப் பிரச்னைகள் பற்றிய கட்டுரைகள், சிந்தனைகள், 'சங்கு' வில் இடம் பெற்றிருந்தன. வ. ரா., . ந. பிச்சமூர்த்தி, கு. ப. ராஜகோபா லன், சிட்டி ஆகியோர் அதில் தொடர்ந்து எழுதியிருக்கிறார்கள். புதுமைப்பித்தனின் ஆரம்பகாலக் கதைகள் சிலவும் அதில் இடம் பெற்றுள்ளன. சி. சு. செல்லப்பாவின் கதை 'சுதந்திரச் சங்கு' வில்தான் பிரசுரமாயிற்று. அதன் பிறகு அவ்வப்போது அவர் அதில் கதை எழுதி யுள்ளார்.

'சுதந்திரச் சங்கு' என்ற இலக்கியப் பத்திரிகையில் முக்கியமாகக் குறிப்பிடப்பட வேண்டியது அதன் 'ஆசிரியர் பக்கம்' ஆகும். 'சங்கு' ஆசிரியர் புதிய எழுத்தாளர்களுக்கு ஊக்கம் அளித்து உற்சாகம் ஊட்டி னார். திறமையைக் கண்ட இடத்து, அதை வரவேற்றுப் பாராட்டி அதன் வளர்ச்சிக்கு உதவும் வகையில் யோசனைகள் கூறி ஆதரித்தார். தமிழ்ச் சிறுகதைகளின் வளர்ச்சிக்கான ஆலோசனைகள், உரைநடை பற்றிய கருத்துக்கள், கட்டுரை சம்பந்தமான சிந்தனைகள் – இப்படிப் பலவகை களிலும் பயனுள்ள விஷயங்களை ஆசிரியர் பக்கம் எடுத்துச் சொன்னது. சங்கு சுப்பிரமணியமும் தி. ஜ. ர. வும் இத்தகைய எண்ணங்களை எழுதி வழிகாட்டியிருக்கிறார்கள்.

1930களின் ஆரம்ப கட்டம் அரசியல் விழிப்பு மிகுந்திருந்த காலம். மகாத்மா காந்திஜியின் ஒத்துழையாமை இயக்கம் மும்முரமாக நடை பெற்றுக் கொண்டிருந்தது. அரசியல் போராட்டத்துடன் சமூகச் சீர்திருத்த மும் மொழி வளர்ச்சியும் வலியுறுத்தப்பட்டன.

அந்தக் காலகட்டத்தில் இந்திய நாட்டின் பல மொழிகளிலும் மறு மலர்ச்சி வேகம் பெற்றிருந்தது. அதற்காகப் பல பத்திரிகைகள் பாடுபட் டன. தமிழிலும், 'சுதந்திரச் சங்கு' வுடன் 'காந்தி', 'ஜெயபாரதி' போன்ற சிறு பத்திரிகைகள், காலணா விலையில் மக்களைத் தொட முயன்று வந்தன.

அந்தக் காலகட்டத்தில்தான் 'மணிக்கொடி' என்ற வார இதழும் தோன்றியது. 1933 செப்டம்பர் 17–ம் தேதி பிறந்த வார ஏடு 'மணிக்கொடி' அரசியல் பத்திரிகையாகத்தான் செயலாற்றியது. ஆரம்பத்தில் கே. சீனி வாசன், வ. ரா., டி. எஸ். சொக்கலிங்கம் ஆகியோரின் கூட்டு முயற்சியால் அது இயங்கியது.

வார இதழின் ஆரம்பகாலத்தில் கட்டுரைகளுக்கே முக்கியத்துவம் அளிக்கப்பட்டு வந்தது. வ. ரா., டி. எஸ். சொக்கலிங்கம், சீனிவாசன் கட்டுரைகள் புதுமையாகவும் சிந்தனை வேகத்துடனும் அமைந்தன. தமிழில் புது முயற்சியான 'நடைச்சித்திரம்' என்பதை வ. ரா. இதில் தொடர்ந்து எழுதினார்.

வாழ்க்கையில் காணப்படுகிற பல தொழில்துறை நபர்களையும் பற்றிய விவரணைச் சித்திரங்கள் இவை. அங்காடிக் கூடைக்காரி, மார்க்கட் மாணிக்கம், காவல் காத்தான், கான்ஸ்டபிள் சுப்பையா, தரகர், ஓட்டல் சிப்பந்தி என்று பலரையும் பற்றிய சுவாரஸ்யமான சொல்லோவி யங்கள். இவை பின்னர் 'நடைச்சித்திரம்' என்ற தொகுப்பாக வெளி யிடப்பட்டன. அப்புறம், பல வருஷங்களுக்குப் பிறகு, இவைதான் 'வாழ்க்கைச் சித்திரம்' என்று மறுபதிப்பாகப் பிரசுரம் பெற்றுள்ளன.

சிட்டி, ந. ராமரத்னம், கு. ப. ராஜகோபாலன், ந. பிச்சமூர்த்தி முதலி யோர் முதலில் கட்டுரைகளே எழுதினார்கள். கால ஓட்டத்தில் 'மணிக் கொடி' வார ஏடும் சிறுகதைகளுக்கு இடம்தர முன்வந்தது.

பின்னர், பத்திரிகையின் கூட்டுப் பொறுப்பாளர்களிடையே கருத்து வேறுபாடு ஏற்படவும் 'மணிக்கொடி' நிற்க நேரிட்டது. "மணிக்கொடி என்ற இலட்சியக் கூடாரம் மன வேறுபாடு என்ற பெருங்காற்றினாலே டோராத் துணி காற்றோடு போக, முளைகளும் பிய்த்துக்கொண்டன" என்று கே. சீனிவாசன் சொன்னதாக, பி. எஸ். ராமையா 'மணிக்கொடி காலம்' கட்டுரைகளில் குறிப்பிட்டிருக்கிறார்.

அதன் பிறகு, 1935 மார்ச் முதல்– பி. எஸ். ராமையாவின் பெரும் முயற்சியால், 'மணிக்கொடி' கதைப் பத்திரிகையாக வெளிவந்தது. சாதனைகள் புரிந்த அதன் வளர்ச்சி தனி வரலாறு ஆகும்.

# 3. மணிக்கொடி

காரைக்குடியிலிருந்து 1930 களில் 'ஊழியன்' என்ற பத்திரிகை வந்து கொண்டிருந்தது. 'ராய. சொ.' அதன் ஆசிரியர் ( ராய. சொக்க லிங்கம் அவரது முழுப் பெயர்). பெரிய அளவில் நடந்து கொண்டிருந்த பத்திரிகை அது. பத்திரிகையின் சைசும் பெரிதுதான்.

ஈ. சிவம் என்பவர் 'ஊழியன்' துணை ஆசிரியராகப் பணியாற்றி னார். ஒரு சந்தர்ப்பத்தில், புதுமைப்பித்தன் 'ஊழியன்' பத்திரிகையில் வேலை பார்ப்பதற்காகப் போய்ச் சேர்ந்தார். ஆனால், சீக்கிரமே சென்னைக்குத் திரும்பிவிட்டார். 'ஏன் ஊழியன் வேலையை விட்டுவிட்டீர் கள்?' என்று நண்பர் கேட்டபோது, ஈ. சிவம் எறும்பு சிவம் ஆக அரித் துப் பிடுங்கிவிட்டார். என்னால் ஊழியனில் வேலை பார்க்க முடியவில்லை' என்று பு. பி. சொன்னார்.

ரகுநாதன் எழுதிய 'புதுமைப்பித்தன் வரலாறு' நூலில் இத்தகவல் காணப்படும்.

கு. ப. ராஜகோபாலனும் சில பத்திரிகைகளில் பணிபுரிந்து பார்த் தார். ந. பிச்சமூர்த்தி அந்தக் காலத்திய பத்திரிகைகளில் எழுதிக் கொண்டிருந்தார்.

இப்படி, ஆர்வமும் உற்சாகமும், உழைப்பும் ஊக்கமும் பெற்றிருந்த எழுத்தாளர்கள் தங்கள் திறமையை வெளிப்படுத்துவதற்கு ஏற்ற தகுதி யான ஒரு அரங்கத்தைத் தேடிக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு, தக்க தருணத்தில் காலம் அமைத்துக் கொடுத்த இலக்கிய அரங்கம் ஆயிற்று, கதைக் கலைக்காகவே தன்னை அர்ப்பணித்துக் கொண்ட 'மணிக்கொடி' என்ற மாதம் இருமுறை வெளியீடு.

அரசியல் மற்றும் சமூக விஷயங்களுக்கும், கட்டுரைகளுக்கும் அதிக முக்கியத்துவம் அளித்து வந்த 'மணிக்கொடி' வாரப் பதிப்பு 1935 ஜனவரி யில் நின்று விட்டது. பி. எஸ். ராமையா தீவிரமாக முயன்று, 1935 மார்ச் மாதம் முதல் 'மணிக்கொடி'யை மாதம் இருமுறை பத்திரிகையாகக் கொண்டு வந்தார்.

மணிக்கொடி வார இதழ் பெரிய அளவில் வந்து கொண்டிருந்தது. கதைப் பத்திரிகை புத்தக வடிவம் ஏற்று, ( டிம்மி சைஸ், கலைமகள்

அளவு) ஆர்ட் அட்டை, பல வர்ண அட்டைச் சித்திரம் எல்லாம் கொண்டு வெளிவந்தது.

மணிக்கொடி வாரப் பத்திரிகையின் முக்கியஸ்தர்களில் ஒருவரான டி. எஸ். சொக்கலிங்கம் அந்நாட்களில் 'காந்தி' என்றொரு பத்திரிகை நடத்தினார். 'சுதந்திரச் சங்கு' மாதிரி காலணாப் பத்திரிகை. அரசியல் வேகமும் விறுவிறுப்பும் நிறைந்த விஷயங்கள் அதில் வந்தன. இதர ரகக் கட்டுரைகளும் கதைகளும் உண்டு. அந்த 'காந்தி' மணிக்கொடி யுடன் இணைக்கப்பட்டுள்ளதாக மணிக்கொடியின் ஒவ்வொரு இதழிலும் அச்சிடப்பட்டு வந்தது.

மணிக்கொடியின் அமைப்பும் உள்ளடக்கமும், நோக்கும் போக்கும் முற்றிலும் மாறுபட்டுவிட்ட போதிலும், அது பழைய வாரப் பதிப்பின் தொடர்ச்சியாகவே கணக்கிடப்பட்டது. கதைப் பத்திரிகையின் முதல் இதழ் 'கொடி 3, மணி 1' என்று இலக்கம் பெற்றிருந்தது.

இந்த முதல் இதழில் புதுமைப்பித்தனின் 'துன்பக்கேணி', சி. சு. செல்லப்பாவின் 'ஸரஸாவின் பொம்மை', பி. எஸ். ராமையாவின் 'புலியின் பெண்டாட்டி', சங்கு சுப்பிரமணியனின் 'வேதாளம் சொன்ன கதை' முதலியன பிரசுரம் பெற்றன.

தமிழில் சிறுகதைக்கு என்று தனியாக ஒரு பத்திரிகை இல்லாத குறையை நீக்குவதற்காகவும், பிற நாட்டவர் கண்டு போற்றும்படியான உயர்ந்த கதைகளை எழுதக்கூடிய தமிழ் எழுத்தாளர்களை வெளிப்படுத் தவும், 'மணிக்கொடி' தோன்றியுள்ளது என்று பி. எஸ். ராமையா முதல் இதழில் குறிப்பிட்டிருக்கிறார்.

இந்தச் சாதனையை மணிக்கொடியின் பிந்திய இதழ்கள் செய்து காட்டின. புதுமைப்பித்தன், ந. பிச்சமூர்த்தி, கு. ப. ராஜகோபாலன், பி. எஸ். ராமையா, ந. சிதம்பரசுப்பிரமணியன், பெ. கோ. சுந்தரராஜன் (சிட்டி), சி. சு. செல்லப்பா, மௌனி ஆகிய படைப்பாளிகளின் சிறந்த கதைகள் பலவற்றை மணிக்கொடி வெளியிட்டுள்ளது. பின்னர் க. நா. சுப்ரமண்யமும் இக்குழுவில் சேர்ந்தார். கி. ரா., எம். வி. வெங்கட்ராம், ஆர். சண்முக சுந்தரம், லா. ச. ராமாமிர்தம் முதலிய படைப்பாளிகளை அறிமுகப்படுத்திய பெருமையும் மணிக்கொடிக்கு உண்டு.

பிச்சமூர்த்தியின் 'தாய்' என்ற கதையைப் பிரசுரித்தது பற்றிக் குறிப்பிடும்போது, பி. எஸ். ராமையா இவ்வாறு எழுதுகிறார்—

'பிச்சமூர்த்தியின் தாய் என்ற கதை மிகமிக உயர்ந்த தரத்தில் உள்ளது. அந்தத் தரத்துச் சில கதைகளை வெளியிட வாய்த்ததிலேயே

மணிக்கொடி கதைப் பதிப்பு முயற்சி ஒரு சாதனையாக நிறைவு பெற்று விட்டது என்பது என் கருத்து. மணிக்கொடி காலம் என்பதற்கு அந்த மாதிரி இலக்கியத்தரமான கதைகள் எழுதப்பட்ட ஒரு காலகட்டம் என்று பொருள் கொள்ளலாம் என்று தோன்றுகிறது ('மணிக்கொடி காலம்').

'மணிக்கொடி' வெளிவந்த காலத்தில் இதர பத்திரிகைகளும் சிறு கதைகளை வெளியிட்டுக் கொண்டுதான் இருந்தன. வெற்றிகரமாக வளர்ந்து கொண்டிருந்த 'ஆனந்த விகடன்' கதைகளுக்கு அதிக இடம் அளித்தது. கட்டுரைகள், ஆராய்ச்சிகளுக்கு முக்கியத்துவம் அளித்து வந்த 'கலைமகள்' ஒவ்வொரு இதழிலும் சில கதைகளைப் பிரசுரித்தது. நாளிதழ்களும் மற்றுமுள்ள பத்திரிகைகளும் கதைகளுக்கு வரவேற்பு அளித்தன. ஆனாலும், மணிக்கொடி போன்ற தனித்தன்மை உள்ள ஒரு பத்திரிகை காலத்தின் தேவையாக இருந்தது.

இது குறித்துப் புதுமைப்பித்தன் 'ஆண்மை' என்ற சிறுகதைத் தொகுப்பின் முன்னுரையில் திட்டவட்டமாகக் கூறியிருக்கிறார்—

'மணிக்கொடி பத்திரிகையானது வெளிவரும் முன்பு எத்தனையோ இலக்கியப் பத்திரிகைகள் இருக்கத்தான் செய்தன. ஆனால், புதிய பரிசீலனைகளுக்கு இடம் கொடுக்கும்— உற்சாகம் ஊட்டும்— வரவேற்கும்— பத்திரிகைகள் அதற்கு முன்போ பின்போ கிடையாது.'

'ஆனந்த விகடன்' மூலம், 'கல்கி' ரா. கிருஷ்ணமூர்த்தி இன்பமூட்டும் சிறுகதைகளை— வாழ்க்கையின் மேலோட்டமான அம்சங்களை இனிமையாக, அழகாக, சந்தோஷம் தரும் விதத்தில் சித்திரிக்கும் ஆழமற்ற கதைகளை— பிரபலப்படுத்தி வந்தார். 'கலைமகள்' மிதவாத நோக்குடன் கதைகளைப் பிரசுரித்து வந்தது.

உலக இலக்கியங்களை ஆங்கிலத்தின் மூலம் நன்கு அறிந்திருந்த திறமையாளர்கள் இலக்கியத்தரமான சிறுகதைகளை— கதைக்கலையின் பல்வேறு தன்மையான படைப்புகளை— வாழ்க்கையின் அடிமட்டம் வரை ஆழ்ந்து அலசிப் பார்த்து உண்மைகளை உள்ளது உள்ளபடி சித்திரிக்கும் சிருஷ்டிகளை— பலரகமான உணர்ச்சி வெளிப்பாடுகளை எல்லாம் ஆழமாகவும் அழுத்தமாகவும் தமிழிலும் உருவாக்க வேண்டும் என்று ஆசைப் பட்டார்கள். இத்தகைய புது முயற்சிகளுக்கு மணிக்கொடி இடம் அளித்தது.

பிற்காலத்தில் 'மணிக்கொடி கோஷ்டி' என்று இலக்கிய வட்டாரங்களில் குறிப்பிடப்பெறுவது சகஜமாயிற்று. ஆயினும், மணிக்கொடி

காலத்தில் அப்படி ஒரு கோஷ்டி (குழு) ஆக எழுத்தாளர்கள் இயங்கிய தில்லை என்பதைக் குறிப்பிடத்தான் வேண்டும்.

மணிக்கொடியில் எழுதியவர்கள் ஒரே விதமான இலக்கியக் கொள்கையோ, நோக்கும் போக்குமோ கொண்டிருந்தவர்கள் அல்லர். ஒரே தரத்தினரும் இல்லை. அவர்களுக்கிடையே கருத்து வேற்றுமை அதிக மாகவே இருந்தது. அதை வேகத்தோடு வெளியிடவும் அவர்கள் தயங் கியதில்லை. ஆனால், அவர்கள் உலக இலக்கியத்தின் சிறுகதை வளத்தை நன்றாகப் புரிந்து கொண்டிருந்தவர்கள். அதே தரத்தில் தமிழி லும் சிறுகதைகள் வரவேண்டும் என்ற தீவிர வேட்கை கொண்டவர்கள். ஆர்வமும் எழுத்து அனுபவமும் இலக்கிய ருசியும் உடையவர்கள். தமிழ் இலக்கியம் மறுமலர்ச்சி பெறவேண்டும் என்ற எண்ணத்திலும் அதற்காக உற்சாகமாக உழைப்பதிலும் அவர்கள் ஒத்த மனம் உடையவர்களாக இருந்தார்கள்.

'மணிக்கொடி'க்கு பி. எஸ். ராமையா ஆசிரியர். கி. ரா. (கி. ராமச்சந் திரன்) துணை ஆசிரியராகப் பணிபுரிந்தார். புதுமைப்பித்தன் ராமையா வின் மணிக்கொடிக்கு அதிக ஒத்துழைப்புத் தந்துள்ளார். புத்தக மதிப்பு ரைகள் எழுதினார். இலக்கிய விவாதங்களைக் கிளப்பினார்.

இலக்கியப் பிரச்னைகள் சம்பந்தப்பட்ட கருத்துப் பரிமாறலுக்கு 'யாத்ரா மார்க்கம்' என்ற பகுதி பெரிதும் உதவியது.

நேரடி மொழிபெயர்ப்பு நல்லதா, தழுவி எழுதுவது சரியா?– என்ற விவகாரம் இப்பகுதியில் சுவாரஸ்யமான விவாதமாக நடந்தது குறிப்பிடத் தகுந்தது. புதுமைப்பித்தன், கி. ரா., கு. ப. ராஜகோபாலன், ந. சிதம்பர சுப்பிரமணியன், க. நா. சுப்ரமண்யம் ஆகியோர் இந்தச் சர்ச்சைக்குச் சூடும் சுவையும் அளித்தனர் (இந்த விவாதக் கட்டுரைகளை, மதுரை யிலிருந்து வெளிவந்த 'வைகை' என்ற சிறுபத்திரிகை 1980–ம் வருடம் அதன் 27, 28 –ம் இதழ்களில் மறுபிரசுரம் செய்துள்ளது).

# 4. மணிக்கொடியின் பிற்காலம்

மணிக்கொடி இலக்கியத் தரத்துடன் சிறுகதைத் துறையில் அரிய சாதனைகள் புரிந்து கொண்டிருந்த போதிலும், பொருளாதார வெற்றி காண முடிந்ததில்லை.

'நான்கு வருஷ அனுபவ'த்துக்குப் பிறகு, 1937 அக்டோபர் 15–ஆம் தேதி இதழில், 'முதல் அத்தியாயம்' என்ற பகுதியில், அதன் ஆசிரியர் இவ்வாறு எழுதியிருக்கிறார்–

"இதுவரை, பல்வேறு காரணங்களால் சிரமப்பட்டுக் கொண்டிருந்த 'மணிக்கொடி' இனி ஒரு கட்டுப்பாடான ஸ்தாபனத்தின் நிர்வாகத்தில், நவயுகப் பிரசுராலயம் லிமிடெட்டின் பிரசுரமாக வெளிவரும். ஆரம்பம் முதல் இதுவரை இப்பத்திரிகை அடைந்த கஷ்டங்களுக்கெல்லாம் முக்கிய மான காரணம் முதலின்மைதான்.

தனிமனிதனின் சக்தி எட்டும் எல்லைவரை 'மணிக்கொடி'யைத் தாங்கி நிற்கும் முயற்சி நடந்தது. ஆயினும் அந்த சக்தி போதவில்லை. பத்திரிகையின் வெளியீட்டில் அடிக்கடி சோர்வு ஏற்பட்டது. . . . . .

சிற்சில சமயங்களில் 'மணிக்கொடி'யை நிறுத்திவிடலாமென்று கூட யோசிக்க நேர்ந்ததுண்டு. அந்த சமயங்களிலெல்லாம், நாம் அந்தக் கடைசிப் படியை மிதிக்காமல் தடுத்து, மேலும் மேலும் முயல உற்சாகமும் பலமும் அளித்தது நமது அன்பர்களின் கடிதங்கள்தான். ஒவ்வொரு தடவையும் நாம் அத்தகைய முடிவைப் பற்றி யோசிக்கும் போதெல்லாம் அன்பர்களின் ஆதரவு நிறைந்த கடிதங்கள் வந்து சேரும்.

இந்த நிலைமையில் 'மணிக்கொடி'யை ஒரு கூட்டு ஸ்தாபனமாக்கி, அந்த லட்சியத்தில் மற்றும் பலருக்குப் பங்கு கொடுத்தாலென்னவென்று சில நண்பர்கள் எழுதினார்கள். அவர்கள் யோசனையை ஏற்று ஒரு கூட்டுறவு ஸ்தாபனம் நிறுவ முயற்சிகள் செய்யப்பட்டன.

'மணிக்கொடி' தோன்றிச் சரியாக நான்கு வருஷங்களாகின்றன. முதல் பதினெட்டு மாதம் ராஜீய வாரப் பதிப்பாக வெளியிடப்பட்டு வந்தது. பின்னர், தமிழ் இலக்கிய வளர்ச்சித் துறையிலிருந்த தேவையை யுணர்ந்தும், 'மணிக்கொடி' ஊழியர்களுக்கு இந்தத் துறையிலிருந்த

உற்சாகத்தினாலும் மாதமிருமுறை சிறுகதைப் பத்திரிகையாக மாற்றப் பட்டது. . . . .

கூட்டு ஸ்தாபனம் தற்காலிகமாக இரண்டு முக்கிய அம்சங்களில் கவனம் செலுத்த வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 'மணிக் கொடி'யைச் சீர்திருத்தி அபிவிருத்திகளுடன் தொடர்ந்து பிரசுரிப்பது. இரண்டாவது, தமிழில் எல்லோரும் வாங்கக் கூடிய விலையில் உபயோக கரமான புஸ்தகங்களைப் பிரசுரித்து, சுலபமாக எங்கும் கிடைக்கக் கூடிய முறையில் பரப்புவது.''

கூட்டு ஸ்தாபனம் 'நவயுகப் பிரசுராலயம் லிமிடெட்' என்ற பெயரில் இயங்கியது. அது முதலாவதாக, ஏ. என். சிவராமன் எழுதிய 'மாகாண சுயாட்சி' என்ற நூலை எட்டணா விலையில் பிரசுரித்தது. தொடர்ந்து, ப. ராமஸ்வாமி எழுதிய 'மைக்கேல் காலின்ஸ்', கி. ரா. வின் 'தேய்ந்த கனவு' ( சார்லஸ் டிக்கன்சின் 'இரு நகரங்களின் கதை' மொழிபெயர்ப்பு), கு. பா. ரா. வின் 'இரட்டை மனிதன்' ( டாக்டர் ஜெகில் அண்ட் மிஸ்டர் ஹைட் மொழிபெயர்ப்பு ) போன்றவற்றை வெளியிட்டது. எட்டணா விலையில், அதிகப் பக்கங்களுடன் பிரசுரமான இவ்வெளியீடுகள் வாச கர்களின் வரவேற்பை மிகுதியாகப் பெற்றன.

அதே சமயம், பெரிய புத்தகங்களாக, வெவ்வேறு விலை விகிதங் களில், 'புதுமைப்பித்தன் கதைகள்', 'உலகத்துச் சிறுகதைகள்' ( பு. பி. மொழி பெயர்த்தவை ), 'பாஸிஸ்ட் ஜடாமுனி' ( சொ. விருத்தாசலம் என்ற பெயரில் பு. பி. எழுதியது. சர்வாதிகாரி முசோலினியின் வரலாறு), 'கப்சிப் தர்பார்' ( புதுமைப்பித்தனும் ந. ராமரத்னமும் சேர்ந்து எழுதிய ஹிட்லர் வரலாறு) போன்றவற்றையும் வெளியிட்டது.

'மணிக்கொடி' பத்திரிகை சுயமான சிறுகதைப் படைப்புகளுடன், உலக இலக்கியங்களின் சிறந்த கதைகளையும், இந்திய மொழிகளிலி ருந்து தேர்ந்தெடுத்த கதைகளையும் மொழிபெயர்ப்புகளாக வழங்கிக் கொண்டிருந்தது.

வாசகர்களின் சிந்தனைக்கு வேலை கொடுக்கும் பகுதியாக 'தெரிந்ததும் தெரியாததும்' அமைந்திருந்தது. இலக்கியங்களிலிருந்து தொகுக்கப்பட்ட கேள்விகளும், வேறு பல வினாக்களும் இப்பகுதியில் இடம் பெற்றன. அவற்றுக்கு உரிய விடைகள் விரிவாக மற்றொரு பக்கத் தில் பிரசுரிக்கப்பட்டன.

பிற்காலத்தில், வாசகர்களை வசீகரிப்பதற்காக சினிமா நடிகைகள், நடிகர்கள், படக்காட்சிகளின் படங்களும், திரைப்பட விமர்சனங்களும் மணிக்கொடியில் சேர்க்கப்பட்டன.

பத்திரிகை லிமிடெட் கம்பெனியின் நிர்வாகத்துக்கு வந்து மூன்று மாதங்களுக்குப் பிறகு பி. எஸ். ராமையா ஆசிரியப் பொறுப்பை விட்டு விட நேரிட்டது. மணிக்கொடி நிர்வாகத்தினரிடையே ஏற்பட்ட கருத்து வேற்றுமை காரணமாக 1938 ஜனவரி 27–ம் நாளுடன், 'மணிக் கொடி' யோடு ராமையாவுக்கு இருந்த தொடர்பு முடிந்தது. ப. ராமஸ்வாமி ( ப.ரா. ) அதன் ஆசிரியரானார். தமிழில் சிறு பத்திரிகைகள்

ப. ரா. முதலில் ஒரு அரசியல்வாதி. இலக்கிய ஈடுபாடு அடுத்தபட்சம் தான் அவருக்கு. அவருடைய பொறுப்பில், மணிக்கொடியில் அரசியல் விவகாரங்களும் மிகுந்த கவனிப்பைப் பெற்றன. ஏ. ஜி. வெங்கடாச்சாரி யின் அரசியல் விமர்சனக் கட்டுரைகள் பல பக்கங்களை எடுத்துக் கொண்டன. அரசியல் கார்ட்டூன்கள் வெளியிடப் பெற்றன.

ராமையா காலத்தில் உற்சாகத்தோடும் ஆர்வத்தோடும் மணிக் கொடிக்குக் கதைகள் எழுதி, அதற்குத் தனிச்சிறப்பு அளித்துவந்த படைப்பாளிகள் சிறிது சிறிதாகத் தங்கள் தொடர்பைக் குறைத்து, அப் புறம் எழுதாமலே இருந்துவிட்டார்கள். புது எழுத்தாளர்களின் கதைகள் அதிகம் வந்துள்ளன. உலகத்துக் கதைகளின் மொழிபெயர்ப்புகள் வேறு சிலரால் ( முக்கியமாக, ப. ரா. வின் தம்பி 'சஞ்சீவி' யால்) செய்யப் பட்டிருக்கின்றன.

இந்த விதமாக 'மணிக்கொடி' 1930 கடைசிவரை வெளிவந்திருக்கி றது. பிறகு நின்றுவிட்டது. நவயுகப் பிரசுராலயம் லிமிடெட் நிறுவனத்தி னர் புத்தகப் பிரசுரத்தில் மட்டுமே கருத்துச் செலுத்தலாயினர்.

'மணிக்கொடி' ஒரு வரலாறு ஆகிவிட்டது. இலக்கிய வரலாற்றில் தனக்கென ஒரு தனி இடத்தை அது அமைத்துக் கொண்டது.

பின்வந்த இலக்கியவாதிகள் மணிக்கொடி எழுத்தாளர்களைத் தங்கள் முன்னோடிகளாகக் கொண்டார்கள். பின்னர் இலக்கியப் பத்திரிகை நடத்த விரும்பியவர்கள் 'மணிக்கொடி மாதிரி பத்திரிகை நடத்த வேண்டும்' என்று ஆசைப்பட்டார்கள். அந்த அளவுக்கு மணிக்கொடி ஒரு 'முன்மாதிரி' ஆகத் திகழ்ந்தது.

சிறுகதைக்குச் சீரிய பணி ஆற்றியதோடு, மணிக்கொடி, யாப்பில் லாக் கவிதையான 'வசனகவிதை'க்கும் அரங்கம் அமைத்துக் கொடுத் தது. ந. பிச்சமூர்த்தியும், கு. ப. ராஜகோபாலனும் தங்கள் கவிதை முயற்சி களை இப்பத்திரிகையில் வெளியிட்டார்கள்.

'மணிக்கொடி' படைப்பாளிகளின் எழுத்துக்களை வெளியிடுவதற்

கென்று 1939–ல் சென்னையில். க நா. சுப்ரமண்யம் ‘சூறாவளி’ பத்திரி கையை ஆரம்பித்தார்.

இது ‘சிறு பத்திரிகை’ இனத்தைச் சேர்ந்தது அல்ல. இலக்கிய நோக்குடனும் இதர பல விஷயங்களோடும்–கனமான விஷயங்களைக் கொண்டு–ஒரு வாரப் பத்திரிகையை, ‘ஆனந்த விகடன்’ மாதிரி, விகட னுக்குப் போட்டி மாதிரியும் நடத்த முடியுமா என்று பார்க்கும் ஒரு சோதனை முயற்சியாகவே அது இருந்தது.

இச் சோதனை 1939 ஏப்ரலில் தொடங்கப்பட்டது. க. நா. சுப்ரமண் யம் ஆசிரியர். கி. ரா. துணை ஆசிரியர். இவ் வாரப் பத்திரிகையில் புதுமைப்பித்தன், கு. ப. ரா., ந. சிதம்பரசுப்ரமண்யன், ராமையா ஆகியோர் கதைகள் எழுதினார்கள். ச. து. சுப்பிரமணிய யோகியார், பாரதிதாசன் கவிதைகள் வந்தன. க. நா. சு. நிறையவே எழுதியிருக்கிறார். புத்தக மதிப்புரை இதழ்தோறும் இடம் பெற்றது குறிப்பிடத்தகுந்தது. அரசியல் செய்திகள், அரசியல் கட்டுரைகள், பெரிய மனிதர்களைப் பற்றி, சினிமா விமர்சனங்கள், சினிமா சம்பந்தமான படங்கள் எல்லாம் உண்டு.

வசன கவிதை குறித்து ஒரு சுவாரஸ்யமான விவாதத்தை முதன் முதலில் சூறாவளிதான் வளர்த்தது.

‘சூறாவளி’ வியாபார வெற்றியாக விளங்கவில்லை. காலம் தவறாது தொடர்ந்து பிரசுரம் பண்ணவும் இயலவில்லை. 20 இதழ்களுடன், 1939 செப்டம்பரில் பத்திரிகை நிறுத்தப்பட்டது.

சூறாவளி அட்டைச் சித்திரத்தில் புதுமை பண்ணியது குறிப்பிடத் தகுந்தது. சூறாவளிக் காற்றின் வேகத்தை–அதன் வலிய சக்தியை– புலப்படுத்துவது போன்ற ஓவியங்கள் அட்டைப் படமாக அச்சிடப்பட்டன. ஒவ்வொரு மாதமும், நான்கு வாரங்களுக்கும் ( அல்லது ஐந்து வாரங் கள் ) ஒரே ஓவியமே. வாரம்தோறும் வெவ்வேறு வர்ணத்தில் அச்சா வது வழக்கம். இவ் ஓவியங்கள் வசீகர வனப்புடன் திகழ்ந்தன.

# 5. கலா மோகினி

ஆழ்ந்த, கனமான விஷயங்களை உணர்ச்சிச் செறிவுடனும் நடை நயத்தோடும், சிந்தனைக்கு வேலை வைக்கும் விதத்திலும், புதிய ரீதிகளிலும் எழுதுகிற போக்கு 'மறுமலர்ச்சி இலக்கியப் போக்கு' என்ற பெயரைப் பெற்றிருந்தது.

இத் தன்மையில் எழுதுவதில் ஆர்வம் காட்டிய எழுத்தாளர்கள், தமிழ் மறுமலர்ச்சிக்கு 'பொன் ஏர் பூட்டிய முதல்வன்' ஆகவும், தங்களுக்கு முன்னோடியாகவும் மகாகவி சுப்பிரமணிய பாரதியை ஏற்றுக் கொண்டார்கள். பாரதி பாதையில் முன் சென்று மேலும் வளமான புதிய சோதனைகளைத் தமிழில் சேர்ப்பதே இவர்களது லட்சியம்.

இத் துடிப்புடன் செயலாற்றத் துடித்த படைப்பாளிகளுக்கு 'மணிக்கொடி' இலக்கியப் பத்திரிகை நின்றுவிட்டது பெரிய இழப்புதான். அதைத் தொடர்ந்து தோன்றிய 'சூறாவளி' வாரப் பத்திரிகை எழுந்த வேகத்திலேயே ஓய்ந்துவிட்டதும் மறுமலர்ச்சி இலக்கியவாதிகளுக்கு ஒரு நஷ்டமாகவே அமைந்திருந்தது.

ஜனரஞ்சகமான விஷயங்களை வாசகர்களை வசீகரிக்கும் விதத்தில் கொடுப்பதோடு, பத்திரிகையை வர்த்தக நோக்குடன் நடத்தி வெற்றியும் கண்ட 'ஆனந்த விகடன்' வளர்ச்சிப் பாதையில் முன்னேறிக்கொண்டிருந்தது. 1933 முதல் 'விகடன்' தீபாவளி மலர் என்ற பெயரில் விசேஷத் தயாரிப்பு ஒன்றையும் வெளியிடலாயிற்று.

இந்தச் சிறப்பு மலர்களும் இலக்கியவாதிகளுக்கு திருப்தி அளித்ததில்லை. எனவே, மறுமலர்ச்சி இலக்கிய மலர்களை உருவாக்க வேண்டும் என்ற துடிப்பு அந்தக் காலத்துப் படைப்பாளிகளுக்கு உண்டாயிற்று.

'தினமணி' அவர்களுக்கு உதவியது. இரண்டு வருடங்கள் 'தினமணி பாரதி மலர்' என்ற பெயரில் சிறப்பு வெளியீடு பிரசுரமாயிற்று. 1934, 1935–ம் வருடங்களில் தோன்றிய இம்மலர்கள் கையில் பிடித்துப் படிப்பதற்கு வசதி இல்லாத வடிவத்தில்—தினமணி நாளிதழின் ஞாயிறு அனுபந்தமான 'தினமணிச் சுடர்' அளவில் இருந்தன. மிக அதிகமான பக்கங்களுடன் (குறைந்த விலையில்) வெளிவந்த இம் மலர்கள் மறுமலர்ச்சி எழுத்தாளர்களின் தரமான படைப்புகளைக் கொண்டிருந்தன.

1936 முதல் இத் தயாரிப்பு 'தினமணி ஆண்டு மலர்' என்ற பெயரை ஏற்றது. இம் மலர்களைத் தயாரிக்கும் பொறுப்பு புதுமைப்பித் தனுக்குக் கிட்டியது. இம் மலர்கள் அருமையான இலக்கிய மலர்களாக விளங்கின. மலரின் உருவமும் கச்சிதமான வடிவத்தைப் பெற்றது. இப்படி நான்கு அல்லது ஐந்து மலர்களே வெளிவந்தன.

'ஹனுமான்' வாரப் பத்திரிகை 1939, 1940-ம் வருடங்களில் மலர் தயாரித்து வெளியிட்டது. இம்மலர்களை உருவாக்கும் பொறுப்பை பி. எஸ். ராமையா ஏற்றிருந்தார். மணிக்கொடி எழுத்தாளர்கள் பலரும் இம் மலர்களில் எழுதினார்கள்.

'ஸீரியஸ் லிட்டரேச்சர்' முயற்சிகளில் ஆர்வம் காட்டி வந்த முதல் தலைமுறை எழுத்தாளர்களும்—அவர்களை மணிக்கொடி எழுத்தாளர்கள் என்றே குறிப்பிடலாம்— தங்கள் படைப்புகளை வெளியிடுவதற்குத் தகுந்த பத்திரிகைகள் இல்லாத ஒரு அசவுகரியத்தை அனுபவிக்க வேண்டிய சூழ்நிலைதான் தமிழ்நாட்டில் நிலவியது.

ஆழமான, தீவிரமான போக்கும் நோக்கும் கொண்டிருந்த இலக்கி யக் கொள்கையை 'மணிக்கொடி மனோபாவம்' என்றும், அதற்கு நேரிடையான பாணியை— மேலோட்டமான, ஆழமில்லாத, சர்வஜனரஞ்சக எழுத்து ரீதியை 'விகட மனோபாவம்' என்றும் குறிப்பிட்ட கு. ப. ராஜ கோபாலன், இவ் இரண்டுக்கும் இடைப்பட்ட நடுநிலைப் போக்கை, 'மிதவாதப் போக்கு' என்றும் 'கலைமகள் மனோபாவம்' என்றும் கணித்தார்.

1930-40 களில் 'கலைமகள்' மணிக்கொடிப் படைப்பாளிகளையும் ஆதரித்தது; விகட மனோபாவ எழுத்துக்களையும் வரவேற்றுப் பிரசுரித் தது. அக்கால கட்டத்தில் தரமான இலக்கியப் பத்திரிகையாக அது விளங்கியது. மறுமலர்ச்சி எழுத்தாளர்கள் அம் மேடையை நன்கு பயன் படுத்திக் கொண்டார்கள்.

என்றாலும், மறுமலர்ச்சி இலக்கிய வேகம் கொண்ட இளைய தலை முறையினரும் நாட்டில் தோன்றி வந்தார்கள். அவர்களுக்கு மணிக்கொடி ரீதியில் மறுமலர்ச்சி இலக்கியப் பத்திரிகை ஒன்றுகூட தமிழில் இல்லையே என்ற குறை பெரும் மனப்பாரமாக இருந்தது. இவ் வித உணர்வுடைய இளைய எழுத்தாளர்கள் நாடு நெடுகிலும் சிதறி இருந்தார் கள் என்றே சொல்ல வேண்டும்.

1940 களில் மறுமலர்ச்சி இலக்கிய வேகத்தின் அலை சென்னை யில் ஒடுங்கி, திருச்சி மாவட்டத்தில் புதிய எழுச்சியுடன் தலைதூக்கியது. இவ் வேகத்தின் முதல் எழுச்சி தான், 'கலா மோகினி' என்ற மாதம் இரு முறை வெளியீடு ஆகும்.

"கலாமோகினி–

இது லட்சியவாதிகளின் கனவு.

நீண்டநாள் தாமதத்திற்குப் பிறகு நனவாகியிருக்கிறது. இதன் வாழ்விற்கும் வளர்ச்சிக்கும் தமிழ்நாட்டுக் கலா ரசிகர்களின் ஆதரவை வேண்டி நிற்கிறோம்.

முதல் இதழைத் தமிழ்நாட்டின் எழுத்தாள நண்பர்களுக்கு சமர்ப்பிக்கிறோம்."

இப்படி முதல் இதழ் 'க்ஷேமலாபங்கள்' பகுதியில் அதன் ஆசிரிய ரான வி. ரா. ராஜகோபாலன் எழுதியிருந்தார்.

கலாமோகினியின் முதலாவது இதழ் சித்ரபானு ஆனி 15 என்ற தேதியை ( 1942 ஜூலை 1 ) கொண்டிருந்தது. ஒவ்வொரு இதழும் 'தமிழ் வருடம்', மாதம், தேதியைத்தான் தாங்கி வந்தது.

இது எழுத்தாளர்களின் பத்திரிகை என்பதைப் பல விஷயங்கள் நிரூபித்தன. முதல் இதழின் அட்டையில் ந. பிச்சமூர்த்தியின் உருவப் படம் வெளியாகியிருந்தது. தொடர்ந்து ஒவ்வொரு இதழும் ஒரு எழுத்தா ளரின் படத்தையே அட்டைச் சித்திரமாகக் கொண்டிருந்தது. கடைசிவரை கலாமோகினி இந்த நியதியை அனுஷ்டித்தது குறிப்பிடப்பட வேண்டிய முக்கிய அம்சம் ஆகும்.

அட்டையில் ஒரு எழுத்தாளரின் படத்தைப் பிரசுரித்து, 'இவர் நம் அதிதி' என்று உள்ளே ஒரு பக்கம் அவரைப் பற்றி சுவாரஸ்யமாக எழுதும் வழக்கத்தை வி. ரா. ரா. மேற்கொண்டிருந்தார். அந்த எழுத்தாள ரின் கதை அல்லது கட்டுரை அல்லது கவிதையை வாங்கி அதே இதழில் பிரசுரிப்பதும் அவர் வழக்கமாக இருந்தது.

இவ்வாறு எழுத்தாளர்களையும் இலக்கியத்தையும் பிடிவாதத்துடன் கவுரவித்த ஒரே பத்திரிகை கலாமோகினிதான். முதல் இதழின் அட்டை யில் ஒரு படைப்பாளியின் படத்தை வெளியிட்டு, அந்த இதழை எழுத் தாளர்களுக்கு சமர்ப்பித்த முதல் தமிழ்ப் பத்திரிகையும் அதுவே.

கலாமோகினியின் முதல் இதழில் ந. பிச்சமூர்த்தி, கு. ப. ராஜ கோபாலன், சிட்டி, க. நா. சுப்ரமண்யம், சிதம்பர சுப்ரமணியன் முதலியவர்க ளது படைப்புகள் இடம் பெற்றிருந்தன.

இந்த முதல் இதழே இலக்கியப் பிரியர்களுக்கு நம்பிக்கை அளிப்ப தாக அமைந்து விட்டது.

கலாமோகினி தனது பிறப்புக்கான காரணத்தையும், தன் நம்பிக்கை யையும் முதலாவது இதழிலேயே இவ்வாறு அறிவித்திருந்தது–

'யுத்த பீதி, காகிதப் பஞ்சம், கட்டுப்பாடு இந்த நெருக்கடிகளுக்கு இடையில் இன்னுமொரு பத்திரிகையா என்ற நிர்த்தாக்ஷண்யமான கேள்வி நிச்சயம் பிறக்கும்.

அதற்குப் பதில் இது :

இந்தத் தமிழ்நாட்டில் எத்தனை காலம் வாழ முடியுமோ அத்தனை காலம் வாழ்ந்து, தமிழ் பாஷையின் புனருஜ்ஜீவனம் என்ற சேது பந்தனத்திற்கு இந்த அணிலும் தன்னாலான சேவையைச் செய்ய வேண்டுமென்றே கலாமோகினி பிறந்துள்ளது.

தமிழ் மக்களின் ஆதரவையும், தமிழன்னையின் கருணையையும், எல்லாவற்றிற்கும் மேலாக ஈஸ்வரனின் அருளையும் நம்பித்தான் கலா மோகினி பிறக்கிறது.

இவை எந்த அளவில் கிடைக்கிறது என்பதைப் பொறுத்ததே கலாமோகினியின் வாழ்வு, வெற்றி, லட்சியசித்தி எல்லாம்.'

முதல் இதழிலேயே தொடர்கதையும், தொடர் நாடகமும் இடம் பெற்றன. ஜரோஸ்லாவ் ஹாஸக் எழுதிய நாவல் ஒன்றின் கதையைச் சுருக்கி மொழிபெயர்த்து, 'சூரப்புலி ஷீக்' என்ற தலைப்பில் வெளியிட்டார் வி. ரா. ராஜகோபாலன். 'விக்ரமாதித்தன்' என்ற புனைபெயரை அதற்கு அவர் பயன்படுத்தினார்.

'சாலிவாகனன்' என்ற புனைபெயரில் அவர் கவிதைகள் எழுதி வந்தார்.

இவ் இரு பெயர்களையும் வி. ரா. ரா. தனது புனைபெயர்களாகத் தேர்ந்து கொண்டதற்கு ரசமான ஒரு காரணமும் உண்டு.

பாரத நாட்டின் வரலாற்றில் குறிப்பிடத்தகுந்த இடம் பெற்றுள்ள மாமன்னர்களின் பெயர்கள் அவை. தனித்தனி 'சகாப்தம்' கண்ட பெருமை பெற்றவர்கள் அவர்கள். சாலிவாகன சகாப்தம், விக்கிரமாதித்த சகாப்தம் என்றவாறு, இந்திய தேச சரித்திரத்தில் விக்கிரமாதித்தன் காலம் 'பொற்காலம்' என்ற சிறப்பைப் பெற்றுள்ளது. அதேபோல் தமிழ் மொழி வரலாற்றிலும், தமிழ் இலக்கிய மறுமலர்ச்சியிலும் ஒரு புதிய சகாப்தத்தை உருவாக்க வேண்டும் என்ற ஆசை அவருக்கு இருந்தது. தன்னால் அப்படி ஒரு பொற்காலத்தை நிறுவ முடியும் என்ற நம்பிக்கையுடன்தான் அவர் 'கலாமோகினி'யை ஆரம்பித்து, வளர்த்தார்.

கலாமோகினி இலக்கியத்தில் மட்டுமே ஆர்வம் காட்டியது,

ஆரம்பத்தில். அதில் அரசியலுக்கு இடம் இல்லை என்று உறுதியாக அறிவிக்கப்பட்டிருந்தது.

'அரசியல்துறையில் பணியாற்ற ஏற்கனவே தமிழ்நாட்டில் தேவைக் கதிகமான சகோதரப் பத்திரிகைகள் இருக்கும்போது நாமும் அந்தக் குட்டையைக் குழப்புவது அனாவசியம். தமிழ்ப் பணி ஒன்றே நமக்குப் போதுமான இலட்சியமாகக் கொள்ளலாம் என்பது நமது தீர்மானம்' என்று மூன்றாவது இதழில் ஆசிரியர் கருத்து தெரிவித்தார்.

அவர் பழம் தமிழ் இலக்கியத்திலும் ஈடுபாடு கொண்டவர். 'என் சரித்திரம்' என்று மணிமேகலை காவியக் கதையை, மணிமேகலையே கூறுவது போல், தொடர்சித்திரமாக உரைநடையில் எழுதி வந்தார். 'ச ங் க இலக்கியத்திலிருந்து' என்று கட்டுரைகளும் எழுதினார். பெ. கோ. சுந்தரராஜன் ( சிட்டி) எழுதிய 'ஹர்ஷன்' நாடகம் தொடர்ந்து பிரசுரமாயிற்று.

மணிக்கொடி எழுத்தாளர்களின் புதிய படைப்புகளும் இளைய படைப்பாளிகளின் விதம் விதமான சிறுகதைகளும், கவிதைகளும் மிகுதி யாக வந்தன. பத்திரிகை வெற்றிகரமாக நடந்து கொண்டிருந்தது என்றே சொல்ல வேண்டும்.

முதல் வருட இறுதியில் ஆசிரியர் செய்த பிரகடனம் இது–

'நாம் சந்தேகமின்றிக் கூற முடியும்; பெரிய நாமதேயங்கள், பிரபல மான பெயர்கள் முதலிய சம்பிரதாய விருதுகளில்லாது, முழுதும் வாசகர் கள், எழுத்தாளர்கள் ஆகியவர்களுடைய பலத்தையே ஆதாரமாகக் கொண்டு வளர்ந்த ஒரே ஒரு தமிழ் மறுமலர்ச்சிப் பத்திரிகை கலா மோகினி.'

வி. ரா. ரா. வின் எழுத்துக்கள் 'நேர்மை, காம்பீர்யம், நையாண்டி, மெய்த்துணிவு' ஆகிய பண்புகளைப் பெற்றிருந்தன. 'பூசி மெழுகாத வெட்டொன்று துண்டிரண்டு என்ற அபிப்பிராயங்கள்' கலாமோகினி மூலம் ஒலிபரப்பப்பட்டன.

கவிஞர் பாரதிதாசனின் புகழ் மேலோங்கி வந்த காலம் அது. கலா மோகினி அவரிடம் கவிதை கேட்ட போது, அவர் தர மறுத்தார். பாரதி தாசன் படத்தை அட்டையில் வெளியிட்டு, உள்ளே அவரைப் பற்றிய தனது கருத்தை எடுப்பும் மிடுக்கும் அழகும் கலந்த நீண்ட கவிதையா கப் பிரசுரித்தார் வி. ரா. ரா.

ரசிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார் செல்வாக்கு பெற்றிருந்த காலம் அது. அவர் கம்பன் காவியத்தில் திருத்தங்கள் செய்து, 'கம்பர் தரும் ராமாயணம்' என்ற புதிய பதிப்பை வெளியிட்ட சமயம். அதைக் கண்டித்து, 'ஐந்தாம் படை ரசிகர்கள்' என்ற தலைப்புடன் காரசாரமான கட்டுரை ஒன்றை எழுதினார் கலாமோகினி ஆசிரியர்.

யுத்த காலத்தில் 'ஐந்தாம் படை' என்பது பிரசித்தமாக இருந்தது. ஒரு நாட்டைச் சேர்ந்தவர்கள், தங்கள் நாட்டில் இருந்து கொண்டே, உளவு சொல்லியும் நாச வேலைகள் செய்தும் எதிரிக்கு உதவிகள் புரிவார்கள். இப்படி உள்ளே இருந்தபடி ஊறுகள் செய்வோர்– சொந்த நாட்டுக்குத் துரோகம் செய்பவர்கள்– 'ஐந்தாம் படையினர்' ஆவர்.

அதேபோல், தமிழ் இலக்கியத்தை–கவிதைகளையும் காவியங்களை யும்–ரசிப்பதாகப் பெயர் பண்ணி, அவற்றைச் சிதைத்து நாசவேலை செய்ய முற்படுவோரை 'ஐந்தாம் படை ரசிகர்கள்' என்று குறிப்பிட்டார் ஆசிரியர்.

கலாமோகினி தான் தேர்ந்து கொண்ட பாதையில் துணிந்து செயல் புரிந்தது. 'நம்பிக்கை என்ற பலமும், கலை, கவிதை ஆகியவற்றின் மேல் உள்ள தன்னலமற்ற பற்றும்தான் இம்முயற்சியின் தளர்வற்ற போக்குக்கு உறுதுணைகள்' ஆக விளங்கின. பொருளாதார பலம் வாய்க்காததால் கலாமோகினி சோதனைகளையும் சிரமங்களையும் எதிர்கொள்ள நேரிட்டது.

குறித்த தேதியில் பத்திரிகை வர முடியாத நெருக்கடி. இடையி டையே ஒரு இதழ் வராமலே போவது போன்ற குழப்பங்கள் கலா மோகினிக்கு அதன் இரண்டாவது, மூன்றாவது ஆண்டுகளில் ஏற்பட்டன.

கலாமோகினி முதல் 13 இதழ்கள் 'டிம்மி சைஸில்' ( ஆனந்த விகடன் அளவில்) வந்தன. 14–ம் இதழ் முதல் 'கிரவுன் சைஸ்.' (கொஞ்சம் சிறிய அளவு.) கடைசி இதழ் வரை இந்த அளவு நீடித்தது.

'அரசியல் வேண்டாம்' என்று ஒதுக்கி வைத்த கலாமோகினி பின்னர் அரசியல் தலையங்கங்களும், அபிப்பிராயங்களும் வெளியிட முன்வந்தது. 'ஆய கலைகள்' என்ற தலைப்பில் இசை, நாட்டியம், நாடகம், சினிமா பற்றியும் கட்டுரைகள் வெளியிட்டது. புத்தக மதிப்பு ரையை எப்போதாவது பிரசுரித்தது. காம இலக்கியப் பிரசுரம் ஒன்றைக் கண்டித்து 'மதிப்புரை மறுப்பு' என்று ஒரு கட்டுரை எழுதியது.

பிற்காலத்தில் தன்னை 'இலக்கிய முன்னணி' என்று கலாமோகினி அறிவித்து வந்தது.

'லாபமும் நஷ்டமும் இந்த இலக்கிய முன்னணியின் இறுதி லட்சியமல்ல. இதில் எழுதுபவர் எவருக்கும் எழுத்து ஒரு வியாபாரமோ, தொழிலோ, பொழுதுபோக்கோ அல்ல. இலக்கியத்தை வாழ்வாகக் கொண்டவர்கள். தமிழுக்கு நித்தியமான அழகை அளிக்கச் செய்யும் முயற்சிகளே கலாமோகினி இதழ்கள்.'

இப்படி 45-ம் இதழில் அறிவிக்கப்பட்டுள்ளது இது வெறும் தற்புகழ்ச்சி இல்லை என்று கொள்ளலாம்.



# 6. கிராம ஊழியன்

மூன்றரை வருட காலம், திருச்சிராப்பள்ளி மட்டக்காரத் தெருவிலிருந்து வெளிவந்து கொண்டிருந்த 'கலாமோகினி' மாதமிருமுறை இலக்கியப் பத்திரிகை சென்னை நகரில் குடியேறத் திட்டமிட்டது. திருச்சியிலிருந்து செயல்புரியக்கூடிய சூழ்நிலை காலப்போக்கில் மிகுந்த சிரம சாத்தியமாகியிருந்ததால், தலைநகருக்குப் போய் 'இலக்கிய முன்னணி'யின் வளர்ச்சிக்கு வழிகாண இயலும் என்று அதன் ஆசிரியர் கருதினார்.

'சம்பிரதாயம் என்ற சுவடுபட்ட பாதையில் இலக்கியம் சென்று கொண்டிருப்பது தமிழ் ரசிகர்கள் அறிந்ததொரு விஷயம்தான். இந்தச் சுவட்டிலிருந்து விலகிப் புதுப் பொருள்கள், புதிய பல கோணங்கள் ஆகிய பல புதுப் பிரதேசங்களுக்கு இலக்கிய முன்னணி செல்வதால் நமது வாழ்க்கை, கலை, சமூகம் ஆகியவற்றில் ஏற்பட்டுள்ள தேக்கம் சற்றே சலனமுறும் என்று நம்புகிறோம்' என்று அவர் அறிவித்தார்.

'கலாமோகினி'யின் பட்டணப் பிரவேசமோ புதிய முயற்சிகளோ அதன் வளத்துக்கும் வளர்ச்சிக்கும் துணைபுரியவில்லை. பத்திரிகை காலம் தவறாது வர இயலவில்லை. பொருளாதார பலத்தை உத்தேசித்து 'லிமிடெட் கம்பெனி' சோதனை கூடச் செய்து பார்த்தார் ஆசிரியர். அதுவும் வெற்றி பெறவில்லை.

1946 ஏப்ரல் மாதம் 18–ம் தேதி சென்னையிலிருந்து 'கலா மோகினி'யின் புதிய வடிவ இதழ் வந்தது. அதே வருஷம் செப்டம்பர் 20–ல் வந்ததே அதன் கடைசி இதழ் ஆக அமைந்தது.

'கலாமோகினி' அதன் நான்கு வருட வாழ்வில், இலக்கிய வரலாற்றில் புதிய அத்தியாயம் எதையும் சேர்த்து விடவில்லை என்றே குறிப்பிட வேண்டும். 'மணிக்கொடி'க்குப் பிறகு நிலவிய வெறுமையைப் போக்கி, காலத்தின் தேவையைப் பூர்த்தி செய்யும் ஒரு கருவியாக அது அமைந்திருந்தது. 'மணிக்கொடி' எழுத்தாளர்களில் சிலரும், மணிக்கொடி காட்டிய பாதையில் முன்னேற முனைந்த இளைய எழுத்தாளர்கள் பலரும் தங்கள் ஆற்றலைக் காட்டுவதற்கு ஏற்ற களமாக அது விளங்கியது. அநேகப் பிரச்னைகளில் துணிச்சலோடு ஆணித்தரமாக

அபிப்பிராயங்களை அறிவித்தது. சமகாலத்திய சிறு பத்திரிகைகளுக்கு ஒரு முன்னோடியாகவும் அது இருந்தது என்றும் சொல்லலாம்.

1942–43–ல் வெற்றிகரமாக வளர்ந்து கொண்டிருந்த 'கலாமோகினி', அதைப் போலவே தங்கள் பத்திரிகையையும் தரமான மறுமலர்ச்சி இலக்கியப் பத்திரிகையாக மாற்ற வேண்டும் என்ற உந்துதலை வேறு சில பத்திரிகைக்காரர்களுக்கு ஏற்படுத்தியது. அப்படி ஒரு தூண்டுதலுக்கு உள்ளாகி தீவிர மறுமலர்ச்சி பெற்ற பத்திரிகைகளில் 'கிராம ஊழியன்' முக்கியமானது.

'கிராம ஊழியன்' திருச்சிராப்பள்ளிக்கு 28–மைல்கள் தள்ளி இருக்கும் துறையூர் என்ற சிற்றூரிலிருந்து வெளிவந்தது.

ஆரம்பத்தில் அது அரசியல் வார ஏடு ஆகத்தான் பிரசுரமாயிற்று. அந்தக் காலத்தில் (1940 களில் ) திருச்சியிலிருந்து 'நகர தூதன்' என்ற வாரப் பத்திரிகை செல்வாக்குடனும் பரபரப்பூட்டும் வகையிலும் வந்து கொண்டிருந்தது.

அக்காலத்திய 'ஜஸ்டிஸ் கட்சி' ( நீதிக்கட்சி) யின் பத்திரிகை அது. சுயமரியாதை இயக்க ஏடு. அதன் ஆசிரியர் திருமலைசாமி என்பவர் வேகமான, மிடுக்குள்ள, உயிர்ப்பும் உணர்ச்சியும் நிறைந்த உரைநடையில் எழுதக் கூடிய திறமை பெற்றிருந்தார். 'பேனா நர்த்தனம்' என்ற பகுதி அப்பத்திரிகையின் விஷேச அம்சமாகத் திகழ்ந்தது. குத்தும் கிண்டல்களையும், சுளீர் சவுக்கடிகளையும், காரசாரமான கருத்துக்களையும் அவர் அந்தப் பகுதியில் அள்ளி வீசினார். காங்கிரஸ் கட்சியும், காங்கிரஸ் பிரமுகர்களும் அவரது எழுத்துக்களில் சிக்கி அவஸ்தைப்பட்டனர்.

'நகர தூத'னுக்கு ஒரு போட்டியாகவும் அதற்குப் பதில் அளிக்கும் சாதனமாகவும், காங்கிரஸ் ஆதரவுப் பத்திரிகையாகவும் திருச்சி மாவட்டக் காங்கிரஸ் பிரமுகர்கள் சிலர் ஒரு வார இதழை துவக்கினார்கள். அது கிராமப்புறத்திலிருந்து வந்ததால் கிராம ஊழியன் என்று பெயர் பெற்றது. பூர்ணம் பிள்ளை என்ற துறையூர் காங்கிரஸ்காரர் அதன் ஆசிரியரானார். ஊழியன் பிரஸ் என்ற அச்சகத்தில் அது அச்சிடப்பட்டது. பின்னர் 'லிமிடெட் ஸ்தாபனம்' அமைக்கப்பட்டு பிரசும் பத்திரிகையும் அதன் நிர்வாகத்தில் இயங்கின.

சில மாதங்களில் ஆசிரியர் பூர்ணம் பிள்ளை மரணம் அடையவும், 'கிராம ஊழியன்' அரசியல் ஏடு ஒரு புதிய ஆசிரியரைத் தேடியது. பத்திரிகைகள் நடத்துவதில் அதிக ஆர்வம் கொண்டிருந்த திருலோக சீதாராம் அதன் ஆசிரியரானார்.

திருவையாறு லோகநாத சீதாராம் விழுப்புரத்தில் 'தியாகி' பத்திரிகையில் அனுபவம் பெற்றபின், 'ஆற்காடு தூதன்', 'பால பாரதம்' போன்ற பத்திரிகைகளைச் சொந்தத்தில் நடத்தி அனுபவம் பெற்று, துறையூர் வந்திருந்தார். அவர் கவிஞர், மகாகவி பாரதியின் பக்தர். வள்ளலார் பாடல்கள், பாரதி பாடல்கள் முதலியவற்றைத் தனி ரகமான குரலில் பாடிக் காட்டியும் சொற்பொழிவுகள் நிகழ்த்தியும் அந்த வட்டாரத்தில் பிரபலமாகி வந்தவர். காங்கிரஸ் ஆதரவாளர்.

கிராம ஊழியன் பிரஸ் லிமிடெட்டின் காரியதரிசியாகப் பொறுப் பேற்றிருந்த அ. வெ. ர. கிருஷ்ணசாமி ரெட்டியார் காந்தி பக்தர்; பாரதி அபிமானி; இலக்கிய ரசிகர்.

'கிராம ஊழியன்' அரசியல் ஏடு அ. வெ. ர. கி. நிர்வாக மேற்பார்வையில், திருலோக சீதாராமின் ஆசிரியப் பொறுப்பில் வெளிவந்தது. சுற்று வட்டாரத்தில் செல்வாக்குப் பெற்றிருந்தது.

தேசிய விடுதலைப் போராட்ட உணர்வு பொங்கி எழுந்த காலகட்டம். 1942–ல் பத்திரிகை சுதந்திரத்தை அதிகமாகப் பாதிக்கும் அளவில், அந்நாளைய பிரிட்டிஷ் அரசாங்கம், பலப் பல நடவடிக்கைகளை அமல் நடத்திய சமயம். அரசின் அந்தப் போக்கைக் கண்டனம் செய்து அகில இந்திய ரீதியில் பல பத்திரிகைகள் தங்கள் பிரசுரத்தை நிறுத்தி எதிர்ப்பு தெரிவித்தன. தமிழ்நாட்டில் தினமணி, பாரததேவி, நவயுகம், இந்தியன் எக்ஸ்பிரஸ், ஃப்ரீபிரஸ் ஆகிய நாளிதழ்களும், சண்டே டைம்ஸ், ஹிந்துஸ்தான், கிராம ஊழியன் ஆகிய வாரப் பத்திரிகைகளும் அவ்விதம் எதிர்ப்பு காட்டின.

அப்போதுதான் திருச்சியில் 'கலாமோகினி' தோன்றி உற்சாகமாக வளர்ந்து கொண்டிருந்தது. அது திருலோக சீதாராம், அ. வெ. ர. கி. இருவர் உள்ளத்திலும் தாக்கம் ஏற்படுத்தியது. அவர்கள் ஒரு இலக்கியப் பத்திரிகை நடத்த ஆசைப்பட்டார்கள்.

உலக மகாயுத்தத்துக்குப் பிற்பட்ட காலம். காகிதத் தட்டுப்பாடும் கட்டுப்பாடும் இருந்த காலம். புதிய பத்திரிகைகள் நடத்துவதற்கு அனுமதி மறுக்கப்பட்டு வந்த காலம்.

எனவே, 'கிராம ஊழியன்' பத்திரிகையையே இலக்கியப் பத்திரிகையாக மாற்ற அவர்கள் திட்டமிட்டார்கள்.

கு. ப. ராஜகோபாலன் சென்னையைத் துறந்து, கும்பகோணம் வந்து, அங்கே இலக்கிய வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்தார். அவரை

'கௌரவ ஆசிரியர்' ஆகக்கொண்டு 'கிராம ஊழியன்' மறுமலர்ச்சி இலக்கிய மாதம் இருமுறை வெளியீடாக வரத் தொடங்கியது.

புதிய வடிவம், புதிய தோற்றம், புதிய உள்ளடக்கம் அவற்றுடன், 'கிராம ஊழியன்' 1943– ஆகஸ்ட் 15 –ம் தேதி இலக்கிய உலகில் பிரவேசித்தது.

'தமிழ்நாட்டில் பாரதியை மூலபுருஷனாகக் கொண்ட மறுமலர்ச்சி துவக்கின இருபத்தைந்து வருஷங்களுக்குப் பிறகு, அதன் உன்னத யௌவனப் பருவத்தில் ஊழியன் தோன்றுகிறான். இலக்கியம் மதவுணர்ச் சித் துறைகளில் பாரதி முதலில் காட்டின வழியைப் பணிவுடன் பின்பற்றி, தன்னாலியன்ற வரையில் பணிபுரிவான்' என்றும், ஊழியன் 'சக்தியின் கைக்கருவி' என்றும், மறுமலர்ச்சி பெற்ற 'கிராம ஊழியன்' முதலாவது இதழில் எழுதப்பட்டிருந்தது.

ஒரு இலக்கியப் பத்திரிகைக்கு 'கிராம ஊழியன்' என்ற பெயர் கொஞ்சம்கூடப் பொருத்தமானது அல்ல. இதை ஊழியன் நிர்வாகிகள் ஆ ர ம ப ம் முதலே உணர்ந்துதான் இருந்தார்கள். வேறு பெயர் வைப்பதற்கு அவர்கள். முயன்றதும் உண்டு. ஆனால், 'புதிய பத்திரிகை களுக்கு டிக்ளரேஷன் கிடையாது' என்றிருந்த அக்காலத்திய நிலை, வேறு வழி இல்லாது செய்து விட்டது.

எனவே, 'கிராம' என்ற எழுத்துக்களை மி க ச் சிறிதாகவும், 'ஊழியன்' என்பதைப் பெரிதாய் எடுப்பாகவும் அச்சிட்டு திருப்திப்பட்டுக் கொண்டார்கள்.

கிராம ஊழியன் பிரஸ் லிமிடெடுக்காக அ. வெ. ர. கிருஷ்ணசாமி பிரசுரகர்த்தராக இருந்து வெளியிட்டு வந்த 'கிராம ஊழியன்' மாதமிரு முறையின் ஆசிரியர் திருலோக சீதாராம். கு. ப. ராஜகோபாலன் 'கௌரவ ஆசிரியர்'.

1943–ஆண்டு 15 முதல் நான்கு மாத காலம் இப்படி இருந்து. பிறகு 1944 ஜனவரி 1–ம் தேதி இதழிலிருந்து, கு. ப. ராஜகோபாலன் ஆசிரியர் என்றும், திருலோக சீதாராம் நிர்வாக ஆசிரியர் என்றும் அச்சிடப்பட்டது.

கு. ப. ரா. கும்பகோணத்தில்தான் இருந்தார். அங்கிருந்தபடியே, ஒவ்வொரு இதழுக்கும் விஷயங்கள் எழுதி அனுப்பிக் கொண்டிருந்தார். கதை, கட்டுரை, ஓரங்க நாடகம்–இப்படி ஒவ்வொரு இதழுக்கும் இரண்டு மூன்று விஷயங்கள் எழுதினார். மகாராஷ்டிர மன்னன் சிவாஜியின் வரலாற்றைக் கதைபோல் தொடர்ந்து எழுதி வந்தார். அது 'பரத்வாஜன்'

என்ற புனைபெயரில் பிரசுரம் பெற்றது. கு. ப. ரா. கரிச்சான் என்ற பெயர்களிலும் எழுதினார்.

கும்பகோணத்தில் வசித்த தி. ஜானகிராமன், எம். வி. வெங்கட்ராம், ஆர். நாராயணசுவாமி ( 'கரிச்சான் குஞ்சு' ), கி. ரா. கோபாலன், ஸ்வாமி நாத ஆத்ரேயன் மற்றும் சில நண்பர்களிடமிருந்தும் கதைகள் வாங்கி கு. ப. ரா. ஊழியனுக்கு அனுப்பிக் கொண்டிருந்தார்.

பொதுவாக, ஒவ்வொரு இதழையும் 'எடிட் செய்து'– தேவைப்பட்ட கதைகள், கவிதைகள், கட்டுரைகள் முதலியவற்றைத் தேர்ந்தெடுத்து உருவாக்கியவர் திருலோக சீதாராம்தான்.

அவர் தகுந்த உதவி ஆசிரியர் ஒருவரைத் தேடிக் கொண்டிருந்தார். 1943 டிசம்பரில் சென்னை 'நவசக்தி' மாதப் பத்திரிகை அலுவலகத்தில் என்னைக் கண்டார்.

1939–ல் எழுத ஆரம்பித்து, எழுத்தாளனாகவே வாழ்வது என்று தீர்மானித்து, பார்த்துக் கொண்டிருந்த சர்க்கார் விவசாய டிமான்ஸ்ட் ரேட்டர் ஆபீஸ் குமாஸ்தா வேலையை 1941– ல் துறந்துவிட்டு, எழுத்து உலகத்தில் முன்னேறுவதற்கு எனக்கு உதவக்கூடிய ஒரு பத்திரிகையை நான் தேடிக் கொண்டிருந்த காலம் அது.

1943–பிப்ரவரியில் புதுக்கோட்டை 'திருமகள்' என்ற பத்திரிகையில் முதலில் சேர்ந்தேன். ராசி. சிதம்பரம் என்பவர் நடத்திய பத்திரிகை. இராம. மருதப்பன் ஆசிரியர். தரமான சிறு பத்திரிகையாக வளர்ந்து வந்த அதை, 'கலாமோகினி' மாதிரி இலக்கிய மறுமலர்ச்சிப் பத்திரிகை யாக மாற்ற வேண்டும் என்று அவர்கள் ஆசைப்பட்டார்கள். 'கலா மோகினி' வி. ரா. ராஜகோபாலன் ஆலோசனையின்படி என்னை உதவி ஆசிரியராகச் சேர்த்தார்கள். ஆனால், பொருளாதார நிலை சீராக இருந்ததில்லை. பத்திரிகை சரியாக வராது என்று புரிந்ததும், நான் கோயம்புத்தூரிலிருந்து வெளிவந்து கொண்டிருந்த 'சினிமா உலகம்' மாதமிருமுறை பத்திரிகையில் சேர்ந்தேன்.

அதில் துணை ஆசிரியர் ஆக ஒன்பது மாதங்கள் பணியாற்றிய பின், டிசம்பரில் சென்னை 'நவசக்தி' க்குப் போனேன்.

திரு. வி. கலியாணசுந்தர முதலியார் வாரப் பத்திரிகையாக நடத்தி வந்த 'நவசக்தி' யை, "எனக்கு இரு மணிகள் கிடைத்தார்கள். ஒன்று சக்திதாசன் சுப்பிரமணி; இன்னொன்று ராதாமணி. அவர்கள் கண்மணி போல் நவசக்தியைப் போற்றி வளர்ப்பார்கள்" என்று குறிப்பிட்டு, இருவரிடமும் அளித்து விட்டார்.

சக்திதாசன் சுப்பிரமணியன் 'நவசக்தி'யை இலக்கிய மாசிகையாக நடத்தினார். கம்யூனிஸ்டுக் கட்சியைச் சேர்ந்த கே. ராமநாதன் துணை கிட்டியதும் 'நவசக்தி' முற்போக்கு இலக்கிய மாதப் பத்திரிகை ஆயிற்று.

அந்த சந்தர்ப்பத்தில்தான் நான் 'நவசக்தி'யில் போய்ச் சேர்ந்தேன். அங்கே திருலோக சீதாராம் வந்திருந்தார், 'கிராம ஊழியன்' பொங்கல் மலருக்கு விஷயங்களும் விளம்பரங்களும் சேகரம் செய்வதற்காக, கூடவே என்னையும் அழைத்துப் போய்விட வேண்டும் என்று பெரிதும் விரும்பினார்.

எனினும், நான் அப்போது 'கிராம ஊழிய'னுக்குப் போகவில்லை.

1944 பிப்ரவரியில் சென்னைக்கு வந்த அ. வெ. ர. கி. என்னையும் துறையூருக்கு அழைத்துப் போனார். நான் கி. ஊ. உதவி ஆசிரியரானேன்.

'கிராம ஊழியன்' கிரவுன் அளவில்— சிறிய வடிவத்தில்— வந்து கொண்டிருந்தது. கு. ப. ரா. மற்றும் கும்பகோணம் எழுத்தாளர்களோடு, ந. பிச்சமூர்த்தியும் கவிதை, கதை, 'மனநிழல்' கட்டுரைகள் எழுதி வந்தார். கோபுலு, சாரதி ஆகிய ஓவியர்கள் அப்பொழுதுதான் பத்திரிகை உலகத்தில் பிரவேசித்திருந்தார்கள். கி. ஊ. அவர்களுக்குப் பெரிதும் உதவியது.

1944 மே மாதம் இதழிலிருந்து பத்திரிகையை டிம்மி சைஸில் —'ஆனந்த விகடன்' அளவில்— வெளியிடுவது என்று திட்டமாயிற்று.

எதிர்பாராத விதத்தில், கு. ப. ரா. ஏப்ரல் கடைசியில் மரணமடைந்தார்.

ஆகவே, 'கிராம ஊழியன்' வரலாற்றில் கு. ப. ராஜகோபாலன் பெயர் எட்டு மாதங்களுக்கு—நான்கு மாத காலம் 'கௌரவ ஆசிரியர்' என்றும், நான்கு மாதங்கள் ஆசிரியர் என்றும்—இடம் பெற்றுள்ளது.

அக் காலத்தில், கு. ப. ரா. சில சிறுகதைகளும், 'பாமதி' போன்ற சில ஒற்றையங்க நாடகங்களும், சில கட்டுரைகளும் எழுதியுள்ளார். ந. பிச்சமூர்த்தியும் நிறைய எழுதியிருக்கிறார். தி. ஜானகிராமனின் முதல் நாவல் 'அமிர்தம்' தொடர் கதையாக வெளிவந்தது. புத்தக மதிப்புரை 'நமது தராசு' என்ற தலைப்பில் பிரசுரமாயிற்று.

அந் நாட்களில் வெளிவந்து மிகுந்த கவனிப்புக்கும் பேச்சுக்கும் இலக்காகியிருந்த வி. ஸ. காண்டேகரின் 'கருகிய மொட்டு'

நாவலுக்கு கு. ப. ரா. எழுதிய விரிவான மதிப்புரை குறிப்பிடத் தகுந்தது.

திருலோக சீதாராம் 'மந்தஹாசன்' என்ற பெயரில் கவிதைகள் எழுதினார். கலைவாணன் ( க. அப்புலிங்கம் ) கவிதைகளும் வந்து கொண்டிருந்தன.

டிம்மி சைஸில் வெளியான முதலாவது இதழ் கு. ப. ரா. நினைவு மலராக அமைந்தது.

கு. ப. ராஜகோபாலன் ஆசிரியராக இருந்த காலத்தில், 1944 ஜனவரி யில், 'கிராம ஊழியன்' பொங்கல் மலர் ஒன்றைப் பெரிய அளவில் தயாரித்து வெளியிட்டது. இலக்கியத் தரம் உள்ள சிறப்பு மலராக அமைந்திருந்த அதில்தான் புதுமைப்பித்தன் முதல் முதலாக வேளூர் வெ. கந்தசாமிக் கவிராயர் என்ற பெயரில் ஒரு கவிதை எழுதினார். 'உண்டுண்டு கடவுளுக்குக் கண் உண்டு; கண்ணோ நெருப்பு வைக்க' என்று தொடங்கும் கவிதை அது. மற்றும் அந்நாளைய பிரபல எழுத் தாளர்களின் கதைகள், கட்டுரைகள் இடம் பெற்றிருந்தன. ந. பிச்ச மூர்த்தியின் நீண்ட கவிதை 'மழை அரசி காவியம்' மலருக்குத் தனிச் சிறப்பு அளித்தது.

கு. ப. ரா. வின் மறைவுக்குப் பிறகு, 'கிராம ஊழியன்' போக்கில் இளமை வேகமும், துடிப்பும், துணிச்சலும் நையாண்டியும் சேர்ந்தன. கு. ப. ரா. வுக்காக எழுதிக்கொண்டிருந்த எழுத்தாளர்கள் ஊழியனுடன் ஒத்துழைக்க விரும்பவில்லை. ஆகவே நான் பலப்பல பெயர்களில் ஒவ் வொரு இதழிலும் அதிகம் எழுதவேண்டிய அவசியம் ஏற்பட்டது. திறமை யுள்ள புதிய எழுத்தாளர்கள் ஊழியன் எழுத்தாளர்கள் ஆனார்கள். அசோகன், தி. க. சிவசங்கரன், ராசிபுரம் தனுஷ்கோடி, எஸ். சிதம்பரம் முதலியவர்கள் தொடர்ந்து எழுதினார்கள்.

கலைவாணன் ( திருவானைக்காவல் க. அப்புலிங்கம் ) ஓசை நயமும் இயல்பான ஓட்டமும், உணர்ச்சியும் உயிர்ப்பும் நிறைந்த கவிதைகள் எழுதி வந்தார்.

மணிக்கொடி எழுத்தாளர்களில், பிச்சமூர்த்தி, சிட்டி, எம். வி. வெங்கட்ராம் ஆகியோர் ஊழியனில் அதிகம் எழுதியுள்ளனர். எம். வி. வி., சில கதைகள் எழுதினார். சரத்சந்திரர் பெண்மையைப் போற்றி எழுதிய நீண்ட கட்டுரையை 'விக்கிரகவிநாசன்' என்ற புனைபெயரில் எம். வி. வி. தமிழாக்கினார். அது தொடர்ந்து பிரசுரமாயிற்று.

உலகத்துச் சிறுகதைகளை என் அண்ணா அசோகன் ( ரா. சு. கோமதிநாயகம் ) 'மகாயன்' என்ற பெயரில் மொழிபெயர்த்துத் தந்தார்.

ஈழத்து எழுத்தாளர்கள் ஊழியனில் அதிகமாக எழுதினார்கள்.

1930–களில் 'கலைமகள்' இலங்கைத் தமிழ் எழுத்தாளர்கள் பலரது கதைகளை வெளியிட்டு வந்தது. சி. வைத்தியலிங்கம், சம்பந்தன், இலங்கையர்கோன் போன்றவர்களது படைப்புக்கள் அடிக்கடி வந்து கொண்டிருந்தன. அக்காலத்தில் இலங்கையில் வசித்த சோ. சிவபாத சுந்தரம் தமிழ்ப் பத்திரிகைகளோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார்.

இவர்களுக்கு அடுத்த தலைமுறையினர் கிராம ஊழியனுடன் நெருங்கிய தொடர்பு கொண்டனர். சோ. தியாகராசா, மஹாகவி, நாவற் குழியூர் நடராஜன் போன்றவர்கள் கவிதைகள் எழுதினார்கள். சு. வேலுப் பிள்ளையும் மற்றும் சிலரும் கதை கட்டுரைகள் எழுதிவந்தார்கள்.

1944 ஊழியன் ஆண்டு மலர் ஒன்றை விசேஷமாகவும் வித்தியாச மாகவும் தயாரிக்கத் திட்டமிட்டோம். தமிழகத்தின் மறுமலர்ச்சி எழுத்தா ளர்கள் அனைவரது படைப்புகளோடும் இலங்கைத் தமிழ் எழுத்தாளர்க ளின் படைப்புகளையும் வெளியிட விரும்பினோம். அந்நாளில் பிரபல மாயிருந்த ஈழத்து எழுத்தாளர்கள் பலரோடும் தொடர்பு கொண்டேன். சி. வைத்தியலிங்கம், இலங்கையர்கோன், ராஜ அரியரத்னம், ச. அம்பிகை பாகன் மற்றும் இளைய தலைமுறையினர் பலரும் அன்போடும் ஆர்வத் தோடும் ஒத்துழைத்தனர்.

பொதுவாக, தமிழ்நாட்டின் பெரிய பத்திரிகைகள் விசேஷ மலர் தயாரித்து வெளியிடுகிறபோது, அந்நாட்களில் முதன் முதலில் சக்கர வர்த்தி ராஜகோபாலாச்சாரியார், மகா மகோபாத்தியாய உ. வே. சாமிநாத அய்யர் கட்டுரை அல்லது கதையைப் பெருமையுடன் பிரசுரிப்பதையே வழக்கமாகக் கொண்டிருந்தன. தொடர்ந்து, மாண்புமிகு அமைச்சர்கள் மற்றும் பெரிய மனிதர்களின் எழுத்துக்களை அச்சிட்டு மகிழ்ந்தன.

'கிராம ஊழியன்' ஆண்டு மலரில் அந்த வழக்கத்தை நாங்கள் கடைப்பிடிக்கவில்லை. மாறாக, இலங்கைத் தமிழ் எழுத்தாளர் அம்பிகை பாகன் எழுதிய கட்டுரையை முதலாவதாக அச்சிட்டோம். இது இலங்கை எழுத்தாளர்களுக்கும் இலக்கிய ரசிகர்களுக்கும் மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது.

அந்த மலர் விஷய கனத்தினாலும் ரசிகர்களின் போற்றுதலுக்கு இலக்காயிற்று. வேளூர் கந்தசாமிக் கவிராயர் ( புதுமைப்பித்தன்) 'ஓகோ உலகத்தீர் ஓடாதீர்!' என்ற விறுவிறுப்பான கவிதை, ந. பிச்சமூர்த்தியின் 'மகா கவிகள்', ச. து. சு. யோகியாரின் கவிதை, சிட்டியின் ரகளைக்

கட்டுரை, சி. வைத்திலிங்கத்தின் கதை 'கங்காகீதம்' மற்றும் பலரின் படைப்புகள் ஆகியவற்றுடன் கே. ஏ. அப்பாஸ் ஆங்கிலத்தில் எழுதிய 'ஒரு இரவு' என்ற சிறந்த சிறுகதையின் மொழிபெயர்ப்பும் இலக்கிய விருந்து ஆக அமைந்திருந்தன.

மலருக்குப் பின்னர், இலங்கையர்கோன் பத்திரிகையின் இறுதி இதழ்வரை கதைகளும் நாடகங்களும் எழுதி உதவி வந்தார்.

1944 நவம்பரில் திருலோக சீதாராம் 'கிராம ஊழியன்' தொடர்பை விட்டு விட்டு, திருச்சி சேர்ந்து, 'சிவாஜி' வார இதழின் ஆசிரியரானார். டிசம்பர் 1 –ம் தேதி இதழிலிருந்து 'ஆசிரியர் : வல்லிக்கண்ணன்' என்று பெயர் அச்சிடப்பட்டது.

துணிச்சலான அபிப்பிராயங்கள், நேர்மையான புத்தக மதிப்புரைகள், ரசம் நிறைந்த புதுமைக் கதைகள், சர்ச்சையைக் கிளப்பிய கட்டுரைகள், இலக்கிய விவகாரங்கள், அருமையான உலகத்துச் சிறுகதைகள் ஊழிய னில் இடம் பெற்று வந்தன. நாடகம், சினிமா பற்றிய சூடும் சுவையும் நிறைந்த விமர்சனங்கள் இதழ்தோறும் வெளியாயின. ஓரங்க நாடகங் களுக்கு ஊழியன் விசேஷ இடம் ஒதுக்கியிருந்தது. 'பாரதி அடிச்சுவட் டில்' என்ற தலைப்பில், பாரதியின் 'காட்சிகள்' பாணியில் அமைந்த வசன கவிதைகளும் பிரசுரமாயின. நையாண்டி பாரதியின் கட்டுரைக ளும் சொனா முனாவின் சிந்தனைகளும் கிராம ஊழியனின் விசேஷ அம்சங்களாக விளங்கின.

கொடுக்கப்பட்ட விஷயங்களில் சூடும் சுவையும், நயமும் புதுமையும், கனமும் வேகமும் இருந்தபோதிலும், 'கிராம ஊழியன்' என்ற பெயர் அந்தப் பத்திரிகைக்குப் பாதகமாகவே செயல்பட்டது எப்போதும்.

'கிராம நலம்', 'கிராம ராஜ்யம்' போன்ற கிராம சீர்திருத்தம் பற்றிப் பேசக்கூடிய ஒரு பத்திரிகை என்ற எண்ணத்தையே 'கிராம ஊழியன்' எனும் பெயரும் ஏற்படுத்தி வந்தது. இலக்கியப் பத்திரிகைக்கு 'கிராம ஊழியன்' என்ற பெயர் எடுப்பாகவுமில்லை; பொருத்தமாகவும் இல்லை என்பது பொதுவான அபிப்பிராயம். 'கிராம ஊழியன்' என்று பெயரை வைத்துக் கொண்டு, என்னென்ன விஷயங்களை எல்லாமோ போட்டுப் பத்திரிகையைப் பாழ்படுத்துவதாக ஒரு சாரார் குறைகூறிக் கொண்டிருந் தார்கள்.

பத்திரிகைக்குப் படைப்புகள் அனுப்பி ஒத்துழைக்க மனமில்லாது போன எழுத்தாளர்கள், ஒருவனே பலப்பல பெயர்களில் எழுதிப்

பத்திரிகையின் வளர்ச்சியைக் கெடுத்துக் கொண்டிருக்கிறான் என்று கண்டனங்களை வாரி வீசி மகிழ்ந்தார்கள்.

எப்படியோ, கிராம ஊழியன் பலரது கவனத்துக்கும் பரபரப்பான பேச்சுக்கும் உரிய பத்திரிகையாக நடந்து வந்தது. பத்திரிகை விற்பனையில் லாபம் இல்லை; அச்சு இயந்திரங்களைப் பெருத்த லாபத்தோடு விற்க முடியும் என்ற நிலை வந்ததும், அதிபர் அ. வெ. ர. கிருஷ்ணசாமி ரெட்டியார் மிஷின்களை விற்று விட்டார். பத்திரிகை நிறுத்தப்பட்டது.

'கிராம ஊழியன்' **16–5–1947** இதழ் அதன் கடைசி இதழாக அமைந்தது.



# 7. சில தகவல்கள்

இத் தொடரில் இதுவரை குறிப்பிடப்பட்டுள்ள பத்திரிகைகள் பலவும் நம் நாடு சுதந்திரம் அடைவதற்கு முந்திய காலத்தில் வெளிவந்தவை ஆகும்.

அதே காலத்தில் தோன்றி வளர்ந்த 'பெரிய பத்திரிகைகள்' வேறு வகை முயற்சிகள், எழுத்தாளர்களிடத்தும் எழுத்தின் மீதும் அவை ஏற்படுத்திய தாக்கங்கள் அல்லது பாதிப்புகள் மற்றும் இவை போன்ற முக்கிய விவரங்கள் குறித்தும் தகவல்கள் தந்தால் பயனுள்ளதாக இருக்கும் என்று இலக்கிய நண்பர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள். கவனிக்கப்பட வேண்டிய முக்கிய விஷயம்தான் என்பதால் இங்கு பொதுவான சில தகவல்களை இணைக்கிறேன்.

இந்திய சுதந்திரப் போராட்டம் வெறும் அரசியல் போராட்டமாக மட்டுமே அமைந்திருந்ததில்லை. அரசியல், விடுதலை உணர்வோடு, சமூக சீர்திருத்த வேட்கையும், தனிமனிதப் பண்பாட்டு உயர்வு உணர்ச்சி யும், தாய்மொழி வளர்ச்சி வேகமும் சேர்ந்தே செயல்பட்டன.

மொழி வளர்ச்சி உணர்வு பத்திரிகைகளின் வளர்ச்சிக்குத் துணை புரிந்தது. நாட்டு மக்கள் மத்தியில் அரசியல் விடுதலை உணர்ச்சி, சமூகச் சீர்திருத்த உணர்வு, பண்பாட்டு உயர்வு ஆகியவற்றைப் பரப்புவதற்கும், அவர்களைச் செயல்வீரர்களாக மாற்றுவதற்கும் பத்திரிகை கள் பயன்பட்டன.

பத்திரிகைகளின் வேக வளர்ச்சி மொழி மறுமலர்ச்சிக்கு உதவியது. இந்திய மொழிகள் பலவற்றிலும் வரலாற்று ரீதியாகக் காணப்படும் இந்தப் பரிணாமம் தமிழ்நாட்டிலும் செயல்பட்டது.

1930 களுக்கு முன்னரும், முப்பதுகளின் ஆரம்பத்திலும், 'இலக்கியப் பத்திரிகை' என்று 'செந்தமிழ்,' செந்தமிழ்ச் செல்வி,' 'ஆனந்த போதினி' ஆகிய பத்திரிகைகளே இருந்தன.

முந்திய இரண்டு 'வித்வான்கள்', பழந்தமிழில் புலமை பெற்றவர்கள் ஆகியவர்களது எழுத்துக்களையே ஆதரித்து வந்தன. 'ஆனந்த போதினி' கம்பராமாயணம், திருக்குறள், சங்க இலக்கியம் போன்ற தமிழ்ச்

செல்வங்கள் பற்றிய கட்டுரைகளோடு, நாவல், சிறுகதை ஆகியவற்றுக்கும் இடம் அளித்து வந்தது.

ஜனரஞ்சகப் பத்திரிகையாக, நகைச்சுவைக்கு முக்கியத்துவம் அளிக்கும் நோக்குடன், 'ஆனந்த விகடன்' தோன்றி வளர்ந்தது, மாதப் பத்திரிகையாக ஆரம்பித்து, 'மாதம் இருமுறை' ஆகி, பின் 'மாதம் மும்முறை' என்று வந்து, பிறகு 'வாரப் பத்திரிகை' யாக மாறி 'விகடன்' வளர்ச்சி பெற்றது, ஜனரஞ்சகப் பத்திரிகையின் வெற்றிக்கு நல்ல எடுத்துக்காட்டு ஆகும்.

'விகடன்' வாயிலாக 'கல்கி' ரா. கிருஷ்ணமூர்த்தி தமது எழுத்தாற்றலினால் தமிழ்நாட்டில் பரவலாக வாசகர்களையும், பத்திரிகையை ஆவலோடு எதிர்பார்த்து வரவேற்றுப் படிக்கும் பழக்கத்தையும் அதிகரிக்கச் செய்தார்.

வாழ்க்கையை மேலோட்டமாகப் பார்ப்பதும், வாழ்க்கையின் துன்ப துயரங்கள், ஏமாற்றங்கள், வெறுமை, வறட்சி முதலியவைகளைக் காண மறுப்பதும், பொதுவாக இனிமைகளையும் சுகங்களையும் கிளுகிளுப்பூட்டும் விஷயங்களையும் கதைப்பொருள் ஆக்குவதுமே விகட மனோபாவமாகவும், 'கல்கி' யின் நோக்கு ஆகவும் இருந்தது. அவ் வழியில் அவரைப் பின்பற்றி எழுதுகிறவர்கள் பெரும் பலர் ஆயினர்.

இந்த ரக எழுத்து பொழுதுபோக்கு அம்சத்தையே வலியுறுத்தியது. 'விகடன்' அரசியல் கருத்துக்களையும்—முக்கியமாக தேசியப் பார்வையில், காங்கிரஸ் கட்சியின் கொள்கைகளையும் செயல்களையும் பிரசாரப்படுத்தும் எழுத்துக்களை— அந்த அந்தக் காலத்திய அதிவிசேஷமான செய்திகளையும், சங்கீதம், சினிமா போன்ற கலை விஷயங்களையும் வெளியிட்டதுடன் கதைகளுக்கு அதிக இடமும், பழந்தமிழ் இலக்கியத்துக்கு ஒரு சில பக்கங்களும் ஒதுக்கியது. 'தொடர்கதை' யை வாசகர்களை வசீகரித்து, விடாது பிடித்து வைத்திருக்கும் உத்தியாகவும், பத்திரிகையின் விற்பனையை வளர்க்கத் துணைபுரியும் ஒரு சாதனமாகவும் ஆக்கியது.

மொழி வளர்ச்சி, மொழி மறுமலர்ச்சி காரணமாக இந்திய மொழிகள் அனைத்துமே சிறுகதைக்கு அதிகமான கவனிப்பு அளித்து வந்த காலம் அது. சஞ்சிகைகளும், வாரப் பத்திரிகைகளும் மட்டுமல்லாது, தினப் பத்திரிகைகள் கூடக் கதைகளை வரவேற்றுப் பிரசுரிப்பதில் ஆர்வம் காட்டத் தொடங்கியிருந்தன. 'ஓரங்க நாடகம்' எனும் இலக்கியப் பிரிவு

எல்லா மொழிகளிலும் வளர்ந்து மலர்ந்தது. நாவல்கள் வேகமாகப் பிறந்து கொண்டிருந்தன.

இந்தத் தாக்கம் தமிழ்ப் பத்திரிகைகளிலும் காணப்பட்டது. ஓரங்க நாடகங்கள் பல்வேறு சுவைகளோடும் எழுதப்பட்டன. தமிழ்ப் பத்திரிகைகள் கதைகளை வரவேற்றன. சுயமாக எழுதப்படும் நாவல்களை ஆதரிப்பதற்குப் பதிலாக ஹிந்தி, வங்க நாவல்களின் தமிழாக்கத்தையே விரும்பிப் பிரசுரித்தன.

1930 களிலும் 1940 களிலும் பிரேம்சந்த், பங்கிம் சந்திரர், தாகூர், சரத் சந்திரர் ஆகியோரது நாவல்கள் தமிழ்ப் பத்திரிகைகளில் தொடர் கதைகளாகவும், புத்தக வெளியீடுகளாகவும் அதிகம் அதிகமாக வந்துள்ளன. பின்னர் தொடர்ந்து வி. ஸ. காண்டேகரின் மராத்தி நாவல்கள் வேகமாகத் தமிழில் இறக்குமதி செய்யப்பட்டன. ஒரு பத்து வருஷ காலம் 'காண்டேகர் ஸீசன்' என்ற நிலை இங்கு நீடித்தது.

தமிழ் நாவல் படைப்பு வெகுகாலம் வரை சோனிக் குழந்தையாக இருந்ததற்கு நாட்டில் நிலவிய இந்த நிலைமையும் ஒரு முக்கியக் காரணம் ஆகும்.

விகடனும், அதைப் பின்பற்றிய ஜனரஞ்சகப் பத்திரிகைகளும்–'கல்கி' வழியில் செயலாற்றிய எழுத்தாளர்களும்–உலக இலக்கியங்களின் நல்ல கதைகளை நேரடி மொழிபெயர்ப்பாகக் கொடுப்பதை விரும்பவில்லை. பிறநாட்டு நல்ல கதைகளைத் தழுவித் தமிழ்க்கதைகளாக வெளியிடுகிற போக்கே மிகுந்திருந்தது.

இலக்கியம் என்பது தொன்மையானவற்றைப் புகழ்ந்து விரிவுரை கூறிக் கொண்டிருப்பது மட்டுமல்ல; புதிய விஷயங்களைப் புதிய புதிய முறையில் எடுத்துக்கூறும் கவிதைகளும் கதைகளும் நாவல்களும் இலக்கியமாக முடியும் என்ற உணர்வு மொழி மறுமலர்ச்சியின் பயனாக வளர்ந்தது. ஆற்றல் நிறைந்தவர்கள் இவ்வகை எழுத்து முயற்சிகளில் ஈடுபட்டார்கள்.

விற்பனையைப் பெருக்குவதில் தீவிர கவனம் செலுத்திய ஜனரஞ்சகப் பத்திரிகைகள் புதிய படைப்பு முயற்சிகளுக்கு ஆதரவு காட்டுவதில் ஒரு எல்லை வகுத்து, தங்களுக்குத் தாங்களே கட்டுப்பாடுகள் விதித்துக் கொண்டு செயல்பட்டன.

1930 களின் ஆரம்பத்தில் தோன்றிய 'கலைமகள்' இலக்கியப் பத்திரிகையாகச் சில காலம் வளர்ந்தது. இது 'மணிக்கொடி' மனோபாவ எழுத்தாளர்களையும், 'விகட' மனோபாவ எழுத்தாளர்களையும் ஆதரிக்கும்

மிதவாதப் பத்திரிகையாகச் செயலாற்றியது. 1950 களில் இது தன்னை 'குடும்பப் பத்திரிகை' என்று கூறிக் கொண்டு, வணிக முறைகளைக் கையாண்டு வெற்றிகரமாக முன்னேறுவதில் அக்கறை காட்டலாயிற்று.

கனமான இலக்கியத் தன்மையையும் ஜனரஞ்சகப் போக்குகளையும் இணைத்து, பெரிய அளவில் ஒரு பத்திரிகையை நடத்தி லாபமும் வெற்றியும் காண முடியுமா என்று சோதனை பண்ணுவதில் க. நா. சுப்ரமண்யம் ஆர்வம் கொண்டிருந்தார். 1930 களில் அவர் 'சூறாவளி'யை, 'விகடன்' போல், ஒரு வாரப் பத்திரிகையாக நடத்திப் பார்த்தார். பதினெட்டு இதழ்களோடு பத்திரிகை நின்று போயிற்று.

1940 களில், தொழில் அதிபர் ஒருவரது துணையோடு, 'சந்திரோதயம்' பத்திரிகையை மறுமலர்ச்சி பண்ணிப் பார்த்தார் க. நா. சு.

'விகடன்' பகுத்தறிவுப் போட்டியை ஒரு பந்தய பிசினஸ் ஆகவும், பத்திரிகையின் விற்பனையைப் பெருக்கக் கூடிய ஒரு சாதனமாகவும் நடத்திக் கொண்டிருந்தது. அந்நாட்களில் விகடனைப் பின்பற்றி வேறு சில பத்திரிகைகளும் போட்டிப் பந்தய பிசினஸில் ஈடுபட்டிருந்தன. ஆனால் வெற்றி பெற்றதில்லை.

அவைகளில் 'சந்திரோதயம்' என்பதும் ஒன்று. நன்றாக நடைபெற முடியாமல் தடுமாறிக் கொண்டிருந்த அது, மறுமலர்ச்சி 'மாதம் இரு முறை' பத்திரிகையாக மாறி இரண்டு வருஷங்கள் வந்தது. க. நா. சு. ஆசிரியர். சி. சு. செல்லப்பா துணை ஆசிரியர்.

புதுமைப்பித்தன் எழுதிய 'கபாடபுரம்' இதில் தொடர்ந்து வந்தது. லா. ச. ரா. சில கதைகள் எழுதினார்.

பத்திரிகை எழுத்துலகத்தில் பாதிப்பு எதையும் ஏற்படுத்தி விடவில்லை.

க. நா. சுப்ரமண்யம் உலகத்துச் சிறந்த நாவல்கள் பலவற்றைத் தமிழாக்கி உதவினார். கு. ப. ராஜகோபாலன், புதுமைப்பித்தன் மற்றும் சில எழுத்தாளர்கள் உலகத்துச் சிறுகதைகளை நல்ல முறையில் மொழி பெயர்த்துத் தந்தார்கள்.

அவற்றை நவயுகப் பிரசுராலயம், அ. கி. ஜயராமனின் ஜோதி நிலையம், அ. கி. கோபாலனின் தமிழ்ச் சுடர் நிலையம் போன்ற பதிப்பகங்கள் புத்தகங்களாக வெளியிட்டன.

'சக்தி பிரசுராலயம்' வை. கோவிந்தன் பிரசுரத் துறையிலும் பத்திரிகைத் துறையிலும் பெரும் சாதனைகள் புரிந்துகொண்டிருந்தார். அறிவுக்கு விருந்தாகும் நல்ல நூல்களை அழகான முறையில் வெளியிடுவதில் அவர் ஆர்வம் காட்டினார்.

வை. கோவிந்தன் பல வருட காலம் நடத்திய 'சக்தி' என்ற மாசிகை தமிழில் ஒரு வித்தியாசமான பத்திரிகையாகத் திகழ்ந்தது. ஆரம்பத்தில், 'டைம்' பத்திரிகை அளவிலும் அமைப்பிலும் அது வந்து கொண்டிருந்தது. பிறகு புத்தக வடிவம் பெற்றது. கனத்த அட்டையுடன், அழகிய தோற்றப் பொலிவுடன், நல்ல வெள்ளைத் தாளில் அருமையான அச்சில் வந்த 'சக்தி' ஒரு சில கதைகள், ஒன்றிரண்டு கவிதைகளோடு, 'ரீடர்ஸ் டைஜஸ்ட்' பாணியில் பலசுவைக் கட்டுரைகளையும், அறிவுக்கு விருந்தாகும் விஷயங்களையும், சுவாரஸ்யமான துணுக்குகளையும் சேகரித்து வழங்கியது. வெகு காலம்வரை தி. ஜ. ர. (தி. ஜ. ரங்கநாதன்) அதன் ஆசிரியராகப் பொறுப்பு வகித்தார். அவருக்குப் பிறகு சுப. நாராயணன் என்ற ஆற்றலும் சிந்தனைத் திறமும் மிகுதியாகப் பெற்றிருந்த எழுத்தாளர் அதன் ஆசிரியராகச் செயலாற்றினார். சில வருடங்களுக்குப் பின்னர் கு. அழகிரிசாமியும் தொ. மு. சி. ரகுநாதனும் பொறுப்பேற்று 'சக்தி' பத்திரிகையை உருவாக்கி வந்தனர்.

காலப்போக்கில், 'சக்தி' என்ற நல்ல மாதப் பத்திரிகை நிறுத்தப்பட்டது. 'சக்தி மலர்' என்ற பெயருடன், கதைகள்– கட்டுரைகள்– கவிதைகள் நிறைந்த 'மாதம் ஒரு புத்தகம்' அழகிரிசாமி ரகுநாதன் தயாரிப்பாக ஒரு வருடம் வெளியிடப் பெற்றது. இறுதியில் 'சக்தி பிரசுராலயம்' என்ற நல்ல புத்தக வெளியீட்டு நிறுவனமே செயலற்றுப் போயிற்று.

இரண்டாவது உலக யுத்தம் நடந்து கொண்டிருந்த காலத்திலும் அதற்குப் பிந்திய சில வருடங்களிலும் ( 1940 களின் முற்பகுதியில்) புதிய பத்திரிகைகள் துவங்கி நடத்துவதற்கு அனுமதி மறுக்கப்பட்டு வந்தது.

இந்த நெருக்கடி நிலையை மீறிச் சமாளிக்கும் விதத்தில் ஏ. கே. செட்டியார் ஒரு வழி கண்டுபிடித்தார். பத்திரிகை போலவும்– ஆனால் முறையான ஒரு பத்திரிகையாக இல்லாமல் புத்தகம் போலவும், ஆயினும் நேரான ஒரு புத்தகமாக அமையாது– 'மாத வெளியீடு' ஆக ஒரு 'மலர்' பிரசுரிக்கலாம் என்று கண்டு, 'குமரி மலர்' என்ற 'மாதம் ஒரு புத்தக' வெளியீட்டை ஆரம்பித்தார்.

'குமரி மலர்' காட்டிய வழியில் தொடர்ந்து ஏகப்பட்ட 'மலர்கள்' தமிழகத்தில் அந்நாட்களில் தோன்றின. தோன்றிய வேகத்திலேயே மறைந்தும் போயின. தமிழ் மலர், கதை மலர், கதைக் கொடி இப்படி ஏதேதோ பெயர்களில் பலப்பல வெளியீடுகள். அவற்றில் சில தரமான தயாரிப்புகளாகவும் அமைந்திருந்தன. எல்லாம் வழக்கமாக எழுதும் பெயர் பெற்ற எழுத்தாளர்களின் கதைகள், கட்டுரைகள், கவிதைகளை ஏற்றுப் பிரசுரிப்பதில் உற்சாகம் காட்டின. ஒரு சில நல்ல படைப்புகள் தோன்றுவதற்கு இவற்றில் சில உதவி புரிந்தன என்று கூறலாம்.

பெரும்பாலும் எல்லாப் பத்திரிகைகளும் 'மாதம் ஒரு வெளியீடு' மலர்களும் சென்னையிலிருந்து வந்தன என்றாலும், நல்ல முறையில் நடந்த சில பத்திரிகைகள் தமிழ்நாட்டின் இதர நகரங்கள் சிலவற்றி லிருந்தும் வந்து கொண்டிருந்தன.

கும்பகோணத்திலிருந்து 'காவேரி' என்றொரு மாதப் பத்திரிகை, வாசகர்கள் விரும்பக் கூடிய விதத்தில், பல வருட காலம் பிரசுரமாயிற்று. இது 'கலைமகள்' வழியில் நடக்க முயன்றது என்று குறிப்பிடலாம். ஆனாலும், இலக்கியப் பிரக்ஞை எதையும் அது கொண்டிருந்ததில்லை. ஆகவே, சிறுகதைத் துறையில் அல்லது நாவல் துறையில் அல்லது எதிலுமே கணக்கில் கொள்ளத்தக்க விதத்தில் ( எண்ணிப் பார்க்க வேண்டிய அளவுக்கு ) அந்தப் பத்திரிகை எதுவும் செய்ய இயலாமல் போய்விட்டது.

கோயம்புத்தூரிலிருந்து 'வசந்தம்' என்ற மாதப் பத்திரிகை பல வருட காலம் வந்தது. வாசகர்கள் விரும்பக் கூடிய ஒரு 'நல்ல பத்திரிகை' யாகத்தான் இதுவும் வளர்ந்தது. நாவலாசிரியர் ஆர். சண்முகசுந்தரத் தின் தம்பி ஆர். திருஞானசம்பந்தம் இதன் ஆசிரியர். பிரபல அரசியல் வாதி ஆர், கே. சண்முகம் செட்டியார், பிற்காலத்தில் பத்திரிகை நடத் தும் பொறுப்பை ஏற்று நிர்வகித்தார். விசேஷமான சாதனைகளோ சோதனைகளோ இந்தப் பத்திரிகையின் வாயிலாக நிகழ்த்தப்பட்டதில்லை. சரத் சந்திரரின் பெரிய நாவல்கள் ஆர். சண்முகசுந்தரத்தின் தமிழாக்க மாகத் தொடர்ந்து வந்து கொண்டிருந்தன இதில்.

பம்பாயிலிருந்து ஒரு தமிழ்ப் பத்திரிகை அழகான– வசீகரமான– அட்டைப் படங்களோடு வெளிவந்தது. 'விந்தியா' என்பது அதன் பெயர்.

1940 களில் பத்திரிகைத் துறையில் இலக்கிய உணர்வோடு செய்யப்

பட்ட சில புதிய சோதனை முயற்சிகள் என்று குறிப்பிடப்பெற வேண்டி யனவும் உண்டு.

க. நா. சு., புத்தகங்கள் பற்றி மதிப்புரையும் தகவல்களும் தருவதற் காக 'ராமபாணம்' என்றொரு சிறு வெளியீட்டைப் பிரசுரித்தார்.

ராமபாணம் என்பது புத்தகங்களில் துளைபோடும் ஒரு பூச்சியின் பெயர். புத்தகப்பூச்சி அல்லது புத்தகப் புழுவைக் குறிக்கும் இச் சொல் லையே க. நா. சு. தனது 'சூறாவளி' பத்திரிகையில் புத்தக மதிப்புரைப் பகுதியின் தலைப்பாகப் பயன்படுத்தி வந்தார். பின்னர், புத்தக உலகச் செய்திகளையும் அபிப்பிராயங்களையும் கூறும் பிரசுரத்தின் பெயராக அதை வைத்தார்.

இவ் வெளியீடு சில இதழ்களே வந்தன.

சில வருஷங்களுக்குப் பிறகு. மறுமலர்ச்சி இலக்கியத்தில் புதுமை பண்ணும் நோக்கத்துடன் க. நா. சு. 'உஷா' என்றொரு சிறு பத்திரி கையை வெளியிட்டார். அது இரண்டே இரண்டு இதழ்கள்தான் வந்தன.

ரோமன் ரோலந்த் எழுதிய அற்புதமான மாபெரும் நாவல் 'ஜீன் கிறிஸ்தோவ்'. அதை க. நா. சு. தமிழ் ரசிகர்களுக்கு அறிமுகம் செய்ய ஆசைப்பட்டார். நாவல் மொழிபெயர்ப்பை ஒரேயடியாகப் புத்தகமாக வெளியிடுவதற்குப் பெரும்பணமும் மிக நிறையக் காகிதமும் தேவைப் படும் என்பதால் க. நா. சு. ஒரு புதிய திட்டம் வகுத்தார். ஒவ்வொரு வாரமும் பதினாறு பக்கங்கள் கொண்ட துண்டுப் பிரசுரமாக இரண் டணா விலையில் வெளியிடுவது; நாவல் முழுவதையும் இந்த ரீதியில் பிரசுரிக்கலாம் என்று அவர் கருதினார்.

இந்த அடிப்படையில் 'ஜீன் கிறிஸ்தோவ்' மொழிபெயர்ப்பு சில வாரங்கள் தொடர்ந்து வந்தது. பிறகு நின்றுவிட்டது.

உலக இலக்கியங்களின் அருமையான சிறுகதைகளை மொழி பெயர்த்து, எட்டணா விலையில் மாதம் ஒரு புத்தகமாக, அ. கி. ஜயராமன் பிரசுரித்தார். 'சர்வதேசக் கதை மலர்' வரிசையில் க. நா. சு., புதுமைப் பித்தன், தி. ஜானகிராமன் முதலியோர் மொழிபெயர்த்த நல்ல சிறு கதைகள் வெளிவந்தன. தமிழ் மட்டுமே படிக்கத் தெரிந்தவர்களும், ஆங்கிலப் புத்தகங்களைப் படிக்கும் வாய்ப்பைப் பெறாதவர்களும் இந்த 'மலர்'களினால் நல்ல பலன் அடைந்தார்கள்.

ஜோதி நிலையத்தின் முயற்சியைத் தொடர்ந்து சக்தி காரியாலயமும் சர்வதேசக் கதைகளின் மொழிபெயர்ப்பைச் சிறுசிறு வெளியீடுகளாகப் பிரசுரித்தது.

1940 களில் நிகழ்ந்த மற்றுமொரு சாதனை, அல்லயன்ஸ் குப்புசாமி அய்யர் வெளியிட்ட 'கதைக் கோவை' ஆகும். ஒரு வருடத்தில் பத்திரி கைகளில் வெளிவந்த நல்ல சிறுகதைகளைத் தேர்ந்து தொகுத்து ஒரு 'கோவை' ஆகப் பிரசுரிக்கும் முயற்சி. இதன்படி, முதல் வருடம் முப்பது எழுத்தாளர்களின் முப்பது கதைகளும், இரண்டாவது வருடம் நாற்பது எழுத்தாளர்களின் நாற்பது கதைகளும் 'கோவை' ஆக வெளியிடப்பட் டன. மூன்றாவது தொகுதி ஒன்றும் வெளிவந்தது. அதன் பிறகு இம் முயற்சி தொடர்ந்து செயல்படுத்தப்படவில்லை.

நாவலுக்கு என்று மட்டுமே வெளிவந்த பத்திரிகைகள் அந்தக் காலத்திலும்– அதாவது 1930 களிலேயே–இருந்தன.

நாவல்கள் எழுதிப் பிரசித்த பெற்றிருந்த வடுவூர் துரைசாமி அய்யங்கார் எழுதும் புதிய நாவல்களை, மாதத்துக்கு இத்தனை அத்தி யாயம் என்ற ஒரு கணக்கில், தொடர்கதை ரீதியில் வெளியிடுவதற் காக 'மனோரஞ்சிதம்' என்ற மாதப் பத்திரிகை வந்து கொண்டிருந்தது. வடுவூராரின் நாவல்களைப் புத்தகங்களாகப் பிரசுரித்து வியாபாரம் பண்ணிய நிறுவனம்தான், வணிக நோக்கில் அந்தப் பத்திரிகையையும் நடத்தி வந்தது.

வடுவூர் பாதையில் நாவல் எழுத ஆரம்பித்து, பின்னர் காந்தியம், சமூக சீர்திருத்தம், மாதர் முன்னேற்றம் ஆகிய நோக்குகளுடன் நாவல் கள் படைப்பதில் தனது கவனத்தைத் திருப்பிக்கொண்ட வை. மு. கோதை நாயகி, தன் நாவல்களைத் தொடர்கதை ரீதியில் வெளியிடுவதற்காக 'ஜகன்மோகினி' என்ற மாதப் பத்திரிகையை நடத்திக் கொண்டிருந்தார்.

'ஆனந்த போதினி' என்ற இலக்கிய மாசிகையைப் பிரசுரித்து வந்த நா. முனிசாமி முதலியார், 'பிரசண்ட விகடன்' என்ற மாதம் இருமுறைப் பத்திரிகையையும் வெளியிட்டுக் கொண்டிருந்தார், 'ஆனந்த விகடன்' மாதிரி (ஆனால், பத்திரிகை 'தீபம்' சைஸ் இருக்கும்). பல வருஷங்கள் வெளிவந்த இந்தப் பத்திரிகையின் ஆசிரியர், நாரண துரைக் கண்ணன். அவர் எழுதிய நாவல்கள் அந்நாட்களில் பரவலான கவனிப் பைப் பெற்றன. 'இவ்வுலகைத் திரும்பிப் பாரேன்', 'நான் ஏன் பெண் ணாய் பிறந்தேன்?', 'சீமாட்டி கார்த்தியாயினி', 'உயிரோவியம்', 'தாசி ரமணி'

போன்ற நாவல்கள், நகரங்களில் மட்டுமின்றி, கிராமங்களிலும் வாசகர்க ளால் ஆவலுடன் வரவேற்று விரும்பிப் படிக்கப்பட்டன.

'பிரசண்ட விகடன்' இன்னொரு விதத்திலும் குறிப்பிடத்தகுந்த பத்திரிகையாக விளங்கியது. ஆ சி ரி ய ர் நாரண துரைக்கண்ணன் 'இன்னார் இனியார் என்று பாராது' புதிய எழுத்தாளர்களுக்கெல்லாம் ஊக்கமூட்டி உற்சாகம் அளித்து வந்ததால், எழுத்தில் ஆசையோடு அடி எடுத்து வைத்து ஆர்வத்தோடு எழுதி முன்னேறத் துடித்த இளைஞர்கள் பலருக்கு நல்ல பயிற்சித் தளமாக உதவியது அந்தப் பத்திரிகை.

புதுக்கோட்டையிலிருந்து வந்து கொண்டிருந்த 'திருமகள்', 'அணி கலம்' போன்ற சிறிய பத்திரிகைகளும் இப்படி இளம் எழுத்தாளர்களுக்கு ஊக்கம் அளித்து, அவர்களுடைய திறமை ஒளிர்வதற்கு நல்ல துணை யாக உதவின.

1940 களின் இறுதிக் கட்டத்தில், சென்னையில் அ. கி. ஜயராமன், அ. கி. கோபாலன் இருவரும் நாவலுக்கென்றே 'காதம்பரி' என்ற மாதப் பத்திரிகையைத் தொடங்கினார்கள். ஜயராமன் 'ஜோதி நிலையம்' மூலம் நல்ல நாவல்களையும் சிறுகதைத் தொகுப்புகளையும் பிரசுரித்து வந்தார். கோபாலன் 'தமிழ்ச் சுடர் நிலையம்' மூலம் அருமையான மொழி பெயர்ப்பு நாவல்களையும், தரமான படைப்புகளையும் வெளியிட்டுப் பணி யாற்றிக் கொண்டிருந்தார்.

மாதம் தோறும் 'ஒரு முழு நாவல்' வெளியிடவும், மற்றும் சிறுகதை கள், கட்டுரைகள் போன்ற அம்சங்களைப் பிரசுரிக்கவும் 'காதம்பரி' தோன்றியது. பிரசுர வாய்ப்பைப் பெறாமலே கிடந்த புதுமைப்பித்தனின் 'கயிற்றரவு' கதை இதில்தான் முதன் முறையாக அச்சாயிற்று. மாதம் தோறும் பிரசுரமாகும் நாவலுக்கு 'ஒரு பவுன் அன்பளிப்பு வழங்கப் படும்' என்று அறிவித்தது 'காதம்பரி'.

'காதம்பரி' நீண்ட நாள் வாழவில்லை. ஆறு இதழ்களோ என்னவோ தான் வந்தன.

1940 களின் இறுதியில் வெளிவந்த பத்திரிகைகளில் பேராசிரியர் ஆ. சீனிவாசராகவனை ஆசிரியராகக் கொண்டிருந்த 'சிந்தனை' என்ற மாதப் பத்திரிகை குறிப்பிட்டுச் சொல்லப்பட வேண்டியதாகும். அ.சீ ரா. மாணவர்கள் மத்தியில் நல்ல செல்வாக்கும், எழுத்தாளர்களிடையே கவனிப்பும் மதிப்பும் பெற்றிருந்த கல்லூரிப் பேராசிரியர். ஆங்கில

இலக்கியத்தில் நல்ல புலமையும் தமிழ் இலக்கியத்தில் தேர்ச்சியும் ஈடு பாடும் கொண்டவர். 'நாணல்' என்ற பெயரில் கவிதைகளும் நாடகங் களும் எழுதி இலக்கியப் பிரியர்களின் பாராட்டுதலைப் பெற்றிருந்தார்.

அ. சீ. ரா. ஆசிரியராக இருந்து நடத்திய 'சிந்தனை' நல்ல மாதப் பத்திரிகையாகத் திகழ்ந்தது. அ. சீ. ரா. வின் படைப்புகள், ஜஸ்டிஸ் மகா ராஜன் திருமூலர் பற்றி எழுதிய கட்டுரைகள், பல்வேறு விஷயங்களைப் பற்றிய சிந்தனைக் கட்டுரைகள், தரமான சிறுகதைகள், கவிதைகள் பத்திரிகைக்கு மதிப்பு சேர்த்தன. ஆயினும், எழுத்துலகத்தில் விசேஷமான தாக்கம் ஏற்படுத்தக்கூடிய ஜீவனுள்ள இலக்கியப் பத்திரிகையாக 'சிந்தனை' வளரவில்லை. ஒரு வருஷம் வாழ்ந்து அது ஆண்டு மலர் ஒன்றைப் பிரகுரித்த பெருமையோடு கடையைக் கட்டிக் கொண்டது.

அதே மாதிரிதான் 'தேனீ' என்ற மாதப் பத்திரிகையும். 'மணிக் கொடி' யில் எழுத ஆரம்பித்து, கவனிப்புக்கு உரிய எழுத்தாளராக வளர்ந்து, 'கலாமோகினி', 'கிராம ஊழியன்' வாயிலாகத் தனது படைப் பாற்றலை ஒளி வீசச் செய்த எம். வி. வெங்கட்ராம் நடத்திய 'மறு மலர்ச்சி இலக்கிய' மாசிகை. 'கரிச்சான்குஞ்சு' ( ஆர். நாராயணசாமி ) துணை ஆசிரியராகப் பணிபுரிந்தார். கும்பகோணத்திலிருந்து வந்தது.

'மணிக்கொடி எழுத்தாளர்கள்' சிலரும், கலாமோகினி, கிராம ஊழியன் பத்திரிகைகளில் எழுதி வளர்ந்தவர்களும், வேறு சில புதியவர் களும் 'தேனீ' யில் எழுதினார்கள். அந்த அளவுக்குத்தான் அது பயன் பட்டதே தவிர, சாதனைகள் என்று சொல்லும்படியாக எதையும் 'தேனீ' செய்து விடவில்லை. ஒரு நல்ல பத்திரிகையாக இருந்தது அது. மற்ற படி 'பாதிப்பு' அல்லது 'தாக்கம்' எதுவும் அதனால் நிகழவில்லை. 'தேனீ' யும் ஒரு வருடமும் சில மாதங்களும்தான் வெளிவந்தது.

1940 களின் பிற்பகுதியில் தோன்றி, பல வருடங்கள் வெற்றிகரமாக வாழ்ந்த 'பொன்னி' என்ற இலக்கியப் பத்திரிகை பலரது நினைவில் இடம் பெற்றுள்ளது. பல்வேறு காரணங்களுக்காக நினைவுகூரப்படுகிற வித்தியாசமான ஒரு பத்திரிகை.

அரசியல் அடிப்படையில் செல்வாக்குடன் வேக வளர்ச்சி பெற்றுக் கொண்டிருந்த திராவிடர் இயக்கத்தைச் சார்ந்த பத்திரிகை பொன்னி. பத்திரிகைத் துறையில் எழுத்தாளர்களும் பத்திரிகைக்காரர்களும் குறிப் பிட்ட ஒரு இனத்தைச் சேர்ந்தவர்களாகவே இருக்கிறார்கள்; உண்மையான

தமிழ் எழுத்தாளர்களை வளர விடுவதில்லை; தமிழ்க் கலைகளையும் இலக்கியத்தையும் அந்த இனத்தின் எழுத்தாளர்கள் சிதைத்துச் சீர் கெடுத்துக் கொண்டிருக்கிறார்கள்; அவர்களோடு போட்டியிட்டு தமிழ் எழுத்தாளர்களின் வளர்ச்சிக்கும் திராவிடக் கலைகளின் வளத்துக்கும், தமிழ் ( இலக்கியத்தின் ) மொழியின் ஆரோக்கியமான எழுச்சிக்கும் பணிபுரிய வேண்டும் என்பது திராவிட இயக்கத்தின் நோக்கங்களில் ஒன்றாக இருந்தது. அந்த அடிப்படையில், அக்காலகட்டத்தில் ( 1940 களில்) ஏகப்பட்ட திராவிட இயக்கப் பத்திரிகைகள் தோன்றின. அவற்றில் 'பொன்னி' யும் ஒன்று.

'பாரதிதாசன் பரம்பரை' என்று கவிஞர்கள் அணி ஒன்று வளர்வதற்கு 'பொன்னி' துணை புரிந்தது. திராவிட இயக்கக் கொள்கைகளையும் கருத்துக்களையும் பிரதிபலிக்கும் சிறுகதைகள் மிகுதியாக வெளிவந்தன. ஒன்றிரு நாவல்களும் தொடர்கதையாக வந்து கவனிப்புப் பெற்றன.

# 8. சரஸ்வதி

தேசிய விடுதலைப் போராட்டம், சமூக சீர்திருத்த இயக்கம் இவற்றைச் சார்ந்து 1930 களில் மொழி மறுமலர்ச்சி வேகமும் ஏற்பட்டது முன்னரே கூறப்பட்டிருக்கிறது.

பாரதி காட்டிய பாதையில் முன்னேறி, தமிழ் இலக்கியத்தில் புது வளர்ச்சி கண்டு, மொழியை வளம் செய்ய முற்பட்டவர்கள் மறுமலர்ச்சி இலக்கியவாதிகள்.

1940 களின் பிற்பகுதியிலிருந்து, தமிழ் எழுத்தாளர்களிடையிலும் தமிழ்ப் பத்திரிகை உலகிலும் வேறு இரண்டு நோக்குகளும் போக்குகளும் வளரத் தொடங்கின.

ஒன்று 'திராவிட இயக்க' வளர்ச்சி; பார்ப்பனீய எதிர்ப்பு, பார்ப்பன ஆதிக்க ஒழிப்பு, வடவர் ஆதிக்க எதிர்ப்பு, கடவுள் மறுப்பு, மத ஒழிப்பு; மூடநம்பிக்கைகள், வறுமை, விபசாரம், பெண் அடிமைத்தனம் ஆகியவற்றின் ஒழிப்பு; இந்தி எதிர்ப்பு; தமிழ்–தமிழர் இன உயர்வு, சமூக சீர் திருத்தம் முதலியவற்றை அடிப்படைக் கொள்கைகளாகக் கொண்ட 'திராவிட இயக்க' மனோபாவம் இளைஞர்களை வெகுவாகக் கவர்ந்தது.

இத்தகைய இன உணர்வுடன் தமிழில் பத்திரிகைகள் தோன்றியது பற்றி முன்பகுதியில் குறித்திருக்கிறேன்.

மற்றது, 'முற்போக்கு இலக்கிய' நோக்கு. இது 'வர்க்க உணர்வை' வலியுறுத்தும் பொருளாதார தத்துவப் பார்வையை – மார்க்சியக் கண்ணோட்டத்தை– அடிப்படையாகக் கொண்டது. கம்யூனிஸத்தையும், கம்யூனிஸ்டுக் கொள்கைகளையும் சிலாகிப்பது, முதலாளித்துவ எதிர்ப்பு, முதலாளி வர்க்க ஒழிப்பு, பாட்டாளி வர்க்க உயர்வு, பொருளாதார சமத்துவம் முதலியவற்றை லட்சியமாகக் கொண்டது.

இந்த நோக்கை கம்யூனிஸ்ட் கட்சிப் பத்திரிகைகள் 'ஜனசக்தி' ஆரம்பம் முதலே வலியுறுத்தி வந்தது. 'ஜனயுகம்', 'புதுமை இலக்கியம்' போன்ற சில பத்திரிகைகள் தோன்றி, சிறிது காலம் பணிபுரிந்து விட்டு மறைந்து போயின.

முற்போக்கு இலக்கிய மனோபாவம் தமிழ்நாட்டில் சிறிது சிறிதா கப் பரவி வந்தது. என்றாலும், முற்போக்கு இலக்கியப் பத்திரிகை என்று எதுவும் இல்லாமலிருந்தது.

அதனால், வ. விஜயபாஸ்கரன் அப்படி ஒரு இலக்கியப் பத்திரிகை தொடங்க முன்வந்தார்.

பத்திரிகைத் துறையில் நல்ல அனுபவம் பெற்றவர் அவர். 1950–51 –ல் அவரே 'விடி வெள்ளி' என்ற பத்திரிகையை நடத்தி, நிறுத்தியிருந்தார். அரசியல், பொருளாதார, சமூகப் பிரச்னைகளை அலசி ஆராய்ந்த வாரப் பத்திரிகை அது.

பிறகு, அவர் 'ஹனுமான்' வாரப் பத்திரிகையின் கடைசி கால ஆசிரியராகப் பணிபுரிந்தார். அத்துடன் 'சக்தி' யின் துணை ஆசிரியரா கவும் பொறுப்பு வகித்து அனுபவம் கண்டவர்.

இருப்பினும், விஜயபாஸ்கரன் துணிந்து ஒரு இலக்கியப் பத்திரிகை நடத்த முன்வந்தார். 1955 மே மாதம் 'சரஸ்வதி' யின் முதல் இதழ் வந்தது.

கம்யூனிஸ்ட் ஆன விஜயபாஸ்கரன் நடத்துவதால் கம்யூனிஸ்ட் பத்திரிகை என்ற பெயர் புதிய பத்திரிகைக்கு ஏற்பட்டு விடக்கூடாது; அரசியல் நிறம் கொஞ்சமும் தெரியாத கலை இலக்கியப் பத்திரிகைதான் என்பது தெளிவாகத் தெரியும்படியான– 'கலைமகள்' போன்ற ஒரு பெயராக இருக்க வேண்டும் என்று அவர் கருதினார். இந்திய முற் போக்கு எழுத்தாளர்களின் முதல்வரும் முன்னோடியுமான பிரேம்சந்த் நடத்திய 'சரஸ்வதி' யின் பெயரையே அவர் தனது பத்திரிகைக்கும் தேர்ந்தெடுத்தார். மேலும், அது அவருடைய மனைவியின் பெயராகவும் இருந்தது.

மேலை நாட்டில் வளர்ந்து வரும் புத்தம் புதிய கருத்துக்களைத் திரட்டித் தமிழர்களுக்குத் தருவது, மறைந்து வரும் நமது கலைச் செல் வங்களைத் தேடி எடுத்து வெளியிடுவது, தமிழில் சிறந்த சிறுகதைகள், கவிதைகள் வெளிவருவதற்கு ஆவன செய்வது– இவை 'சரஸ்வதி' ஆசிரியரின் நோக்கங்களாக இருந்தன.

பாராட்டத்தகுந்த வகையில் 'சரஸ்வதி' இவற்றை நிறைவேற்றவும் செய்தது.

அயல்நாட்டுச் சிறுகதைகளின் தமிழாக்கம், சிறந்த உலக நாவல் கள் பலவற்றின் சுருக்கம், சுயமாக எழுதப்பெற்ற அருமையான

சிறுகதைகள், சிந்தனைக்கு வளம் சேர்க்கும் கருத்துச் செறிவுள்ள கட்டுரைகள், தத்துவம், கலாச்சாரம், விஞ்ஞானம், பொருளாதாரம் சம்பந் தமான பலப்பல கட்டுரைகள்; நல்ல கவிதைகள்—இப்படி எவ்வளவோ விஷயங்களை 'சரஸ்வதி' அதன் காலத்தில் வழங்கியிருக்கிறது.

தலைசிறந்த ஒலிப்பதிவாளர்களில் ஒருவரான நிமாய்கோஷ் திரைப் படத் தொழில் பற்றிக் கட்டுரைகள் எழுதினார். சதுரங்கம் குறித்தும், போட்டோக் கலை பற்றியும் விளக்கக் கட்டுரைகள் வெளிவந்துள்ளன.

எழுத்தாளர் ஜெயகாந்தன் வளர்ச்சிக்கு 'சரஸ்வதி' பெரிதும் உதவி யது. சுந்தர ராமசாமி, வல்லிக்கண்ணன், கிருஷ்ணன் நம்பி மற்றும் இலங்கை எழுத்தாளர்கள் டொமினிக் ஜீவா, கே. டானியல், காவலூர் ராசதுரை முதலியோரின் சிறந்த கதைகள் பலவற்றை 'சரஸ்வதி' பிரசுரித்திருக்கிறது.

தகழி சிவசங்கரப் பிள்ளையின் 'தோட்டியின் மகன்' நாவல் சுந்தர ராமசாமியின் தமிழாக்கமாகத் தொடர்ந்து வந்தது. சுந்தர ராமசாமி யின் 'புளியமரம்' நாவலின் முதல் பாதி வெளிவர வசதி செய்தது. வல்லிக்கண்ணன் எழுதிய 'அடிவானம்' நாவலின் ஒரு பகுதியை வெளியிட்டுள்ளது.

க. நா. சுப்ரமணியம், சி. சு. செல்லப்பா, வல்லிக்கண்ணன், ரகு நாதன், ஜெயகாந்தன், எஸ். ராமகிருஷ்ணன், ஆர். கே. கண்ணன், சாமி சிதம்பரனார் ஆகியோர் 'சரஸ்வதி' க்காக உற்சாகத்துடன் பணி புரிந்தார்கள்.

இலக்கியவாதிகளுக்கு ஆர்வமூட்டிய விவாதங்களை 'சரஸ்வதி' அவ்வப்போது வளர்த்தது. புதுமைப்பித்தன் இலக்கியம் பற்றி ஒரு விவாதம்; சாகித்திய அகாடமி பரிசு அளிக்கிற போக்கு பற்றிய காரசார மான கருத்துக்கள்; மொழி வெறியர்கள் மற்றும் குறுகிய நோக்குடைய பண்டிதர்கள் போக்கை எதிர்த்து சூடான கட்டுரைகள்; 'சென்னைக்கு வந்தேன்' என்ற தலைப்பில் அநேக எழுத்தாளர்களது அனுபவங்கள்; 'நானும் என் எழுத்தும்' என்று பலரது எண்ணங்கள்; இலக்கியத்தில் ஆபாசம் என்பது குறித்துக் கண்டனங்களும் மறுமொழிகளும்— இவ்வாறு, இலக்கியப் பிரியர்களுக்கு விருந்து அளித்திருக்கிறது.

'நமது எழுத்தாளர் வரிசை' என்று எழுத்தாளர்களின் படத்தை அட்டையில் வெளியிட்டு, அவர்களைப் பற்றிய கட்டுரையை உள்ளே பிரசுரித்தது.

சிறந்த 'ஆண்டு மலர்' களைத் தயாரித்து இலக்கியப் பணி புரிந்துள்ளது.

'புத்தக மதிப்புரை' ப் பகுதி மூலம் ரசிகர்களுக்கு பலப்பல புத்தகங்களை அறிமுகப்படுத்தியது.

'சரஸ்வதி' அதன் காலத்தில், பல நல்ல எழுத்தாளர்களுக்கு வாய்ப்பு அளித்தது. புதிய எழுத்தாளர்கள் ஏற்றம் பெற இடம் தந்தது. புதிய முயற்சிகளுக்கும் சோதனைகளுக்கும் ஊக்கம் அளித்தது. ஈழத்து எழுத்தாளர்களுக்கும் தமிழ் நாட்டு வாசகர்களுக்கும் தொடர்பு ஏற்படுத்தியது. தத்துவ ரீதியாகவும் இலக்கிய ரீதியாகவும் பிறமொழி இலக்கியங்களையும் நமது இலக்கியங்களையும் விமர்சனம் செய்தது. பல்வேறு எழுத்தாளர்களின் கருத்து மோதல்களுக்குக் களம் அமைத்துக் கொடுத்தது. சிறுகதை வளர்ச்சிக்கு அரும்பணி ஆற்றியுள்ளது.

ஆகவே, புதுமை இலக்கிய யுகத்தில் 'சரஸ்வதி' ஒரு சகாப்தத்தைத் தோற்றுவித்து விட்டது.

ஆனாலும், பொருளாதார ரீதியில் தோல்வி மேல் தோல்வியே கண்டது. மூன்றாவது ஆண்டு முதல், இத்துறை வெற்றிக்காக விஜய பாஸ்கரன் ஏதேதோ திட்டங்கள் வகுத்தும் அறிவிப்புகள் விடுத்தும் பயனில்லை. நஷ்டம் வளர்ந்து கொண்டே போயிற்று. தாங்கமுடியாத அளவு நஷ்டம் பெருகியது. அவர் 'சரஸ்வதி' யை நிறுத்திவிட வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

1962 –ம் வருஷம் நான்காவது இதழுடன் (ஜூன் மாதம்) 'சரஸ்வதி' நின்று விட்டது.

'சரஸ்வதி' யின் விரிவான வரலாற்றை வல்லிக்கண்ணன் எழுதிய 'சரஸ்வதி காலம்' என்ற நூல் விவரிக்கிறது.

# 9. சாந்தி

லட்சிய வேகத்தோடும் மிகுந்த நம்பிக்கையுடனும் பிறந்த மற்றுமொரு இலக்கியப் பத்திரிகை 'சாந்தி'.

இது தலைநகரமான சென்னையிலிருந்து வெளிவரவில்லை. திருநெல்வேலியில் தோன்றியது. இதை ஆரம்பித்து நடத்தியவர் தொ. மு. சி. ரகுநாதன்.

ரகுநாதன் பத்திரிகை ஆசிரியராகச் சென்னையில் பல வருஷ அனுபவம் பெற்றிருந்தார். முதலில் 'முல்லை' என்ற 'மாதம் ஒரு புத்தக'த்தின் ஆசிரியராக இருந்தார்.

அப்போது அவருடைய இலக்கிய நோக்கும் கொள்கைகளும் வேறாக இருந்தன. 'முல்லை' யில் வந்த கதைகளும், கட்டுரைகளும் புத்தக மதிப்புரைகளும், வர்ணச் சித்திரங்களும் ரகுநாதனின் முதல் கால கட்ட விருப்பு, வெறுப்புகளுக்கு ஏற்ப இருந்தன.

"இலக்கியத்தில் புதுமையும் தனிமையும் உண்டாக்க விரும்புபவர்களுக்கு ஒரு நற்சகுனம், நம்பிக்கை" என்று கொடிவீசி வளர முயன்ற 'முல்லை' யில் தான், புதுமைப்பித்தன் எழுதிய 'விபரீத ஆசை' வெளி வந்தது. லா. ச. ராமாமிர்தம், எம். வி. வெங்கட்ராம் கதைகளும் வந்தன. கா. ஸ்ரீ. ஸ்ரீ. ரசமான ஒரு நெடுங்கதை எழுதினார். 'இலக்கியத்தில் ஆபாசம்' என்ற கூச்சல் அர்த்தமற்றது, போலியானது, தமிழ் இலக்கியத்துக்கு ஆபத்து விளைவிக்கக் கூடியது என்று விரிவாகவும் விளக்கமாகவும் கு. அழகிரிசாமி கட்டுரை எழுதினார். ஆண்–பெண் உறவு பற்றிய ஞானம் தெளிவாகக் கற்பிக்கப்பட வேண்டிய அவசியத்தை விளக்கியும் கு. அ. 'இடைசைப் புலவன்' என்ற பெயரில் ஒரு கட்டுரை எழுதினார்.

இப்படி மறுமலர்ச்சி வேகத்தில் வளர முயன்ற 'முல்லை' விரைவிலேயே நின்றுபோயிற்று. அழகிரிசாமியும் ரகுநாதனும் 'சக்தி' மாத இதழில் சில வருடங்கள் பணிபுரிந்தார்கள் . 'சக்தி' நின்று விட்டதும் ரகுநாதன் திருநெல்வேலி சேர்ந்தார்.

1954 டிசம்பரில் 'சாந்தி' தோன்றியது. இடைக்காலத்தில் ரகுநாதன்

மார்க்ஸியக் கண்ணோட்டமும், கம்யூனிஸப் பற்றுதலும் கொண்ட 'முற்போக்கு இலக்கியவாதியாக' யாக வளர்ந்திருந்தார்.

'சரஸ்வதி' க்கு முந்தித் தோன்றிய முற்போக்கு இலக்கிய இதழாக 'சாந்தி' விளங்கியது ( 'சரஸ்வதி' 1955 மே மாதம்தான் பிறந்தது ).

'சொத்தைக் கருத்துக்களும் சொற்சிலம்பங்களும் மிகுந்த இலக்கியப் போலிகளை இனம் காட்டவும் வெள்ளிக்காசுக்கும் விதேசியச் சிறுமைக்கும் இதயத்தையே எடைபோட்டு விற்றுவிட்ட எழுத்துலகத் துரோகிகளை அம்பலப்படுத்தவும், நமது பண்பாட்டையும் பாஷைவளத்தையும் இழிவுபடுத்தும் நாசக் கற்பனைகளை வேரறுக்கவும், தெம்பும் திராணியும், இளமையும், புதுமையும் நிறைந்த இலக்கிய சிருஷ்டிகளை வரவேற்கவும் வளர்க்கவும் புனித சங்கல்பம் பூண்டு 'சாந்தி' தோன்றுவதாக' அறிவிக்கப்பட்டது.

முற்போக்குச் சிறுகதைகளுக்கு முதலிடம் அளிக்கப்பட்டது. ரகுநாதன் 'நெஞ்சிலே இட்ட நெருப்பு' என்றொரு தொடர்கதை எழுதினார்

புதுமைப்பித்தன் கடிதங்கள் சில பிரசுரமாயின. புதுமைப்பித்தன் நினைவுச் சிறுகதைப் போட்டி ஒன்றை 'சாந்தி' நடத்தியது. அதில் சுந்தர ராமசாமியின் 'தண்ணீர்' என்ற கதை முதல் பரிசு பெற்றது.

சுந்தர ராமசாமி, ப. சீனிவாசன், டி. செல்வராஜ் ஆகியோர் அடிக்கடி சிறுகதைகள் எழுதினார்கள். மலையாளச் சிறுகதைகள் பல சு. ரா. தமிழாக்கமாக வெளிவந்தன.

அப்பாஸ், கிருஷ்ணசந்தர், யஷ்பால், முல்கராஜ் ஆனந்த் முதலியோரின் 'இந்திச் சிறுகதை'கள் இடம் பெற்றன.

நா. வானமாமலை, சாமி. சிதம்பரனார், எஸ். ராமகிருஷ்ணன் கட்டுரைகளை 'சாந்தி' பிரசுரித்தது. கட்டபொம்மு, மருதுபாண்டியர் போன்ற நாட்டுப் பாடல்கள் குறித்து ரகுநாதன் விரிவான கட்டுரைகள் எழுதினார். தி. க. சி. புத்தக விமர்சனம் எழுதிவந்தார்.

1955 டிசம்பரில் 'சாந்தி' யின் பன்னிரண்டாவது இதழ் 'ஆண்டு மலர்' என்று வெளிவந்தது. இந்த மலர் இலக்கியத் தரமான கட்டுரைகள், கவிதைகளைக் கொண்டிருந்தது.

ப. ஜீவானந்தம், நா. வானமாமலை, எஸ். ராமகிருஷ்ணன், சாமி சிதம்பரனார், க. கைலாசபதி, எச். எம். பி. மொஹிதீன் கட்டுரைகள்; சுந்தர ராமசாமி, வல்லிக்கண்ணன், டி. செல்வராஜ், அகிலன், கி. ரா., ரகுநாதன் கதைகள்; கே. சி. எஸ். அருணாசலம், குயிலன், திருச்சிற்றம் பலக் கவிராயர் கவிதைகள்; தி. க. சி. எழுதிய நாடகம்; இவற்றுடன், கதகளி பற்றி எஸ். சிதம்பரம் எழுதிய நீண்ட கட்டுரை –( படங்களுடன்) இம்மலரின் உள்ளடக்கமாகத் திகழ்ந்தன.

இரண்டாவது ஆண்டில் இரண்டே இதழ்கள்தான் வெளிவந்தன. 1965 ஏப்ரலில் 'சாந்தி' நின்றுவிட்டது.

நல்ல முற்போக்கு இலக்கியப் பத்திரிகை என்ற பெயரை 'சாந்தி' பெற்றதே தவிர, அது எழுத்துலகில் எவ்விதமான தாக்கத்தையும் ஏற் படுத்தவில்லை.

இதுவரை 'சிறு பத்திரிகைகள் பலவும்– 'மணிக்கொடி'யிலிருந்து 'சாந்தி' முடிய– உண்மையில் இந்நாட்களில் 'சிறு பத்திரிகை' என்றதும் என்ன எண்ணம் எழுகிறதோ அந்தக் கருத்தில் நடத்தப்பட்டவை அல்ல என்பதைக் குறிப்பிடத்தான் வேண்டும்.

இப்போது 'சிறு பத்திரிகை' என்றால் குறித்த ஒரு கொள்கைக்காக அல்லது நோக்கத்துக்காக, ஏறக்குறைய ஒத்த மனோபாவம் கொண்ட மிகச் சிலரை வாசகர்களாகக் கொண்டு, வெகு குறைவான பிரதிகளே அச்சடிக்கப்பட்டு ( இருநூறு அல்லது முந்நூறு ), சந்தாதார்களை மட்டுமே நம்பிப் பிரசுரமாகும் பத்திரிகை; 'தனிச் சுற்றுக்கு மட்டும்' ( For Private circulation only ) என்ற நோக்கில் வெளிவருவது என்று பொருள் கொள்ளப்படுவது இயல்பாகி விட்டது.

மணிக்கொடி, கலாமோகினி, கிராம ஊழியன், தேனீ, சரஸ்வதி, சாந்தி போன்ற பத்திரிகைகள் இந்நோக்கில் பார்த்தால், 'சிறு பத்திரிகை' கள் ஆகமாட்டா.

இவை எல்லாம் சந்தாதார்களை மட்டுமே நம்பியிருக்கவில்லை. பத்திரிகைச் சந்தையில் விலை போக வேண்டும் என்றும் திட்டமிட்டு முயன்றன. தமிழ்நாட்டின் பல ஊர்களிலும் ஏஜெண்டுகள் நியமித்து, விற்பனையை வளர்ப்பதில் ஆர்வம் காட்டின. வியாபார ரீதியான ஏஜெண்டு இல்லாத ஊர்களில் தெரிந்தவர்களோ, நண்பர்களோ, வேண்டி யவர்களோ ஏஜெண்டு மாதிரி செயல்பட்டனர். பத்து அல்லது இருபது

பிரதிகளைப் பெற்று, விற்பனை செய்து, உரிய பணத்தை அனுப்பிக் கொண்டிருந்தனர்.

இன்றைய சிறு பத்திரிகைகள் போல் இவை மிகவும் குறைச்சலான பக்கங்களே கொண்டிருந்ததில்லை. 'பெரிய பத்திரிகைகள்' ( வாணிபப் பத்திரிகைகள் ) மாதிரியே பக்க அளவில் கனமாகவும் ( 80 அல்லது 96; சில சமயம் அதுக்கும் மேலாகவும்) இருந்தன ( 64 பக்கங்களுக் குக் குறைந்ததில்லை). வாசகர்களை ஈர்க்க வேண்டும் என்று அவ்வப் போது போட்டோக்கள், சினிமா விஷயங்கள் முதலியனவும் சேர்த்து வந்தன. ஆர்ட் பேப்பர் அட்டையும், அட்டைப் படமும் கொண்டிருந்தன.

'மணிக்கொடி' ஆயிரம் பிரதிகள் வரை அச்சிடப்பட்டிருக்கலாம். 'கலாமோகினி' 700 முதல் ஆயிரம் வரை ஏற்ற இறக்கம் பெற்றிருக்க லாம், 'கிராம ஊழியன்' அதிகமாக 800 பிரதிகளும், குறைந்த காலத் தில் 600 பிரதிகளும் அச்சாகி வந்தது. இதர பத்திரிகைகளும் இதே தரத்தவைதான்.

ஆனாலும், சிறு பத்திரிகை என்று பேசப்படுகையில், இதுவரை கூறப்பட்ட பத்திரிகைகளும் கருத்தில் கொள்ளப்படுகின்றன. காரணம், தன்மையினால்– செயலாற்றலால்– அவை சிறு பத்திரிகைகளாகவே இயங்கின.

அவை 'ஜனரஞ்சகமான' விஷயங்களைப் பிரசுரிக்கவேண்டும் என்று ஆசைப்பட்டதில்லை. தரம் குறைந்த எழுத்துகளுக்கு இடம் தந்ததில்லை. சிந்தனைகளுக்கும் உணர்ச்சிக்கும், புதுமைக்கும் சோதனைகளுக்கும் இடமளித்தன. புதிய திறமையாளர்களை வரவேற்று அங்கீகரித்தன. இலக்கிய நோக்கிற்கு வரம்பு கட்டிக்கொள்ளாமல், உலகளாவிய பரந்த நோக்குடன் செயல்பட்டன.

இத்தகைய பத்திரிகைகள் ஏன் நீடித்த ஆயுளுடன் வாழமுடிந்த தில்லை–ஏன் அல்பாயுசு மரணம் பெற்றன என்று அவ்வப்போது கேள்வி கேட்கப்படுகிறது.

போதிய பொருளாதார பலம் இல்லாமல் போனதுதான் முதல் பெரும் காரணம். அவற்றின் விற்பனைக்குப் பொறுப்பேற்ற அன்பர்கள் நாணயமாக நடந்து கொள்ளாதது மற்றொரு காரணம். பத்திரிகைப் பிரதிகள் விற்பனையான போதிலும், விற்பனையாளர்கள் ஒழுங்காகப்

பணம் அனுப்பி உதவுவதில்லை. அதனால் பத்திரிகையின் பொருளாதா ரம் மேலும் அதிகம் பாதிக்கப்பட்டது.

இதனால்தான் உண்மையான 'சிறு பத்திரிகை', விற்பனையாளர் களை எதிர்பார்ப்பதில்லை. சந்தாதார்களையே தன்பலமாகக் கொள்ள விரும்புகிறது . 200 அல்லது 300 பிரதிகள் அச்சிட்டாலே போதும்; அதனால் அதிக லாபம் இல்லாவிட்டாலும் நஷ்டம் அதிகம் ஏற்படாது என்று கருதுகிறது.

இப்படி திட்டமிட்டுத்தான் சி. சு. செல்லப்பா விமர்சனத்துக்கென்று ஒரு பத்திரிகை ஆரம்பிக்கத் துணிந்தார். அவர் ஆரம்பித்த 'எழுத்து' தான், உண்மையான– அதன் முழு அர்த்தம் உடைய– முதலாவது 'சிறு பத்திரிகை' ஆகும்.

# 10. எழுத்து

சி. சு. செல்லப்பா தனது பத்திரிகைக்கு 'எழுத்து' என்று பெயர் வைத்ததே துணிச்சலான காரியம்தான். ஆங்கிலத்தில் 'ரைட்டிங்', 'நியூ ரைட்டிங்' என்றெல்லாம் பத்திரிகைகளுக்குப் பெயர் இருக்கிற போது, தமிழில் 'எழுத்து' என்று பெயர் வைத்தால் என்ன கெட்டுப் போகும் என்பது அவரது வாதம்.

'எழுத்து என்ற வார்த்தைக்கு அகராதி ரீதியாக அக்கரம், இலக்கணம், கல்வி, கையெழுத்து, ஆதாரச் சீட்டு, ஓவியம் என்றெல்லாம் விளக்கம் இருந்தாலும் 'இலக்கியப் படைப்பு' என்ற அர்த்தத்தில்தான் பெயர் தாங்கி வருகிறது இந்த ஏடு' என்று அவர் அறிவித்தார்.

'மக்களுக்குப் பிடிக்கிறதை நாங்கள் கொடுக்கிறோம் என்ற குரல் இலக்கிய உலகத்திலும் அரித்துக் கொண்டிருக்கிற ஒரு சூழ்நிலையில், பழக்க முறையாகி விட்ட ரீதியிலேயே கருத்துக்களையும் அலுக்கும்படியாக, ஒரே விதமாக கொடுக்கும் ஒரு மனப்பாங்கு பரவியுள்ள நிலையில், மக்களுக்கு இன்னின்னவைகளைக் கொடுத்து, படிக்கச் செய்யவேண்டும், புதுப்புது விதமாக நோக்கும் பார்வையும் கொண்டு, வெளியிட்டுச் சொல்ல வேண்டும் என்ற ஒரு நினைப்பு ஒரு மொழி இலக்கியத்துக்கு அவசியமானது. அந்த நினைப்புடன் எழுத்து ஏடுகள் பரவும்' என்று கூறி, பத்திரிகையின் நோக்கங்கள் விரிவாகவே முதல் இதழில் எடுத்துச் சொல்லப்பட்டன.

'முழுக்க முழுக்கக் கருத்து ஆழமும் கனமும் உள்ள ஒரு இலக்கியப் பத்திரிகையை, இந்தப் பாமரப் பிரியமான பத்திரிகைப் பரப்புக் காலத்தில் ஆரம்பிப்பது ஒரு சோதிக்கிற முயற்சிதான்' என்று நன்கு உணர்ந்தே தொடங்கப்பட்டது எழுத்து. அதன் நிபந்தனைகளும் வெளிப்படையாகவே அறிவிக்கப்பட்டன.

'எழுத்து இரண்டு நிபந்தனைகளுடன் வெளி வருகிறது; 2000 பிரதிகளுக்கு மேல் அச்சாகாது. நேரில் சந்தாதாரராகச் சேர்பவர்களுக்குத்தான் கிடைக்கும் என்ற அறிவிப்புகள் நூதனமானவைதான். வாசகர்களின் தொகையைக் கட்டுப்படுத்திக் கொள்வதற்காக அல்ல; இலக்கிய

வாசகர்களைத் தேடிப்பிடிப்பதுதான் 'எழுத்து'க்கு நோக்கம். ஏனெனில், 'பிடித்தமானது' என்ற சாக்கில் பொது வாசகர்களைத் திருப்திப்படுத்து வதற்கான வழிகளை 'எழுத்து' கையாளும் உத்தேசம் இல்லை. 'எழுத்து எனக்குப் பிடித்து இருக்கிறது' என்று சொல்லக்கூடிய வாசகர்கள் எங்கெங்கே இருக்கிறார்களோ அவர்களைத் தேடும் 'எழுத்து'. இலக்கிய வாசகர்களின் ஆதரவை எதிர்பார்த்து ஒரு துணிச்சலான முயற்சியாக வரும் 'எழுத்து'க்குத் தமிழகம் தன் அரவணைப்பைத் தந்து, அது ஏட்டின் பின் ஏடாக அடுக்கு ஏற வகை செய்யும் என்ற நம்பிக்கையுடன் இந்த முதல் ஏடு உங்கள் முன் வைக்கப்படுகிறது.'

இவ்விதம் கூறிக்கொண்டு, 'எழுத்து' முதலாவது இதழ் 1959 ஜனவரி மாதம் தோன்றியது. நல்ல வெள்ளைத்தாள். அட்டை கிடையாது. 50 பைசா விலை. ஆண்டு சந்தா 5 ரூபாய்.

'புதுமை இலக்கிய மாத ஏடு' என்று பொறித்துக்கொண்ட 'எழுத்து' இலக்கிய விமர்சனத்துக்கே முக்கியத்துவம் அளிக்க விரும்பியது.

'இலக்கிய ரசனை கருத்துப் பரிமாறுதல்களால்தான் தெளிவுபடும், வளரும் என்பது 'எழுத்து'க்கு நிச்சயமான கருத்து. வெறுமனே சர்ச் சைக்காகச் சர்ச்சையை எழுத்து தொடராது' என்று அறிவித்து, இலக்கிய வாதிகளின் அபிப்பிராயங்களை அது வரவேற்றது.

இதனாலே 'இலக்கிய விமர்சனக்குரல்' என்று இடைக்காலத்தில் தன்னை அறிவிப்பதில் பெருமை கொண்டது. அப்புறம் 'இலக்கிய விமர் சனம், படைப்புத் துறையில் சோதனைகள்– இவற்றில் அக்கறை கொண்ட மாதப் பத்திரிகை' என்று தெரிவித்துக் கொண்டது.

ஆரம்பம் முதலே, விமர்சனக் கட்டுரைகளுடன், சிறுகதைகளையும் யாப்பில்லாக் கவிதைகளையும் வெளியிடுவதில் ஆர்வம் காட்டியது 'எழுத்து'.

விமர்சனக் கட்டுரைகளும், இலக்கிய விமர்சனம் பற்றிய கருத்துரை களும் அதிகம் பிரசுரிக்கப்பட்டுள்ளன. செல்லப்பா 'இன்றைய தமிழ் இலக்கிய விமர்சன தோரணை' என்ற ஆழ்ந்த கருத்துக்கள் கொண்ட, விரிவான கட்டுரை ஒன்று எழுதியுள்ளார். 'விமர்சனத்தில் சோதனை' என்ற டி. எஸ். இலியட் கட்டுரையை மொழிபெயர்த்துத் தந்தார். அவற் றோடு, கமலாம்பாள் சரித்திரம் பற்றிய நீண்ட விமர்சனக் கட்டுரையையும்,

'ராமாம்ருதம் கலைத்திறன்', 'மௌனியின் மனக் கோலம்' ஆகிய கட்டுரைத் தொடர்களையும் எழுதினார். இவை எல்லாம் சிறந்த இலக்கிய விமர்சனக் கட்டுரைகளாகும்.

'ஜீவனாம்சம்' என்கிற சோதனை ரீதியான நாவலை செல்லப்பா எழுத்தில் தொடர்ந்து எழுதினார். அருமையான சிறுகதைகளும் எழுதியிருக்கிறார்.

மொழிபெயர்ப்பிலும் அவர் சோதனைகள் நடத்தினார். சரளமான இனிய நடையிலோ, எல்லோருக்கும் புரியக்கூடிய எளிய நடையிலோ மொழிபெயர்ப்புச் செய்வதன் வாயிலாக, ஆசிரியர்களின் எழுத்தாற்றலை வாசகர்களுக்கு உணர்த்த முடியாது. ஒவ்வொரு எழுத்தாளரின் நடை ஒவ்வொரு தினுசானது. அவரவர் தனித்தன்மையை எடுத்துக் காட்டுவதற்கு 'வார்த்தைக்கு வார்த்தை மொழிபெயர்ப்பு' செய்வதுதான் நியாயம் ஆகும் என்பது செல்லப்பாவின் கருத்து.

அதன்படி, ஹென்றி ஜேம்ஸ் எழுதிய 'புருக்ஸ்மித்', ஆன்டன் செகாவின் 'கூஸ்பர்ரிஸ்', ஃப்ராங்க் ஓ' கானரின் 'ஞானஸ்நானம்', வில்லியம் ஃபாக்னரின் 'கிரீர்ஸன்', ஜேம்ஸ் ஜாய்ஸின் 'எவலின்' போன்ற சிறந்த சிறுகதைகளை செல்லப்பா மொழிபெயர்த்தார்.

இவையும் மற்றும் சில கதைகளும் 'வார்த்தைக்கு வார்த்தை மொழிபெயர்ப்பு' ஆக, 'மூல ஆசிரியனது உரைநடைப் போக்கிலேயே தமிழுக்கும் உரைநடையை இயைவிக்கும் ஒரு தோரணையில்' அமைந்திருந்தன. அந்த மொழிபெயர்ப்பு நடை வாசகர்களைச் சிரமப்படுத்துகிற தமிழாக இருந்தபோதிலும், செல்லப்பா தன் சோதனையையும் கருத்தையும் மாற்றிக் கொள்ளவில்லை.

பாரதியின் 'அக்னிக் குஞ்சு' கவிதைக்கு விரிவான விளக்கக் கட்டுரை எழுதியிருக்கிறார் அவர். தமிழ்ச் சிறுகதை குறித்து அநேக கட்டுரைகள் வெளியிட்டார்.

சிறுகதைகள் பற்றியும், உரைநடை குறித்தும் 'எழுத்து' அதன் காலத்தில் பல்வேறு சிந்தனைகளைப் பிரசுரித்திருக்கிறது.

முதல் இதழிலிருந்தே க. நா. சுப்ரமண்யம் 'நல்ல தமிழ்ச் சிறுகதைகள்' என்று கட்டுரைகள் எழுதினார் 'இலக்கியத்தில் விஷயமும் உருவமும்' பற்றி சிந்தனை வளர்த்தார், 'பாரதிக்குப் பின்' என்ற தலைப்பில்,

வையாபுரிப் பிள்ளை, டாக்டர் சாமிநாதய்யர், மறைமலை அடிகள், திரு. வி. க. பற்றி க. நா. சு. எழுதியிருக்கிறார்.

வாழ்க்கை பற்றிய தத்துவ சிந்தனைகளைத் தொகுத்து க. சிதம்பர சுப்ரமண்யன் 'விண்ணும் மண்ணும்' என்ற தலைப்புடன் தொடர் கட்டுரை எழுதியுள்ளார்.

சி. கனகசபாபதி, பிச்சமூர்த்தி கவிதைகள் பற்றியும், புதுக்கவிதை சம்பந்தமாகவும், சங்க இலக்கியம் குறித்தும் ஆழ்ந்த கருத்துக்கள் கொண்ட கட்டுரைகளை மிகுதியாக எழுதியிருக்கிறார்.

வெ. சாமிநாதன், தருமுசிவராமு ஆகியோரின் தீவிர சிந்தனைகளையும் எழுத்து அதிகம் பிரசுரித்துள்ளது. ந. முத்துசாமியின் சிறுகதைகளை வெளியிட்டது. மற்றும் பல திறமையாளர்களை அறிமுகம் செய்திருக்கிறது.

'எழுத்து' சாதனைகளில் புதுக்கவிதைக்கு அது ஆற்றிய பணியே முக்கியமாகக் கருதப்படுகிறது. யாப்பில்லாக் கவிதை 'புதுக்கவிதை' என்று பெயர் ஏற்று, ஒரு இயக்கமாக வளர்ந்து பெருகுவதற்கு 'எழுத்து' நல்ல முறையில் பணியாற்றியதை இலக்கிய ரசிகர்கள் நன்கு அறிவர். சி. மணி, தி. சோ. வேணுகோபாலன், வைத்தீஸ்வரன் முதலிய கவிஞர்களின் திறமை பிரகாசிப்பதற்கு 'எழுத்து' தளம் அமைத்தது. பிச்சமூர்த்தி கவிதைகளை நிறையப் பிரசுரித்துள்ளது.

தமிழ் இலக்கிய வளர்ச்சியில் சாதனை புரிந்தவர்களை கௌரவிக்கும் முறையில் அது சிறப்பு மலர்கள் வெளியிட்டிருக்கிறது. எழுத்து 5–வது ஏடு கு. ப. ரா. நினைவு மலர் என்றும், 7–வது ஏடு புதுமைப்பித்தன் நினைவு மலர் எனவும் உருவாயின. பிறகு, 'பிச்சமூர்த்தி மணிவிழா சிறப்பு ஏடு' என்றும், 'பி. எஸ். ராமையா மலர்' என்றும் வெளிவந்தன. 'எழுத்து' 117–வது ஏடு 'சங்கு சுப்ரமண்யத்தின் நினைவு ஏடு' ஆகப் பிரசுரிக்கப்பட்டது.

'எழுத்து' தொடர்ந்து வெளியிட்ட 'எதற்காக எழுதுகிறேன்?', 'என்ன படிக்கிறேன் ஏன்?' ஆகிய கட்டுரை வரிசைகள் ரசிகர்களுக்கு இனிய விருந்தாக விளங்கின.

ஈழத்து எழுத்தாளர்கள் சிலர் 'எழுத்'தில் அவ்வப்போது எழுதிக் கொண்டிருந்தார்கள். ஈழத்தில் இலக்கிய முயற்சி குறித்தும், விமர்சன

நோக்கு பற்றியும் கே. எஸ். சிவகுமாரன், முருகையன் போன்றவர்கள் எழுதியிருக்கிறார்கள்.

சி. சு. செல்லப்பா இலக்கியச் சிந்தனையிலேயே பொழுதுபோக்கும் இயல்புடையவர். சதா நினைப்பும் பேச்சும் அவருக்கு இலக்கிய விஷயமாகவே இருக்கும். ஆகவே 'எழுத்து' பத்திரிகை சகல இலக்கியப் பிரச்னைகள் குறித்தும், எழுத்தாளர் விவகாரங்கள் பற்றியும், எழுத்து உலக விசேஷங்களில் ஆர்வமும் அக்கறையும் காட்டி வந்தது. அது உண்மையான எழுத்தாளர் பத்திரிகையாகத் திகழ்ந்தது. எழுத்தாளர் சம்பந்தமான விஷயம் அல்லது விசேஷம், எங்கே என்ன நடந்தாலும் 'எழுத்து' அதைக் குறிப்பிட்டு அபிப்பிராயம் கூறியது.

இவ்வாறு எழுத்தாளர் மாநாடு, சங்கம், இலக்கியமும் குழுக்களும், சாகித்திய அகாடமியும் பரிசும், இரண்டாவது உலகத் தமிழ் கருத்தரங்கு–மாநாடு பற்றி எல்லாம் காரசாரமான கருத்துக்கள் 'எழுத்'தில் எழுதப் பட்டுள்ளன.

இப்பேர்ப்பட்ட பிரச்னைகள் பற்றிய அபிப்பிராயங்களைப் பரிமாறிக் கொள்ளும் களம் ஆக 'எழுத்து அரங்கம்' விளங்கியது.

தன் எண்ணங்களைச் சொல்வதற்காக செல்லப்பா 'வாடைக் காற்று' என்ற பகுதியைப் பயன்படுத்தி வந்தார்.

இவ்விதமெல்லாம் இருந்தும்கூட, செல்லப்பா எதிர் பார்த்தது போல்– தமிழ்நாட்டு வாசகர்களிடம் அளவுக்கு அதிகமான நம்பிக்கை வைத்தது–நடைமுறையில் நிகழவில்லை. இலக்கிய ஈடுபாடு கொண்ட ரசிக வாசகர்கள் 2000 பேர் தேறுவார்கள் என்று அவர் நம்பினார். நானூறு–ஐநூறு பேர் கூட 'எழுத்து' வளரத் துணை புரியவில்லை.

ஒவ்வொரு ஆண்டு நிறைவின்போதும், இதைப்பற்றி 'ஆசிரியர் பக்க' த்தில் அவர் எழுதிக் கொண்டுதான் இருந்தார். தரமான இலக்கிய வெளியீடுகளை–நல்ல புத்தகங்களை– பரப்பும் நோக்கத்துடன் 'எழுத்துப் புத்தக இலக்கியச் சங்கம்' (Book Club) பற்றி அறிவித்தார். ஆர்வத்தோடு பிரச்சாரம் செய்தார். அதுவும் வெற்றிபெறவில்லை.

'எழுத்து பிரசுரம்' ஆரம்பித்து நல்ல புத்தகங்களை வெளியிட்டார். அவ்வெளியீடுகளைச் சுமந்து கொண்டு ஊர் ஊராகப் போய், மாவட்டங்கள்தோறும் விற்பனை செய்யும் முயற்சியில் தீவிரமாக முனைந்தார்.

செல்லப்பாவின் இலக்கிய வேகமும், வைராக்கியமும், செயல்துணிவும் பிரமிக்கச் செய்பவை; போற்றுதலுக்கு உரியவை.

ஆயினும், 'எழுத்து' சோர்வுற்று வந்தது. $9\frac{1}{4}$ ஆண்டுகளுக்குப் பிறகு–பத்தாம் ஆண்டின் முதல் ஏடு (1968, ஏடு 112)விலிருந்து 'எழுத்து' காலாண்டு ஏடு ஆக மாற்றப்பட்டது.

அப்படியும் அது வெற்றிகரமாக வளர இயலவில்லை. ஒரு தனி மனிதனின் பிடிவாதமும் உழைப்பும் 'கருத்து ஆழமும் கனமும் கொண்ட இலக்கியப் பத்திரிகை'யை நீடித்து வாழ வைக்கமுடியாமல் போயிற்று. பெரும் தொகை நஷ்டம்தான் 'எழுத்து' ஆசிரியர் கண்ட பலன்.

பன்னிரண்டாம் ஆண்டில், 119 வது ஏட்டுடன் (1970 ஜனவரி–மார்ச்) 'எழுத்து' நின்று விட்டது.

# 11. 'எழுத்து' காலத்தில்

'எழுத்து' நடைபெற்றுக் கொண்டிருந்த காலத்திலேயே, எழுத்து போன்ற வேறு இரண்டு சிறு பத்திரிகைகள் தோன்றின.

அவை முற்றிலும் 'எழுத்து' போன்றனவும் அல்ல; தத்தமக்கென்று தனித்தன்மை கொண்டிருந்தன.

ஒன்று க. நா. சுப்ரமண்யம் நடத்திய 'இலக்கிய வட்டம்', மற்றது, 'நடை'.

'இலக்கிய வட்டம்' பெரிய சைஸில், மாதம் இருமுறை பத்திரிகை யாக, சென்னையிலிருந்து வெளிவந்தது. 1964 ஜனவரியில் ஆரம் பிக்கப்பட்டது.

இலக்கிய விமர்சனமும், இலக்கியப் பிரச்னை குறித்துச் சிந்திப் பதும், படைப்புகளில் சோதனை முயற்சிகளுக்கு முக்கியத்துவம் அளிப்ப தும் அதன் நோக்கமாக அமைந்திருந்தது.

சில விஷயங்களைத் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டே இருக்க வேண்டும்; அப்போதுதான் கருத்துத் தெளிவும், நல்ல பலனும் ஏற்படும் என்று கூறி விமர்சனம், சிறுகதை, கவிதை பற்றிய தனது எண்ணங்களை க. நா. சு. அடிக்கடி வலியுறுத்தினார்.

'இலக்கியத் துறையில் செய்ய வேண்டிய காரியங்கள் எத்தனையோ இருக்கின்றன– இன்றைய தமிழ் இலக்கியம் பெருக' என்ற உணர்வுடன் நடத்தப்பட்ட பத்திரிகை இது. 'நமக்கு நாமே பல விஷயங்களையும் தெளிவு செய்து கொள்ள வேண்டும்' என்ற எண்ணத்துடன் இலக்கிய வாதிகள் அதில் கட்டுரைகள் எழுதினார்கள்.

சர்வதேச இலக்கியங்கள், இலக்கிய ஆசிரியர்கள் பற்றிய பயனுள்ள குறிப்புகள் தொடர்ந்து வெளிவந்தன.

படைப்புகளில் சோதனைகளுக்கு முதலிடம் அளிக்கப்பட்டது. புதுக் கவிதையையும் ஒரு சோதனைத் துறையாகத்தான் 'இலக்கிய வட்டம்' கருதியது. சோதனை ரீதியில் கவிதை இயற்றிய அமெரிக்க, ஐரோப்பியக் கவிஞர்கள் பலரது படைப்புகள் மொழிபெயர்க்கப்பட்டன.

க. நா. சு. 'மயன்' என்ற பெயரில் கவிதைச் சோதனைகள் நடத்தி னார். டி. கே. துரைஸ்வாமி, சுந்தர ராமசாமி ஆகியோரது தீவிர சோதனைப் படைப்புகள் அதிகம் பிரசுரமாயின. மற்றும் சிலரது கவிதைகளும் அவ் வப்போது வந்து கொண்டிருந்தன.

'தமிழ் இலக்கியத்தில் சாதனை' யை அளவிடும் விதத்தில் 'இலக்கிய வட்டம்' ஒரு விசேஷ இதழைத் தயாரித்தது. 1947–1964 காலகட்டத்தில் தமிழில் நிகழ்ந்த இலக்கிய சாதனைகள் குறித்து தி. ஜானகிராமன், எம். வி. வெங்கட்ராம், தி. க. சிவசங்கரன், ரதுலன், வெ. சாமிநாதன், ஆர். சூடாமணி, தெ. பொ. மீனாட்சி சுந்தரன், நகுலன், வல்லிக்கண்ணன் ஆகியோர் அவரவர் நோக்கில் அபிப்பிராயங்கள் தெரிவித்துக் கட்டுரை கள் எழுதினார்கள்.

க. நா. சு. எழுதிய 'நடுத்தெரு' என்ற நாவல் சிறிது காலம் இணைப்பு ஆகப் பத்திரிகையுடன் வழங்கப்பட்டது. அந்த நாவல் பூர்த்தி பெறவில்லை.

'இலக்கிய வட்டம்' எழுத்தாளர்களுக்கும் இலக்கியப் பிரியர்களுக்கும் மகிழ்ச்சியும் பயனும் அளிக்கக்கூடிய நல்ல விஷயங்களைக் கொண்ட சுவாரஸ்யமான இலக்கிய ஏடு ஆக வளர்ந்து வந்தது. ஆயினும் அது நெடுங்காலம் வாழவில்லை. ஒரு வருஷமும் சில மாதங்களும்தான் செயல்பட்டது.

இலக்கிய வட்டம் அதன் வளர்ச்சிக் காலத்தில், இலக்கிய ரசிகர்கள் படித்துப் பாராட்டக்கூடிய ஒரு பத்திரிகையாக இருந்ததே தவிர, 'எழுத்து' போல் இலக்கிய வரலாற்றில் அழுத்தமான பதிவுகளை உண்டாக்கிவிட வில்லை. ரசிகர்கள் சிறிது காலம் அதைப் பற்றிப் பேசினார்கள். அப் புறம் மறந்து விட்டார்கள்.

'நடை' காலாண்டு ஏடு ஆக சேலத்தில் தோன்றியது. 1968 அக் டோபரில் அதன் முதல் இதழ் வந்தது.

இந்த 'இலக்கிய முத்திங்கள் ஏடு' 'எழுத்து' காலாண்டு ஏடாக நடைபெற்றுக் கொண்டிருந்த காலத்தில் பிரசுரமாயிற்று. அதன் ஆசிரியர் கோ. கிருஷ்ணசாமி என அறிவிக்கப்பட்டிருந்த போதிலும், அது பலரது கூட்டு முயற்சியாலேயே உருவாயிற்று.

"தமிழ் மக்களுக்கு 'நடை' என்னும் புதிய ஏட்டினை அறிமுகப் படுத்துவதில் பெருமையும் மகிழ்ச்சியும் அடைகிறோம். 'நடை' ஓர் இலக்கிய முத்திங்கள் ஏடு; இலக்கியப் படைப்புக்கும் திறனாய்வுக்கும்

என்றே வருகின்ற ஏடு. இது போன்ற ஏடு தமிழுக்குப் புதிதல்ல; என்றா லும் 'நடை' பலவகையிலும் மாற்றம் உடையது என்பது வாசகரின் முதற் பார்வைக்கே புலனாகி இருக்கும். இந்த மாற்றம் 'நடை' யினது நோக்கத் தின் அடிப்படையில் எழுவதாகும்.

தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கும் திறனாய்வு வளர்ச்சிக்கும் ஒரு புதிய வாய்ப்பை அளித்து அவற்றின் வேகத்தை அதிகப்படுத்த வேண்டும் என்பதே 'நடை' யின் நோக்கம். இந்த இருவகை வளர்ச்சியிலும் நாட்டம் கொண்ட நண்பர் சிலரின் கூட்டு முயற்சியே இந்த 'நடை'. 'நடை' யின் நோக்கம் நிறைவேறவும் 'நடை' வெற்றியுடன் நடக்கவும் இக்கூட்டு முயற்சியில் வேறு சிலரின் துணையும் தேவை. இதற்கு எல்லா எழுத் தாளரையும் விமரிசகரையும் துணை செய்யுமாறு அழைக்கிறோம். சிறு கதை, கவிதை, கவிதை நாடகம், மொழிபெயர்ப்பு, திறனாய்வுக் கட்டுரை முதலியவற்றை 'நடை' வரவேற்கிறது. ஓர் ஏ ட் டி ன் வெற்றிக்கு அடிப்படைத் தேவை வாசகரின் பேராதரவுதான். எனவே இலக்கியச் சுவைப்புக்குப் புகழ் பெற்ற தமிழ் மக்களைத் துணை புரியுமாறு அழைக்கிறோம்.''

'நடை' முதலாவது இதழில் வெளியான ஆசிரியர் அறிவிப்பு இது.

ந. முத்துசாமியின் சிறுகதைகளையும் நாடகத்தையும் 'நடை' வெளி யிட்டுள்ளது. சி. மணி, செல்வம் என்ற பெயரில் கவிதை, பழந்தமிழ் இலக்கியம் சம்பந்தமான கட்டுரைகள் எழுதியிருக்கிறார். புதுக் கவிதை யும் யாப்பிலக்கணமும் பற்றிய சிறப்பு இணைப்பு குறிப்பிடத்தகுந்தது. வே. மாலி என்ற பெயரிலும் அவர் சோதனை ரீதியான கவிதைகள் எழுதியுள்ளார். 'நெஞ்சங் கவரும் கற்பனையும், அருமையான சொற்கட் டும், இறுக்கமான உருவ அமைதியும், நுணுகிய பார்வையும், ஆழ்ந்த பொருள் நயமும்' கொண்ட ஜப்பானியக் கவிதைகள் செல்வம் மொழி பெயர்ப்பில் வந்தன.

'எழுத்து' பத்திரிகையில் எழுதி வந்த வி. து. சீனிவாசன், இரா. அருள், எஸ். வைத்தீஸ்வரன் முதலியவர்கள் 'நடை' யில் கட்டுரைகள், கவிதைகள் எழுதினார்கள். வெ. சாமிநாதன் 'மார்க்ஸின் கல்லறையி லிருந்து ஒரு குரல்' என்ற கட்டுரைத் தொடர் ஒன்றை எழுதினார்.

'விருந்து' என்ற தலைப்பில் புத்தக மதிப்புரைப் பகுதி பிரசுர மாயிற்று. எடுத்துக் கொண்ட புத்தகம் பற்றி விரிவாகவே மதிப்புரை எழுதப்பட்டது.

ஓவியம் போன்ற கலைகள் பற்றியும் கட்டுரைகள் பிரசுரமாயின.

'நடை' புத்தக வடிவத்தில், 'ஆனந்த விகடன்' அளவில், கனத்த அட்டையுடன் தயாரிக்கப்பட்டது. எட்டு இதழ்கள்தான் ( இரண்டு வருடங்கள்) வெளிவந்தன.

ஐராவதம், ஞானக்கூத்தன் போன்ற புதியவர்களும், அசோகமித்திரன், நகுலன், நீல. பத்மநாபன், மா. தக்ஷிணாமூர்த்தி, கோ. ராஜாராம் ஆகியோரும் 'நடை' யில் எழுதினார்கள்.

அதன் காலத்தில் அது இலக்கியத்தையோ எழுத்தாளர்களையோ பாதிக்கும்படியான சாதனைகள் எதையும் புரிந்துவிடவில்லை. தரமான ஒரு பத்திரிகையாக 'நடை' விளங்கியது.

திரைப்படப் பாடல்களின் இலக்கியத் தன்மை குறித்து, சிந்தனையைத் தூண்டக்கூடிய நல்ல கட்டுரை ஒன்றையும் 'நடை' வெளியிட்டுள்ளது. அதன் இரண்டு வருட வாழ்வில் 'நடை' புதுக் கவிதைக்குச் சிறப்பான பணியாற்றியிருப்பது குறிப்பிடத்தகுந்தது.

'எழுத்து', அதன் ஆசிரியருக்குப் பெரும் தொகை நஷ்டம் ஏற்படுத்திய போதிலும், இலக்கிய வரலாற்றில் நிரந்தரமான ஒரு முக்கிய இடத்தைப் பெற்றுள்ளது. அதன் மதிப்பை இலக்கிய மாணவர்களும், ஆய்வாளர்களும் பிற்காலத்தில் உணரலானார்கள். 'எழுத்து' போன்ற ஒரு பத்திரிகை தேவை என்ற உணர்ச்சியைப் பின்வந்த தலைமுறையினரிடம் உண்டாக்கிவிட்டிருப்பது, 'எழுத்து' க்கு மாபெரும் வெற்றி ஆகும்.

# 12. கசடதபற

'எழுத்து' என்பதே பத்திரிகை உலகில் புதுமையான பெயராக ஒலித்தது முதலில். போகப் போக அது பழகிவிட்டது.

பின்னர், 'எழுத்தோடு' தொடர்பு கொண்டிருந்த சில நண்பர்கள் தனி முயற்சி துவங்கிய போது, தங்கள் காலாண்டு ஏட்டுக்கு 'நடை' என்று பெயர் சூட்டினார்கள்.

'நடை' யுடன் தொடர்பு கொண்டிருந்த இளைஞர்கள் சிலர் சொந்தமாக ஒரு பத்திரிகை ஆரம்பித்தபோது, அதற்கு முற்றிலும் புதுமையான—புரட்சிகரமான—ஒரு பெயரைத் தேர்ந்தெடுத்தார்கள்.

'கசடதபற' – ஒரு வல்லின மாத ஏடு.

'கோபம் கொண்ட இளைஞர்கள்'

வாளும் கேடயமும் ஏந்திய ஒரு போர் வீரனின் (இந்திய மரபு) ஓவியத்தைத் தங்கள் பத்திரிகையின் நிரந்தரச் சின்னமாகப் பொறித்திருந்தார்கள்.

அக்டோபர் 1970 –ல் பெரிய அளவில் ( க. நா. சு. நடத்திய இலக்கிய வட்டம் சைஸ் ) 16 பக்கங்கள் கொண்ட 'கசடதபற'வின் முதல் இதழ் வெளிவந்தது. விலை 30 காசு.

"இன்றைய படைப்புகளிலும், அவற்றைத் தாங்கி வருகிற பத்திரிகைகளிலும் தீவிர அதிருப்தியும் அதனால் கோபமும் உடைய பல இளம் எழுத்தாளர்கள், கவிஞர்கள், ஓவியர்கள், திறனாய்வாளர்களின் பொது மேடைதான் கசடதபற. ஊதிப் போன சுயகௌரவங்களாலும் பதுங்கிய பார்வைகளாலும் இவர்கள் பாதிக்கப்படாதவர்கள். அரசியல், சமயம், மரபு இவை சம்பந்தப்பட்ட ஒழுக்கங்களுக்கு வாரம் தவறாமல் தோப்புக்கரணம் போடுபவர்கள் யாரும் இவர்களில் இல்லை. இலக்கியத்தை அதுவாகவே பார்க்கத் தனித்தனியே தங்களுக்குப் பயிற்சி நிரம்பப் பெற்று பிறகு சேர்ந்து கொண்டவர்கள் இவர்கள். உலகின் இதர பகுதியின் இலக்கியத்தில் நிகழ்வனவற்றைக் கூர்ந்து கவனிப்பதிலும், தமிழ்ச் சிந்தனையில் புதிய கிளர்ச்சிகளை இனம் கண்டு கொள்வதிலும் இவர்கள் தேர்ந்தவர்கள். பல காலமாகவும், பலராலும் சொல்லப்

படுகிறது என்று ஒன்றை ஏற்க மறுப்பதோடு, எதையும் விமரிசன ரீதி யாகப் பார்க்க வேண்டும் என்று வற்புறுத்துபவர்கள் இவர்கள். இப்படிப் பட்டவர்கள் சேர்ந்து கசடதபற வை உருவாக்கி இருக்கிறார்கள்.

சொந்த அல்லது வேற்றரசாங்கத்தின் பணம் ஏதும் கொல்லைப் புறமாக இவர்களுக்கு வந்திருக்கவில்லை. அல்லது பை கொழுத்துப் போன ஒருவருடைய இறுதிக் காலத்தியதே போன்ற ஆவலை நிறை வேற்றவோ, கேவலம் சுய விளம்பர நமைச்சலைத் தீர்த்துக் கொள்வ தற்காகவோ கசடதபற வந்திருக்கவில்லை. மாறாக, சிந்திக்கிறவனுக்கு இன்றைய உலகம் விடும் அறைகூவல்களை ஏற்றுக்கொள்ள வந்திருக்கி றது. சமூகத்தின் கூட்டுப் பொறுப்பான கலாசாரத்தின் ஆழ அகலங் களை, ரகசிய அம்பலங்களை இலக்கியத்தில் காட்டக் கசடதபற வந்திருக்கிறது.'

புதிய எழுத்தாளர்கள், கவிஞர்கள், கட்டுரையாளர்களை வரவேற்கக் கசடதபற பெரிதும் விரும்பும். எதையும் செய்யுங்கள், ஆனால் இலக்கிய மாகச் செய்யுங்கள் என்று மட்டுமே கசடதபற சொல்லும்.

இலக்கியத்தை வைத்துப் பிழைப்பு நடத்துபவர்களைப் பற்றிக் கவலை இல்லை. இலக்கிய ரொட்டியின் எந்தப் பகுதியில் வெண்ணெய் தடவப்பட்டிருக்கிறது என்று ஆராய்பவர்களைப் பற்றிக் கவலை இல்லை. இலக்கியத்தை வாழ்க்கையின் அனுபவப் பகிர்தலாக, முன்னோட்டமாகக் கருதுபவர்கள் எல்லோரையும் அழைக்கிறது கசடதபற.''

—முதல் இதழில் பிரசுரமான இந்த அறிவிப்பு கசடதபற நண்பர்க ளின் நோக்கை நன்கு எடுத்துக்காட்டியது.

ஞானக்கூத்தன் எழுதிய 'தமிழை எங்கே நிறுத்தலாம்' என்ற கவிதை சூடாகவே சில விஷயங்களைச் சொன்னது.

'வேற்று நாட்டுச் சரக்குகளோடு
உள்ளூர்ச் சரக்கை ஒப்பிட்டால்
தலையில் தலையில் அடித்துக் கொண்டால்
தேவலாம் போல இருக்கிறது
மோச மின்னும் போவதற்குள்ளே
வித்தைக்காரர் வர வேண்டும்;
வித்தை தெரிந்த எழுத்துக் கலைஞர்
விலகி நிற்கக் கூடாது.

வித்தை தெரிந்தவர்க் கெல்லா மின்று
வேலை இருக்குது பலவாக.
நம்
கையிலும் ரெண்டு காசுகளுண்டு
இனி
தமிழை எங்கே நிறுத்தலாம்'

என்று கேட்டிருந்தது அக் கவிதை.

நா. கிருஷ்ணமூர்த்தி ஆசிரியராகவும், என். மகா கணபதி பப்ளிஷர் ஆகவும் செயலாற்றிய 'கசடதபற' வுக்கு ஞானக்கூத்தன், சா. கந்தசாமி, ஆர். சுவாமிநாதன் (ஐராவதம்), ந. முத்துசாமி, ராமகிருஷ்ணன், அசோக மித்திரன் முதலியவர்கள் ஊக்கத்தோடும் உற்சாகத்துடனும் உயிரூட்டி வளர்த்தார்கள்.

'சுயபிரக்ஞையோடு – த ர மா ன இலக்கியத்தை இனம் கண்டு கொள்ளும் வாசகர்கள், களைகள் மண்டிய இந்தச் சூழ்நிலையிலும் இருக்கிறார்கள். இவர்களின் எண்ணிக்கை இன்னும் வளர கசடதபற பாடுபடும்' என்று அறிவித்து, அம் முயற்சியில் ஆர்வமும் காட்டியது அது.

'கோபம் படைப்புச் சக்தியை வீணாய் எரிக்கிறது. ஆனால், இதற் காக இதைச் செய்கிறோம், இதன் விளைவு இது என்னும் திட நம்பிக் கையோடு கொள்ளும் கோபம் சக்திச் சேதமின்றி சேமிப்புச் சக்தியாக மாறும் வகையில் சுய பிரக்ஞையுடன் இக்காரியத்தில் மிக, மிகமிக, அமைதியாக ஈடுபட இருக்கிறோம். எனவே, கசடதபற வில் தொடர்ந்து கோபம் ஒரு யோகமாகப் போகிறது' என்று ந. முத்துசாமி முதலாவது இதழ்க் கட்டுரையில் குறிப்பிட்டிருக்கிறார்.

கோபம் பலபேர்கள்–பத்திரிகைக்காரர்கள், எழுத்தாளர்கள், பண்டிதர் கள், பட்டிமன்றப் பேச்சாளர்கள், போலிகள், பம்மாத்துக்காரர்கள் போன்ற பல்வேறு இனத்தினர்–மீதும் சூடாகவும் சுவையாகவும் இலக்கிய நயத்தோ டும் கசடதபற இதழ்களில் பாய்ச்சப் பெற்றுள்ளது.

புதுமையான சிறுகதைகள், புதுக் கவிதைகள், மொழிபெயர்ப்புக் கதைகள், இலக்கிய விமர்சனம், புதிய புத்தகங்கள் பற்றிய விரிவான மதிப்புரைகள், சோதனை ரீதியான நாடகங்கள் ( ந. முத்துசாமி, இந்திரா பார்த்தசாரதி எழுதியவை ). நாடகக்கலை, ஓவியக்கலை, கூத்து பற்றிய

கட்டுரைகள், மொழிபெயர்ப்புக் கவிதைகள் இப்படிப் பலவற்றையும் கசட தபற தந்திருக்கிறது.

'கசடதபற' வைச் சேர்ந்தவர்களைத் தவிர, நகுலன், ஆர். இராஜேந் திரசோழன், பாலகுமாரன், கல்யாண்ஜி, இந்திரா பார்த்தசாரதி முதலியோ ரும் கதைகள் எழுதியிருக்கிறார்கள்.

கி. அ. சச்சிதானந்தம், வெ. சாமிநாதன், தர்மு அரூப் சிவராம், எஸ். கோபாலி போன்றவர்கள் கட்டுரைகள் எழுதியுள்ளனர். க. நா. சுப்பிர மணியம் சில கவிதைகள், கதை– கட்டுரைகள் எழுதியிருக்கிறார்.

ஓவியர்கள் கே. எம். ஆதிமூலம், பாஸ்கரன், பி. கிருஷ்ணமூர்த்தி, கே. தாமோதரன், டி. கே. பத்மினி, எஸ். வைதீஸ்வரன், சிதம்பரகிருஷ்ணன் முதலியவர்களது சித்திரங்களை கசடதபற பிரசுரித்தது. ஓவியம் பற்றிய கட்டுரைகளும் அவ்வப்போது வெளியாயின.

கசடதபற கவிதைக்கு நிறையவே பணியாற்றியுள்ளது. ஞானக்கூத் தன், பாலகுமாரன், கோ. ராஜாராம், எஸ். வைதீஸ்வரன், கலாப்ரியா, சச்சிதானந்தம், தருமு சிவராம், நீலமணி, கல்யாண்ஜி, ஆத்மாநாம், நா. ஜெயராமன், மகாகணபதி மற்றும் பலர் கவிதைகள் எழுதியுள்ளனர்.

புதுக்கவிதை பற்றிய சார்வாகன் கட்டுரை விசேஷமாகக் குறிப்பிடத் தகுந்தது.

நோபல் பரிசு பெற்ற ரஷ்ய எழுத்தாளர் ஸோல்ஸனிட்ஸினின் நோபல் உரை ( 14 பக்கங்கள் ) 26–ம் இதழ், நவம்பர் 1972, ஸோல்ஸெனிட் ஸின் ஒரு பரிசீலனை ( எஸ். வி. ராஜதுரை ), 'ழீன் பால்சார்த்தருடன் ஒரு பேட்டி' மற்றும் கான்ஸர் வார்டு' ( ராஜதுரை ) புனிதஜெனே ( தர்மு அரூப் சிவராம் ) ஆகிய கட்டுரைகளும் முக்கியமானவை.

'கசடதபற' வின் 17–18வது இதழ் ( 1972 மார்ச்– ஏப்ரல் ஒரே இதழ் ) க. நா. சு. சிறப்பிதழாக வந்தது. க. நா. சு. பற்றிய பல கட்டுரைகளுடன் க. நா. சு. வின் படைப்புகளும் அதில் இடம் பெற்றன.

13–வது இதழ் நாடகச் சிறப்பிதழாக வந்தது. இந்திரா பார்த்த சாரதியின் நாடகம் 'மழை' முழுமையாக அதில் பிரசுரமாயிற்று.

இந்த இதழிலிருந்து பத்திரிகையின் அளவும் மாறுதல் பெற்றது. சற்றே சுருங்கிய வடிவில் ( 'கணையாழி' சைஸ்) வெளிவரலாயிற்று.

25வது இதழ் விசேஷத் தயாரிப்பு. அதிகப் பக்கங்கள், கவிதைகள், கதைகள், சித்திரங்கள் மிகுதியாக இடம் பெற்றன.

கசடதபறவின் ஒவ்வொரு இதழிலும் 'அக்கம் பக்கம்' என்ற பகுதி உண்டு. அக்கப்போர், தாக்குதல், தாக்குதலுக்குப் பதில், சூடும் சுவையும் கலந்த அபிப்பிராயங்கள், தகவல்கள், இதில் வெளிவந்து கொண்டிருந்தன.

கசடதபற, 32 இதழ்களுக்குப் பிறகு, 1973 ஜூன்– ஜூலை என்று குறிப்பிட்டு, சிதம்பர கிருஷ்ணன் ஓவியம் ஒரு பக்கமும் ஒரு அறிவிப்பை மறுபக்கமும் அச்சிட்ட ஒரு தாளை அனைவருக்கும் அனுப்பியது. அதில் கண்ட விவரம் இதுதான்–

"மூன்றாண்டுகளுக்கு முன்பு ஒரு அக்டோபர் மாதத்தில் தொடங்கிய கசடதபற இந்த அறிவிப்புடன் தனது வெளியீட்டை நிறுத்திக் கொள்கிறது.

இலக்கியச் சிற்றேடுகளின் புறப்பாடும், நிப்பாடும் ஆன வாழ்க்கை அதை இயக்குபவர்களின் உற்சாகத்தைப் பொறுத்தது என்று இந்தியச் சிற்றேடுகளைப் பற்றிக் கூறப்படுவதுண்டு. இதிலிருந்து முற்றிலும் மாறுபட்ட கருத்தைக் கொண்டு வெளியீட்டை நிறுத்திக் கொள்கிறது கசடதபற.

இலக்கியம் என்பதை ஒரு கலைஞனின் அனுபவத்தைக் கொண்டு பார்த்தால் அதற்குத் தொடர்ச்சிதான் குறிப்பே தவிர, தொலைதல் இல்லை என்பது தெளிவாகிறது. இலக்கிய முயற்சிகளும் அப்படித்தான்.

கசடதபறவின் இதழ்கள் வெளிவந்த சமயத்தில் அதனோடு தொடர்பு கொண்டிருந்த அத்தனை பேர்களுக்கும் கசடதபற நன்றி தெரிவிக்கிறது."

பொதுவாக, சிறு பத்திரிகைகள் தங்களுடைய கஷ்ட நஷ்டங்கள், பத்திரிகைகள் தயாரிப்பில் எதிர்ப்படும் சிரமங்கள் முதலியவற்றை அடிக்கடி ஒலிபரப்புவதும், சந்தாதார் ஆகும்படி வாசகர்களுக்கு வேண்டுகோள் விடுத்தவாறு இருப்பதும் ஒரு மரபு ஆகவே உள்ளது. ஆனால் கசடதபற தனது மூன்றாண்டு வாழ்வில் ஒரு தடவைகூட இந்த ரீதியில் எதுவும் எழுதியதே இல்லை. இதுவும் அதன் தனிச்சிறப்புகளில் ஒன்று ஆகும்.

சிறிது கால இடைவெளிக்குப் பிறகு மீண்டும் 'கசடதபற'வைக் கொண்டு வரும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. சின்ன அளவில், குறைந்த பக்கங்களோடு, சில இதழ்கள் வரவும் செய்தன. சீக்கிரமே அம் முயற்சி கைவிடப்பட்டது. ❑❑

# 13. ஞானரதம்

லைப்ரேரியன் (நூலகர்) ஆகப் பணியாற்றிக் கொண்டிருந்த என். முகமது இப்ராகிம் (சித்திரபாரதி) இலக்கிய ஈடுபாடு கொண்டவர். இலக்கிய வளர்ச்சிக்காகப் புதுமையாக ஏதாவது செய்யவேண்டும் என்ற ஆர்வமும் செயல் துடிப்பும் உற்சாகமும் பெற்றிருந்தார் அவர்.

அவர் மதுரையில் பணிபுரிந்த காலத்தில், இலக்கிய ரசனையைப் பரப்புவதற்கு 'வாசகர் பேரவை' என்ற அமைப்பை உருவாக்கி, விமர்சன விழா, ஆய்வுச் சொற்பொழிவுகள், கருத்தரங்குகள் பலவற்றுக்கு ஏற்பாடு செய்து வெற்றி கண்டிருந்தார். இது 1960 களில்.

பின்னர் இப்ராகிம் சென்னைக்கு வந்தார். நல்ல இலக்கியப் பத்திரிகை ஒன்று நடத்த வேண்டும் என்ற ஆசை அவருக்கு வெகு நாட்களாக இருந்து வந்தது. இலக்கியத்துடன் அரசியல், சமூகம், ஆன்மீகப் பிரச்னைகளிலும் அவர் அக்கறை காட்டிவந்தார். தனது பெயரை தேவ. சித்திரபாரதி என்று ஆக்கிக் கொண்டார்.

இலக்கியப் பத்திரிகை தொடங்க வேண்டும் என்ற அவரது ஆசை 1970–ல் செயல் மலர்ச்சி பெற்றது. 'ஞானரதம்' தோன்றியது.

ஜெயகாந்தனிடம் அவருக்குப் பெரும் மதிப்பு உண்டு. ஜெயகாந்தனை மிகுதியும் போற்றிப் புகழ்ந்து வியந்து கொண்டிருந்த தேவ. சித்திர பாரதி, தான் நிர்வாக ஆசிரியராகப் பொறுப்பேற்ற 'ஞானரதம்' மாத இதழுக்கு ஜெயகாந்தனை ஆசிரியர் ஆக்கினார்.

ஆறு மாத காலம் 'ஞானரதம்' சிறிய அளவில் (கிரவுன் சைஸ்) வெளிவந்தது. ஜெயகாந்தன் 'முன்னோட்டம்' என்ற பகுதியில் பல்வேறு பிரச்னைகள் பற்றியும் கட்டுரைகள் எழுதினார். 'உரத்த சிந்தனை' என்ற தலைப்பில் கேள்விகளுக்குப் பதில் அளித்தார். அவ்வப்போது கவிதைகள் எழுதினார்.

'ரசனை' என்ற பகுதியில், ரசனைக்கு அடிப்படையான சில 'ஆரம்பப் பயிற்சி' களை விளக்கும் நோக்கத்துடன் வெ. சாமிநாதன், 'அனுபவம்,

வெளிப்பாடு, நவீன ஓவியம்' என்ற தலைப்பில் தொடர் கட்டுரை எழுதி னார். 7–வது இதழ் முடிய.

மற்றும் சிறுகதைகள், கவிதைகள், கட்டுரைகள் பிரசுரிக்கப் பட்டன.

7–வது இதழிலிருந்து ஒவ்வொரு இதழை ஒவ்வொருவர் தயாரிக் கும் முறையை தேவ. சித்திரபாரதி கைக்கொண்டார். 7–வது இதழ் ஞானக்கூத்தன் தயாரிப்பு. சைசும் பெரிதாகியிருந்தது–விகடன் அளவில் வெளிவந்தது.

8–வது இதழ்–வல்லிக்கண்ணன் தொகுத்தது. இது ரசனைக்கு விருந்தாகும் ஒரு சிறப்பு மலர்போல் அமைந்து, இலக்கியப் பிரியர்களுக்கு நிறைந்த திருப்தி அளித்தது.

9–வது இதழ் பரந்தாமன் தயாரிப்பு. இத்துடன் ஒரு வருஷம் முடிந் தது. ஞானரதம் என்ற இலக்கிய ஏடு சோர்ந்து தூங்கியது. தேவ. சித்திரபாரதி வேறு முயற்சிகளில் செயலூக்கம் கொண்டிருந்தார்.

1972 'ஞானரதம்' மாத இதழ் மீண்டும் தோன்றியது. இப்போது ஜெயகாந்தனுக்கும் பத்திரிகைக்கும் தொடர்பு ஏதுவும் இல்லை. தேவ. சித்திரபாரதிதான் ஆசிரியர், நிர்வாகி எல்லாம். இதழ்தோறும் 'முன்னோட்டம்' பகுதியில் பல்வேறு பிரச்னைகள் குறித்தும் அவர் தமது சிந்தனைகளை விரிவாக எழுதிக் கொண்டிருந்தார்.

பத்திரிகையின் முழுப் பொறுப்பையும் ஏற்று ஒரு ஆண்டுக் காலம் முடிந்ததும், அவர் டிசம்பர் 1972 இதழில் எழுதியது ரசமான குறிப்பு ஆகும்.

"தவறாமல் மாதந்தோறும் முதல் தேதியன்றே ஞானரதம் வெளிவந் திருப்பதே சாதனைகளின் சிகரமாகும். தமிழகத்தில் வெளியாகும் சிறு இலக்கியப் பத்திரிகைகளுள் தேதிப்படி சரியாக இந்த ஆண்டில் வெளிவந்த பத்திரிகை ஞானரதம் ஒன்றுதான் என்பதை அறியும்போது இந்தச் சாதனையின் பெருமை பூரிப்பைத் தரவே செய்கிறது.

ஜெயகாந்தன் பெயருக்காகத்தான் ஞானரதத்துக்கு இத்தனை வாசகர்கள் என்ற கணிப்பைப் பொய்யாக்கி, புத்தாண்டு சந்தா இயக்கக் கோரிக்கைக்கு, ஜெயகாந்தன் ஆசிரியராக இருந்த காலத்தையும் விட அதிக எண்ணிக்கையில் Respond பண்ணியதன் மூலம் வாசகர்கள்

ஹீரோ ஒர்ஷிப்பில் மயங்காத, இலக்கிய ரீதியான ரசனையையும், சுயமரி யாதையையும் நிரூபித்திருக்கிறார்கள் என்பது இரண்டாவது மகிழ்ச்சி அளிக்கும் விஷயம்.''

புதிய ஓட்டம் பெற்ற 'ஞானரதம்' இலக்கிய விஷயங்களிலும், இலக் கியவாதிகள் விவகாரங்களிலும் (சச்சரவுகளிலும்) அதிக அக்கறை காட்டி வந்தது. 'உரத்த சிந்தனை' என்ற தலைப்பில், படைப்பாளிகள்– ரசிகர்கள் சந்திப்பை (ரசிகர்கள் கேள்விகளையும் படைப்பாளிகளின் பதில்களையும்) பிரசுரித்தது. இது இந்த இலக்கிய ஏட்டின் தனிச் சிறப்பு அம்சமாக விளங்கியது.

'இலக்கிய அனுபவம்' என்ற தலைப்பில் புத்தகங்கள் அல்லது தனிப் படைப்புகள் பற்றி யாராவது விரிவாக அபிப்பிராயங்கள் தெரி வித்துக் கொண்டிருந்தார்கள்.

ஞானரதம் 1974 முதல்பாதி வரை வெளிவந்து கொண்டிருந்தது. 'உண்மையைத் தேடும் எழுத்தைவிட உயர்ந்த இலக்கியம் இல்லை.' என்ற வரியை லட்சியக் கொள்கையாகப் பொறித்திருந்த இந்த இலக்கிய ஏடு, கீழ்க்கண்ட கருத்தையும் ஒலிபரப்பி வந்தது.

'மனிதர்களில் எத்தனை முகங்கள் உண்டோ அத்தனை விதமான நோக்கங்களும் பார்வைகளும் இலக்கியத்திலும் இருக்கவே செய்கின்றன. ஞானரதத்தின் நோக்கங்களுக்கும் பார்வைகளுக்கும் மாறுபட்டவைகளும் கூட இலக்கியமாக இருப்பின் இங்கு இடம்பெறும், ஏனெனில், ஞான ரதத்தின் இலக்கே, உண்மையைத் தேடிக்கொண்டிருப்பது ஆகும்.'

இலக்கிய விவகாரங்கள், இலக்கியவாதிகளின் சச்சரவுகள், வம்பு கள், அக்கப்போர்கள் முதலியவைகளுக்கும் ஞானரதம் அதிகமாகவே இடம் அளித்திருக்கிறது. புதிய திறமையாளர்களை வரவேற்று ஊக்குவித் துள்ளது. சிறுகதைகளிலும் புதுக் கவிதைகளிலும் நல்ல அறுவடை கண்டிருக்கிறது. சோதனை முயற்சிகள் தாராளமாக இடம் பெற்றுள்ளன.

ஞானரதம், அதன் காலகட்டத்தில் க. நா. சுப்ரமண்யம், சி. சு. செல்லப்பா, ந. சிதம்பர சுப்ரமண்யம் ஆகியோரின் மணிவிழாச் சிறப்பிதழ் கள் வெளியிட்டு அப்படைப்பாளிகளைக் கௌரவித்தது.

படைப்பாளிகள் பலரும் ஞானரதத்துடன் ஒத்துழைத்தது, அதன் வளர்ச்சிக்கும் வளத்துக்கும் துணை புரிந்தது. பல வருட காலம் நடுவில் எழுதாதிருந்த சுந்தர ராமசாமி ஞானரதத்துக்கு அதிகமாகவே– கதைகள், சுதந்திரச் சிந்தனைகள், கவிதைகள்– எழுதி உதவியுள்ளார்.

1974-ல் தேவ. சித்திரபாரதி தேவையில்லாத ஒரு 'புதுமை'யை ஞானரதத்தில் புகுத்தினார். கதை, கட்டுரை, கவிதைகள் எழுதியவர்களின் பெயர்களை அச்சிடாது, அவர்களது எழுத்துக்களை மட்டுமே கொடுப்பது. குறிப்பிட்ட எழுத்தை வைத்து, சம்பந்தப்பட்ட படைப்பாளி யார் என்று வாசகர்கள் கண்டுகொள்ள வேண்டும். இதனால் ரசனை வளர இடமுண்டு என்று அவர் கருதினார். உரிய பெயர்கள் அடுத்த இதழில் பிரசுரிக்கப்பட்டன. இதைப் பெரும்பாலான வாசகர்கள் வரவேற்கவில்லை.

1974 ஜனவரி முதல் 'ஞானரதம்' கடைகளில் விற்பனை செய்யப் படாத-சந்தாப் பணம் கட்டிய வாசகர்களுக்கு மட்டுமே கிடைக்கக் கூடிய- ஒரு சிறு பத்திரிகையாக மாற்றப்பட்டது.

அதன் கடைசி இதழ் 37-39 ( மே-ஜூலை 1974 ) என்று இலக்கமிடப்பட்டு, ஸோல்ஸெனிட்ஸின் சிறப்பிதழ் என்று வெளிவந்தது. அந்த இதழின் கடைசிப் பக்கத்தில் காணப்பட்ட 'முக்கிய அறிவிப்பு'-

"1974 ஆகஸ்டு முதல், இப்போது இலக்கியத் துறைப் பத்திரிகையாக மட்டும் உள்ள ஞானரதம் மானிட இயல்கள் ( Humanities ) அனைத்துக்குமான பத்திரிகையாகப் பரிணாமம் பெறுகிறது.

இதற்கிசைவாக திரு. சுந்தர ராமசாமியின் தலைமையில் பல்வேறு துறைகளையும் சேர்ந்த அறிஞர்களைக் கொண்ட புதிய ஆசிரியர் குழு ஆகஸ்டு 1974 முதல் பொறுப்பேற்கிறது.

ஆகஸ்டு முதல், ஞானரதம் இதே அளவில் 80 பக்கங்களுடன், இரண்டு மாதங்களுக்கு ஒருமுறை கலை அம்சங்களுடன் வெளிவரும். தனி இதழ் விலை ரூ. 2. ஆண்டுச் சந்தா ரூ. 12 இருக்கும்."

இந்த ஏற்பாடு வெற்றி பெறவில்லை.

ஞானரதம் ஆசிரியர் தேவ. சித்திரபாரதி வலியுறுத்தி வந்த கருத்து நினைவுகூரத்தக்கது-

"நாமெல்லாம் உண்மையைத் தேடி வெளிப்படுத்தத் துடிக்கும் தத்துவவாதிகள் மட்டுமில்லை, கலைஞர்களும்கூட. நாம் வெளிப்படுத்தும் உண்மைகளின் புதிய பரிணாமங்கள் கலா பூர்வமாகவும், இலக்கிய நிலைகளுடனும், அழகியல் பூர்வமாகவும் இருக்க வேண்டும் என்பதை மறந்துவிடக் கூடாது. கூடவே, வெளிப்படுத்தும் உண்மைகள் நாலு பேருக்காவது விளங்க வேண்டுமே என்ற பொறுப்பும், பிறர் புரிந்து கொள்ளும் பொதுமை அனுபவமாகவும் அவை இருந்தால் நல்லது. ஆனால் தனி அனுபவங்களுக்கு நாம் விரோதிகளல்லோம்." □□

# 14. ஃ ( அஃக் )

**சேலம்** ஜாகிர் அம்மாபாளையம் என்ற இடத்திலிருந்து 1972 ஜூன் மாதம், 'ஃ– ஓர் எழுத்தாயுத மாத ஏடு–' தோன்றியது.

அதன் முதல் இதழின் அட்டையும் உள் அமைப்பும் அச்சும் அழகாய், புதுமையானதாய் விளங்கின. இலக்கியவாதிகளுக்கு நிறைந்த திருப்தியும் நம்பிக்கையும் தரத்தக்க விதத்தில் உள்ளடக்கம் அமைந்திருந்தது.

அட்டை முழுவதும் ஃ என்ற எழுத்தையே மூன்று கண்களாகச் சித்திரிக்கும் வடிவங்களும், A Q என்ற எழுத்துக்களும் விரவிக் கிடந்தன. தலையங்கம், கொள்கை விளக்கம், லட்சிய முழக்கம் போன்ற சம்பிரதாயமான ஒலிபரப்புகள் எதுவும் இல்லாமலே தோன்றியது அந்தப் பத்திரிகை.

முதல் இதழில் முதலாவதாக கி. ராஜநாராயணன் எழுதிய 'ஜீவன்' என்ற அருமையான கதை. அடுத்து, வெ. சாமிநாதன் சிந்தனைகள். 'சில கேள்விகள், சில பதில்கள், சில 'தெரியாது'கள்.' வல்லிக்கண்ணன் குறிப்பு ஒன்று. அம்பையின் நாடகம் 'பயங்கள்', கடைசிப் பக்கத்தில் க. நா. சு. சிந்தனை– 'இலக்கியத்தில் சோதனை'.

இந்தப் பத்திரிகையை வரவேற்று மகிழ்ச்சி கொண்டு எழுதிய இலக்கியவாதிகளின் கடிதங்கள் பின் வந்த இதழ்களில் பிரசுரமாயின.

அஃக் பத்திரிகையின் ஆசிரியர் என். பரந்தாமன். லட்சிய வேகமும், கற்பனை உள்ளமும், கலையாற்றலும், துணிச்சலும், புதுமை வேட்கையும், செயல் துடிப்பும் நிறைந்த இளைஞர், கவிஞர், ஓவியர். புதிய சினிமா முயற்சிகளில் அக்கறை கொண்டவர். ஜெயகாந்தன் ஆசிரியராக இருந்த காலத்திய 'ஞானரதம்' பத்திரிகையுடன் தொடர்பு கொண்டிருந்தவர். தரத்தில் உயர்ந்த இலக்கியச் சிற்றேடு ஒன்றை நடத்த வேண்டும் என்ற தவிப்பை வளர்த்தவர்.

அந்த எண்ணம் அவருள் 1970 லேயே கருக்கொண்ட போதிலும், இரண்டு ஆண்டுகள் அவர் 'பூர்வாங்க முஸ்தீபுக'ளில் முனைந்து

விட்ட போதிலும், 1972 ஜூனில்தான் அஃக் முதல் இதழைக் கொண்டு வர முடிந்தது அவரால்.

அஃக் என்ற பெயர், அதற்கு அவர் தீட்டிய சின்னம் குறித்து பரந்தாமன், 1980 ஜூன்– செப்டம்பர் என்று காலக் குறிப்பிட்டுப் பிரசுரித்த 22– வது ஏட்டில் அவரது உள்ளத்தின் உணர்ச்சிகளையும் அனுபவ வெளிப்பாடுகளையும் ஒரு ஆவேசத்தோடு, உக்கிரமான தொனியில் ஒலிபரப்பிய 'சுயசரிதை' யில் இவ்வாறு விளக்கினார் :

'மூன்று புள்ளிகளை உடைய கண்களே கலையும் விமர்சனமும் ஆகின்றன. 'அஃக்'ன் சின்னமான இந்தக் குறியீட்டில் கீழே இரண்டு சினங் கொண்ட சிமிட்டாத கந்தர்வப் பார்வைகள். மேலே எப்போது திறக்குமோ என்கிற உக்கிரத்துடன் நெற்றிக்கண். விழித்திருக்கும் இ ர ண் டு கண்களின் இமை வட்டங்களில் AQ என்று டிஸைன் செய்திருக்கிறேன். இந்தக் குறியீட்டையே தலை கீழாகத் திருப்பிப் பார்த்தால், நெரிந்த புருவங்களுடன் கோபம் கொப்பளிக்கிற விழிகளும், கீழே உரத்துப் பேசுகிற பெரிய வாயும் தென்படுவதைக் காணலாம். இது தான் 'ஃ' ஆய்த எழுத்து. இது உயிருமல்ல மெய்யுமல்ல. இது தனி. ஆதலால் இது தனி நிலை என்றும் வழங்கப்படும். இந்தப் பெயர் எல்லாரையும் வெகுவாகப் பாதித்து விட்டது. இது ஒரு குழுவுக்காக, கும்பலுக்காக, கூட்டத்துக்காகப் போடப்பட்ட மேடை அல்ல. ஓர் கலை இலக்கிய இயக்கத்துக்காகப் போடப்பட்ட மேடை. எந்தப் பத்திரிகை மாதிரியும் இருக்கக் கூடாது என்றுதான் அஃக் வந்திருக்கிறது. அஃக் இன்னொரு ஏடு மாதிரியே இருக்க வேண்டுமென்றால் அஃக் எதற்கு?'

இப்படி எண்ணம் வளர்த்த பரந்தாமன், ஒவ்வொரு இதழும் தரமாகவும் தனித் தன்மையோடும் தி க ழ வேண்டும் என்பதில் மிகுந்த அக்கறை காட்டி வந்தார். அவர் அச்சுக் கலையில் தேர்ந்தவர்; நல்ல பயிற்சி பெற்றவர். அஃக் பத்திரிகையின் அச்சு அமைப்பு நேர்த்திக்கும் உயர்வுக்குமாக அகில இந்திய ரீதியிலான தேசியப் பரிசு–1976–ல் நற்சான்று இதழ் அவருக்கு வழங்கப்பட்டது.

வண்ணதாசன் கதைகள் முதல் தொகுப்பான 'கலைக்க முடியாத ஒப்பனைகள்' புத்தகத்தின் உயர்ந்த அச்சுவேலை அமைப்பு நேர்த்திக்காக இரண்டாவது பரிசும் பரந்தாமனுக்கு அளிக்கப்பட்டுள்ளது– 1976–ல் அந்தத் தொகுப்பை அவர்தான் கலாரீதியாக அமைத்து அச்சிட்டுக் கொடுத்தார்.

ஆகவே, அச்சு அமைப்பிலும் தோற்றப் பொலிவிலும் அஃக் இதர சிற்றேடுகளை விடத் தனிச் சிறப்புடன் விளங்கும் பத்திரிகையாக வெளிவந்து கொண்டிருந்தது.

4–வது இதழ் கவிதைச் சிறப்பிதழாகத் தயாரானது. அப்போது (புதுக்) கவிதை எழுதிக்கொண்டிருந்த பலரும் அதில் கவிதைகள் எழுதியுள்ளனர். கலாப்பிரியாவின் 'சக்தி' ஒன்பது பக்கங்களில் இடம் பெற்றது. அரூப் சிவராமின் பிரசித்தி பெற்ற கவிதை E-MC2 இந்த இதழில் வந்தது.

சிறு பத்திரிகைகள் சம்பந்தப்பட்ட ஒரு கசப்பான உண்மையை இங்கே பதிவு செய்ய வேண்டியிருக்கிறது.

'எழுத்து' பத்திரிகையில் ஆழமான எண்ணங்களை, சுய சிந்தனைகளை, தீவிரக் கருத்துக்களை கட்டுரைகளாக எழுதி இலக்கியவாதிகளின் கவனத்தைக் கவர்ந்த இரண்டு எழுத்தாளர்கள் வெ. சாமிநாதன், தருமு சிவராம் ஆவர். பிறகு வந்த சிற்றேடுகளுடனும் அவர்கள் தொடர்பு கொண்டிருந்தார்கள். கால ஓட்டத்தில், அவர்களுடைய நோக்கும், திறமையும் திசை திரும்பித் தடம் புரண்டு தாறுமாறான பாதைகளில் வேகமாக ஓடலாயின. விமர்சனக் கலையை ஆரோக்கியமான முறையில் வளர்ப்பதற்கு மாறாக, இவ் இருவரும் 'விமர்சனம்' என்ற பெயரில் குறிப்பிட்ட சில எழுத்தாளர்களையும் அவர்களை ஆதரித்த பத்திரிகைகளையும் தாக்கி எழுதுவதில் ஆர்வம் கொண்டார்கள். போகப் போக, ஒரு சில எழுத்தாளர்களைக் குறை கூறி எழுத முற்பட்டு சகல எழுத்தாளர்களையும் மட்டம் தட்டி இழிவுபடுத்துவதிலும், தேவையில்லாமலே தாக்குவதிலும் இவர்கள் உற்சாகம் காட்டலானார்கள். பரபரப்பு, அதிர்ச்சி, தடாலடித்தனம் தந்து, வாசகர்களில் பெரும்பலரை ஈர்த்து சுலபப் பெயர் பெறுவதில் ஆர்வம் பெற்றுவிட்ட இவ்விருவரும் நீளம் நீளமான கட்டுரைகள் எழுதி, சிற்றேடுகளின் பக்கங்களை ஆக்கிரமித்துக் கொண்டதோடு, அவற்றின் வளர்ச்சியையும் பாதித்தார்கள்.

அஃக் பத்திரிகையும் அவர்கள் வலையில் சிக்கிக் கொண்டது. அதன் 5–வது இதழ் முதல் டி. அரூப் சிவராம், வெ. சாமிநாதன் பாதிப்பு அதிக அளவில் அமைந்தது. இந்த இதழின் பாதியை சிவராமின் 'கோணல்கள்' கட்டுரையும், மறுபாதியை சாமிநாதன் கட்டுரைகளும் பிடித்துக் கொண்டுள்ளன.

இவற்றுக்கான எதிரொலிக் கட்டுரைகளும், இவர்களின் புதிய தாக்குதல்களும் பின்வந்த இதழ்களில் தொடர்ந்தன. அஃக் பத்திரிகை ஒழுங்காக, மாதம்தோறும் வரமுடியாத நிலையையும் அடைந்தது.

என்றாலும், தரமான, சோதனை ரீதியிலான கதைகள், பிறமொழி நாடகம்–சினிமா பற்றிய கட்டுரைகள், கவிதைகள் பிரசுரிப்பதிலும் அஃக் சிரத்தை கொண்டிருந்தது. 8–வது இதழ் தருமு சிவராம் கவிதைச் சிறப்பிதழ் என்று வெளியாயிற்று, 'கண்ணாடியுள்ளிலிருந்து' என்ற தலைப்புடன், சாமிநாதன் முன்னுரையோடு.

வண்ணதாசன், நகுலன், சார்வாகன், நா ஜெயராமன், ஆர். ராஜேந் திர சோழன் கதைகள் முதல் வருட இதழ்களில் பிரசுரம் பெற்றுள்ளன. கன்னட நாடகம் கிரீஷ்கர்னாடின் ஹயவதனா, ஜே. கிருஷ்ணமூர்த்தி யின் தத்துவம், ஸெர்கி ஐஸன்ஸ்டீனின் திரைப்படக் குறிப்புகள் பற்றி யும் கட்டுரைகள் வந்தன.

அஃக்கின் 13வது இதழ் ('இரண்டாவது ஆண்டுத் துவக்க இதழ்') 1974 டிசம்பர் மாதம்தான் வந்தது. முன்னரே அறிவித்தபடி, அது வடிவம் மாறியிருந்தது. 13–வது இதழ் முடிய பெரிய அளவில் வந்த ஏடு இப்போது, 'விகடன்' அளவுக்கு மாற்றம் பெற்றது. இதழ்தோறும் விசேஷமான லினோகட் அட்டையில் வர்ணத்தில் அச்சிடப் பெற்றது.

இந்த இதழ் சிறப்பாக அமைந்துள்ளது. அரூப் சிவராம் மூன்று கவிதைகள், நாடகக் கட்டுரை பற்றிய கோபாலி எழுதிய விளக்கம் சில பக்கங்கள், ந. முத்துசாமி கதை 'வண்டி', ராபர்ட் ஃபிராஸ்டின் சில கவிதைகள், சுந்தர ராமசாமியின் புதிய கதைகள் பற்றிய நா. ஜெயராமன் சிந்தனைகள், வே. மாலி கவிதை ஒன்று, மோகன் ராகேஷின் நாடகங் கள் பற்றிய எஸ். என். கணேசன் கட்டுரை, கலாப்பிரியா கவிதை ஒன்று. உள் பக்கங்களிலும் நவீன சித்திரங்கள் கலர்களில் அச்சாகியிருந்தன.

14–வது இதழ் ( ஜனவரி–மே 1975 ) இந்திரா பார்த்தசாரதியின் 'போர்வை போர்த்திய உடல்கள்' நாடகம் மட்டுமே கொண்டிருந்தது.

15–வது இதழ் ( ஜூன்–டிசம்பர் 1975 ) ந. முத்துசாமி கட்டுரை, அரூப் சிவராம் கட்டுரை ஆகிய இரண்டு மட்டுமே கொண்டிருந்தன.

அதன் பிறகு பத்திரிகை ஒழுங்காக வரவில்லை. திடீரென்று எப்பவாவது ஒரு இதழ் வரும்.

இதைக் குறித்து 1978 ஜனவரியில் கி. ராஜநாராயணன் எழுதிய கடிதம் ரசமாக இருந்தது. 'பரந்தாமனுக்கு, தலைவணங்குகிறேன். தேன் கூட்டை எத்தனை தரம் அழித்தாலும் திரும்பவும் திரும்பவும் அது கூடு கட்டித் தேன் நிரப்பும். அயராத உங்கள் செய்கை உணர்ச்சி வயப்படச் செய்கிறது என்னை. போராடுவதே வாழ்க்கை.'

பரந்தாமனின் போராட்டக் குணம் நன்கு வெளிப்படுகிறது. அவர் ஒரு பிரகடனம் போல் எழுதி வெளியிட்ட 'சுயசரிதை'க் குறிப்பில். அது அஃக் 22–வது ஏடு என்று 1980–ல் (ஜூன்–செப்டம்பர் ) வந்தது. அதுதான் கடைசி இதழ்.

அதில் அவர் பல லினோகட், பன்வர்கட் ஓவியங்களையும் இணைத் துள்ளார். லினோகட், பன்வர்கட், உட்கட் ஆகியவைகளுக்கு உரிய விளக்கங்களும் அக்கட்டுரையில் உள்ளன.

'1972 ஜூனில் தொடங்கி 1980 ஜூனில் அஃக் நின்று விடுகிறது. எட்டாண்டுகள் 22 இதழ்கள், என் பிராணனை வாங்கிக் கொண்டு பிரசுரமாயின. என்றாலும், நான் நினைத்த சர்வ நிச்சயமான ஆழத்தின் சோபையுடன் அந்த மனோகரமான முதல் அஃக் இன்னும் வெளி வரவே இல்லை. பத்தாண்டுகளும் மனசாலும் சரீரத்தாலும், சதாசர்வமும் இதையே நினைத்து, இதற்காகவே அலைந்து திரிந்திருக்கிறேன் ஒரு பைத்தியக்காரனைப் போல. என் கையிலிருந்த கடைசிச் சல்லியையும் இதற்காகவே செலவு செய்து விட்டு தற்சமயம் நான்தான் எனக்கு மீதியாக இருக்கிறேன். பாடு அதிகம், பலன் குறைவு. சாதனை என்று சொல்லமாட்டேன். காம்பீர்யமான துவக்கம் என்று சொல்லுவேன். ஒரு தூர தரிசனத்தைக் கருதி, இருபது முப்பது ஆண்டுகளானாலும் பெற முடியாத ஒன்றை இந்தப் பத்தாண்டுகளில் நான் பெற்றேன். அனுபவம். அதுதான் எனது அபரிமிதமான உபரி லாபம். நான் தூக்க நினைத்தது கோவர்த்தன கிரியை. குடிக்க நினைத்தது பாற்கடலை. இப்படி நினைக்கவே ஒரு மனோதைரியம் வேண்டும். இது என் சுபாவம். எனக்களித்த சாகாவரம். இத்தகைய சித்த காம்பீர்யம்தான் ஒரு மனிதனை ஒரு பட்டாளமாக்குகிறது. மனிதப் பட்டாளமாய் சமுதாயத் தோடு சமரிட்டு இந்த நினைப்பைச் செயலாக்கிக் காட்டத்தான் போகிறேன். எதிர்வரும் அந்த ஒரு நாளின் சூர்யோதயம் உங்கள் எல்லாரது நேத்திரங்களையும் கூசவைக்கத்தான் போகிறது.'

இத்தகைய தன்னம்பிக்கையும் தனித்தன்மைகளும் கொண்ட

பரந்தாமன் எடுத்துச் சொல்லும் எண்ணங்களில் மிக முக்கியமான ஒன்று பின் வருவது—

'முழுக்க முழுக்க ஒரு பத்திரிகையே படைப்பாக வெளிவந்தாக வேண்டும் என்கிற அத்தியாவசியத்துக்கான காலகட்டமிது. நம்மைச் சுற்றியுள்ள எல்லாவற்றிலுமே நாம் அதி தீவிர அதிருப்தி கொண்டிருப்ப தான நிஜத்துக்கு, இப்படிப்பட்ட ஒரு முழு மாற்றத்துக்கான அணுகலே பரிகாரமாகும். சிறு பத்திரிகைகளின் உள்ளும் புறமுமான படைப்புத் தரங்களின் விஸ்தாரமான வீச்சில்தான் ஜனரஞ்சக ஏடுகளை மிஞ்ச முடியும். மிஞ்சி விட்டால் மாறுதல் தானே விளைகிறது. அதுவரைக்கும் எதற்கும் பின்வாங்காத போர்க்குணம் தேவைப்படுகிறது. இதைச் செய்ய பலவிதத் திறமைகளுள்ள தீரர்களே தேவைப்படுகிறார்கள். இவர் களைப் போன்றவர்களே சிறு பத்திரிகைத் துறையின் அல்லது சமுதா யத்தின் சகல துறைகளின் முழு மாற்றத்துக்குமான போராளிகள் ஆவார்கள். தனக்காகத் தன்னுடனேயே போராடுவது போலத்தான், சக மனிதர்களுக்காக இந்த பதிதர்களுடனேயே போராட வேண்டியிருக்கிறது. சரியானவர்கள் சரியும் போதெல்லாம் விமர்சிக்க வேண்டியிருக்கிறது. விமர்சனத்துக்கு அடங்காவிடில் ஒதுக்கவோ, ஒதுங்கவோ அல்லது எதிர்க்கவோ வேண்டியிருக்கிறது.'

# 15. நீலக்குயில்

**கோ**வில்பட்டியில் ஒரு சிறு பத்திரிகை தோன்றியது, 1974–ல். 'நீலக்குயில்' என்பது அதன் பெயர். எஸ். அண்ணாமலை அதன் ஆசிரியரும் வெளியிடுபவருமாக இருந்தார்.

'உண்மை இலக்கியங்களுக்கு ஒரு மேடை அமைத்துக் கொடுக்க வேண்டுமென்ற ஆர்வத்தில் வெளியிடப்படுவதுதான் இந்த இலக்கியப் பத்திரிகை' என்று அதன் முதல் இதழில் அறிவிக்கப்பட்டது.

அண்ணாமலை எழுத்தாளர் இல்லை. கோவில்பட்டியில் வியாபாரப் பிரமுகர்களில் ஒருவர். அவ்வூருக்கு அருகில் உள்ள இடைசெவல் கிராமத்தில் வசிக்கும் கி. ராஜநாராயணன் அவருக்கு நல்ல நண்பர். காலம் சென்ற கு. அழகிரிசாமியையும் அவர் அறிவார். ஆகவே, இயல்பாக அவருக்கு இலக்கியத்தில் ஒரு ஈடுபாடு இருந்தது. கோவில் பட்டியில் வளர்ந்து கொண்டிருந்த இளைய தலைமுறை எழுத்தாளர்கள் சிலரும் அவருக்கு நண்பர்களாக இருந்தார்கள். இதனால் எல்லாம், 'ஒரு இலக்கியப் பத்திரிகை நடத்த வேண்டும்' என்ற ஆர்வம் அவருக்கு ஏற்பட்டிருந்தது.

தனது பத்திரிகைக்கு 'நீலக்குயில்' என்ற பெயரை வைக்க வேண்டும் எனும் ஆசை அவருக்கு ஏற்பட்டது. மகாகவி பாரதி 'குயில் பாட்டில் இந்தச் சொல்லை உபயோகித்து இருக்கிறார்' என்பதனால் அல்ல. அந்தக் காலத்தில் 'நீலக்குயில்' என்றொரு மலையாள சினிமாப் படம் வெற்றிகரமாக ஓடிப் பெயர் பெற்றிருந்தது. இதன் கதை, நடிப்பு, இனிய பாடல்களினால் மிகப் பலரது கவனத்தையும் அந்தப் படம் ஈர்த் திருந்தது. அண்ணாமலையும் வசீகரிக்கப்பட்டிருந்தார். 'நீலக்குயில்' என்ற சொல் அவருக்கு ரொம்பவும் பிடித்து விட்டது. ஆகவே, அவர் தமது பத்திரிகைக்கு அந்தப் பெயரையே வைத்துவிட்டார்.

'நீலக்குயில்' முதலாவது இதழ் 1974 மே 1–ம் தேதி வந்தது. காசி விஸ்வநாதன், தேவதச்சன், பரணிகுமார், பானு கவிதைகள் ( புதுக் கவிதை ), பூ ம ணி, கௌரிஷங்கர் கதைகள், 'குறியீட்டுக்

கொள்கை' ( ஸிம்பலிஸிம் ) பற்றிய ஒரு கட்டுரை (கோபி எழுதியது ) அதில் இடம் பெற்றிருந்தன. 'விகடன்' அளவில் 22 பக்கங்கள். தனி அட்டை கிடையாது.

இலக்கியப் பத்திரிகை நடத்துவதில் உள்ள சிரமங்களை அண்ணா மலை அறிந்திருந்தார்.

'இலக்கியப் பத்திரிகைகளுக்கே உரிய எல்லாப் பிரச்னைகளும் நீலக்குயிலுக்கும் உண்டு. எல்லா வழிகளிலும் நீங்கள் இந்தப் பத்திரிகை யின் வளர்ச்சிக்கு உதவுங்கள். இது மாதிரி பத்திரிகைகள் கஷ்டப்படு வது நல்ல படைப்புகளுக்காகவும்தான். அதனால் படைப்புகர்த்தாக்கள் தங்களின் படைப்புகளை எங்களுக்கு அனுப்பி ஆதரிக்கும்படி வேண்டுகிறோம்.

வழக்கம்போல் வேண்டுகோள் விடுக்கிறோம். உங்கள் சந்தாக்களை அனுப்பி உதவுங்கள். அதுவே பத்திரிகையின் முழு ஆதாரம். மீண்டும் மீண்டும் சந்தாக்களுக்காகவும் தரமான படைப்புகளுக்காகவும் எங்களை வேண்டுகோள் விடுக்கும் நிலையில் வைக்கமாட்டீர்கள் என்ற நம்பிக்கை யுடன், உங்கள்–'

இந்த அறிவிப்பு முதல் இதழின் முதல் பக்கத்தில் அச்சாகி யிருந்தது.

'நீலக்குயில்' முதலாவது இதழ் எழுத்தாளர்களுக்கு உற்சாகமும் நம்பிக்கையும் தந்தது என்றே சொல்ல வேண்டும். ஆசிரியருக்கு வந்த கடிதங்கள் இதை நிரூபித்தன. படைப்பாளிகள் பலர் அதற்கு ஒத்துழைப்பு தர முன்வந்தனர்.

புதுக் கவிதை, சிறுகதை, கட்டுரைகளில் 'நீலக்குயில்' கவனம் செலுத்தியது.

நீல. பத்மநாபன், துரை சீனிச்சாமி, கல்யாண்ஜி, கே. ராஜகோபால், சி. ஆர். ரவீந்திரன், ந. ஜயபாஸ்கரன், ஷண்முக சுப்பையா, சே. சேவற் கொடியோன், தேவதேவன், தேவதச்சன் மற்றும் பலரது கவிதைகள் இப்பத்திரிகையில் பிரசுரமாயின. இலங்கை எழுத்தாளர் சிறீபதி புதுக் கவிதை பற்றி எழுதிய கட்டுரையையும் இது வெளியிட்டுள்ளது.

நகுலன் 'அஞ்சலி' என்ற தலைப்பில் படைத்த ஒரு நீண்ட கவிதை–சோதனை முயற்சி–தொடர்ந்து வெளிவந்தது.

கி. ராஜநாராயணன், பா. செயப்பிரகாசம், பிரபஞ்சன், நீல. பத்மநாபன், மாலன், வா.மூர்த்தி, ஸிந்துஜா, இரா. கதைப்பித்தன், காசியபன் மற்றும் பல புதிய எழுத்தாளர்கள் கதைகள் எழுதியுள்ளனர்.

வல்லிக்கண்ணன் கட்டுரைகள் அவ்வப்போது வெளிவந்தன. ஒரு கதையும் அச்சாயிற்று.

காரை சிபி, தமிழவன் கட்டுரைகளையும் 'நீலக்குயில்' வெளியிட்டுள்ளது. விமர்சனக் கட்டுரைகளைப் பிரசுரிப்பதில் ஆர்வம் காட்டியது. அந்தச் சமயத்தில் வெளிவந்த அநேக புத்தகங்களைப் பற்றிய விரிவான, நேர்மையான அபிப்பிராயங்களை எழுத்தாளர்கள் கட்டுரையாக்கியிருக்கிறார்கள்.

முதல் இதழில் வெளியான 'ஸிம்பலிஸம்' கட்டுரையைத் தொடர்ந்து இதர பல 'இசம்'கள் பற்றிய கட்டுரைகள் பிரசுரமாகியிருந்தால் பயனுள்ளதாக அமைந்திருக்கும். அத்தகைய கட்டுரை அப்புறம் வரவேயில்லை.

அதேபோல, முக்கியமான ஒரு விஷயம்—எழுதப்பட வேண்டிய ஒரு ஆய்வு—குறித்து இரண்டாவது இதழில் அறிவிப்பு வந்தது.

'சிறுகதை : சில புதிய சேர்க்கைகள், ( ஆய்வுத்தொடர் ) கோ. ராஜராம் எடுத்துப் பேசும் இளைய முகங்கள்; அஸ்வகோஷ், வண்ணதாசன், பூமணி, ம. ராஜாராம், வண்ண நிலவன், சா. கந்தசாமி.'

எதிர்பார்க்க வைத்த இந்த அறிவிப்பு பின்னர் செயல் மலர்ச்சி பெறவில்லை. இப்படி ஒரு ஆய்வு வந்திருந்தால், நீலக்குயிலின் இலக்கியத் தரம் சிறப்புற்றிருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

தமிழ்ச் சிறுகதை எழுத்தாளர்கள் பற்றிய முறையான ஆய்வு இலக்கியப் பத்திரிகைகளில் எழுதப்பட்டதேயில்லை. 'கிராம ஊழிய' னில் சில கதாசிரியர்கள் பற்றிய கட்டுரைகள் வந்தன. 'எழுத்து' மணிக்கொடிப் படைப்பாளர்கள் சிலரைப் பற்றிய ஆழமான ஆய்வுகளை வெளியிட்டது. தி. க. சிவசங்கரன் 'மணிக்கொடி எழுத்தாளர்கள்' பற்றி 'தாமரை' யில் தொடர்ந்து விமர்சனக் கட்டுரைகள் எழுதினார். இவை தவிர வேறு முயற்சிகள் இலக்கியப் பத்திரிகைகளிலும், பிற்காலத்திய சிறு பத்திரிகைகளிலும் செய்யப்படவேயில்லை. இது பெரும் குறை ஆகும்.

'நீலக்குயில்' சரியான பாதையில் முன்னேற ஆசைப்பட்டதை அதன் அறிவிப்பு வெளிப்படுத்தியது. ஆயினும், ஆய்வு இடம் பெற வில்லை.

கி. ராஜநாராயணன் சேகரித்த தமிழ்நாட்டு நாடோடிப் பாடல்கள் சில இதழ்களில் வெளிவந்தன. ஆராமுதம் எழுதிய ஒரு நாடகமும் வெளிவந்திருக்கிறது. சோவியத் சிறுகதைகள் சிலவற்றையும் பிரசுரித் துள்ளது 'நீலக்குயில்.'

முற்றிலும் புதுமையான ஒரு காரியத்தைச் செய்து அது விசேஷப் பாராட்டுதல்களைப் பெற்றது. முதல் ஆண்டு முடிந்ததும், இரண்டாவது ஆண்டின் முதல் இதழை ( மே 1975 ) 'கடித இலக்கியச் சிறப்பிதழ்' ஆகத் தயாரித்தது அது.

'தமிழ் இலக்கிய வகைகளில், புதிதாக எதையாவது செய்ய வேண்டும் என்ற ஆர்வத்தின் உந்துதலில் செய்யப்பட்ட முயற்சியே இந்தக் கடித இலக்கியச் சிறப்பிதழ். இதில் வெளியாகியுள்ள கடிதங் களை எழுதியுள்ளவர்கள், தங்களது இலக்கிய அனுபவத்தால், எழுத் தாற்றலால், தமிழ் மக்களின் இதயங்களில் ஒரு நிலையான இடத்தைப் பெற்றுள்ளவர்கள். நமது பெரு மதிப்புக்கும் பேரன்புக்கும் உரியவர்கள். இதில் வெளியாகியுள்ள கடிதங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பாணி யில், மிகச் சிறப்பாக, அருமையாக எழுதப்பட்டுள்ளதால், இவற்றை இங்கு வெளியிடுவதில் பெருமிதமும் மகிழ்ச்சியும் அடைகிறோம்' என்று நீலக்குயில் பெருமையுடன் வெளியிட்ட 18–வது இதழில், ரசிகமணி டி. கே. சி. ஸ்ரீமான் வி. வி. சீனிவாச அய்யங்காருக்கு எழுதியது; ராஜாஜி டி. கே. சி. க்கு எழுதியவை; நீதிபதி எஸ். மஹாராஜன் டி. கே. சி. க்கு எழுதியது; கி. ராஜநாராயணன், ஆ. மாதவன், தீப. நடராஜன், டி. எஸ். சேதுராமன், சுந்தர ராமசாமி, கு. அழகிரிசாமி, கல்யாண்ஜி, வண்ண நிலவன் கடிதங்கள் உள்ளன. ரசமான, புதுமையான, இனிய கடிதங்கள் அவை.

மாத இதழாகத் தயாரிக்கப்பட்ட நீலக்குயில் கால ஓட்டத்தில் தாமதமாக வெளிவருவது தவிர்க்க இயலாதது ஆகிவிட்டது. அதன் மூன்றாம் ஆண்டில் அது 'காலாண்டு ஏடு' ஆக மாற்றப்பட்டது.

22–வது இதழில் இம்மாற்றம் அறிவிக்கப்பட்டது. அதையும் மிடுக் குடன்தான் செய்திருக்கிறது–

'புதிய உத்வேகம்'

'அச்சகத்தை நவீனப்படுத்துவதில் ஏற்பட்ட கால தாமதம், நமது சொந்த சோம்பேறித்தனங்கள், பொதுவாகத் தமிழ் இலக்கிய உலகில் நிலவிவரும் மந்த நிலைமை ஆகியவை நீலக்குயிலைக் காலாண்டு இதழாக மாற்றிவிட்டன.

இலக்கிய உலகில் ஒரு காலகட்டத்தில் பாதிப்பை ஏற்படுத்திவிட்டு, அல்லது பத்திரிகையைச் சாதாரணமாக வெளியிட்டதையே ஒரு பெருமையாக ஏற்றுக் கொண்டு, பின்னர் திடீரென்று நிறுத்திவிடுவதற்காக நீலக்குயில் துவக்கப்படவில்லை. அதன் எதிர்காலத் திட்டங்கள் விரிவானது. ஆனால், விரைவானதல்ல. நீலக்குயில் மெய்யிலக்கியங்களின் மேடை என்பதில்தான் அது பெருமைப்பட விரும்புகிறதேயன்றி, மாத இதழா அல்லது காலாண்டு இதழா என்பதில் இல்லை.

தேவையும் அவசியமும் ஏற்படும்போது இது போன்ற இன்னொரு அறிக்கையின் மூலம் மறுபடியும் மாத இதழாக மாற்றிவிடுவது என்பது என்றேனும் ஒருநாள் எதிர்பார்க்க வேண்டியதே.'

எதிர்பார்க்கச் சொல்வதை 'நீலக்குயில்' நிச்சயமாகச் செய்யாது என்பதையே காலம் மீண்டும் நிரூபித்தது.

23—வது இதழ் தரமான தயாரிப்பாக அமைந்திருந்தது.

'சிறந்த எழுத்துக்களைப் படைத்த பசித்த வயிறுகள்'—ஒரு குறிப்பு : ஏ. ஏ. ஹெச். கே. கோரி கவிதை; வல்லிக்கண்ணன் கதை 'ரசிகன்'; அகல்யாவின் அபிப்பிராயங்கள்; சோவியத் வீர விருது பெற்ற தென்னிந்தியர் பற்றிய ஏ. எஸ். மூர்த்தி கட்டுரை; ராஜநாராயணனின் 'கோபல்ல கிராமம்' நாவலிலிருந்து சில பக்கங்கள்; உமாபதி கவிதை 'என் தம்பி'— இவை இவ் இதழில் உள்ளன.

'கோபல்ல கிராமம்' நாவல் பற்றி நகுலன் எழுதிய மதிப்புரை; சீனக் கவிஞன் வாங் வெய் கவிதைகள்; துரை சீனிச்சாமி தமிழில்; மற்றும் சில கதைகள் ஆகியவற்றைத் தாங்கி வந்த 24—வது இதழ் தான் ( அக்டோபர் 1976) கடைசியாக வெளிவந்த இதழாகும்.

25—வது இதழ் தயாரிக்கப்பட்டது. ஆனாலும் அதை திரு. அண்ணாமலை வாசகர்களுக்கு அனுப்பவேயில்லை. பத்திரிகைப் பிரசுரம் அவருக்கே அலுத்துவிட்டது போலும்.

# 16. சதங்கை

நாகர்கோவில் வனமாலிகை 1971 நவம்பரில் 'சதங்கை' என்ற பெயரில் ஒரு இலக்கியப் பத்திரிகையை ஆரம்பித்தார்.

வனமாலிகை தனது படைப்புத் திறமையை வளப்படுத்திக் கொள்வதற்காகவோ, எழுத்து அரிப்பை அவ்வப்போது தீர்த்துக் கொள்வதற்காகவோ அல்லது அவர் ஒரு இலக்கியப் பத்திரிகையின் ஆசிரியர் என்று பெருமையாகப் பேசிக் கொள்வதற்காகவோ 'சதங்கை' மாதப் பத்திரிகையை நடத்தவில்லை.

தரமான இலக்கியப் பத்திரிகை ஒன்றைத் தமிழ்நாட்டின் கோடியான குமரி மாவட்டத்திலிருந்து வெற்றிகரமாக நடத்த வேண்டும் என்பதுதான் அவருடைய ஆசை. நல்ல இலக்கியப் பத்திரிகையின் மூலம் தரமான வாசகர்களை ஊக்குவிப்பது அவருடைய நோக்கம்.

அதனாலேயே, 'சதங்கை – இலட்சிய வாசகர்களின் வழிகாட்டி' என்று பல வருடங்கள் அந்தப் பத்திரிகையில் பொறிக்கப்பட்டு வந்தது. பின்னர் அது 'இலக்கிய வாசகனின் நண்பன்' என்று மாற்றப்பட்டது.

'சதங்கை இலக்கிய வட்டத்திற்காக, வெளியிடுபவர்– ஆசிரியர் வனமாலிகை' என்ற அறிவிப்பு பத்திரிகையில் வெகுகாலம் வரை நிலைபெற்றிருந்தது.

'சதங்கை' விகடன் அளவில், ஆரம்ப காலத்தில், 48 அல்லது 56 பக்கங்கள் கொண்டிருந்தது. பிறகு காகித விலை உயர்வு, பொருளாதார நெருக்கடி காரணமாக, பக்கங்கள் குறையலாயிற்று. மாதப் பத்திரிகை முதல் இரண்டு வருடங்கள், ஒவ்வொரு மாத முதல் வாரத்திலும் வெளிவந்தது. பின்னர் கால தாமதமும், சில மாதங்களுக்கு (மூன்று அல்லது நான்கு மாதங்களுக்கு) ஒரு இதழ் என்று வெளிவருவதும் தவிர்க்க இயலாத நிலை ஆயிற்று. அப்புறம், வராமலே நீண்ட காலம் தூங்கிப்போவதும், 'சதங்கை நின்று விட்டது' என்று வாசகர்கள் முடிவு கட்டிவிட்ட நிலையில், திடீரென்று அது புத்துயிர் பெற்று மிக மெலிந்த தன்மையில் வெளிவருவதும் சகஜமாயிற்று.

ஆரம்ப வருடங்களில், 'சதங்கை' விசேஷமான அட்டை பெற்றிருந்தது. கலைச் சிலைகளின் போட்டோக்கள் வசீகரமாக அச்சிடப் பெற்றிருந்தன. பிறகு மாடர்ன் ஓவியங்கள் வந்தன. வர வர, சாதாத் தாளில் எழுத்தாளர்களது பெயர்கள் அச்சிடப்பட்டன. சில சமயம் பத்தே பத்துப் பக்கங்கள்—ஒரே ஒரு கட்டுரை அல்லது கதை, இரண்டு கவிதைகள்—தாங்கி இதழ் வந்தது.

இதெல்லாம் பத்திரிகை நடத்துவதில் வனமாலிகை எதிர் கொள்ள நேர்ந்த சிரமங்களைப் புலப்படுத்தின. அத்துடன், எப்படியும் 'சதங்கை'யை நடத்தியே தீர்வது என்ற அவருடைய மன உறுதியையும், விடாப்பிடியான முயற்சியையும் வெளிப்படுத்தின.

வனமாலிகை, தரமான தமிழ் வாசகர்களிடம் நம்பிக்கையும் பெரு மதிப்பும் கொண்டவர் என்பதை 'சதங்கை'யின் பல வருட இதழ்கள் நிரூபிக்கின்றன. எழுத்தாளர்களையும் பெயர் பெற்ற படைப்பாளிகளையும் பேட்டி கண்டு, அவர்களது கருத்துக்களுக்கு முக்கியத்துவம் அளிப்பதே சம்பிரதாயமாக இருந்து வருகிற இலக்கியப் பத்திரிகை உலகத்தில், வனமாலிகை தரமான வாசகர்களைப் பேட்டி கண்டு, அவர்களது அபிப்பிராயங்களை விரிவாகப் பிரசுரித்தார். தனித் தன்மை கொண்ட இந்தப் பகுதி 'சதங்கை'யில் முதல் வருடத்தில் தொடர்ந்து இடம் பெற்றது. 'வாசகர் பேட்டி' நாலைந்து பக்கங்கள் வரை வந்துள்ளது.

'கருத்து மேடை' என்ற பகுதியும் குறிப்பிடத் தகுந்தது. ஐந்தாறு பேர் ( முக்கியமாக வாசகர்கள் ) கூடி குறிப்பிட்ட ஒரு எழுத்தாளரின் படைப்புகள் பற்றி சர்ச்சிப்பது. இரண்டாவது இதழில் ஜெயகாந்தன் கதைகளை அலசி ஆராய்ந்த உரையாடல் வந்துள்ளது.

இந்த நல்ல பகுதி அடிக்கடியோ, தொடர்ந்தோ இடம் பெறாமல் போனது ஒரு குறைதான்.

வாசகர்கள் 'சதங்கை'யின் குறை– நிறைகள் பற்றி மனம் திறந்து கடிதங்கள் எழுதியிருக்கிறார்கள். அவை விரிவாகவே பிரசுரிக்கப் பட்டுள்ளன.

வனமாலிகை பத்திரிகாசிரியத்தனம் பண்ணுவதில் ஆர்வம் காட்ட வில்லை. எங்கள் பத்திரிகைக்கு எவர் எதை எழுதி அனுப்பினாலும் கூட்டவோ குறைக்கவோ வெட்டவோ திருத்தி மாற்றவோ உரிமை

உண்டு என்று மிடுக்காக ஆசிரிய அறிவிப்பு கொடுப்பதே சம்பிரதாய மாக இருக்கிற பத்திரிகை உலகத்தில்—

'கதை, கட்டுரை, கவிதை இத்யாதியில் நான் கத்திரி போட மாட்டேன். அனுப்பி வைப்பதை முழுசாக வெளியிடுவேன். ரொம்பவும் இக்கட்டு என்றால் முழுசாக வாபஸ் பண்ணுவேன். எடிட்டிங் சமா சாரங்கள் எல்லாம் எனக்கு அவ்வளவாகப் பிடிக்காது— தெரியாது' என்று சதங்கை ஆசிரியர் அறிவித்தார். இது மிகவும் தனித்தன்மை யான ஒரு போக்குதான்.

இதைப் பயன்படுத்திக்கொண்டு, சில எழுத்தாளர்கள் விமர்சனம் என்ற பெயரில், படைப்புகளை விட்டு விட்டு படைப்பாளிகளைத் தாக்கி எழுதவும்— 'விமர்சன சுதந்திரம்' பற்றிப் பேசவும் முற்படவே—அவர் 'எடிட் செய்வேன்' என்று அறிவிக்க வேண்டிய கட்டாயத்துக்கு உள்ளானார்!

அவருடைய தீர்மானத்தை வரவேற்றும் பாராட்டியும் 'இதை நீங்கள் முன்பே செய்திருக்க வேண்டும்' என்று குறிப்பிட்டும், பல இடங்களிலிருந்தும் வாசகர்கள் எழுதியிருக்கிறார்கள்

ஒரு பத்திரிகைக்கு இலக்கியத் தரம் ஏற்படுவதும் இலக்கியப் பத்திரிகையின் தரம் உயர்வதும், அதில் எழுதுகிற எழுத்தாளர்களைப் பொறுத்தும், பிரசுரமாகிற படைப்புகளின் தன்மையைப் பொறுத்தும் அமையும்.

நாகர்கோவில், திருவனந்தபுரம் எழுத்தாளர்களின் ஒத்துழைப்பு 'சதங்கைக்கு' நிறையவே இருந்தது. தமிழ்நாட்டின் இளைய எழுத்தாளர் கள் பலரும் உற்சாகமாகச் சதங்கைக்கு எழுதியிருக்கிறார்கள்.

ஆகவே, வனமாலிகை, ஐந்தாவது ஆண்டின் முதலாவது இதழில் சரியாகவே தெரிவித்திருக்கிறார்—

'தமிழ் இலக்கியத்தை சதங்கை தாங்குவதாகத் தம்பட்டம் அடித் துக் கொள்ளவில்லை. பசுமையோ வறட்சியோ இருந்தால் அது படைப் பாளிகளின் பக்கமே நீங்கள் விரலை நீட்டவேண்டும். ஆகவே, சாதித் தவைகளைப் பற்றிப் பேச்சில்லை.

'வரும் ஆண்டுகளில் கணிசமான அளவுக்குச் சாதனைகள் புரிய

சதங்கை குடும்பம் ஒத்துழைக்க வேண்டும், மாறுபட்ட கருத்துக்களுக்கும் மதிப்புக் கொடுத்து வெளியிடுகிறோம்– அது தரமாக இருப்பதால். இலக்கிய தர்மத்தை மீறாத இலக்கிய சர்ச்சைகளைக்கொண்ட கட்டுரைகளை வரவேற்கிறேன்'.

இலக்கிய சம்பந்தமான அபிப்பிராயங்களையும் எதிரான கருத்துக்களையும் வெளியிட்ட பல கட்டுரைகள் சதங்கையில் வெளிவந்துள்ளன. அவ்வக் காலங்களில் பிரசுரமான சில சில புத்தகங்களைப் பற்றிய சிலரது விமர்சனங்கள் பிரசுரமாகியிருக்கின்றன.

பல ரகமான கதைகள்– சோதனை முயற்சிகளும்கூட வெளி வந்துள்ளன.

ஆரம்ப வருடங்களில் மரபுக் கவிதைகளே இடம் பெற்றன. பிறகு புதுக் கவிதைகள் மட்டுமே சதங்கையில் பிரசுரமாயின.

'சதங்கை' அவ்வப்போது சிறிய அளவில் ( தீபாவளி மலர் என்றோ, பொங்கல் மலர் என்றோ ) விசேஷ மலர் தயாரித்துள்ளது. தரமான கதைகள், கட்டுரைகள், கவிதைகளை வெளியிட்டிருக்கிறது.

கிருஷ்ணன் நம்பி ஒன்றிரண்டு கதைகள் எழுதினார். கிளிப் பண்டிதரின் குறிப்புகள் என்று 'அக்கப்போர்' பண்ணினார். 1976 ஜூன் மாதம் அவர் அகால மரணமடைந்தார்.

1976 ஆகஸ்ட் 'சதங்கை' கிருஷ்ணன் நம்பி நினைவு மலராக வந்தது. 14 பக்கங்களில். 'நம்பி எனும் நண்பர்' என்று வனமாலிகை ஒன்றரைப் பக்கம் எழுதியிருந்தார். நம்பியின் 'இரண்டு முன்னுரைகள்'– மறு பிரசுரம். 'கிருஷ்ணன் நம்பியின் கதைகள்' பற்றி நகுலன் எழுதிய பக்கக் கட்டுரை.

வேறு எந்தப் படைப்பாளி பற்றியும் 'சதங்கை' மலர் தயாரித்ததில்லை, அதன் பல வருட ஆயுளில்.

'சதங்கை' 1982 வரை வந்து கொண்டுதான் இருந்தது. 1971– ல் தோன்றிய பத்திரிகையின் '75 வது இதழ் 1982 செப்டம்பரில் வரவிருக்கிறது– சிறப்பு மலராக' என்று அறிவிக்கப்பட்டது.

சதங்கை வாசகர்களின் அபிப்பிராயங்கள் 'எதிர்வினை' என்ற தலைப்பிலும், ஆசிரியர் அறிவிப்பு 'பாலம்' என்றும் பிரசுரமாயின.

பத்து வருடக் காலமாக நடந்து வந்த 'சதங்கை' காலம் தவறாது (இடையில் நின்று நின்று போகாமலும்) மாதம்தோறும் வந்திருந் தால்–இலக்கியவாதிகளின் ஆதரவும் ஒத்துழைப்பும் இன்னும் தீவிர மாகவும் முழு மனசோடும் அதற்குக் கிடைத்திருந்தால்– அதன் சாதனைகள் சிறப்பாக அமைந்திருக்கக்கூடும். புதிய எழுத்தாளர்களி டையே அது பலனுள்ள தாக்கம் ஏற்படுத்தியிருக்கவும் கூடும். அதன் எழுபத்தைந்தாவது இதழ் வெளிவரவேயில்லை.

# 17. பிரக்ஞை

"இலக்கியப் பத்திரிகை ஆரம்பிப்பதும் ஆரம்பித்த பத்திரிகையைச் சில மாதங்களில் அல்லது சில வருடங்களில் நிறுத்திவிடுவதும் தமிழ் இலக்கிய உலகத்திற்குப் புதியதல்ல. இந்தப் பத்திரிகை எழுத்துலகத்தில் ஒரு திருப்பத்தையோ, ஒரு செம்புரட்சியையோ ஏற்படுத்தும் என்ற நம்பிக்கை எங்களுக்கு இல்லை.

இது என்ன பத்திரிகையா, அது என்ன படமா, இது என்ன எழுத்தா, அது என்ன நடிப்பா என்றெல்லாம் பேசிக் கொண்டிருக்கிறீர்களே ஒழிய நீங்கள் என்ன செய்துவிட்டீர்கள்? இது பலர் எங்கள் மேல் சுமத்திய குற்றச்சாட்டு.

எழுதத் தெரியாதவர்கள் எழுதிக் கொண்டுதான் இருக்கிறார்கள். பத்திரிகை நடத்தத் தெரியாதவர்கள் நடத்திக் கொண்டுதான் இருக்கிறார்கள். படம் எடுக்கத் தெரியாதவர்கள் எடுத்துக் கொண்டுதான் இருக்கிறார்கள்.

நாங்கள் இதுவரை ஒன்றும் செய்துவிடவில்லைதான். செய்து விட்டோம். 'பிரக்ஞை' யை ஆரம்பித்துவிட்டோம். இனி எங்களை யாரும் குற்றம் சொல்ல முடியாது."

'நாங்களும். . . என்ற தலைப்பில் இப்படி ஒரு புதுமையான அறிவிப்புடன் 'பிரக்ஞை' ஆரம்பிக்கப்பட்டது, மாத ஏடு ஆக, 1974 அக்டோபரில்.

முதல் இதழில்— அட்டையில் கிருஷ்ணமூர்த்தியின் 'லினோகட்' ஓவியம். பாலகுமாரன் எழுதிய 'விளிம்பு', ராமச்சந்திர வைத்தியநாத்தின் 'பயணம்' என்ற கதைகள். லா. ச. ரா. வுடன் பேட்டி—ஐராவதம்; முத்து சாமியின் மூன்று நாடகங்கள்—தி. நா. ஜெயராமன்; 'கர்ம் ஹவா' என்ற இந்திப் படம் பற்றிக் கட்டுரைகள். சில கவிதைகள். ஓவியக் கண்காட்சி, மாணவர் திரைப்படங்கள் பற்றிய குறிப்புகள்—இடம் பெற்றிருந்தன.

பத்திரிகையின் அளவும் அமைப்பும் விஷயங்களும், அப்போது வெளிவந்து கொண்டிருந்த 'கச ட த ப ற' வை நினைவுபடுத்துவதாக

இருந்தன. அதனால் பிரக்ஞை இரண்டாவது இதழில் இது பற்றி ஆசிரியர் குறிப்பு எழுத நேரிட்டது :

"பிரக்ஞை முதல் இதழ் பெரும்பாலோரால் கசடதபற வுடன் ஒப்பிட்டுப் பேசப்பட்டது. இதழின் முகப்பு திரு. கிருஷ்ணமூர்த்தியின் லினோ, The general get up. புதுக் கவிதைகள் போன்றவை கசட தபற வைப் பலருக்கு நினைவூட்டியது என்று எண்ணுகிறேன். எழுத்தாள நண்பர், கசடதபற காரர்கள் வெளியிட்டிருக்கும் மற்றொரு பத்திரிகை என்றெண்ணிச் சந்தா அனுப்பினேன் என்று கேலியாகச் சொன்னார். பத்திரிகையில் modern art, modern poetry போன்றவற்றிற்கு இட மளித்தாலே automatic ஆக கசடதபற ஆகிவிடுகிறது என்று அர்த்த மில்லை. 'நடை', 'கசடதபற' பத்திரிகைகள் நவீன ஓவியத்தைப் பிரகட னப்படுத்தியது உண்மைதான். ஆனால் நவீன ஓவியம், கதைகள் இவற்றுடன் பரிச்சயம் எங்களுக்கு முன்பே உண்டு. பத்திரிகை ஆரம் பிக்க வேண்டுமென்ற எண்ணம் சற்று தாமதமாகத் தோன்றியது ஒரு குற்றமாகாது என்று எண்ணுகிறேன்."

மேலும் இரண்டு பாராக்கள் வளர்ந்துள்ள அறிவிப்பில் இங்கிலீஷ் வார்த்தைகளும் வரிகளும் அதிகமாகவே கலக்கப்பட்டிருக்கின்றன.

'சிறு பத்திரிகைக்காரர்கள்' சிலரது இயல்பாகவே இந்தப் போக்கு வளர்ந்து வந்திருக்கிறது. தங்களை 'அறிவுஜீவிகள்' (இன்டெலக்சுவல்ஸ்) என்று காட்டிக்கொள்ள விரும்புகிறவர்களின் போக்காகவும் இது காணப் படுகிறது. இவர்கள் தமிழும் இங்கிலீஷும் கலந்தேதான் தங்களது சிந்தனைகள், உரையாடல்கள், கடிதங்கள், கட்டுரைகள் மற்றும் பல்வேறு எழுத்துக்களையும் வெளியிடுகிறார்கள். விவாதங்கள் என்று வந்து விட்டால், இங்கிலீஷ் வார்த்தைகளும் வாக்கியங்களும் அளவுக்கு அதிகமாகவே கலந்து புரளும். தமிழில், தமிழ் வாசகர்களுக்காக எழுது கிறோம்—சிந்திக்கிறோம்—கருத்துக்களை வெளியிடுகிறோம் என்பதையே அவர்கள் மறந்துவிடுகிறார்கள். தங்கள் எண்ணங்களை இங்கிலீஷில் தான் நன்றாக வெளிப்படுத்த முடியும் என்பது அவர்களது கருத்தாக இருக்க வேண்டும் அல்லது தங்கள் கருத்துக்களைத் தமிழில் நன்றாக வெளியிடும் திறமை போதிய அளவு அவர்களுக்கு இல்லாதிருக்க வேண்டும். எப்படியோ தமிழையும் இங்கிலீஷையும் கலந்து கலந்தே எழுதுவதும் பேசுவதும் பெரும்பாலான 'அறிவுஜீவி'களின் பழக்கமாகி விட்டது.

இந்தப் போக்கு ஞானரதம், கசடதபற போன்ற சிறு பத்திரிகைக ளில் காணப்பட்டதைவிட அதிகமாகவே பிரக்ஞை இதழ்களில் தடம் பதித்துள்ளது. பின்னர் ஆரம்பித்த பல சிறு பத்திரிகைகள் இதைப் பின்பற்ற வேண்டிய ஒரு ஃபாஷன் ஆக மதித்து—இப்படி தமிழும் இங்கி லீஷும் கலந்து கலந்து எழுதாவிட்டால் மற்றவர்கள் தங்களை 'அறிவு ஜீ வி க ள்' என்று மதிக்கமாட்டார்கள் என்று எண்ணியும்— இதைக் கையாள்வதில் சந்தோஷமும் பெருமையும் கொண்டார்கள் என்பதையும் குறிப்பிட வேண்டும்.

பிரக்ஞை 'அறிவார்ந்த தன்மையோடு' கலை, ஓவியம், சினிமா பற்றிய கட்டுரைகளையும் கருத்துக்களையும் வெளியிட்டது. சினிமா விமர்சனங்கள், அரசியல் சமூகப் பார்வையோடு அழுத்தமாகவும் விரி வாகவும் எழுதப்பட்டன. சத்யஜித்ரே, பதல் சர்க்கார், ஷ்யாம் பெனகல், மிருணாள் ஸென் முதலியோரின் படங்கள் பற்றிய கட்டுரைகள் பிரசுர மாயின. ஓவியக் கலைஞர்கள், அவர்களுடைய படைப்புகள் சம்பந்தமான கட்டுரைகளையும் பிரக்ஞை வெளியிட்டது.

புதுரகக் கதைகள், புதுக் கவிதைகள், கவிதைத் தொகுப்புகள் பற்றிய காரசாரமான விமர்சனங்கள் பிரக்ஞையில் அடிக்கடி பிரசுரமாயின. சில நாவல்கள், சிறுகதைத் தொகுப்புகள் பற்றிய விரிவான மதிப்புரைகளும் வந்துள்ளன. 4 வது இதழில் ஞானக்கூத்தன் 'கலந்துரையாடல்'—12 பக்கங்கள்—கவிதை பற்றிய அவருடைய கருத்துக்களை விளக்கியது.

7 வது இதழ் 'கவிதைச் சிறப்பிதழ்' ஆக வெளிவந்தது. ஞானக் கூத்தன், ஹரி. ஸ்ரீனிவாசன், மாலன், பிரபஞ்சகவி, பசுவய்யா, நா. விச்வநாதன், தேவதேவன், ஆத்மாநாம், தஞ்சாவூர் கவிராயர், மணி கண்டன் கவிதைகள் எழுதியுள்ளனர். மூன்று மலையாளக் கவிதைகளை நகுலன் தமிழாக்கினார். மற்றும் செக் மொழிக் கவிதை, டி. எஸ். எலியட் கவிதைகளும் தமிழில் தரப்பட்டன. 'மார்க்ஸியமும் பஜனைக் கவிஞர்க ளும்' என்ற தலைப்பில் முற்போக்குக் கவிஞர்களின் தன்மைகள் குறித்து விரிவான கட்டுரை ஒன்றும் பிரசுரமாயிற்று.

'மார்க்ஸிசமும் இ ல க் கி ய விமர்சகனும்'— ஜ்யார்ஜ் ஸ்டைனர் எழுதியது. மொழிபெயர்க்கப்பட்டு தொடர் கட்டுரையாக வெளிவந்துள் ளது. ஆல்பர்ட் கேமு நாடகம் 'நியாயவாதிகள்' தொடர் அம்சமாக வந்தது.

இரண்டாம் ஆண்டின் ஆரம்பத்தில், தங்கள் ஓராண்டு சாதனை

குறித்த 'பிரக்ஞை'யின் கணிப்பு சுவாரஸ்யமான சிந்தனையாக அமைந்துள்ளது:

"சென்ற ஓராண்டில் பிரக்ஞை சாதித்தது என்ன என்ற கேள்வி எங்கள் மனத்தில் மட்டுமல்லாமல், சற்று அடிக்கடி சந்தித்துக் கொள்ளும் இலக்கிய நண்பர்கள் மனத்திலும் எழுந்திருப்பதைக் காண் கிறோம். இக்கேள்விக்கான முழு பதிலையும் பிரக்ஞையைச் சார்ந்தவர் களே அளித்தல் என்பது அவ்வளவு உசிதமாகத் தோன்றவில்லை. ஆனால் ஒன்றை மட்டும் இங்கு குறிப்பிட விரும்புகிறோம். பிரக்ஞை இலக்கிய ரீதியில் ஒன்றையும் சாதிக்கவில்லை என்ற எண்ணம் வாசகர்கள் மனத்தில் இருப்பின், அதற்குப் பிரக்ஞையைச் சார்ந்தவர் கள் மட்டும் பொறுப்பல்ல. தமிழிலக்கியத்தைப் பொறுத்தவரை இது ஒரு தேக்க காலம்.

சிறு பத்திரிகைகளின் போக்கு குறித்து சற்று மாறுபட்ட எண்ணம் பரவி இருப்பதைக் காண்கிறோம். அது பிரக்ஞையைச் சார்ந்தவர்களின் எண்ணத்துடன் ஒன்றிணைவதாகவும் இருக்கிறது. சுத்த இலக்கியம் மட்டுமே வெளியிடுவதுதான் சிறு பத்திரிகைகளின் லக்ஷணம் என்ற நிலை மாறவேண்டும். நம்மைப் பாதிக்கும் எந்த விஷயத்தைப் பற்றியும் அறிவுபூர்வமாக கலை நோக்குடனும் சமூக நோக்குடனும் பார்க்கப்பட்ட கட்டுரைகள் வெளிவர வேண்டும் என்பது நோக்கமாக இருக்க வேண்டும். வரும் இதழ்களில் பிரக்ஞை இதற்கான முயற்சிகள் செய்யும்." (இதழ்: 13, அக்டோபர் 1975)

இந்த 13 வது இதழ் வேறு வகைகளிலும் குறிப்பிடத்தகுந்ததாக அமைந்துள்ளது. சார்வாகன் எழுதிய 'மக்கள் இலக்கியமும் மனோதர்ம மும்' என்ற நல்ல கட்டுரை ஒன்று இதில் வந்திருக்கிறது. நீண்ட சர்ச்சைக்கு வித்திட்ட கட்டுரை ஒன்றை ந. முத்துசாமி எழுதினார் 'வேற்றுமை' என்ற தலைப்பில்.

1975 மார்ச் 'கசடதபற'வில் ஞானக்கூத்தன் 'சி. மணியின் எழுத் துக்கள்' என்றொரு கட்டுரை எழுதி, 'வரும் போகும்' என்ற கவிதைத் தொகுப்புக்கு விமர்சனம் செய்திருந்தார். பதினைந்து ஆண்டுகளாகக் கவிதை எழுதி, புதுக் கவிதைத் துறையில் பெயர் பெற்றுவிட்ட சி. மணி யின் எழுத்துக்கள் போலியானவை; உண்மையான கவிதைகள் ஆக மாட்டா என்று ஞானக்கூத்தன் கருத்து தெரிவித்திருந்தார்.

ஞானக்கூத்தனின் 'கசடதபற' கட்டுரைக்கு நீண்ட மறுப்பாகவும்

எதிர்ப்பு ஆகவும் அமைந்துள்ள முத்துசாமியின் கட்டுரை 'பிரக்ஞை' மூன்று இதழ்களில் வெளிவந்தது.

சி. மணியின் கவிதைகள் பற்றி ஞானக்கூத்தன் எழுதிய கட்டுரைக்குப் பதிலாக வெ. சாமிநாதன் 'பிரக்ஞை'யில் ஒரு நீண்ட கட்டுரை எழுதினார். அதற்கு அடுத்துத்தான் முத்துசாமி கட்டுரை வெளிவந்தது.

இவ்விரண்டு கட்டுரைகளுக்கும் பதிலாக ஞானக்கூத்தன் 'ஆறும் ஏழும்' என்று எட்டுப் பக்கக் கட்டுரை ஒன்று எழுதினார்.

இந்த விவாதக் கட்டுரைகளில், கவிதை பற்றிய சிந்தனைகள், இலக்கிய விவகாரங்களைவிட சொந்தக் காழ்ப்புணர்ச்சிகளும், 'சதி வேலை–மறைமுகத் தாக்குதல்' என்பன போன்ற குற்றச்சாட்டுகளும், அநாவசியமாகச் சிலரைப் பழித்துக் கூறலும் அதிகம் இடம் பெற்றன.

எனவே 'பிரக்ஞை' இவ்விஷயமாக நீண்ட தலையங்கம் ஒன்று எழுத நேரிட்டது.

"நிகழும் விவாதங்களிலும் சீரிய வளர்ச்சிக்கான சிந்தனையோ, சகிப்புத் தன்மையோ தெரிவதில்லை. அவை தெளிவு தராமல் பெருங் குழப்பத்திற்கே மறுபடி வித்திடுகின்றன. விவாதங்களில் அருவருப்பூட்டும் அளவு வெளிப்படுகிற காழ்ப்புணர்ச்சிகள் விவாதங்களில் இருக்கக் கூடிய ஆக்கபூர்வமான இயல்புகளை அழுத்திவிடுகின்றன.

விவாதங்களில் வெளிவரக் கூடிய காழ்ப்புணர்ச்சிகளை மனதில் கொள்ளாது தன் படைப்பும், தன் இலக்கிய ஆகிருதியும் தான் விமர்சிக் கப்படுகின்றன, தானல்ல என்பதை மனதில் வாங்கிக் கொண்டு, சுய விமர்சனத்தில் உண்மையைத் தேட முயலும் பொறுப்பு படைப்பாளிகள் பக்கமிருக்கிறது.

குறைகளைச் சுட்டிக் காட்டுவதில் கடுமையைக் கையாள வேண்டிய விமர்சகர்கள் ஒரு சூழலை உருவாக்குவதில் தங்களுக்கு இருக்கும் ஜாக்கிரதை உணர்வுடன், அக்கறையுடன் சகிப்புணர்ச்சியையும் வளர்த் துக் கொள்ள வேண்டியதின் அவசியத்தை இங்கு வலியுறுத்த வேண்டிய தாகிறது.

பிரக்ஞையில் வெளியாகும் விவாதங்கள் எல்லாம் மேலே சொன்ன லட்சிய அமைப்பைக் கொண்டன என்றும் சொல்ல முடியாது.

எனினும் இவற்றிலிருந்தும் ஆக்க பூர்வமான விளைவுகள் எழலாம் என்ற ஒரு மெல்லிய நம்பிக்கையுடன்தான் இவை பிரசுரமாகின்றன. இவற்றில் வெளிப்படையாகத் தொனிக்கும் காழ்ப்புணர்ச்சிகளை விலக்கி விட்டு முக்கிய விஷயத்தை அணுகிப் புரிந்துகொள்ளுமளவு தீவிரம் தன் வாசகர்களிடையே இருக்கும் என்பது 'பிரக்ஞை' யின் எதிர்பார்ப்பு'' (பிரக்ஞை ).

ஞானக்கூத்தனுக்கு ஆதரவாக சா. கந்தசாமி 'போலி விமர்சனமும் போலிக் கவிதையும்' என்ற கட்டுரையை எழுதினார். ஞானக்கூத்தன் கூறிய சில குற்றச்சாட்டுகளை மறுத்து சுந்தர ராமசாமி 'ஒன்றும் நாலும்' என்ற தலைப்பில் எழுதினார்.

'கவிப் பொருளும் சப்தவாதமும்' என்று தருமு ஔரூப் சிவராம் எழுதியதையும் 'பிரக்ஞை' பிரசுரித்தது. ஞானக்கூத்தனைத் தாக்கி வெ. சாமிநாதன் 'ஒரு தயாரிப்புக் கவிஞர்' என்றொரு கட்டுரை எழுதி னார். அதில் 'தமிழவன்' எஸ். கார்லோஸ் பற்றிய பிரஸ்தாபம் கலக்கப் பட்டிருந்தது. அதனால் எஸ். கார்லோஸ் 'இன்னொரு பார்வை' எனப் பதில் எழுதினார்.

இந்த விவகாரம், 'பிரக்ஞை' யே குறிப்பிட்டதுபோல, பழங் குப்பை யைக் கிளறும் வேலையாகத்தான் அமைந்தது. பிரக்ஞை 19 வது ஏட்டில் மீண்டும் இவ் விவாதம் குறித்து ஒரு நீண்ட தலையங்கம் எழுதியது :

''இந்த விவாதங்களில், நேரில் விசாரித்துக் கொள்ளக் கூடியவை களும் சந்தியில் விசாரிக்கப்படுகின்றன. ஆனால் ஒன்று : முதல் ஆசாமி தன் ரஹஸ்ய சந்தேகத்தை துணிச்சலுடன் (?) சந்தியில் வைத்து விடுவதனால் எதிர் ஆசாமியும் களத்தில் சந்திக்க வேண்டியது நேர்கிறது. தவிர, இதில் பல விஷயங்களை நேருக்கு நேர் சம்பவங்கள் நடக்கும்போதே கேட்டு விளங்கிக் கொள்ளாத கூச்ச சுபாவம் படைத்த வர்கள், திராணியில்லாதவர்கள் நிறைய இருக்கிறாற் போல் தெரிகிறது

இப் பொதுமேடையில் நாம் யாவரும் உறுப்பினர்கள். நமக்குள் பல பேரை தனித்தனிக் கூடுகளாக இனம் காணப்போகிறோமா? இது கூடுகிற காரியந்தானா?

பல பேரை தனித் தனிக் கூடுகளாக இனம் காணும் வேலையை 'பிரக்ஞை' யும் தொடர்ந்து செய்துகொண்டிருக்க வேண்டுமா? இப்போது

நடந்து வரும் விவாதம் இப்படியே இன்னமும் தொடரத்தான் வேண்டுமா?'' என்று 'பிரக்ஞை' கேட்டது.

அதன் பிறகம் 'ஞானக்கூத்தனின் பதில்' ( ஒரு பகுதி மட்டும்) 'ஒரு தயாரிப்புக் கவிஞர்–பிற்சேர்க்கை; இன்னும் சில எதிரொலிகள்' என்று வெங்கட்சாமிநாதன் எழுதியதையும் ( 8 பக்கங்கள் ) வெளியிட்டது.

1976 பிற்பகுதியிலிருந்து 'பிரக்ஞை' மாதம்தோறும் வெளிவர முடியாத நிலைமை ஏற்பட்டது. 21–22, 23–24 என்று இரண்டு இதழ் களை ஒன்றாகச் சேர்த்துப் பிரசுரித்தது.

21–22 வது இதழில் 'கே. சி. எஸ் பணிக்கர்–ஒரு பார்வை' என்ற கட்டுரையில் ஜெயராமன் அந்த ஓவியரைப் பற்றி விரிவாக எழுதினார். பணிக்கரின் ஓவியங்களும் அச்சாகியிருந்தன.

'மொழி, கலாச்சாரம் பற்றி பிரக்ஞை தீவிர கவலை கொண்டுள் ளது; பிரக்ஞையின் எல்லை விஸ்தரிப்பில் வரும் விஷயங்களுக்கு முதலிடம் அளிக்கத் தீர்மானிக்கப்பட்டுள்ளது' என்று அறிவிக்கப்பட்ட தற்கு ஏற்ப, இலக்கியம் தவிர்த்த இதர விஷயங்களிலும் பிரக்ஞை அக்கறை காட்டலாயிற்று.

'மறக்கப்பட்ட ஒரு எழுச்சி' என்ற தலைப்பில் ஸந்தால் இன மக்களின் புரட்சி பற்றி பாணி பூஷண் கோஷ் எழுதிய கட்டுரை; மாவோ பற்றிய சிந்தனை; ஒரு ஜெர்மானியத் திரைப்படம் பற்றி அறிமுகம் ஆகியவற்றை 'பிரக்ஞை' வெளியிட்டது.

ஞானபீடம் பரிசு 'சித்திரப் பாவை' என்ற அகிலன் நாவலுக்கு அளிக்கப்பட்டதை வன்மையாகக் கண்டித்து வீராச்சாமி எழுதினார் (25 வது இதழ் ). அதை ஒட்டி, சுந்தர ராமசாமி 'போலி முகங்கள்' என்றொரு கட்டுரை எழுதினார். அது வெளிவந்த இதழ் 26, 27, 28 என்ற எண்களைத் தாங்கிய ஒரே இதழாகும்.

அந்த இதழில் 'தமிழ் நாடகச் சூழல்–சில பிரச்னைகள்' என்ற தலைப்பில் வெங்கட் சாமிநாதன் அவருடைய இயல்புப்படி 41 பக்கங்கள் எழுதியிருந்தார். ந. பிச்சமூர்த்தி பற்றி கி. அ. சச்சிதானந்தம் எழுதிய கட்டுரையும் பிரசுரமாயிற்று. ந. பி. யின் மரணத்தை ஒட்டி எழுதப்பெற்ற கட்டுரை அது.

1976 நவம்பர், டிசம்பர், 1977 ஜனவரி எனத் தேதியிடப் பெற்ற அந்த இதழுக்குப் பிறகு, 'பிரக்ஞை' 1977 ஜூலை மாதம்தான் வெளி வந்தது. 29–34 என்று ஒரே இதழாக.

அந்த இதழின் தலையங்கம் குறிப்பிடப்பட வேண்டிய சீரிய சிந்தனை ஆகும்.

'சில மாத இடைவெளிக்குப் பிறகு 'பிரக்ஞை' வெளிவருகிறது. இந்த இடைவெளி ஏற்பட்டதற்குக் காரணங்கள் பொருளாதார ரீதியா னவை என்பது சொல்லித் தெரிய வேண்டியதில்லை. 'பிரக்ஞை' வெளி வராதது பற்றி, மற்றுமொரு சிறு பத்திரிகையின் சிறு சிறகுகள் துண்டிக்கப்பட்டது குறித்து வருத்தப்பட்டோர் தொகை மிக மிகக் குறைவு. ஆனால் ஓரளவிற்கு இந்நிலை ஏற்படும் என்று முதலிலேயே நாங்கள் கணித்திருந்தோம். அதனால்தான் 'பிரக்ஞை' பெரும் இலக்கு கள் அற்ற, நம்பிக்கையைச் சில காலம் உயிருடன் வைத்திருக்கும் செயலாக மட்டுமே இயக்கம் கொண்டது. உங்களில் பெரும்பாலானோர் எதிரொலி அற்ற மௌனத்தில் அமுங்கிக் கிடப்பதில் எங்களுக்குச் சிறு அதிர்ச்சி ஏற்பட்டது உண்மை. ஆனால் பெரும் வருத்தம் ஏதுமில்லை.

கருத்துலகில் தன் 'பிராண்ட்' சிந்தனையைத் தவிர வேறெதையும் பார்ப்பதில்லை, ஆதரிப்பதில்லை என்று உங்களில் பெரும்பாலானோர் முடிவு கொண்டிருக்கும் வரை ஆக்கபூர்வமான பெரும் மாற்றங்கள் தமிழில் ஏற்படப் போவதேயில்லை. எந்நாளும் கலைஞன் சமூகத்தின் சுவர்களுக்கு வெளியே புறக்கணிக்கப்பட்ட அடிபட்ட விலங்காகத் தான் உலவுவான். கருத்துலகம் க்ஷீணிப்பதற்குக் காரணம் இதுதான். Consumerism நம்மைப் பீடிக்க நாம் அனுமதித்திருக்கும் வரை, கருத்துலகத்தில் கூட அது செயல்படும் வரை, தமிழிற்கு எல்லை விஸ்தரிப்பு நேரப்போவதில்லை சடுதியில்.

தங்களைத் தாங்களே காப்பாற்றிக் கொள்ளக் கூடிய அடிப்படைப் பொறுப்புணர்ச்சிகூட இல்லாது இருக்கும் சில நூறு பேரான நாம் Mass Media வின் இரும்புச் சுவர்களில் ஒரு சிறு பள்ளம்கூட ஏற் படுத்தும் சக்தியற்ற முடவர்களாகத்தான் திரிவோம், இந்த நிலை நீடிக்கும் வரை.

Academicians, வியாபாரப் பத்திரிகையாளர்கள், அரசியல்வாதிகள், தேடுமறிவற்ற மாணவர்கள், மந்தையாக்கப்பட்டுவிட்ட மக்கள் என்று

ஏற்கெனவே சீரழிந்தவர்களை, குருடாக உலவுபவர்களை, நொந்து கொண்டு என்ன பயன்? சில நூறு பேரான நாம் ஒரு இயக்கமாகச் சேர்ந்து செயல்படத் தயாராக இல்லாதவரை தமிழ்க் கலாச்சாரம் செத்துத்தான் கிடக்கும்.

சிறு பத்திரிகை இயக்கம் என்று வலுவான அஸ்திவாரங்களில் நிற்கிறதோ, முரண்பாடுகளைக் கண்டு கூசி விலகாமல் எதிர் கொள்ளும் மன வலு நம்மிடம் என்று ஏற்படுகிறதோ, நம் வலு சிதறிக் கிடப்பதி னால் பயனற்று இருப்பதை நாம் எப்போது உணருகிறோமோ, வெறும் இலக்கியமே நம் குறிக்கோள் என்பதை மீறி 'கருத்துலகம்' என்ற விரிவான பாதையில் என்று உலவுகிறோமோ, அன்றுதான் நம் விடிவு என்பது 'பிரக்ஞை'யின் கருத்து. இதில் கூட உடன்பாடில்லாமல் இருப்ப வர் யாரும் உண்டா நம்மில்? அப்படிப்பட்டவர்கள் ஜீவனுள்ள அறிவுள்ள வர்களா?"

'பிரக்ஞை' இலக்கியம் தவிர்த்த ஏனைய விஷயங்களில் அதிக அக்கறை கொண்டது. சமூக, கலை, பொருளாதாரச் சிந்தனைக் கட்டு ரைகளை (மொழிபெயர்ப்புகளை) பிரசுரிப்பதில் ஆர்வம் காட்டியது. 'சீனச் சிறப்பிதழ்' ஒன்றைத் தயாரித்தது.

'பிரக்ஞை' அவ்வப்போது விரிவான 'சுய விமர்சனம்' செய்து கொண்டது. இது சுவாரஸ்யமான ஒரு அம்சமாகவே காணப்பட்டது.

'பிரக்ஞை' ஆர்வம் நிறைந்த ஒரு குழுவினரால் இயக்கப்பட்டது. பல வருட காலம் அதன் ஆசிரியராகப் பொறுப்பு வகித்தவர் ஆர். ரவீந்திரன்.

48 வது (மார்ச் 1978) இதழில் 'பிரக்ஞை' இந்த அறிவிப்பை வெளியிட்டது :

"அக். 74–பிப். 78 கால இடைவெளியில் பல சுருக்கமான, தெளி வான தலையங்கங்கள் தனித்தன்மையும், பார்வைக் கூர்மையும், மொழி எளிமையும் கொண்ட திரைப்பட விமர்சனங்கள், பத்திரிகையின் மீதான விவாதங்களில் எழுப்பிய நுட்பமான கேள்விகள், வெளிப்படுத்திய கருத் துக்கள், மேலும் ஒரு சிறு பத்திரிகையின் அத்தியாவசியத் தேவை யான, எதிர்பலனேதும் எதிர்பாராத உழைப்பு ஆகிய பல வழிகளில் 'பிரக்ஞை'க்கு வலுவூட்டிய திரு. ஆர். ரவீந்திரன் சொந்தக்

காரணங்களால் சென்னையை விட்டுச் செல்ல நேரிட்டதனால், 'பிரக்ஞை' யிலிருந்து விலகிக் கொண்டார். ஜீ. ரவீந்திரன் ஆசிரியராகப் பொறுப்பேற்றார்.

இந்திரா பார்த்தசாரதியின் 'குருதிப் புனல்' நாவலுக்கு அம்பை கடுமையான விமர்சனம் ஒன்றை எழுதினார். ரசமான பகுதிகள் கொண்ட அந்த விமர்சனம் ( ஒரு பரசுராமன் பிறந்த கதை : 'குருதிப் புனல்' ) 43–வது இதழில் வெளியாயிற்று.

அப்புறம், நாட்டு நடப்புகள், மாநிலங்களின் விவகாரங்கள், அரசியல், சமூகப் பிரச்னைகள் சம்பந்தமான கட்டுரைகளையே 'பிரக்ஞை' வெளியிட முனைந்தது. அப்படி மூன்று மாதங்களுக்கு ஒரு முறையாக, 44–45 (மே, ஜூன், ஜூலை–78 ), 47–49 ( ஆகஸ்ட், செப். அக். 78 ) என்று இரண்டு இதழ்கள் வந்தன. இவற்றுடன் 'பிரக்ஞை' யின் இயக்கம் ஒடுங்கிவிட்டது என்றே தோன்றுகிறது. இதழ் எதுவும் வெளிவந்ததாகத் தெரியவில்லை.

# 18. வானம்பாடி

குறைந்த காலத்தில், அதிகமான கவனிப்பையும், சிறு பத்திரிகை வட்டாரத்தில் மிகுந்த பாதிப்பையும், கவிதை எழுதுவோரிடையே தீவிர மான தாக்கத்தையும் ஏற்படுத்திய சிறு பத்திரிகை 'வானம்பாடி' ஆகும்.

'மானுடம் பாடும் வானம்பாடிகளின் விலையிலாக் கவிமடல்' என்று அறிவித்தவாறு, கோவையிலிருந்து வெளிவந்தது இச்சிற்றேடு, 1970 களில், மாதப் பத்திரிகையாக.

'கவிதை வானில் புதிய பறவைகள், மா னு டப் பூங்காவின் தேனெடுத்த தேனீக்கள், புதிய ராகங்கள் இசைக்கும் வானம்பாடிகளாய்க் கூடு திறந்து பாடி வருகின்றன' என்று வானம்பாடிக் கவிஞர்கள் கூறிக் கொண்டார்கள்.

'வானம்பாடி' கவிமடல், விகடன் அளவில், தனி அட்டை இன்றி, நல்ல தாளில், எளிமையான வசீகரத்துடன் அச்சாகி வந்தது. அதன் முதல் இதழில் 'கூடுகள் திறக்கின்றன' என்ற மூன்று பக்கத் தலையங் கம், மகாகவி பாரதிக்கு அஞ்சலி செலுத்தியது.

'அவன் விட்ட பயணத்தைத் தொடர வந்த பறவைகள் இன்று, தங்களைச் சுற்றிப் புகைப்படலங்களாகச் சுற்றிப் பிணைந்துள்ள சமூக வலைகளைத் தூக்கிக்கொண்டு, பறந்தபடி அவனுக்கு அஞ்சலிகள் செலுத்துகின்றன.

அந்த மானிடம் பாடிக் குவித்த கவிதைக் குயில், மற்றவர்களைப் போலவே மண்ணானாலும், அந்தக் கவியின் ஆத்மா, இந்தப் பரந்த மண்வெளிகளிலேயே, இத்தனை காலமும் யுகப் பசியோடு அலைந் திருக்கிறது.

அவனைப் போலவே இந்த மாநிலம் பயனுற வாழுதற்கு, சுடர்மிகு அறிவுடன் மானிடம் பாடும் வானம்பாடிகளாயினர்.

இந்தப் பறவைகளுள், பழமை என்கிற மண்ணில் காலூன்றி

உந்தியெழுந்து, புதுமையாகிய விண்ணில் சிறகுகள் சிலிர்க்கப் பறக்கும் ஒளிப்பறவைகள் இருக்கலாம்.

ஆனால் அந்தப் பறவைகள், மண்ணாகி – மண்ணுக்குள் மறையாமல், தூசாகி – விண்ணுக்குள் கலவாமல், இருளையழித்து, வழியையமைத்து, பகலை அழைக்கும் பறவைகளாகவே இருக்கும்.

இந்தப் பறவைகளுள் , காதல் கீதமிசைக்கும் இளங்குயில்கள் இருக் கலாம். ஆனால் அந்தக் கீதங்கள், மனித ஜீவியத்தின் பொருளுணர்ந்து புணரும் சுதந்திர கீதங்களாகவே இருக்கும்.

இந்தப் பறவைகளுள், யுகயுகங்களாக மனித வாழ்வையும், சமூக தர்மங்களையும் தம் விஷ நாக்குகளால் தீண்டி உயிர் உறிஞ்சிவரும் நாகங்களுக்குக் கல்லறைகள் அமைக்கும் சுருடப் பறவைகள் இருக்கலாம்.

ஆனால் அந்தக் கருடன்களால், எந்தக் குஞ்சுகுளுவான்களுக்கும் ஆபத்தில்லை. புரையோடிப் போய்விட்ட சமூகத்தின் புன்மைகளை மட்டுமே சுட்டெரிக்கும் கருடன்களாகவே இருக்கும்.

மலரப் போகின்ற ஒளிமயமானதொரு பொற்காலக் கனவுகளிலேயே மூழ்கிப் போகாமல், அரும்பிக் கொண்டிருக்கும் புதுயுகத்தின் ஆசார வாசலிலே பூபாளம் பாடிக்கொண்டிருக்கும் வானம்பாடியை இனி மாதந் தோறும் காணுவீர்கள்!'

நீண்ட தலையங்கத்தின் சில பகுதிகள் இவை. தலையங்கத்தின் அடியில் 'முல்லை ஆதவன்', 'பாலை நிலவன்' என்ற பெயர்கள் அச்சாகியிருந்தன.

இந்தத் தன்னம்பிக்கை குரலுக்கு ஊக்கம் தரும் எக்காளமாக அமைந்திருந்தது மு . மேத்தாவின் 'அந்த மனிதாபிமானக் கவிதையை.. என்ற படைப்பு .

'வைகறைப் போதுக்கு
வார்த்தை தவமிருக்கும்
வானம்பாடிகளே – ஓ
வானம்பாடிகளே!
இந்த
பூமி உருண்டையைப்
புரட்டி விடக்கூடிய

நெம்புகோல் கவிதையை
உங்களில் யார் பாடப் போகிறீர்கள்?
இருட்டு வானத்தில்
நாம்
சிவப்புப் பறவைகள்!
பூமி இருண்டிருந்த நேரத்தில்
நாம் புறப்பட்டோம்;
நமக்கு
வெளிச்சம் வேண்டியிருந்ததால்
சிவப்புச் சிறகுகளைச்
சேகரித்துக் கொண்டோம்.'

இது மேத்தா கவிதையின் ஒரு பகுதியாகும்.

வானம்பாடிக் கவிஞர்களின் மற்றுமொரு இதயக் குரலாக தமிழன்பன் எழுதிய 'நாம்' மூன்றாவது இதழில் வெளி வந்தது.

'வானத்தைக் கீறியே
வைகறைகள் பறித்தெடுப்போம்!
மோனக் குரலுக்குள்
முழங்கும் இடி விதைப்போம்!
சூரியனைக் கண்களால்
சுட்டுப் பொசுக்குவதும்
ஆர்க்கும் கடலலையை
அடக்குவதும் நமக்கியலும்!
நமது சிறகசைப்பில்
ஞால நரம்பதிரும்!
இமயப் பறவைகள் நாம்!
எரிமலையின் உள்மனம் நாம்!
அக்கினிக் காற்றிலே
இதழ் விரிக்கும் அரும்புகள் நாம்!
திக்குகளின் புதல்வர்கள்!
தேச வரம்பற்றவர்கள்!'

இப்படி ஆர்வத்தோடும் ஆற்றலுடனும், சமூக நோக்குடனும் புதுமை வேகத்தோடும், புதுக்கவிதைகள் படைக்க முன் வந்தார்கள் வானம்பாடிக் கவிஞர்கள்.

புவியரசு, மு. மேத்தா, அக்கினிபுத்திரன், சக்திக்கனல், ஞானி, சிற்பி, ப. கங்கைகொண்டான், முல்லை ஆதவன், தமிழன்பன், தமிழ்நாடன் முதலியவர்கள் வானம்பாடிக் கவிஞர்கள் என மதிக்கப்பட்டனர். இவர் களுடைய கவிதைகள் 'வானம்பாடி' இதழ்களில் அதிகமாக வந்துள்ளன. மற்றும் மீரா, இன்குலாப், அப்துல் ரகுமான் முதலியோரது கவிதைகளும் பிரசுரம் பெற்றன.

இவர்களது உற்சாகத்தினால் உந்தப்பெற்ற இளைஞர்கள் பலரது படைப்புகளை வானம்பாடி வெளியிட்டிருக்கிறது. பாப்லோ நெருடா, ஆந்திரக் கவிஞர்கள், வேறு சில புரட்சிப் பாடகர்கள் கவிதைகளின் தமிழாக்கமும் வெளிவந்துள்ளது. சில கவிஞர்களின் தொகுப்புகள் பற்றிய விரிவான மதிப்புரைகளையும் வானம்பாடி பிரசுரித்தது.

4–ம் இதழில் வெளிவந்த 'சிற்பி'யின் 'சாக்கடைகளும் இன்னும் வற்றிவிடவில்லை', 5–ல் வந்த தமிழன்பனின் 'நயனதாரா', 7–ல் புவியரசு எழுதிய 'ஏலி ஏலி லாமா சபக்தானி?', ஞானி எழுதிய 'கல்லிகை', 9–ல் வந்த புவியரசின் 'ஒரு கவிஞனின் சிலுவைப்பாடு', சிற்பியின் 'சர்ப்ப யாகம்' ஆகிய நீண்ட கவிதைகள் குறிப்பிடத்தகுந்த படைப்புகள்.

உணர்ச்சி வேகமும் புரட்சி எண்ணங்களும் கலந்த சிறு சிறு கவிதைகள் பலராலும் எழுதப்பட்டன. வானம்பாடிக் கவிஞர்களின் உத்வேகம் தமிழ்நாடு நெடுகிலும் உற்சாகத்தையும் கவிதை எழுதும் துடிப்பையும் பரப்பின. பலப்பல ஊர்களிலும், 'விலையில்லாத'– 'தனிச் சுற்றுக்கு மட்டும்' உரிய–சிற்றேடுகள் 'வானம்பாடி' யை முன்மாதிரியாகக் கொண்டு தோன்றின.

ஒரு 'இயக்க வேகம்' பெற்று வளர்ந்து கொண்டிருந்த 'வானம் பாடி' க்கு அதிக வரவேற்பு இருந்தது போலவே, தீவிரமான எதிர்ப்பும் ஏற்பட்டிருந்தது. புதுக் கவிதையில் சமூக– எதார்த்தப் பார்வைக்கு எதிரிடையான தனி மனித அனுபவ, அக உளைச்சல் வெளிப்பாடுகளை ஆதரித்த 'கசடதபற' க் கவிஞர்கள் இந்தப் போக்கைக் கண்டித்தார்கள்; குறை கூறினார்கள்; பரிகசித்தார்கள். வானம்பாடிகள் கம்யூனிஸ்டுக் கட்சியைச் சேர்ந்தவர்கள் என்ற குற்றச்சாட்டும் பரவியது.

எனவே, பத்தாவது இதழில் வானம்பாடி 'முத்திரைகளும் முகத்திரை களும்' என மூன்று பக்கத் தலையங்கம் எழுதியது.

'பத்தே இதழ்களில் ஒரு சரித்திரம் சிருஷ்டி ஆகியது. அதன்

பெயர் வானம்பாடி' என்று தொடங்கி அத் தலையங்கத்தின் சில பகுதிகள் இவை—

"சமுதாய அவலங்களின் மீது எங்கள் தார்மீகக் கோபத்தின் அனல் படரும் காரணத்தால்— அண்மைக் காலத்தில், பல ஏடுகளில் அறிந்தோ அறியாமலோ அல்லது வேண்டுமென்றோ எங்கள் படைப்பாளிகளை 'கட்சிக்காரர்கள்' என்று முத்திரை குத்தவும், முகத்திரை போடவும் சில சக்திகள் கங்கணம் கட்டியுள்ளன.

'வானம்பாடி இயக்கம்' பற்றி அரசியல் ரீதியான மதிப்பீடுகளும் பத்திரிகைகளில் இடம் பெற்று வந்துள்ளன. எங்களில் சிலரை இன்ன கட்சிக்காரர் என்று மீண்டும் மீண்டும் அழுத்தமாக முத்திரை குத்தி வருவதைப் பொறுத்துக் கொண்டிருப்பது சரியல்ல என்பதால் நாங்கள் மௌனம் கலைக்கிறோம்.

நேரடியாகவோ மறைமுகமாகவோ இயங்கி வருகிற எந்த அரசியல் கட்சிகளுடனும்—அந்தரங்கமாகவோ பகிரங்கமாகவோ அரசியல் ரீதியான தொடர்பு எங்களுக்குக் கிடையாது. இதனை மிக வன்மையாகவும் உறுதியாகவும் உரத்த குரலில் அறிவிக்க விழைகின்றோம்.

அப்படியானால் நாங்கள் யார் ?

மனித சமுதாயத்தின் துக்கங்கள்— துயரங்கள் இங்கேயானாலும் எங்கேயானாலும் உறவும் சொந்தமும் கொண்டாடி அவைகளில் பங்கு கொண்டு அவைகளை வேரோடு சாய்க்க எழும் வெண்கல நாதங்கள் நாங்கள்.

மனிதாபிமானம், முற்போக்கு, உழைப்பின் பெருமிதம், விஞ்ஞானம் இவற்றைக் கவிதைக் கலையில் உயிர் வனப்போடு அள்ளிப் பொழியும் வித்தக விரல்கள் எங்களுடையவை. மொழி, இனம், சாதி, சமய, நிறக் கொடுமைகள்— பிளவுகள்— பேதங்களைத் தரைப் புழுதியாய் மிதித்து நசுக்கும் ஆவேசம் எங்கள் மூலதனம்.

நவநவமான உத்திகளில் புதுப்புதிதான உருவ வார்ப்புக்களில் ச மூ க த் தி ல் நசுக்கப்பட்டவர்களின் நியாயங்களை உள்ளடக்கமாகப் புனையும் இலக்கியவாதிகள் நாங்கள்."

மேலும் தங்களைப் பற்றியும், தங்களுடைய கவிதைக் கண்ணோட்டம்,

இலக்கிய நோக்கு பற்றியும் விளக்கமாக எழுதிவிட்டு, முடிவாக இப்படிக் குறிப்பிட்டிருந்தார்கள்:

"ஒரே சமயத்தில் சமுதாயக் கண்ணோட்டமும், புத்திலக்கிய நோக்கும் கொண்ட–ஒரு கவிதை இயக்கம் எங்களுடையது. இந்த இயக்கத்தில் ஆர்வமும் ஆவேசமும் கொண்ட எவரும் பங்கு பெறலாம். நாங்களும் இந்த இயக்கத்தை வரவேற்கிற– மதிக்கிற– அறிவுபூர்வமாய் எதிர்க்கிறவர்களாயினும்கூட–அவர்களுடன் ஆரோக்கியமான உறவு கொள்ளத் தயங்க மாட்டோம்.

நாங்கள் மானிட சுதந்திரத்தை மதிக்கின்ற சுதந்திர மணிப் பறவைகள்.

பிரகடனம் செய்து –கூடுகள் திறந்து புறப்பட்ட எமது சுதந்திரப் பறவைகளை மீண்டும் கூடுகளில்– அரசியல் கூண்டுகளில் அடைக்காதீர்கள் !

ஏனெனில், அந்தக் கூடுகளே உலகங்கள் அல்ல. அந்தக் கூடுகளில் அடைந்து கிடக்க நாங்கள் சிறகு முளைக்காத குஞ்சுகளும் அல்ல. அதற்கும் மேலாக, எந்தக் கூட்டுக்கும் எங்களைத் தாங்கி நிற்கிற வலிமை இல்லை."

ஆனால் இவ்வளவு உறுதியாக அறிவிப்பு விடுத்த 'சுதந்திரப் பறவைகள்' தங்களுக்குள்ளேயே பிணங்கிக் கொண்டன– சில பிரிந்தும் போயின.

'வானம்பாடி இயக்கத்தில் அண்மையில் ஏற்பட்ட சலனங்களால் அதன் மைய வீதியை விட்டுச் சிலர் விலகிப் போயினர். இலக்கியப் பாதையில் அதிதீவிர அரசியல் முட்களை விதைக்கும் போலி முயற்சிகள் முறியடிக்கப்பட்டன' என்று விளக்க அறிக்கை கொடுத்து, 'வானம்பாடி' தனது பாதையில் தொடர்ந்து முன்னேறியது.

'புத்தகச் சந்தை' யில் புதுக் கவிதைத் தொகுப்புகள் அதிகம் அதிகமாகவே வரலாயின. அவற்றில் சிலவற்றை 'வானம்பாடி' ( 12–வது இதழிலிருந்து ) சுருக்கமாக–ஆனால், குத்தலும் கிண்டலும், சூடும் சுவையுமாக–விமர்சித்திருக்கிறது.

கால ஓட்டத்தில் 'வானம்பாடி' காலம் தவறி எவ்வெப்போதாவது வரலாயிற்று. வானம்பாடிக் கவிஞர்கள் தங்கள் கவிதைகளைத் தொகுப்புகளாக வெளியிடுவதில் ஆர்வம் கொண்டார்கள்.

'வானம்பாடி' யிலிருந்து விலகிச் சென்றவர்கள் 'வேள்வி' என்றொரு இதழை வெளியிட்டார்கள். ஒன்றிரண்டு இதழ்களோடு அதுவும் ஒடுங்கி விட்டது. 'வெளிச்சங்கள்' போன்ற சிறுசிறு கவிதைத் தொகுப்புக் களைத் தயாரித்தார்கள். இதுவும் குறுகிய கால ஆர்வமாகவே செயல் பட்டது.

'வானம்பாடி' கவிதை இதழை 'சிற்பி' பொள்ளாச்சியிலிருந்து பிரசுரிக்க முற்பட்டார். மலையாளம், தெலுங்கு மற்றும் பிற மொழிக் கவிதைகள் அதில் தமிழாக்கமாக வெளியிடப் பெற்றன. சில இதழ்களே வெளிவந்தன.

1981 ஜனவரியில் 'உலகத் தமிழ் மாநாட்டுச் சிறப்பிதழ்' என்று 'வானம்பாடி' உருவாயிற்று. கவிதை சம்பந்தமான நல்ல கட்டுரைகளும் பல கவிதைகளும் இதில் வெளியாயின.

குறிப்பிடத்தகுந்த இந்த விசேஷத் தயாரிப்புக்குப் பிறகு 'வானம் பாடி' இதழ் எதுவும் வரவில்லை. இது வானம்பாடியின் 20–வது மடல் என்று கணக்கிடப்பட்டிருந்தது.

'வானம்பாடி' அதன் இயக்க காலத்தில், அதைப் பின்பற்றும் பலப் பல சிற்றேடுகளை நாடு நெடுகிலும் தோற்றுவித்தது. குறைந்த காலம் செயல்பட்ட அவை தோன்றிய வேகத்தில் மறைந்தும் போயின.

# 19. கொல்லிப்பாவை

உற்சாகமும் இலக்கிய ஆர்வமும், உயர்ந்த நோக்கமும் கொண்ட இளையவர்கள் சிலர், அல்லது இளைஞர் ஒருவர், நல்ல முறையில் இலக்கியப் பத்திரிகை ஒன்று நடத்த ஆசைப்படுவதும், அதற்காகப் பாடுபடுவதும், சிரமங்களை மேற்கொள்வதும் இயல்பாக இருக்கிறது. அப்படி ஒரு குழுவால், அல்லது தனி நபரால், ஆரம்பிக்கப்படுகிற சிறு பத்திரிகை இலக்கியவாதிகளையும் உற்சாகிகளையும் வசீகரிக்கிறது. அம்முயற்சியில் ஒத்துழைக்கப் பலர் வந்து சேர்கிறார்கள். இவர்களில் ஓரிருவர், கூடிய சீக்கிரமே பத்திரிகையின் போக்கையும், அதன் ஆசிரியரது நோக்கையும் திசைதிருப்பிவிட்டு, கோளாறான தடத்திலே செலுத்துகிறார்கள். கால ஓட்டத்தில், உயர்ந்த நோக்குடன் செயல்படத் துவங்கிய முயற்சி சீர்கெட்டுப் போகிறது. சாதனைகள் பல புரியக்கூடும் என எதிர்பார்க்கப்படுகிற பத்திரிகை ஏமாற்றம் அளிக்கிற காரியமாக வீணாகிப் போகிறது.

தமிழ்ச் சிறு பத்திரிகை வரலாற்றில் இதற்கு உதாரணமாக அமைந்தவை பலவாகும். முக்கியமாகக் குறிப்பிடத்தகுந்தது 'கொல்லிப்பாவை'.

திருவனந்தபுரத்தில் ஹாஸ்டல் அறை ஒன்றில் வசித்து வந்த அ. ராஜமார்த்தாண்டனுக்கும், அவருடைய கவிநண்பர் ஒருவருக்கும் நல்ல முறையில் இலக்கியப் பத்திரிகை நடத்த வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. 'கலி' என்ற பெயரில் ஒரு இதழ் தொடங்க முயன்றார்கள். ஏழெட்டு மாதங்களாகியும் அவர்கள் முயற்சியும் உழைப்பும் செயல் வடிவம் பெறாமலே தேங்கி நின்றன. கவிநண்பர் ராஜமார்த்தாண்டனிடமே முழுப் பொறுப்பையும் ஒப்படைத்தார். பின்னரும் காலம் ஓடியது.

காலதாமதத்துக்காக மன்னிப்புக் கோரியவாறே, ராஜமார்த்தாண்டன் 'கொல்லிப்பாவை' என்ற பெயரில், பத்திரிகையின் முதல் இதழை 1976 அக்டோபரில் வெளியிட்டார். இந்தப் பெயரைத் தேர்ந்து சொன்னவர் தருமு ஔரூப் சிவராம் என்றும் அவர் நன்றியுடன் அறிவித்தார்.

முதல் இதழில் காணப்பட்ட அறிவிப்பின் இறுதிப் பகுதி இது :

"கொல்லிப்பாவை மூலம் தமிழிலக்கிய உலகில் என்ன சாதிக்கப் போவதாக உத்தேசம்? அதைச் சாதிக்க, இதைச் சாதிக்க என்று எதையும் இப்போது சொல்ல விரும்பவில்லை. ஏனென்றால் அதெல்லாம் 'கொல்லிப்பாவை' மட்டும் சம்பந்தப்பட்ட விஷயம் இல்லையே. படைப் பாளிகள்—விமர்சகர்கள்— வாசகர்கள் தரும் ஆதரவைப் பொறுத்ததல்லவா? எனவே இப்போதைய என்னதைவிட 'கொல்லிப்பாவை' யின் வரும் இதழ்கள் தரும் பதில்தான் பொருத்தமாக இருக்கும். பொறுத்திருந்து பார்க்கலாம்.

கொல்லிப்பாவை எத்தனை இதழ்கள் வரும் என்று இப்போதே உறுதியாகச் சொல்ல முடியாதுதான். என்றாலும் வெளிவரும் வரையில்— இனிமேலும்—எந்தக் காலதாமதமும் ஏற்படாது என்று உறுதி கூற முடியும். 'கொல்லிப்பாவை' யின் வளர்ச்சியில் பங்கு கொள்வது உங்கள் விருப் பத்தைப் பொறுத்தது—படைப்புக்கள் அனுப்பி உதவி செய்வது; நன் கொடை வழங்குவது; இரண்டிலும்"

ராஜமார்த்தாண்டனின் எதிர்பார்ப்புகள் சரிவரச் செயலில் நிகழ வில்லை என்பதைக் காலம் நிரூபித்தது.

ஒவ்வொரு இதழிலும் காலதாமதத்துக்காக அவர் வருத்தப்பட நேரிட்டது. படைப்பாளிகள் நல்ல கதைகள், கட்டுரைகளை அனுப்பி, பத்திரிகையின் வளத்துக்கும் ஆரோக்கியமான வளர்ச்சிக்கும் துணை புரியவில்லை. தற்சிறப்பு மோகமும் சுயவிளம்பரப் பிரியமும், பிறரைப் பழிப்பது—பரிகசிப்பது—மட்டம் தட்டுவது முதலியவற்றில் தீவிர அக்கறை யும் கொண்டவர்களின் ஆக்கிரமிப்பைக் 'கொல்லிப்பாவை' யும் தவிர்க்க இயலாது போயிற்று.

'கொல்லிப்பாவை', பெரிய அளவில், அதிகமான பக்கங்கள் கொண்ட 'காலாண்டு ஏடு' ஆக வந்தது.

முதல் இதழ் 52 பக்கங்கள். அட்டை தனி. சுந்தர ராமசாமியின் கதை 'அலைகள்' (6 பக்.), நகுலன் சோதனை ரீதியில் எழுதிய 'ஒரு நீண்ட கவிதை—மழை மரம்; காற்று' (15 பக்.), அதற்கு 'அவதாரிகை' என்ற 2 பக்க முன்னுரை. இந்த இதழ் வருவதற்குச் சொற்ப காலத் துக்கு முந்தி மரணமடைந்த படைப்பாளி கிருஷ்ணன்நம்பி, கி. ராஜ நாராயணன் 'வேட்டி' தொகுதிக்கு, சாது சாஸ்திரி என்ற புனைபெயரில் எழுதி வைத்திருந்த விமர்சனக் கட்டுரை— 'கரிசல்க் காட்டில் ஒரு படைப் பாளி' (13 பக்.), 'சாகித்திய அகாடமி பற்றி' சுந்தர ராமசாமி எழுதிய

ஒரு கடிதம் (3 பக்.), 'கலைஞனும் கோட்பாடும்'– தருமு ஔரூப் சிவராம் கட்டுரை (12 பக். ) உமாபதி, ராஜமார்த்தாண்டன் கவிதைகள். இவ்விஷயங்களோடு முதலாவது இதழ் திருப்திகரமாகத்தான் அமைந்திருந்தது.

1977–ல் ஒரே ஒரு இதழைத்தான் வெளியிட முடிந்திருக்கிறது. 1978–ன் 1–ம் இதழில், "கொல்லிப்பாவை ஐந்து இதழ்கள் வெளிவந்திருக்க வேண்டும். இரண்டுதான் வெளிவந்துள்ளது. இந்த ஒழுங்கின்மை, காலதாமதம் இனியும் தொடராதவாறு இதழை வெளிக்கொண்டுவர மேற்கொண்ட வேளையில் இலக்கிய நண்பர்கள் சிலரின் ஒத்துழைப்பு கிடைத்தது" என்று ராஜமார்த்தாண்டன் குறிப்பிட்டுள்ளார். இரண்டாவது ஆண்டு முதல், கொ. பா. குமரி மாவட்டம் இடையன்விளை என்ற ஊரிலிருந்து வரத்தொடங்கியது. இவ் 'இலக்கிய நண்பர்கள் ஒத்துழைப்பு' காரணமாகப் பத்திரிகையின் வளர்ச்சி எப்படி இருந்தது என்பதைப் பின்னர் கவனிப்போம். முதலில், ராஜமார்த்தாண்டனின் லட்சியங்கள் பற்றிய அறிவிப்பை நினைவுகூர வேண்டும்:

"கொல்லிப்பாவையின் வெளிப்பாட்டினால் தமிழிலக்கிய இயக்கத்தில் பெரியதொரு மாறுதலை ஏற்படுத்திவிட முடியும் என்ற அபரிமிதமான நம்பிக்கை இல்லாவிட்டாலும் கூட இதற்கென்று சில லட்சியங்களும் இல்லாமல் இல்லை.

நாவல் இலக்கியம் ஒரு நூற்றாண்டையும், சிறுகதை, புதுக்கவிதை வரலாறு அரை நூற்றாண்டையும் தாண்டிவிட்டது. ஆண்டிலும் அளவிலும் மட்டுமின்றி தரத்திலும் இவ் இலக்கியத் துறைகளில் வளர்ச்சி உண்டு. ஆனால் இவற்றோடு இணைந்து வளர வேண்டிய விமர்சனத் துறை மட்டும் இன்னும் அரிச்சுவடி நிலையிலேயே தடுமாறிக் கொண்டிருக்கிறது. அன்று தொடங்கி இன்று வரை இலக்கியம் பற்றிப் பேசியதெல்லாம் பொழிப்புரைகள். ஆகா–ஓகோ என்ற பாராட்டுக்கள், தூக்கி எறிதல்கள் தானே? இது தவிர்த்து உருப்படியாக, விமர்சன ரீதியாக, என்ன சாதித்திருக்கிறோம் ? எல்லோருமே ஒரு உயர்ந்த பீடத்திலிருந்து 'கருத்து'க்களைத் தாராளமாக உதிர்க்கிறோம். 'இது தரமானது, இவர் அவருக்கு இணை' என்று முடிவுகளை அடைவதற்கான காரணங்கள் என்ன, இலக்கியம் பற்றிய– நவீன இலக்கியப் போக்கின் த ர ம், சாதனை, கொள்கை குறித்த–நமது பார்வை, மதிப்பீடுகள் என்ன ? சிற்சில முயற்சிகள் அங்கங்கே தென்பட்டாலும் மொத்தப் பார்வையில் வெறும் அபிப்பிராயங்களும், பட்டியல்களும்தான் விமர்சனம் என்ற போர்வையில். இந்த நிலை மாற, விமர்சனமும் இலக்கியமாக, இலக்கிய

அக்கறை கொண்ட விமர்சனப் பார்வைகள் வளர ஒரு களம் அமைத்துச் செயல்பட வேண்டும் என்பது 'கொல்லிப்பாவை' யின் நினைப்பு (இதனால் புதிய படைப்புகள் புறக்கணிக்கப்படும் என்றாகாது. படைப்பும் விமர்சனமும் இணைந்து வளர்வதுதானே ஆரோக்கியமான இலக்கிய இயக்கமாகும்). கூடவே, இன்னும் சவலைப்பிள்ளையாகவே கிடக்கும் நாடக இலக்கியம் பற்றியும் அக்கறையுடன் சிந்தித்துப் பார்க்க வேண்டும் என்ற நினைப்பு. இந்த நினைப்புகள் நடப்பாக, தொடர்ந்து இலக்கியப் பிரக்ஞையுடன் புதிய சோதனை முயற்சிகளுக்கு ஒரு களமாக 'கொல்லிப்பாவை' செயல்பட படைப்பாளிகள்–வாசகர்கள் ஒத்துழைக்க வேணும்."

நல்ல லட்சியங்கள்தான். ஆனால், 'கொல்லிப்பாவை' க்கு உரிய முறையில் சரியான ஒத்துழைப்பு கிடைக்கவில்லை என்பதை அதன் இதழ் ஒவ்வொன்றும் நிரூபித்தது.

வெங்கட்சாமிநாதன், அவர் இயல்புப்படி, சில கருத்துக்களைக் கூறி, அவற்றை விளக்கும் வகையில் சிறு பத்திரிகைகள், சில எழுத்தாளர்களது போக்குகளைச் சாடி பல பக்கக் கட்டுரைகள் எழுதினார். தருமு சிவராம் உடனேயே வெ. சா. க்கு எதிர்ப்பாகவும், தனது பெருமைகளை எடுத்துக் கூறியும் நீண்ட நீண்ட கட்டுரைகள் எழுதுவதும் சகஜமாயிற்று. ஞானக்கூத்தன் அவர் போக்கில் கருத்துக்கள் தெரிவிப்பதும் ( உ–ம்; 'பட்டுக் குஞ்சல் மரியாதை' ), சிவராம் ( பட்டுக் குஞ்சல் சுயமரியாதை' என்று ) எதிர்க்கட்டுரை எழுதுவதும், பாதிக்கப்பட்ட தமிழவன் தனது கோணத்தில் கட்டுரைகள் எழுதுவதும், இவை போன்ற பக்க வீணடிப்புகளுக்கெல்லாம் 'கொல்லிப்பாவை' இடமளிப்பதும் தவிர்க்க இயலாத நியதியாயிற்று.

தருமு சிவராம் எழுத்துகளுக்கு கொ. பா. அதிக இடம் அளித்துள்ளது.

'கொல்லிப்பாவை'யின் இந்தப் போக்கு அதன் வாசகர்களுக்கு அதிருப்தியே தந்தது. அவ்வப்போது சிலர் தங்கள் அபிப்பிராயங்களை எழுதியிருக்கிறார்கள். மதுரை ரசிகர் ஒருவரின் ( எஸ். டி. லஷ்மணன் ) கருத்து சரியான விமர்சனமாகக் காணப்படுகிறது.

"கொல்லிப்பாவையை ஆரம்பத்திலிருந்து பார்க்கும்போது, உருப்படியானவையாக ந. முத்துசாமியின் 'தெருக்கூத்து', கிருஷ்ணன்நம்பியுடையது ஒன்று, கி. ராஜநாராயணன், அழகிரிசாமி பற்றி எழுதிய கட்டுரை, வெ. சா. வின் 'இரண்டு தலைமுறைகளுக்கிடையில்', பதிலான சுந்தர ராமசாமி

விளக்கம், தருமு சிவராமின் பிரதிரூப சம்வாதம்– இவை தவிர மற்றைய கட்டுரைகள் எல்லாம் ஏதோ நிர்ப்பந்தத்தை ஒட்டி வெளியானவை போன்று தெரிகிறது. கட்டுரை என்ற கருவி கூட 'தனிமனித தூஷிப்பு'க் காக அதிகம் உபயோகிக்கப்பட்டிருக்கிறது. உபயோகித்தவர் யாராக இருந்தாலும் சரி, கட்டுரை பொறுப்புணர்வுக்காக வெளியிடுவதை விட்டு சிற்சில சமயங்களில் நட்பிற்காகவும், 'இந்த உறவு முறிந்துபோய் விடுமோ' என்ற பயத்திலும் வெளியிட்டிருப்பது தெரிகிறது. வெ. சா., த. சிவராம், ஞா. கூ., இவர்களுக்கிடையில் நடைபெற்ற பேனாச் சண்டைக்கு ஒரு களமாக இருந்ததே கொல்லிப்பாவை! இப்படிக் களமாக இருந்ததற்கு கொ. பா. வுக்கு எந்த விதத்திலும் கௌரவம் ஏற்பட்டுவிடாது."

பாராட்டப்பட வேண்டிய சில நல்ல விஷயங்களையும் 'கொல்லிப் பாவை' பிரசுரித்திருக்கிறது.

உலக இலக்கியத்தில் சாதனைகள் புரிந்துள்ள பெரிய படைப்பாளி கள் குறித்து 'கொல்லிப்பாவை' சிறு அளவில் அறிமுகக் கட்டுரைகள் வெளியிட்டு வந்தது. நட் ஹாம்சன், கிரேசியா டெலடா, ஸெல்மா லாகர்லெவ் போன்றவர்களையும் அவர்களது படைப்புகளையும் பற்றித் தமிழ் இலக்கியப் பிரியர்கள் ஓரளவுக்கேனும் அறிந்து கொள்வதற்கு இக்கட்டுரைகள் உதவின.

தமிழ்ச் சிறுகதையில் தனித்தன்மையோடு படைப்புகள் உருவாக் கிச் சிறப்புடன் திகழ்ந்த கு. அழகிரிசாமி பற்றி, அவருடைய நெருங்கிய நண்பரான கி. ராஜநாராயணன் ஒரு நீண்ட கட்டுரை எழுதியிருந்தார்.

'செல்லையா கு. அழகிரிசாமியானது' என்ற அந்த 13 பக்கக் கட்டுரை 'கொல்லிப்பாவை' வரலாற்றில் மிகுந்த சிறப்புடைய விஷயம் ஆகும்.

வெங்கட் சாமிநாதன் எழுதிய 'இரண்டு தலைமுறைகளுக்கிடை யில்' பல உண்மைகளைச் சுட்டிக்காட்டி வாசகர்களைச் சிந்திக்கத் தூண்டிய ஒரு கட்டுரையாக அமைந்திருந்தது.

சுந்தர ராமசாமியின் 'உடல்' என்கிற சோதனை ரீதி நாடகம் குறிப்பிடத்தகுந்தது.

அதைத் தொடர்ந்து இரண்டு சிறுகதைகள் சோதனை ரீதியில் எழுதப்பட்டு வெளிவந்தன.

'கொல்லிப்பாவை' சிறுகதைத் துறையில் அதிக அக்கறை காட்டியது என்று சொல்வதற்கில்லை. அதில் அதிகமான கதைகள் பிரசுரம் பெற்றதில்லை. பிரசுரமான கதைகளும் நினைவில் நிற்கத் தக்கனவாக—குறிப்பிட்டுச் சொல்லப்பட வேண்டியனவாக—விளங்கவில்லை.

கொ. பா. புதுக் கவிதையை ஆதரித்தது. ஆயினும் 'எழுத்து' போல் பரவலான உற்சாகத்தை விதைத்து அதிகம் பேரை எழுதத் தூண்டவில்லை. ஒரு சிலரது கவிதைகளே அடிக்கடி வெளிவந்துள்ளன, பிரேமிள்ஜீ என்றும், பாநுச்சந் ரூஃப் ப்ரேமிள் என்றும் தருமு சிவராம் கவிதைகள் எழுதியிருக்கிறார். மற்றும் நாரணோ ஜெயராமன், உமாபதி, தேவதச்சன், நகுலன், தேவதேவன், கலாப்ரியா, லக்ஷ்மி கண்ணன், சகதேவன் கவிதைகளும் கொல்லிப்பாவை இதழ்களில் வந்திருக்கின்றன.

அபூர்வமாக மொழிபெயர்ப்பில் ஆர்வம் காட்டியது கொ. பா. சில கவிதைகள் தமிழாக்கம் பெற்றுள்ளன. கெ. ஐயப்ப பணிக்கர் மலையாளத்தில் எழுதிய ஒரு கட்டுரை 'பார்வையாளன்' (நாடகம் சம்பந்தப்பட்டது) மொழிபெயர்ப்பாக வந்தது.

தமிழில் மாதந்தோறும் புதிய புத்தகங்கள் நிறைய வந்து கொண்டிருக்கின்றன. சிறுகதைத் தொகுப்புகள், நாவல்கள், புதுக் கவிதை மற்றும் மரபுக் கவிதைத் தொகுப்புகள்—இப்படிப் பல பிரிவுகளிலும் புத்தகங்கள் வருகின்றன. பல வருஷங்களாக வந்துள்ளன. இவற்றில் முக்கியமான சிலவற்றையாவது— முக்கியமான சிலரது எழுத்துக்களையாவது— இலக்கியப் பத்திரிகைகள் என்று சொல்லிக் கொள்கிறவை விமர்சித்தால் நல்லது.

தமிழ்நாட்டின் பல பகுதிகளிலும் சிதறி இருக்கின்ற இலக்கியப் பிரியர்கள் தமிழில் வெளிவந்திருக்கிற—வந்து கொண்டிருக்கிற—புத்தகங்கள் பற்றி அறிந்து கொள்வதில் ஆர்வம் உடையவர்களாக இருக்கிறார்கள். பத்திரிகைகளில் வரக்கூடிய 'நூல் அறிமுகம்', 'புத்தக மதிப்புரை' பகுதிகள் அவர்களுக்கு உதவக்கூடும். சிறு பத்திரிகைகள் இந்தப் பணியை நன்கு செய்ய முடியும்; செய்ய வேண்டும்.

ஆனால், செய்வதில்லை. தமிழில் பல நல்ல நாவல்கள், சிறுகதைத் தொகுப்புகள் வெளிவந்திருக்கின்றன. அவை உரிய கவனிப்பைப் பெறாமல் இருட்டில் ஆழ்ந்து கிடக்கின்றன. சிறு பத்திரிகைகள் அத்தகைய வெளியீடுகள் குறித்து அறிமுகக் கட்டுரைகளும், விமர்சனங்களும் வெளியிடலாம்.

ஆனால், செய்வதில்லை. ஆசை நிறைந்த திட்டத்தை, கொள் கையை வெளியிட்ட 'கொல்லிப்பாவை' கூட இப்படிப்பட்ட பயனுள்ள காரியத்தைச் செய்ய முன்வரவில்லை.

அதன் பிற்காலப் பகுதியில், கொ. பா. புத்தக மதிப்புரைகளைப் பிரசுரித்தது. ஆனால், அதிலும் 'வேண்டுதல் வேண்டாமை' நோக்கே தென்படுகிறது. தனக்குத் தெரிந்தவர்கள், வேண்டியவர்கள் புத்தகங்க ளைப் பாராட்டுவதும், வேண்டாதவர்கள்– மற்றவர்கள் புத்தகங்களைக் குறை கூறுவதும் கிண்டல் செய்வதுமான தொனியே இக்கட்டுரைகளில் மேலோங்கி நிற்கின்றது.

வேதசகாயகுமார் எழுதிய 'தமிழ்ச் சிறுகதை வரலாறு' பற்றி நகுலன் ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார். வெங்கட்சாமிநாதனின் 'அக்ரகாரத்தில் கழுதை' பற்றி சில கட்டுரைகள், சாகித்திய அகாடமிப் பரிசு பெற்ற தி. ஜானகிராமனின் 'சக்தி வைத்தியம்' சிறுகதைத் தொகுப்பு பற்றி வேதசகாயகுமார் விமர்சனம், பாப்ரியாவின் இரண்டு கவிதைத் தொகுதிகள், செவ்வண்ணனின் 'திசை தெரிந்த அம்புகள்' (கவிதை) பற்றி அபிப்பிராயங்கள்—இவ்வளவுதான் கொல்லிப்பாவையின் கவனிப்பைப் பெற்றுள்ளன.

"விமர்சனமும் இலக்கியமாக, இலக்கிய அக்கறை கொண்ட விமர் சனப் பார்வைகள் வளர ஒரு களம் அமைத்துச் செயல்பட வேண்டும் என்பது கொல்லிப்பாவையின் நினைப்பு" என்று அறிவிக்கப்பட்டிருந்தது செயல்வடிவமாக மலர்ச்சி பெறவேயில்லை என்பது வருத்தத்துக்கு உரியது.

'கொல்லிப்பாவை' 1981– ல் ஒன்றோ இரண்டோ வெளிவந்தது. 1982– ல் அது பிரசுரம் பெற்றதாகத் தெரியவில்லை.

# 20. தெறிகள்

சிறு பத்திரிகைகளுள் விசேஷமாகக் குறிப்பிடப்பட வேண்டியவற்றில் 1970 களில் பிரசுரமான 'தெறிகள்' என்பதும் ஒன்று ஆகும்.

இலக்கிய ஆர்வமும், கவிதை எழுதும் ஆற்றலும் பெற்ற உமாபதி பத்திரிகைத் துறையில் தன்னாலியன்றதைச் செய்ய ஆசைப்பட்டு, 'தெறிகள்' என்ற இதழை ஆரம்பித்தார். முதலில் விருதுநகரிலிருந்து வெளிவந்த இந்தச் சிறு பத்திரிகை பின்னர் நாகர்கோவிலிலிருந்து பிரசுரமாயிற்று.

'கசடதபற' மாதிரி தோற்றம் கொண்டிருந்த 'தெறிகள்' கவிதை, சிறுகதை, இலக்கியம் சம்பந்தமான கட்டுரைகளைத் தாங்கி வந்தது. ஓவியங்களிலும் அது அக்கறை காட்டியது. அட்டையில் 'மாடர்ன் ஆர்ட்' சித்திரங்கள் அச்சாயின.

'பொதுவாக, சிறு பத்திரிகைகளில் அச்சாகி வந்த 'மாடர்ன் ஆர்ட்' ஓவியங்கள் எதைக் குறிக்கின்றன, என்ன அழகுகளை, நயங் களை அல்லது உண்மைகளை அவை சித்திரிக்கின்றன என்று விளங்கிக்கொள்ள இயலாதுதான். படங்கள் ( ஓவியம் ) என்று பெயருக்கு அவை இடம் பெறுகின்றன என்றே கூறலாம்.

இதுபற்றி 'தெறிகள்' பொருத்தமான மேற்கோள் ஒன்றை வெளி யிட்டுள்ளது :

"ஓவியங்களை விளக்குவது முழுதும் நிறைவேறக்கூடியதில்லை. இது கூடாது என்பேன். ஓவியத்தை விமர்சிப்பதே வேண்டாம். எவ்வளவு தேர்ந்த விமர்சனமும் அவ் ஓவியத்தை முழுதும் சொல்லிவிடக் கூடிய தில்லை. இது சாத்தியமுமில்லை."

உமாபதி தனக்கெனத் தனித்ததொரு போக்கு வகுத்துக் கொண்டி ருந்தார் என்று தோன்றியது. 'தெறிகள்' இதழ் ஒன்றில் அவர் குறித் திருப்பது இது—

"உனது இலக்கியக் கொள்கை என்ன? அல்லது இதெல்லாம் எதற்கு என்பன போன்ற கேள்விகளையெல்லாம் சந்திக்கிறபோது

மௌனமாகவோ அல்லது அந்த க்ஷணத்தில் தோன்றியது மாதிரி ஏதேனும் சொல்லி உள்ளூர வருந்தியோ ஒதுங்கியிருக்கிறேன். இதற் கெல்லாம் பதிலை ஒரு Theory ஆக evalute பண்ண முடியாது என்றே எண்ணுகிறேன். இன்று சிலாகிக்கப்படுகிற இலக்கியக் கொள்கைகளில் பல, இன்னுமொரு நாள் பரிதாபகரமாக வீழ்ச்சி யடைந்து போகிற வளர்ச்சி இருக்குமென நம்புகிறேன்.''

ஐந்து இதழ்கள் சாதாரணமாக வந்தபிறகு, பத்திரிகையின் அமைப் பிலும் உள்ளடக்கத்திலும் சிறப்பான முன்னேற்றங்கள் காட்ட விரும்பி னார் உமாபதி. இது 'தெறிகள்' புதிய பரிணாமத்தில் புலனாயிற்று.

'காலாண்டு இதழ்–1' என்று குறிக்கப் பெற்றுள்ள இதழ் எந்த வருஷம் எந்த மாதம் தயாராயிற்று எனத் தேதியிடப் பெறவில்லை. இது ஒரு சிறப்பு மலர் போலவே அமைந்துள்ளது.

"தெறிகளின் பரிணாம வளர்ச்சியில் இந்த இதழ் ஒரு முக்கியமான Phase ன் துவக்கம். கடந்த ஐந்து இதழ்களில் 'தெறிகள்' என்ன சாதித்திருக்கிறது என்று புள்ளி விவரம் எடுத்துப் பார்ப்பது எப்படி உபயோகமில்லாத விஷயமோ அதேபோல் புதிய 'தெறிகள்' என்ன சாதிக்க இருக்கிறது என்று பட்டியல் தருவதும்.

இதெல்லாம் முக்கியமல்ல.

தமிழில் நவீன இலக்கியம் வளர்ச்சியின்றித் தேங்கிப் போய்விட்டது என்பதில் வாதப்பிரதிவாதங்கள் இருக்கலாம். இது எந்த மொழியிலும் எப்பொழுதும் நிகழ்ந்து கொண்டுதான் இருக்கும். அப்படி நிகழ்தலே வளர்ச்சியின் அடையாளம்.

தமிழில் சிறு பத்திரிகைகள் கணிசமான அளவிற்குத் தோன்றிவிட் டன, 'தெறிகள்' ஈறாக. இவைகள் declare செய்கிற அல்ல–தருகிற விஷயங்களை வைத்தே வளர்ச்சியின் தன்மை உருவாகும். யாரும் அவ சரம் கொள்ள வேண்டாம். உள்ளேயும் வந்தாகிவிட்டது. திரைகளும் தூக்கப்பட்டுவிட்டன. இனி நடப்பதைப் பார்த்துக் கொண்டிருப்பதே முறை. காட்சி மாற்றங்களின்போது பேசிக் கொள்வோம்.''

இப்படி உமாபதி அறிவித்திருந்தார்.

90 பக்கங்கள் ( அட்டை தனி ) கொண்ட இந்த இதழில் சம்பத் எழுதிய 'இடைவெளி' ( குறுநாவல் ) 42 பக்கங்களும், கலாப்ரியாவின் 'சுயம்வரம்' (குறுங்காவியம் ) 28 பக்கங்களும் வந்துள்ளன. இவை இரண்டுமே சோதனை ரீதியான படைப்பு முயற்சிகளாகும்.

சம்பத்தின் நாவல் 'சாவு' என்கிற பிரச்னையை மையமாகக் கொண்டது. அறிவுஜீவி ஒருவன் சாவின் உண்மைத் தன்மையைத் திட்டவட்டமாகத் தெரிந்துகொள்ள முயல்கிறான். அவனுடைய எண்ண ஓட்டங்கள், மனக் குழப்பங்கள், அவனைப் பற்றி மற்றவர்கள் கொள்ளும் அபிப்பிராயங்கள், சாவு பற்றி பலரக மனிதர்களின் கருத்துக்களை அறிய அவன் செய்யும் முயற்சிகள், 'சாவு' டன் சம்பாஷிப்பதாகக் கூறும் அவனுடைய பேச்சுக்கள். அவன் கொள்கிற முடிவு இவற்றையெல்லாம் இந்த நாவல் சித்திரிக்கிறது. நல்ல படைப்பு.

கலாப்ரியாவின் 'சுயம்வரம்' தனிரகமானது. "ஒரு கவிதையோட பொருளுக்குப் பரிமாணம் இருப்பதாய் உணர்கிறேன். இதைத் தடவிப் பார்க்கிற பரிமாணமெனச் சொல்லவில்லை. அனுபவபூர்வமான வெளிப்பாடு இந்த பரிமாணத்தின் மூலம் வியாபிக்கும். பரிமாணப் பிரக்ஞை ஒரு சுவாரஸ்யமான விஷயம்... (இந்தத் தொகுப்பில் நான் முழுக்க முழுக்க பரிமாணப் பிரக்ஞையோடு சோதனை செய்திருக்கிறதாய் நம்புகிறேன்). இந்தக் கவிதைகள் முழுக்க என் பரிமாணப் பிரக்ஞையைப் பாதித்த விஷயங்கள். இவைகள் கவனிக்கப்பட வேண்டுமென்ற ஆர்வம்கூட சாதாரண ஆர்வமாய்த் தோணலை. இவைகளுக்கு விளைவு இருக்க வேண்டுமென்று வெட்கமில்லாமல் விரும்புகிறேன்" என்று கலாப்ரியா கூறியிருக்கிறார்.

("சுயம்வரம் கவிதைகள் வெளிவந்து பல வருடங்கள் ஆகியும், அவை கவனிக்கப்படவேயில்லையே. சரியானபடி கவனிப்பைப் பெறவில்லை" என்று கலாப்ரியா மனக்குறையோடு என்னிடம் 1982–ல் குறிப்பிடடது நினைவில் நிற்கிறது.)

இந்த இதழில் அச்சாகியுள்ள ஓவியங்களை வரைந்த ஏ. நாகராஜன் பற்றி 'கலைஞனின் குழப்பங்கள்' என்று வண்ணநிலவன் ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார்.

'வானம்பாடி' குழுவினர் பிரசுரித்த 'வெளிச்சங்கள்' கவிதைத் தொகுப்பு பற்றிய வெங்கட்சாமிநாதன் விமர்சனம் (12 பக்கங்கள்) ஒன்றும் வந்துள்ளது.

மற்றும், நாரணோ ஜெயராமன், ஷண்முக சுப்பையா, காஸ்யபன், உமாபதி எழுதிய கவிதைகளும் உண்டு.

இந்த இதழ் கிடைத்த மூன்றாம் மாதத்தில், 'அடுத்த இதழ் இன்னின்ன விஷயங்கள் தாங்கி வெளிவரும்' என்று அறிவிக்கப்பட்டிருந்தது. ஆனால், வரவில்லை.

முதலாவது காலாண்டு இதழின் தரத்தோடு, மேலும் சில இதழ்கள் சிரத்தையுடன் தயாரிக்கப்பட்டு 'தெறிகள்' வந்திருக்குமானால், அது அரிய சாதனைகள் செய்திருக்கக் கூடும்; நவீன தமிழ் இலக்கியம் 'தெறிகள்' மூலம் சிறிது பசுமை ஏற்றிருக்கவும் கூடும்.

# 21. சுவடு

சிறு பத்திரிகைகள், தனி நபர்களால் தொடங்கி நடத்தப்பட்டாலும், அல்லது இலக்கிய ஆர்வமுள்ள சிலரால்—ஒரு குழுவால்—நடத்தப்பட்டா லும், காலப்போக்கில் குறைபாடுகளை உடையதாக மாறிவிடுவதே இயல்பாக இருந்து வருகிறது. தனிநபரின் விருப்பு வெறுப்புகள் அல்லது குழுவினரின் கோஷ்டி மனோபாவம் அவரவர் பத்திரிகையின் நோக்கி லும் போக்கிலும் வெகுவாகப் பிரதிபலிக்கவே செய்யும். அப்படி ஆகிற போது பொதுவான இலக்கிய சிரத்தை பின்னுக்குத் தள்ளப்பட்டு விடுகிறது.

இந்தக் குறைபாடு இல்லாமல், பொதுவான இலக்கிய ஏடு—தர முள்ள சிறு பத்திரிகை ஒன்றை நடத்த வேண்டும் என்ற ஆசையும் ஆர்வமும் புதுக்கோட்டை இளைஞர்கள் சிலருக்கு ஏற்பட்டது. அவர்கள் 'சுவடு' என்ற பெயரில் ஒரு சிற்றேடு ஆரம்பித்தார்கள்.

'சுவடு' முதலாவது இதழ் 14–4–1978–ல் வெளிவந்தது.

முதல் இதழில் 'பயணம்' என்ற தலைப்பில் அவர்களது நோக்கம் தெளிவாக அறிவிக்கப்பட்டது—

"இலக்கிய வெளியில் வலது கால் பதிக்கும் இந்த நேரத்தில் சுவடு உங்களுடன் வாழ்த்துக்களையும் வணக்கங்களையும் பகிர்ந்து கொள்கிறது.

இது இலக்கியச் சிற்றேடுகளின் காலம். வாழ்ந்து மறைந்த ஏடு களையும் இன்று வந்து கொண்டிருக்கும் சிற்றேடுகளையும் கணக்கில் எடுத்துக் கொண்டே இந்த ஏடும் துவங்குகிறது. இன்றைய இலக்கியச் சூழலில் இலக்கியவாதிகள் தனி மரங்களாகவும் குழுக்களாகவும் பிரிந்து செயற்படுவதால் இலக்கியச் சிற்றேடுகள் உள் வட்டத்தில் சிறு வட்டம் அமைத்து நிற்கின்றன. எல்லாத் தரப்பினருக்கும் பொது மேடையாக அமைய சுவடு ஆசைப்படுகிறது.

உடன் நடக்கும் பாதங்கள் எவை எவை என்று நாங்கள் நிர்ண யிக்கவில்லை. காலத்தை அழுக்காக்காத கால்கள் உங்களுடையதென்றால்

நாங்கள் உடன் நடக்க சம்மதம்தான். கண நேரத்தில் மறையும் கடற் கரை சுவடாக இல்லாமல் காலம் காலமாக நிலைபெறும் கல்வெட்டுச் சுவடாக அமைய நீங்களும் உதவுங்கள்."

இந்த நல்ல நோக்கத்துடன் ஆரம்பிக்கப்பட்ட சுவடு, கவிதை, சிறுகதை, கட்டுரை, விமர்சனம் முதலிய படைப்புகளில் அக்கறை காட்டியது.

முதல் இதழில் புவியரசு, மு. மேத்தா, நா. விச்வநாதன் கவிதைகள் இடம் பெற்றிருந்தன.

'கடலில் பெய்த மழை' என்றொரு கதை அகல்யா எழுதியது.

க. துரைப்பாண்டியன் 'நினைத்துப் பார்ப்பது நல்லது' என்ற கட்டு ரையில் , புதிய எழுத்தின் உத்தி, நடை, புரிதல் போன்ற பல விஷயங் கள் பற்றி சிந்திக்க வைக்கும் எண்ணங்களை எழுதியிருந்தார். பத்திரி கைகளில் வந்த எழுத்துக்கள், எழுத்தாளர்களின் போக்குகள் சம்பந்த மான சில கருத்துக்களை அக் கட்டுரை வெளியிட்டது. முடிவாகக் கட்டுரையாளர் கூறியுள்ள வேண்டுகோள், எழுதுகிறவர்கள் தங்கள் கவனத்தில் கொள்ள வேண்டிய நல்ல எண்ணம் ஆகும். அந்தப் பகுதி இது தான்—

"என்னுடைய கவலையெல்லாம் எழுத்தாளனின் எண்ணங்கள் வாசகனுக்குப் போய்ச் சேர வேண்டும் என்பதுதான். நாகரிகமாக எழுதுங்கள். உங்கள் எழுத்துக்களில் நளினம் நடமாடட்டும். கனமான செய்திகள் என்று கூறி புரியாமல் எழுதாதீர்கள். மூளை வலிக்கிறது. உங்கள் படைப்புக்களை கருவறைத் தெய்வமாக்காதீர்கள். கோபுரக் கலசமாக்குங்கள். உங்கள் சிந்தனைகளை வடமொழிச் சுலோகங்களாக் காமல் நாட்டுப் பாடல்களாக்குங்கள். என்ன எழுதுகிறோம் என்று அலட் டிக் கொள்ளும் நவீன இலக்கியவாதிகள் எப்படி எழுதுகிறோம் என்றும் நினைத்துப் பார்ப்பது நல்லது."

இது தவிர, 'வெங்கட்சாமிநாதனின் இலக்கியப் பார்வை' பற்றி பாலா எழுதிய கட்டுரையும் இருந்தது.

'குறிப்புகள்' என்ற தலைப்பில், முக்கிய நிகழ்ச்சிகள் அல்லது குறிப்பிடத்தகுந்த தகவல்கள், செய்திகள்—அவற்றின் மீது குத்தலான அல்லது நகைச்சுவை பொருந்திய குறிப்புரைகள் தரப்பட்டன.

பார்வை என்ற பகுதியில் புத்தகங்களுக்கு விரிவான மதிப்புரை இடம்பெற்றது.

மீரா 'அந்தப் பக்கம் இந்தப் பக்கம்' பகுதியில் சுவாரஸ்யமாகவும் கிண்டலாகவும் பொது விஷயங்கள் பற்றி அபிப்பிராயங்கள் எழுதினார்.

இவை வழக்கமான அம்சங்களாயின.

இவ்வாறு 'இலக்கிய வெளியில் புதிய சுவடு' பதிக்க முன் வந்த சிறு பத்திரிகையின் ஒவ்வொரு இதழும் இலக்கியத் தரமானதாக அமைந்து, சுவடு நல்ல பத்திரிகை என்ற எண்ணத்தை உறுதிப் படுத்தியது.

வண்ணதாசன், பூமணி, நா. விச்வநாதன் ஆகியோரின் நல்ல கதைகள்; புவியரசு, ப. கங்கைகொண்டான், துரை சீனிச்சாமி, விச்வ நாதன், கிவி மற்றும் புதியவர்கள் பலரது கவிதைகள்; அபூர்வமாகச் சில மொழிபெயர்ப்புக் கவிதைகள்; 'அபத்தவாத நாடகங்கள்' பற்றிய நீண்ட கட்டுரை சுவடு இதழ்களில் வந்துள்ளன.

விசேஷமாகக் குறிப்பிட வேண்டிய ஒரு சாதனையைச் சுவடு தனது நாலாவது இதழில் நிகழ்த்தியது. விமர்சகர்கள் பற்றிய விமர்சன இதழ் வெளியிட்டதுதான் அது.

"படைப்புகளை விமர்சிப்பவன் கலை இலக்கிய ஆக்க வளர்ச்சிக்கு உதவும் வகையில் செயல்படுகிறபோது அவனும் ஒரு படைப்பாளியாக உயர்வடைவதைப் பார்க்கிறோம். படைப்பாளியின் அங்கீகரிப்பிற்கு உதவும் அதே நேரத்தில் சில விமர்சகர்கள் படைப்பாளியின் மீது ஆதிக்கம் செலுத்தும் போக்கையும் காண்கிறோம். இந்தச் சூழலில் நம் சமகால விமர்சகர்களின் ஆக்க ரீதியான சாதனைகளை ஒரு மதிப்பீட்டிற்கு உள்ளாக்குவது நல்லது என்ற எண்ணத்தில் இந்த விமர்சகர் இதழை சுவடு வெளியிட முன்வந்துள்ளது. இதில் பார்வைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ள விமர்சகர்களின் பங்கு பற்றித் தெரிவிக்கப்படும் அபிப்பிராயங்கள் முடிவானவை அல்ல என்பதைச் சுவடு அறிந்திருக்கிறது.

இது பொது மேடை. ஆரோக்கியமான, ஆக்க ரீதியான கலை இலக்கியச் சிந்தனைகள் எந்தத் திசையிலிருந்து வந்தாலும் சுவடு தீண்டாமை பாராட்டாது."

இந்த விமர்சனச் சிறப்பிதழில் வெளியான கட்டுரைகள்—

1. நம்பிக்கையூட்டும் தமிழ் விமர்சகர்கள்—வல்லிக்கண்ணன் எழுதியது. தமிழில் இலக்கிய விமர்சனம் ஆரோக்கியமாக வளரவில்லை—வளர்க்கப்படவில்லை என்ற குறையை எடுத்துச் சொன்ன கட்டுரை விமர்சகர்கள் பலரது போக்குகள் குறித்தும் அபிப்பிராயம் தெரிவித்தது. முடிவாக, 'வளர்ச்சி பெற்றுள்ள— புதிதாகத் தோன்றி வளர்ந்து வருகிற— திறமையுள்ள படைப்பாளிகள் குறித்தும் அவர்களுடைய படைப்புகள் குறித்தும் அவர்களுக்கும் வாசகர்களுக்கும் சரியானபடி எடுத்துச் சொல்லக் கூடிய இலக்கிய விமர்சகர் இன்று தேவை' என்று அறிவித்தது.

இத்தேவை இன்று வரையிலும் பூர்த்தி செய்யப்படவேயில்லை என்பது இங்கு குறிப்பிடப்பட வேண்டிய உண்மையாகும்.

2. சு. நா. சுவின் விமர்சன முகம்—சுந்தர ராமசாமி. 3. ரகுநாதன்—தமிழவன். 4. வெங்கட்சாமிநாதன்—வண்ண நிலவன். 5. நா. வானமா மலை—தி. க. சி.

சி. சு. செல்லப்பா பற்றி கனகசபாபதியும், க. கைலாசபதி குறித்து தி. சு. நடராசனும் எழுதித் தர ஒப்புக்கொண்ட கட்டுரைகள் வந்து சேராததால், அவை சிறப்பிதழில் பிரசுரம் பெறவில்லை.

பின்னர் அனைத்துக் கட்டுரைகளும் 'தமிழ் விமர்சனப் பார்வை' என்ற புத்தகமாகப் பிரசுரிக்கப்பட்டன.

இந்தச் சிறப்பிதழ் 1973 அக்டோபரில் வெளிவந்தது.

ஏப்ரல் மாதம், மாத இதழாகத் திட்டமிடப்பட்டுத் தோன்றிய 'சுவடு' வின் 5—வது இதழ் டிசம்பர் மாதம்தான் வெளிவர முடிந்தது. அந்த இதழ் தனிச் சிறப்பு உடையது.

படைப்பாளி 'லா. ச. ராமாமிருதத்தின் தத்துவத் தேடல்கள்' என்ற பேட்டிக் கட்டுரை அதில் வந்தது. அவருடைய இலக்கிய அனுபவங்கள், உள்முகத் தேடல்கள், அபிப்பிராயங்கள் ஆழமாகவும் அழகாகவும் அதில் வெளிப்பட்டிருந்தன. அவரிடம் அதற்கான முறையில் கேள்விகள் கேட்டவர் கவிஞர் அபி.

அத்துடன் 'மூன்று பல்கேரியப் படங்கள்' பற்றி எஸ். ஏ. ராம் விரிவான கட்டுரை எழுதியிருந்தார்.

சுவடு 6–வது இதழில் சுயவிமர்சன அறிவிப்பு ஒன்று வெளி வந்தது.

"மாத இதழாக மலர்ந்து இடையில் 'இரு மாதம் ஒருமுறை' என மாறி ஆண்டு நிறைவை எய்தவிருக்கிறது ! இந்த ஆறு இதழ்களில் பெரிதாக ஒன்றும் சாதித்துவிடவில்லை என்பதை அறிவோம். ஆனால் இனி வரும் நாட்களில் நிறையச் சாதிப்பதற்குரிய பயிற்சியும் அனுபவமும் இக்குறுகிய காலத்திலேயே சுவட்டிற்குக் கிட்டியிருக்கிறது. சுவடு ஒரு பொது மேடை என்ற எங்கள் முதல் இதழ் பிரகடனத்திற்கேற்ப இன்றைய தமிழ் இலக்கியத்தின் சகல கருத்துக்களும் சந்திக்கும் ஒரு களம் என்பதை மெய்ப்பிக்க ஓரளவு முயன்றுள்ளோம். மாற்றுக் கருத்துக்களை முகம் கொடுத்து சந்திக்கவே விரும்பாமல் ஒரு சேணம் பொருத்திய பார்வையுடன் சிறு பத்திரிகைகள் விளங்கியபோது, அனைவரும் அரங் கேறலாம் எனச் சுவடு அழைப்பு விட்டது. 'இது அவர் ஏறிய மேடை. நான் மாட்டேன்' என்று ஓடிப் போகிறவர்களும் இல்லாமல் இல்லை. 'இது எது, எந்த குரூப் என்று இன்னும் புலப்படவில்லையே' என்று சொல்லிக்கொண்டு இன்னும் காத்துக் கொண்டிருப்பவர்களும் இருக்கத் தான் செய்கிறார்கள். இவர்களுக்கிடையில் சுவடு பக்கங்களில் வந்து கலந்துகொண்ட அனைத்து நண்பர்களுக்கும், சுவடுமீது ஆர்வமும் அக்கறையும் கொண்டு சந்தாக்களும் படைப்புகளும் அனுப்பி வரும் அன்பர்களுக்கும் சுவடு பிரியமுடன் தன் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறது."

மேலும் சில வரிகளுக்குப் பிறகு தனது எதிர்காலத் திட்டம் பற்றியும் அது கூறியது–

"புதியவர்களுக்கு நிறைய உற்சாகம் தரப்படும். உற்சாகமிழக்காத பழையவர்களின் படைப்புகளும் இடம் பெறும். குறிப்பாகத் தமிழ் நவீன நாடியாக சுவடு விளங்க முயற்சி செய்யும். புதிய தமிழ் எழுத்தின் போக்கிற்கும் நோக்கிற்கும் வெளித்தடைகள் வணிக ரீதியில் இயங்கிக் கொண்டிருக்கும்போது சுவடு போன்ற ஒரு இலக்கிய இதழுக்கு ஆதர வளிக்கவேண்டிய தார்மீகக் கடமை தமிழ் இலக்கியத்தின்மீது அக்கறை யுள்ள எங்களுக்கும் உண்டு. இதில் உங்கள் பங்கையும் செலுத் துங்கள்."

சுவடு 'ஆனந்தவிகடன்' அளவில் வந்தது. ஆரம்பத்தில் 24 பக்கங் களும், பின்னர் 32 பக்கங்களும் கொண்டிருந்தது.

அதன் ஏழாவது இதழ் 'இரண்டாம் ஆண்டுச் சிறப்பிதழ்' என்று 56 பக்கங்களோடு வந்தது. அதில் ஈழத்து இலக்கியங்கள்– ஓர் அறிமுகம் (ஜவாது மரைக்கார் ), மெய்–பொய் (அசோகமித்திரன்), வார்த்தைகளும் வாழ்க்கையும் (மௌனி கதைகள் பற்றி–அகல்யா), ஞானபீடம் பரிசு பெற்ற சச்சிதானந்த ஹீரானந்த வாத்ஸ்யாயன்– 'ஆக்ஞேய' பற்றிய அறிமுகம் (என். ஸ்ரீதரன்), டில்லியில் ஏழாவது உலகத் திரைப்பட விழா ( கலாஸ்ரீ ) ஆகிய கட்டுரைகள் உள்ளன.

“நா. விச்வநாதன் கவிதைகள்–4 பக்கங்கள் மற்றும் புவியரசு, கலாப்ரியா, அபி, கிவி கவிதைகள்.

சுந்தர ராமசாமி, பா. செயப்பிரகாசம், வா. மூர்த்தி கதைகள் இவற்றுடன் இம்மலர் நல்ல விருந்தாக அமைந்திருந்தது.

அதன் பிறகு சுவடு வெகுகாலம் நீடித்திருக்கவில்லை. விரைவிலேயே ஒரு அறிவிப்பு தந்துவிட்டு, அதன் பிரசுரத்தை நிறுத்திக் கொண்டார்கள் சம்பந்தப்பட்டவர்கள்.

'சுவடு' நெடுங்காலம் வாழ்ந்து வளர்ந்திருக்க வேண்டிய சிறு பத்திரிகை. அதைப் போன்ற ஒரு இலக்கியப் பத்திரிகை இன்றுகூடத் தேவைதான். சுவடு இதழ்களைத் திருப்பிப் பார்க்கிற போதெல்லாம் இந்த எண்ணம் எழத் தவறுவதில்லை.

# 22. வைகை

சிறு பத்திரிகைகளில், தரமான ஏடுகளில், 'வைகை' யும் முக்கிய இடம் பெறுகிறது.

வைகை மதுரையிலிருந்து வெளிவந்தது. அதன் முதல் இதழ் ஆகஸ்ட் 1977–ல் தோன்றியது. 1981– ல் வெளிவந்த 28–ம் இதழுக்குப் பிறகு வைகை வரவில்லை.

அதன் முதலாவது இதழில் பிரசுரமான அறிவிப்பு இது :

"வைகையின் நோக்கங்கள் பற்றி அதன் சாதனைகளை வைத்தே தீர்ப்புச் சொல்ல முடியுமென்பதால் இப்போதைக்கு மௌனமே எங்கள் பிரகடனம். ஆனாலும், இன்னொரு பத்திரிகைக்கான அவசியத்துக்கான காரணங்கள் எவையேனும் இருந்தால் அவற்றைச் சொல்லிவிடலா மல்லவா?

மொத்தத்தில் ஒரு தரச் சீரழிவுக்கு நாம் வாழுகிற காலம் சாட்சி யாயிருக்கிறது. கலையிலும் இலக்கியத்திலும் தரமிருந்தாலே ஜீவிதத்திலும் தரமிருக்கும். இந்தத் தர நிர்ணயமின்மையைப் பற்றி பிரக்ஞையின்மையே நம் வாழ்க்கையின் குணம். தரம் பற்றிய பிரக்ஞையை உருவாக்குவதும், அதை உயிர்பெறச் செய்து பரவலாக்குவதும் நம் தனித் தன்மையைக் காத்து நம்மை மந்தைகளாக்காமல் காக்கும் என்ற நம்பிக்கையே வைகையின் தோற்றத்துக்கு ஆதாரமும் நியாயமும்.

'வைகை' ஒரு 'சுத்த இலக்கிய' இதழ் அல்ல. நவீன வாழ்க்கை யின் எல்லா அம்சங்களையும் பரிசீலித்து ஒரு தரமுள்ள வாழ்க்கைக் கான சூழலை உருவாக்குவதில் உடன்பாடான சக்திகளை ஒன்றுபடுத்து கிற சாதனமாகவும் விளங்கும்.

பொதுவாக நிலவுகிற நாகரிக நிலைகளைத் தீர்மானிப்பதில் நம் கல்வி ஏன் பங்கெடுத்துக் கொள்ளவில்லை; கொள்கைப் பற்றின்றி நம் கட்சி அரசியலில் எவ்வாறு அடிப்படை மனித மதிப்பீடுகள் கூடப் புறக்கணிக்கப்படுகின்றன; அளவிலும் அபாயத்திலும் வீங்கி வருகிற விளம்பரங்கள் போன்ற விஷயங்கள் விவாதிக்கப்படுகிற மேடையாக 'வைகை' விளங்கும். ஒவ்வொரு வருஷமும் நூற்றுக்கணக்கில்

பல்கலைக்கழகங்களை விட்டு வெளியேறுகிற ஆண்களும் பெண்களும் தங்கள் அழகியல் ஈடுபாடுகளை அரிக்கக் கொடுத்துவிட்டு போலியான திருப்தி, தர வேட்கையின்மை, சோம்பேறித்தனம் இவற்றைச் சுவீகரித்துக் கொள்கிறார்கள். இவர்களில் தர ஆர்வமுள்ள சிலரது வளர்ச்சியையாவது சீராக்க ஒரு குவிமையமாக இருந்து ஒன்று சேர்த்துவைக்க முடிந்தால் 'வைகை' சந்தோஷப்படும்.

இதுவரை பொதுவாகத் தரப்பட்டிருக்கிற அளவில் நாங்கள் உணர்ந் திருக்கிற எங்கள் ஈடுபாடுகள் ஓரிரு இதழ்களில் தெளிவாகும்.

Original Composition களை வெளியிடுவதற்கு நிறையப் பத்திரி கைகள் இருக்கின்றன. என்றாலும் 'வைகை' இவற்றை அநேகமாகப் புறக் கணிக்கா. பிரசுரத்துக்கு விஷயங்களைத் தேர்ந்தெடுப்பதில் 'வைகை'க்கு ஒரு வழிமுறை உண்டென்றாலும் மாறான கருத்துக்களும் பிரசுரமாகும்– அவற்றுக்கு விவாதத்தைத் தொடங்கி வைக்கிற அளவு ஆழமான முக்கி யத்துவம் உண்டென்றால்.

எந்த தியாகமும் செய்யாமல் தற்குறிகளெல்லாம் புகழ் பெறுவதும் கௌரவிக்கப்படுவதும் இங்கு மட்டுமே நடக்க முடிந்த விபத்துக்கள். எச்சரிக்கைக் குரல்கள்–பிரக்ஞை, வைகை என– நிறைந்தால் விபத்துக்கள் குறையலாம்.''

வைகையின் ஆசிரியர் ஆர். குமாரசாமி. அவரும் அவருக்குத் துணை சேர்ந்திருந்தவர்களும் சிறு பத்திரிகையான 'பிரக்ஞை'யை முன்மாதிரியா கக் கொண்டிருந்தார்கள் என்பது மேலே கண்ட அறிவிப்பிலிருந்து புரியும். மேலும், அக்காலத்திய சிறு பத்திரிகைகள் பலவற்றைப் பெரிதும் பாதித்து வந்த வெங்கட்சாமிநாதனின் கருத்துக்களிலும் எழுத்துக்களிலும் மிகுந்த ஈடுபாடும் அட்மிரேஷ'னும் கொண்டவர்கள் அவர்கள் என்பதை முதலாவது இதழே புலப்படுத்தியது.

முதல் இதழின் முதல் கட்டுரை 'முகங்கள்' ( சி. மோஹன் ) வெ. சாமி நாதனுக்கு ஆதரவாக, 'கணையாழி'யின் முஸ்தபாவையும் இந்திரா பார்த்தசாரதியின் போக்கையும் எதிர்த்து எழுதப்பட்ட நீண்ட பதில் (6 பக்கங் கள்) ஆகும். அடுத்தது, 'அக்கிரகாரத்தில் கழுதை' (வெ. சா. வின் நாடகம்) பற்றிய தி. ஜானகிராமன், சுந்தர ராமசாமி, சி. மோஹன் கடிதங்கள், (8 பக் கங்கள்). மூன்றாவதாக, 'அக்கிரகாரத்தில் கழுதை' பற்றி ந. முத்துசாமி யின் 13 பக்கக் கட்டுரை.

'வைகை' இதழ்களில் வெ. சா. ஒரு கட்டுரைகூட எழுதவில்லை.

ஆனாலும் அவருடைய தாக்கம் வைகைக் குழுவினரை இயக்குவித்திருக் கிறது. இதை அதன் இதழ்கள் நிரூபிக்கின்றன.

முதல் இரண்டு இதழ்களில் வைகை கவிதைகள் பிரசுரித்தது. பின்னர், 'கதைகள், கவிதைகள் ஏற்றுக் கொள்ளப்படமாட்டா' என்று அறிவித்து வந்தது. சிந்தனைக் கட்டுரைகள், முக்கியமாகப் புத்தக விமர்சனங்கள் வேண்டும் என்று தெரிவித்துக் கொண்டிருந்தது. அவர் கள் எதிர்பார்த்த தரத்துக்குக் கட்டுரைகள் வரவில்லை. ஆகவே, இதழ் கள் காலதாமதத்துடனேயே பிரசுரமாயின.

'வைகையின் தாமதத்திற்குக் கட்டுரைகள் வராததும் ஒரு காரணம். போதுமான விஷயங்கள் கிடைத்தால் இந்தத் தாமதம் தவிர்க்கப்படும்' என்றும் ஒரு இதழில் அது அறிவிப்புச் செய்தது.

'வைகை' ந. முத்துசாமியின் நீண்ட கட்டுரைகளை அதிகம் வெளி யிட்டுள்ளது. தெருக்கூத்து பற்றி அவர் நிறைய எழுதியிருக்கிறார். தெருக்கூத்துக்கு உதவி தேவை. நடேசத் தம்பிரானின் தெருக்கூத்து, கொண்டையார் தண்டலம் வரதப்ப வாத்தியாரின் தெருக்கூத்து, பொம்மலாட்டங்களும் தெருக்கூத்தும், பத்மா சுப்ரமண்யத்தின் மீனாட்சி கல்யாணம், மீனாட்சி கல்லூரியில் நாடகங்கள்—இப்படிப் பல கட்டுரைகள். எல்லாம் நீளம் நீளமானவைதான். சில 16 அல்லது 17 பக்கங்கள்கூட வந்துள்ளன. அனைத்தும் ந. முத்துசாமியின் தெருக்கூத்து பற்றிய அக்கறையையும் ஆர்வத்தையும் ஆராய்ச்சியையும் ஈடுபாட்டையும் காட்டு கின்றன.

முத்துசாமி வேறு சில கட்டுரைகளும் எழுதியுள்ளார். ஒரு சினிமா பற்றி, சுந்தர ராமசாமி எழுதிய 'குரங்குகள்' என்ற சிறுகதை பற்றி எட்டுப் பக்க விரிவுரை. இப்படிச் சில.

சுந்தர ராமசாமியின் கருத்துக்களுக்கு வைகை முக்கியத்துவம் அளித்து வந்தது. வெ. சாமிநாதனின் 'ஓர் எதிர்ப்புக் குரல்' என்ற கட்டு ரைத் தொகுப்புக்கு சு. ரா. எழுதிய முன்னுரையை வைகை 8 வது இதழில் மறு பிரசுரம் செய்தது, 'வெங்கட்சாமிநாதனின் கருத்துலகம்' என்ற தலைப்பில். வண்ணதாசனின் 'தோட்டத்துக்கு வெளியிலும் சில பூக்கள்' என்ற கதைத் தொகுதிக்கு சு. ரா. எழுதிய முன்னுரையை 'வண்ணதாசன் கதைகள்' என்ற தலைப்புடன் பிரசுரித்தது. நாஞ்சில் நாடன் நாவல் 'தலைகீழ் விகிதங்கள்', காஸ்யபனின் 'அசடு' ஆகிய வற்றுக்கு சு. ரா. விமர்சனக் கட்டுரைகள் எழுதியிருக்கிறார்.

சுந்தர ராமசாமியின் 'பல்லக்குத் தூக்கிகள்' கதைத் தொகுதி பற்றி சி. மோஹன் ஒரு கட்டுரை எழுதினார்.

அகிலனுக்கு, 'சித்திரப் பாவை' நாவலுக்கு, ஞானபீடம் பரிசு வழங் கப்பட்டதை வைகை கண்டித்தது. அகிலனின் எழுத்தாற்றலை வைகைக் குழுவினர் அங்கீகரிக்கவில்லை. மாயவரத்தில் நடைபெற்ற நாவல் விழா வின்போது அகிலன் பேசிய உரையைக் குறைகூறி விமர்சனக் கட்டுரை வெளியிட்டது. பின்னர், அகிலனின் ஞானபீடப் பரிசு உரை மொழி பெயர்ப்பு வெளியிட்டு, சி. மோஹன் விமர்சனம் எழுதினார்.

கல்வித் துறையில் நிகழும் சீர்கேடுகளை வைகை சுட்டிக்காட்டி, கடுமையாக விமர்சித்தது. விசேஷமாக, மதுரைப் பல்கலைக்கழகம் அதன் தாக்குதலுக்கு முக்கிய இலக்காக அமைந்திருந்தது. பாடநூலாக அங்கீகரிக்கப்பட்ட ஒரு சிறுகதைத் தொகுப்பின் தன்மை குறித்தும், ஒப்பியல் இலக்கியம் சம்பந்தமான ஆய்வு பற்றிய ஒரு பேராசிரியரின் நூலையும் வன்மையாகக் கண்டனம் செய்து கட்டுரைகள் எழுதப்பட்டன.

ஞானி அவ்வப்போது கட்டுரைகள் எழுதி, கனமான விஷயங்கள் குறித்து சிந்தனைகளை வெளிப்படுத்தினார். வெ. சாமிநாதனின் 'பாலை யும் வாழையும்' கட்டுரைகளைத் தொடர்ந்து 'வாலையா? வாழையா?– தொடர்ந்து தேடல்' என ஞானி எழுதிய கட்டுரை குறிப்பிடத்தகுந்தது. இந்தியன் பிலாசபி பற்றி தேவி பிரசாத் சட்டோபாத்யாய எழுதிய நூலுக்கு ஒரு விரிவான விமர்சனம் ( 12 பக்கங்கள் ) எழுதியிருக்கிறார். ஜே. கிருஷ்ணமூர்த்தியின் தத்துவங்களை விமர்சித்து 'மணல்மேட்டில் ஒரு அட்டை வீடு' என்ற நீண்ட கட்டுரையில் சிந்தனைகளை வளர்த் திருக்கிறார்.

சிறு பதிப்பாளர் பிரச்னைகளில் வைகை ஆர்வம் காட்டியது. 'க்ரியா' ராமகிருஷ்ணன் கட்டுரைகள் சிலவற்றை வெளியிட்டது.

புத்தக விமர்சனக் கட்டுரைகளை அதிகம் வெளியிட 'வைகை' ஆசைப்பட்டது. ஆனாலும், அதன் எண்ணம் நிறைவேறவில்லை. இதை 6,7 இதழ்களில் வந்துள்ள அறிவிப்புகள் எடுத்துக்காட்டும்.

'வெளியாகும் புத்தகங்களுக்கு விமர்சனம் மிகவும் தேவையான ஒன்று. நல்ல முறையில் விமர்சனங்கள் வெளியிடுகிறோம். அனுப்பித் தாருங்கள். புத்தக விமர்சனங்களுக்கு மட்டும் ( வெளியிடுபவைகளுக்கு மட்டும்) சன்மானம் உண்டு ( வைகை–6 ).

'வைகை–7. இந்த மாத வைகை உங்கள் கைக்கு மாதக் கடைசியில் மிகவும் சிரமப்பட்டுக் கிடைக்கக் காரணம் விஷய வறட்சியே. விமர்சனங்களுக்கு–விமர்சனங்களுக்கு மட்டுமே–முதலிடம் தர வேண்டும் என நினைத்தது வறட்சியில் கொண்டு நிறுத்திவிட்டது. சிறுகதைகள், கவிதைகள் எழுதுகிற வேகம் நமது படைப்பாளிகளுக்குக் கட்டுரைகள் எழுதுவதில் இல்லை. வெளியாகிற சிறுகதைகள், கவிதைகளுக்கு ஒரு உருவமும் வரைமுறையும் அமைத்துக் கொடுப்பது சிறந்த விமர்சனங்கள் மட்டுமே. ஏனோ இதை யாரும் சரியாகச் செய்ய மாட்டேன் என்கிறார்கள்.'

11–வது இதழ் விமர்சன இதழாக அமைந்திருப்பதைக் குறிப்பிட வேண்டும். 'சுந்தர ராமசாமியின் குரங்குகள்' என்ற ந. முத்துசாமி கட்டுரை; 'சோவியத் நாட்டில் ஒரு தமிழ் மாணவி' ( வி. எஸ். கமலா எழுதிய புத்தகம் பற்றி) விமர்சனம். 'கண்டதும் கேட்டதும்'– ஒரு சுய விமரிசனம். ஜி. நாகராஜன் அவருடைய கதைத் தொகுப்பு பற்றி அவரே எழுதியது).

தமிழில் சிறு பத்திரிகைகள், சிறு பத்திரிகைகளின் வாசகர்கள் பற்றி ஒரு சிந்தனை இந்த இதழின் தலையங்கமாக அமைந்துள்ளது. அது நினைவில் நிறுத்தப்பட வேண்டிய ஒன்று.

"தமிழில் சிறு பத்திரிகைகளுக்கு முப்பது வருஷத்திற்குக் குறையாத சரித்திரம் இருக்கிறது. இவற்றில் எழுதியவர்களும், இவற்றோடு சம்பந்தப்பட்டவர்களும் தவிர, ஒருமித்த பொறுப்பும் ரசனையும் கோபமும் உள்ள வாசகர்களும் சேர்ந்தே ஒரு புனிதப் போரென்ற வெறியோடு தங்களை ஈடுபடுத்திக் கொண்டிருந்தால், சராசரி தமிழ் வாசகனின் தரத்தை உயர்த்தியிருக்க முடியும். தமிழ்க் குடும்பங்களைக் கொஞ்சமாவது நாகரிகமும் பெருந்தன்மையும் புத்தியும் உள்ளவையாக்கியிருக்க முடியும். (அரை) நிர்வாணப் படங்களோடு ( பொது இடங்களில் வால் போஸ்டராக இருந்தால் முகம் சுளிக்கப்படுகிற படங்கள், பத்திரிகைகளாக வீட்டில் பிரவேசிக்கிற முரண்பாடு வேடிக்கையானது ) நரம்பு நோயாளிகளுக்காக நரம்பு நோயாளிகளால் நடத்தப்பட்டு எழுதப்பட்டு படம் போடப்பட்டு வருகிற பத்திரிகைகள் அப்பா, அம்மா, அண்ணன், தங்கை, தம்பி, குழந்தைகள் என்று எல்லோராலும் வெட்கமில்லாமல் படிக்கப்படுகிற அநாகரிகத்தைக் கட்டுப்படுத்தியிருக்க முடியும். விரசமும் வக்கிரமும் தமிழ்க் குடும்பங்களில் அன்றாட நடவடிக்கையாகிவிட்டது.

வாழ்க்கையின் குணம் மாற வேண்டும் என்று சூத்திரம் போல் ஒரு சிறு பத்திரிகையின் இலட்சியத்தைச் சொல்லிவிடலாம். ஆனால் அதற்கான வழிமுறைகள் மிகவும் சோதனை தருவதாகவும் நம்பிக்கை யிழக்கச் செய்வதாகவும் இருக்கின்றன. கூட்டான பொறுப்பாக இதை ஏற்றுக் கொள்ள முடியாமல் பிளவுகள் தோன்றி சிறுசிறு வட்டங்களா கக் குறுகிப் போய் கவனம் சிதறி வேகம் திசை மாறி விடுகிறது. இவை மனிதர்கள் சம்பந்தப்பட்ட முயற்சிகள் என்பதால், மனிதர்கள் சரித்திரத்தின் ஒரு கட்டத்தில் வாழ்கிறவர்கள் என்பதால் இன்றைய அறிவுலக இயக்கத்தில் இக்குறை தீராமலிருக்கிறது.

திறந்த மனம் கொண்ட விசாரணைகளும், சுய பரிசீலனைகளும் சிறு பத்திரிகைகளின் பிரயத்தனத்தை வீணாக்காமல் காக்கும்.

சிறு பத்திரிகைகளின் வாசகர்களுக்கு ஒரு பொறுப்பிருக்கிறது. வியாபாரப் பத்திரிகைகளின் அரக்கத் தாக்குதலுக்கு ஒரு மாற்றாகவே சில வாசகர்கள் சிறு பத்திரிகைகளில் ஆர்வம் கொண்டிருக்க வேண்டும். சிறு பத்திரிகைகளின் பலவீனமான ( அளவிலும் எண்ணிக்கையிலும் ) எதிர்ப்பு பரவலானால் மொத்த சமூகத்தின் மனோபாவம் மாறி வியா பாரப் பத்திரிகைகளின் மீது ஒரு கட்டுப்பாடு தோன்றலாம். இவ்வாறு பத்திரிகை, சினிமா, கதைகள் போன்ற சீரழிக்கின்ற சாதனங்களின் பிடியிலிருந்து தப்பினாலே பிற புத்தி பூர்வமான காரியங்களில் மனித சக்தி ஈடுபடுவதற்கான சூழ்நிலை உருவாகும்.

எனவே, வாசகர்களும் சிறு பத்திரிகைகளின் மாற்று முயற்சிகளுக் குத் துணை நிற்க முடியும்– இவற்றைப் பரவலாக்குவதன் மூலம்; பலருக்கு அறிமுகப்படுத்துவதன் மூலம்.” ( வைகை–11 )

நேர்மையான சிந்தனைதான். நியாயமான கோரிக்கைதான். ஆனா லும் நடைமுறையில் இதெல்லாம் சாத்தியமாவதற்கு வெகுகாலம் பிடிக் கும். அதற்குள் பணபலமும் வேக இயந்திரங்களின் துணையும் பெற்றி ருக்கிற வணிக நோக்குப் பத்திரிகைக்காரர்கள் மிக வேகமாக முன்னேறி விடுகிறார்கள். மக்கள் உள்ளத்தையும் வாசகர்களின் ரசனையையும், அதன் மூலம் சமூகத்தின் நிலைமைகளையும் பாழ்படுத்தி, வெற்றிகர மாகத் தங்கள் நாசவேலையைச் செய்து கொண்டிருக்கிறார்கள். தமிழ் நாட்டில் இதுதான் நடந்து வருகிறது.

சமூகச் சீர்கேடுகள், பண்பாட்டுச் சிதைவு, வாழ்க்கை முறைகளில்

புகுந்து வளர்கிற போலித்தனங்கள் குறித்தும் 'வைகை' அவ்வப்போது சிந்தனைக் குறிப்புகள் எழுதியது.

நாட்டியம், திரைப்படம் பற்றியும் கட்டுரைகள் வெளியிட்டது. 'ட்ரூஃபோவும் பிரெஞ்சு திரைப்படக் கலையும்' (வெ. ஸ்ரீராம்) கட்டுரை பல இதழ்களில் தொடர் அம்சமாக இடம் பெற்றது.

அயல் நாடுகளின் அரசியல் சம்பந்தமான கட்டுரைகளும் (பிரக்ஞை, வைகை போன்ற) சிறு பத்திரிகைகளில் பிரசுரமாவது தேவையற்றது; இவை நமக்கு நேரடியான சம்பந்தம் அல்லாதவை என்ற ரீதியில் கண்டனங்கள் எழுந்தன என்று வைகை குறிப்பிட்டு, இவற்றின் அவசியத்தை விளக்கி ஒரு தலையங்கம் எழுதியது.

"இந்த வாழ்க்கை பற்றி அவ்வளவு நம்பிக்கையற்ற பார்வையை, எனவே இதை மாற்ற வேண்டிய தீவிரத்தைக் காட்டுகிறவை சிறு பத்திரிகைகள். அரசியலிலும், கலையிலும், இலக்கியத்திலும் பாமரத் தனத்தை, வியாபார ஆதிக்கத்தை எதிர்ப்பது இவற்றின் குணம். இலக்கியம் பிரதான இடம் பெற்றாலும் பிற துறைகளிலும் தரக்குறைவை, நேர்மையின்மையை இவை எதிர்க்கின்றன. இந்த வாழ்வின் பயனின்மையும், முரண்பாடுகளும், மாறுதலுக்கான அவசியமும் சினிமாவில், நாடகத்தில், கல்வியில், அரசியலில் உணரப்பட்டிருக்க முடியும். இங்கு முதலாக இது எழுத்தில் உணரப்பட்டிருக்கிறது. எனவே சிறு பத்திரிகைகள் சினிமா, அரசியல் இவற்றில் பார்வை செலுத்துவது வரவேற்கப்பட வேண்டியது மட்டுமல்ல. இயற்கையானதும் அவசியமானதும்கூட.

இந்தக் கட்டுரைகள் எழுதப்படுகிற தொனியும் நோக்கமும்தான் இவற்றின் relevance ஐத் தீர்மானிக்கும். வெறும் தகவல் தருகிறவை என்ற அளவில்கூட இக் கட்டுரைகள் உபயோகமானவையே. இவற்றில் Snob கள் இருக்கக்கூடும். அவற்றைச் சுட்டிக்காட்டாமல் மொத்தமாக எல்லாவற்றையும் நிராகரிப்பது விவரமற்ற செய்கை. இதுபோன்ற கட்டுரைகள் உபயோகப்படுவதற்கு சந்தர்ப்பம் வேண்டும். அரசியல் மாற்றத்தில் அடுத்த கட்டத்திற்குப் போவதற்கு இத்தகைய அறிவு பயன்படும் என்று வைகை நினைக்கிறது" (வைகை—14).

வைகை 'கல்கி' பத்திரிகை அளவில், நல்ல வெள்ளைத் தாளில் அச்சாகி வந்தது. முதல் வருடம் ஒவ்வொரு இதழும் 34 பக்கங்கள் (அட்டை தனி)—சில சமயம் அதிகமாகவும்—கொண்டிருந்தது. பின்னர்,

பக்கங்கள் குறைந்தும் கூடியும் வந்தன. ஒரு இதழ் பத்தே பக்கங்கள்—இரண்டு கட்டுரைகள் கொண்டிருந்தது.

இதற்கெல்லாம் எழுதுகிறவர்களையே அது குறை கூறியது. வைகை—12—ல் காணப்படும் குற்றச்சாட்டு இது—

"வைகை தொடங்கியபோது வாசகர்களுக்கு மட்டுமின்றி எழுதுகிறவர்களுக்கும் சில அக்கறை இருக்க வேண்டுமென்ற எதிர்பார்ப்பு இருந்தது. எழுதுகிறவர்களின் தயக்கத்தையும் இடைவெளியையும் பார்க்கிறபோது நம்பிக்கையின்மைதான் மிஞ்சுகிறது. எழுதுகிறவர்கள் வேறு வேறு துறைகளில் கவனம் செலுத்துவதில்லை என்பது நல்ல அறிகுறியில்லை.

உண்மையான பிரச்னைகள் எவை என்று கண்டுகொள்ள உதவி செய்கிற, அவற்றின் தீர்வுக்கு விஞ்ஞான பூர்வமான அணுகல் தருகிற எழுத்தை விரும்புவதாய் எப்போதும் வைகையின் பக்கங்களில் அறிவிக்கப்பட்டிருக்கிறது . ஆனால் high-brow குணமுள்ள எழுத்துக்களே வைகையை ஆக்கிரமிப்பதாகக் குற்றம் சாட்டப்படுகிறது. இது பற்றிய முழு விவாதத்தை வைகை வரவேற்கிறது.

ஒரு சிறு பத்திரிகையின் தொனி அதோடு சம்பந்தப்பட்டிருக்கிறவர்களாலும் அதில் எழுதுகிறவர்களாலும் பெரும்பாலும் தீர்மானிக்கப்படுகிறது. வைகைக்காக நிராகரிக்கப்பட்ட விஷயங்கள் மிகவும் குறைவென்பதால் எழுதுகிறவர்களையே— எழுதாதவர்களையே—குற்றம்சாட்ட வேண்டியிருக்கிறது."

வைகை அதன் இறுதிக் கட்டத்தில் 'மணிக்கொடி' மீது தனது கவனத்தைத் திருப்பியது. கு. ப. ரா. சிறப்பிதழ் வெளியிடுவதில் அக்கறை கொண்டது. 'மணிக்கொடி'யில் வந்த 'யாத்ரா மார்க்கம்' பகுதியில் வெளியான குறிப்புகளையும் சூடான விவாதங்களையும் வைகை 27, 28 வது இதழ்களில் மறுபிரசுரம் செய்தது.

'யாத்ரா மார்க்கம்' பகுதியில் புதுமைப்பித்தன் இலக்கியக் குறிப்புகள் எழுதினார். அதில் அயல்நாட்டுக் கதைகளைத் தமிழில் தழுவி எழுதுவதைக் கிண்டல் செய்திருந்தார். நேரடி மொழிபெயர்ப்பை அவர் ஆதரித்தார். பாரதி பாடல்கள் பிரசுரிக்கப்பட்ட விதத்தையும், பாடல்களில் காணப்பட்ட மாற்றங்களையும் குறிப்பிட்டு ஒரு தடவை எழுதினார். தழுவல் விஷயத்தில் அவர் சுட்டிக்காட்டிய ஒரு பெயரும் படைப்பும் பலரிடமிருந்து எதிர்ப்புகளைப் பெற்றுத் தந்தன. மொழிபெயர்ப்பு—தழுவல்

விஷயம் இலக்கிய விவகாரமாகி சர்ச்சிக்கப்பட்டது. கு. ப. ரா., க. நா. சு. சிதம்பர சுப்ரமண்யம் ஆகியோர் இந்த விவாதத்தில் கலந்துகொண்டார்கள். 'சந்தேகத் தெளிவு' என்று புதுமைப்பித்தன் விரிவான கட்டுரை எழுதினார்.

இலக்கிய வரலாற்றுச் சிறப்புப் பெற்ற இந்த விவாதத்தை முழுமையாக வைகை மறுபிரசுரம் செய்தது பாராட்டப்பட வேண்டிய நற்பணி ஆகும். 'மணிக்கொடி' யில் வெளியான சில புத்தக மதிப்புரைகளையும் வைகை பிரசுரித்தது.

இவ்விஷயங்களைக் கொண்ட 27, 28 இதழ்களுக்கு முன்னர் சில இதழ்கள் வெளியிடப்படவில்லை. இது பற்றிய ஒரு விளக்கம் 27–ம் இதழில் காணப்படுகிறது. அது வைகையின் கொள்கை மாற்றத்தையும், ஆசை நிறைந்த திட்டத்தையும் காட்டுகிறது. கதை, கவிதைகள் போன்ற படைப்பு முயற்சிகளைப் பிரசுரிக்க மறுத்து வந்த வைகை அந்தப் போக்கைக் கைவிட விரும்பியது.

"25–ம் வைகைக்கு மேல் வரும் வைகைகளில் 3, 6, 9– ல் முடிபவை (உ–ம். 26, 29, 33, 36) படைப்புகளுக்காக ஒதுக்கலாம் என எண்ணம். வாசகர்கள் அபிப்பிராயம் வரவேற்கப்படுகிறது. நாடகம், கவிதை, சிறுகதைகள் முதலியன இடம்பெறும். நாடகங்களைத் தேர்ந்தெடுக்க நிஜ நாடகக் குழுவினர் ஒப்புக் கொண்டுள்ளனர். இதுபோல் சிறுகதைகளுக்கு ஒரு குழுவினரும், கவிதைக்கு ஒரு குழுவினரும் தேவைப்படுகிறது. வாசகர்கள் இது குறித்து ஏதாவது யோசனை சொல்வதாக இருந்தாலும் வரவேற்கப்படுகிறது.

யாத்ரா மார்க்கம் 32 பக்கங்களுக்குள் வரும் என்று எதிர்பார்த்தேன். 50 பக்கங்கள் வரும் என்ற நிலை ஏற்பட்டதும் 2 இதழ்களாக வெளியிட்டு ஒரே நேரத்தில் அனுப்ப வேண்டி ஏற்பட்டது. தொடர் நம்பராக வர வேண்டும் என்பதற்காக இந்த வைகை 27, 28 என வந்துள்ளது. இடையில் 25, 26 இனிமேல்தான் வரும். இதில் 25 பிரபஞ்ச ஜோதி பிரசுராலயத்தாரின் அனுபவங்கள் பற்றியதாகவும், 26 இதழ் படைப்புகள் தாங்கியும் வரும். தவறுதலாக, அனுப்பவில்லை என எண்ணிக் கடிதம் எழுத வேண்டாம். அடுத்த மாதம் 25 வரும். அதற்கு அடுத்த மாதம் 26 வரும்."

இப்படித் தெளிவாகத் திட்டம் தீட்டப்பட்டிருந்த போதிலும், அது நிறைவேறுவதற்கு வழி பிறக்காமலே போய்விட்டது.

# 23. சிதைந்த கனவுகள்

இலக்கியப் பத்திரிகை நடத்துவது சிரம சாத்தியமானது– சிறு பத்திரிகை அளவில் நடத்த முயல்வதுகூட மிகுந்த கஷ்டங்களைத் தரக் கூடியது–என்பதை பத்திரிகை உலகின் தன்மைகளை அறிந்தவர் கள் உணராமல் இருக்கமுடியாது.

என்றாலும், வரலாற்று உண்மைகளையும், கண்முன்னே நிகழ்ந்து கொண்டிருக்கிற யதார்த்த நிலைமைகளையும் தெரிந்துகொண்டே இலக்கியவாதிகள், எழுத்தாளர்கள், ரசிகர்கள் அவ்வப்போது 'நாமும் ஒரு பத்திரிகை நடத்திக் காட்ட வேண்டும்' என்று ஆசைப்படுவதும், செயலில் முனைவதும் இயல்பாக இருந்து வருகிறது.

இதுவரை நடந்த பத்திரிகைகளும், இவர்கள் காலத்தில் நடப்பதற் காகப் போராடிக் கொண்டிருக்கிற இலக்கியப் பத்திரிகைகளும் இவர் களுக்கு அதிருப்தியையே தந்துள்ளன. 'எந்தப் பத்திரிகையும் சரியான இலக்கியப் பத்திரிகையாக இல்லை. தரமான, நல்ல இலக்கியப் பத்திரி கையை நாம்தான் நடத்த முடியும்' என்று இவர்களில் ஒவ்வொருவரும் நம்புகிறார்கள்.

இப்படிப்பட்டவர்கள் எல்லாக் காலத்திலும் இருந்து வந்திருக்கிறார் கள்; இப்பொழுதும் இருக்கிறார்கள். எனவே, கனவு காணும் இயல்பை உடைய இவர்கள் போதிய வசதிகள் இல்லாமலே ஒரு பத்திரிகையை ஆரம்பிக்கத் துணிகிறார்கள். அவை ஒன்று அல்லது இரண்டு இதழ்கள் வெளிவந்ததோடு, இவர்களது ஆர்வமும் அணைந்து விடுகிறது. பத்திரி கையின் அடுத்த இதழ் உருவாவதற்கு வழியில்லாததால் அதன் கதையும் முடிந்து போகிறது.

புதுமைப்பித்தன் உயர்தரமான இலக்கியப் பத்திரிகை ஒன்றை நடத் திக் காட்ட வேண்டும் என்று ஆசைப்பட்டார். அதற்கு 'சோதனை' எனப் பெயர் வைக்கலாம் என்றும் அவர் குறிப்பிட்டார்.

புதிய சோதனை முயற்சிகளை அது தாங்கிவரும் என்பதாலும், பத்திரிகை நடத்துகிறவருக்கே அது சோதனையாக அமையும்

என்பதனாலும், இலக்கியப் பத்திரிகைக்கு அந்தப் பெயர் பொருத்தமாக இருக்கும் என்று புதுமைப்பித்தன் வேடிக்கை விளக்கமும் கொடுத்தார்.

அவர் சொந்தமாகப் பத்திரிகை எதுவும் நடத்தவில்லை. அவர் தேர்ந்து சொன்ன பெயர் பிற்காலத்தில் கவிஞர் நா. காமராசனுக்குக் கைகொடுத்தது.

கவிஞர் கண்ணதாசன் 'கண்ணதாசன்' என்ற பெயரில் ஒரு இலக்கியப் பத்திரிகை நடத்தினார். அது பெரிய அளவில் வெற்றிகரமாக நடைபெற்ற ஒரு பத்திரிகை ஆகும். அதிகமான பக்கங்கள். பக்கத்துக் குப் பக்கம் ஓவியர் அமுதோனின் தனி ரகமான சித்திர வேலைப்பாடு கள் பெற்றுத் திகழ்ந்த 'கண்ணதாசன்' மாத இதழ் நல்ல தரமான இலக்கிய ஏடு ஆக வந்துகொண்டிருந்தது. இளைய எழுத்தாளர்கள், புதிய கவிஞர்கள் வளர்வதற்குத் துணை புரிந்தது. நல்ல விஷயங்களை நிறையவே கொடுத்தது. கண்ணதாசனும் அதில் அதிகமாகவே எழுதிக் கொண்டிருந்தார்.

வாசகர்களின், எழுத்தாளர்களின் நல்லாதரவைப் பெற்றிருந்த 'கண்ணதாசன்' மாசிகை கவிஞரின் கோளாறான போக்குகளினால் செத்தது. திரும்பவும் தலையெடுப்பதும் மீண்டும் அவரது குறுக்கீட்டி னால் மறைவதுமாக இருந்தது.

'கவியரசு' என்று விளம்பரப்படுத்திக் கொண்ட கண்ணதாசன் பாதையிலேயே சென்று முன்னேற ஆசைப்பட்ட நா. காமராசன் தானும் ஒரு இலக்கியப் பத்திரிகை நடத்த முன்வந்தார். அதற்கு, புதுமைப்பித் தன் கூறிய பெயரான 'சோதனை' என்பதைச் சூட்டினார். ஆசிரியர் கவியரசு நா. காமராசன் M. A. என்று விளம்பரப்படுத்திக் கொண்டார். கண்ணதாசன் பக்கங்கள் என்று அந்தக் கவிஞர் பல தலைப்புகளில் விதம் விதமாக எழுதியதுபோலவே இந்தக் கவிஞரும் எழுதினார்.

'சோதனை' முதல் இதழ் ஏப்ரல் 1973–ல் வெளிவந்தது. 'ஆலோசகர் : கி. ராஜநாராயணன்' என்றும் அதில் அச்சிடப்பட்டிருந்தது. தலையங்கம் 'உரைகல்' என்ற பெயரைப் பெற்றிருந்தது.

'படைப்புகளை நான் பார்வையிட்டு இதழுக்கு வடிவம் தந்தேன். நான் வெறும் தொகுப்பாசிரியனாக மட்டும் இருந்து விடாமல் விமர்சகனாக இந்த இதழை உருவாக்கினேன். எனவேதான் இங்கே

தலையங்கமே 'உரைகல்' என்கிற பெயரைப் பெறுகிறது' என்று நா.கா. விளக்கமும் கொடுத்தார்.

'எங்கள் பெயர் தமிழ் இலக்கியத்தில் இடம் பெற வேண்டும் என்பதற்காக நாங்கள் எழுதுவதில்லை. தமிழின் பெயர் உலக இலக்கியத்தில் இடம் பெற வேண்டும் என்பதற்காகவே நாங்கள் எழுதுகிறோம்' என்ற வரிகள் ஒவ்வொரு இதழ் தலையங்கத்தின் ஆரம்பத்திலும் அச்சிடப்பட்டன (சோதனை—இரண்டு இதழ்கள்தான் வந்தது).

'புதுமைப்பித்தன் கனவு கண்ட இலக்கிய இதழ் உங்கள் கைகளில் இப்போது தவழ்கிறது. இன்றுதான் எனது நீண்ட நாள் கனவு நிறைவேறியிருக்கிறது. நான் ஒரு நல்ல ரசிகன் என்கிற அடிப்படையில் நானே பத்திரிகாசிரியனாக மாறி தமிழ் இலக்கியத்தைப் புனருத்தாரணம் செய்ய வேண்டுமெனப் பலமுறை எண்ணியிருக்கிறேன்' என்று தொடங்கி சுய புராணம் தீட்டியிருந்தார் அவர்.

இரண்டாவது இதழ் மே மாதம் வந்தது. மூன்றாவது இதழ் வரவேயில்லை.

வெளிவந்த இரண்டு இதழ்களும் தரமான தயாரிப்புகளாக விளங்கின. காமராசன் நிறையவே எழுதியிருந்தார். நல்ல கதைகள், கவிதைகள், கட்டுரைகள், இலக்கிய சம்பந்தமான கேள்வி—பதில் பகுதி எல்லாம் இருந்தன.

நாடகத்துக்கும் 'சோதனை' முக்கிய கவனிப்பு அளிக்க முன் வந்தது. அழகான அட்டையுடன், 'சோதனை' நல்ல தோற்றமும் அச்சு அமைப்பும் கொண்டிருந்தது. 'ஆனந்த விகடன்' அளவில் 80 பக்கங்கள். விலை ஒரு ரூபாய். சென்னையிலிருந்து பிரசுரமாயிற்று.

தஞ்சாவூர் பிரகாஷ் நல்ல இலக்கிய ரசிகர். எழுத்தாளரும்கூட. உலக இலக்கியங்களையும், இந்திய மொழிகளின் தரமான படைப்புகளையும் ரசித்து மகிழ்ந்தவர். தமிழிலும் நல்ல நல்ல நூல்களைப் பிரசுரிக்க வேண்டும்; தரமான இலக்கியப் பத்திரிகை நடத்த வேண்டும் என்ற ஆசை உடையவர். அவ்வப்போது முயற்சிகளிலும் ஈடுபடுவார்.

அவர் 1977—ல் 'பாலம்' என்ற பத்திரிகையை ஆரம்பித்தார். 'ஸ்கூல் அட்லாஸ்' அளவில் பெரிய வடிவம் கொண்ட பத்திரிகை. படங்கள் வேறு. அட்டை தனி. 56 பக்கங்கள். விலை ரூ. 2. இரண்டு இதழ்கள் தான் பிரசுரிக்க முடிந்தது அவரால்.

'பாலம் உங்கள் ஏடு. ஆயிரக்கணக்கில் அது விற்க வேண்டாம். பல நூறுகள்கூட வேண்டாம். சில நூறுகளே போதும். தமிழகத்தின் எந்த சின்ன இலக்கிய இதழின் பலமுமே இருநூறுதான் என்பது அதன் வரலாறு. ஆறு கோடி மக்களின் இலக்கிய பலம் இருநூறு பேர் தானா? ஆம். இன்று நேற்றல்ல, முப்பதாண்டுகளாகக– இருநூறு நிலையான சந்தாக்கள்தான். எல்லா இலக்கியப் பத்திரிகைகளையும் வாங்குகிற அதே நூறு பேர் தங்கள் அடுத்த தலைமுறையிலும் தக்க வைத்துக் கொண்டிருக்கிறார்கள். இதுதான் தமிழில் புதிதாய்ச் செய்யப்போனவர்களின் பலம்! இது பெருக வேண்டும். ஆயிரமாவது சேரவேண்டும்' என்று பிரகாஷ் விருப்பம் தெரிவித்தார்.

'பாலத்தின் முதல் நோக்கமும் முப்பத்திரண்டாவது நோக்கமும் இலக்கியம் ஒன்றே. புதுசோ பழசோ எதுவாயினும் அதன் நோக்கம் இலக்கியமே. உங்களுக்காக உங்களுடன் கலந்து பாலம் நிறைய செய்ய விருக்கிறது. தேடவிருக்கிறது. கண்டுபிடிக்கவிருக்கிறது. அந்தப் பணியில் பக்குவம் பெற உங்களையும் அழைக்கிறது. அதைச் செய்யும் இதைச் செய்யும் என்று சொல்லில் சொல்ல ஒன்றுமில்லை. நமக்கு இறந்த காலம் தெரியும். லட்சியங்களின் கண்கூசும் ஒளியும் நமக்குப் பழக்கமே. நிகழ்காலத்தின் அலுப்பும் வறட்சியும் எதிர்காலத்தின் ஒட் டாத் தன்மையும் எட்டாத் தன்மைகளும் நாம் அறிந்தே இப்பாலத்தில் வந்து நிற்கிறோம். செயலுக்கு உதவும் கரங்கள் போதும். ஆரவார மில்லாமல் தொடரும் 'பாலம்' ' என்று பிரகாஷ் அறிவித்தார்.

இரண்டுக்கு மேல் தொடவோ தொடரவோ முடியவில்லை அவரால். 'பாலம்' வரலாற்றில் இடம் பெற்றுவிட்டது. மதுரையிலிருந்து வெளிவந் தது பாலம்.



'திருச்சி வாசகர் அரங்கு' என்ற அமைப்பைச் சேர்ந்த இலக்கிய ரசிகர்கள் மாதம்தோறும் திறனாய்வுக் கருத்தரங்கு நடத்தி இலக்கியப் பணி புரிந்து கொண்டிருந்தார்கள்.

தமிழில் அப்போது வந்த சிறு பத்திரிகைகளின் சாரமற்ற தன்மை யையும் பக்க வீணடிப்புகளையும் காணச் சகிக்காமல், தரமான ஏடு ஒன்றை வெளியிட ஆசைப்பட்டார்கள். 'இன்று' தோன்றியது. 1972– ல். பத்துப் பேர் சேர்ந்து செலவைப் பகிர்ந்து கொண்டார்கள்.

அப்படியும் மூன்று இதழ்கள்தான் கொண்டுவர முடிந்தது அவர்களால்.

வித்தியாசமான கதைகள், புதுமையான கவிதைகள் பற்றிய விமர் சனக் கட்டுரை ஆகியவற்றை 'இன்று' கொண்டிருந்தது.

ஃ

1977 ல் திருச்சியில் 'விஸ்வரூபம்' தோன்றியது.

சில கனவுகள் கலைந்துதான் விஸ்வரூபம் பிறந்திருக்கிறது. முழக்கிச் சொல்ல பிரகடனங்கள் ஏதும் இல்லை.

விஸ்வரூபத்திற்கு ஒரு பிரியமுண்டு. 'வாசகத் தரம் உயர தன்னாலி யன்றவற்றைச் செய்வதுதான் அது' என்று கூறியது.

இலக்கிய விஷயங்களோடு நவீன அரங்குக் கலையிலும் அது ஆர்வம் காட்டியது.

ஃ

'கோகயம்' என்று ஒரு பத்திரிகை (தாமரை என்று அர்த்தம்). ஆசிரியர் : திருமால் இந்திரசிங். முதல் இதழ் 1975 ஆகஸ்டில் வந்தது. திருவனந்தபுரத்தில் பிரசுரம் பெற்றது.

அ. திருமால் இந்திரசிங், அ. ராஜமார்த்தாண்டன், அ. ராஜேந்திரன், ஆ. தசரதன் ஆகியோரின் கூட்டு முயற்சி (இவர்கள் ஆராய்ச்சி மாணவர்கள்).

'கோகயம்'– எதுக்கு? என்று கேட்டு விளக்கமும் தந்தார்கள்:

'சில விஷயங்களை எழுதுவதற்கு, பிற பத்திரிகைகளின் துணையை நாடுவதைவிட எங்களுக்கென ஒரு பத்திரிகை இருந்தால் இன்னும் துணிவாக எழுதலாமே என்ற எண்ணத்தின் விளைவே இது. இந்த அகடமிக் ஸைடிலிருந்து உருப்படியாக எதுவுமே இதுவரை வரவில்லை என்றொரு எண்ணம் படைப்பாளிகளிடம் இருக்கிறது. அதை மாற்ற முடியும் என்ற எண்ணத்தின் விளைவே இது.'

துணிவான இலக்கிய பூர்வமான விமர்சனக் கட்டுரைகளையும், புதிய இலக்கிய முயற்சிகளையும் கோகயம் வரவேற்றது.

மௌனி–ஒரு திறனாய்வு : பிரசாரமும் கவிதையும்; கவிதையில் சப்தம்; சிறுகதைப் பொருள் என்ற தலைப்புகள் உள்ள கட்டுரைகளை

அது வெளியிட்டிருக்கிறது. மற்றும் கதைகள், கவிதைகள், புத்தக விமர்சனக் கட்டுரைகள் உண்டு.

இரண்டு மாதங்களுக்கு ஒரு முறையாக, 4 இதழ்கள் வந்தன.

°°°

'பிரபஞ்சம்'– 'இந்தப் பிரபஞ்சத்தில் மனிதன் குறித்த கலைஞானம் யாவும்' கவனத்தில் கொண்டு, சேலத்திலிருந்து வெளியாயிற்று. ஆசிரியர் : சண்பகராமன். ஆசிரியர் குழு – மு. கி. இளங்கோ, பிரதாபன், வை. கதிர்வேலு.

கவிதையில் சோதனை முயற்சிகளில் கவனம் செலுத்தியது. அப்துல் ரகுமான், தமிழ்நாடன் படைப்புகளை அதிகம் வெளியிட்டது. 2 இதழ்கள் தான் பிரசுரமாயிற்று, 1979– ல்.

°°°

'சாதனா'–கவிஞர் கங்கைகொண்டான் சென்னையிலிருந்து பிரசுரித்தார். கி. ராஜநாராயணன் தொகுத்த 'கரிசல் அகராதியை' யை அது வெளியிட்டது. நாடகம், சினிமா, ஓவியம் ஆகியவற்றிலும் கவனம் செலுத்தியது. சினிமா பற்றிய சிறப்பிதழாக 4–வது இதழைக் கொண்டு வர ஆசைப்பட்டது. அது கனவாகவே நின்றுவிட்டது.

°°°

'வெளிச்சம்' என்றொரு நல்ல முயற்சி, புதுமையான விஷயங்களைக் கொண்டது.

"இலக்கியமும் கலைகளும் இங்கே இருண்டு போயுள்ளன என்று குறையும் கோபமும் கொண்டுள்ள இளைஞர் சிலரின் கூட்டு முயற்சி தான் இந்த வெளிச்சம்.

நமது பண்பாட்டில் கவிந்திருக்கும் இருட்டை, இந்த ஒரு சின்னஞ் சிறிய அகல் விளக்கின் ஒளியினால் ஒழித்துவிட முடியும் என்று நாங்கள் மனப்பால் குடிக்கவில்லை. மாறாக, எல்லோரையும் போல இருட்டில் எங்களால் முணுமுணுத்துக் கொண்டிருக்க முடியாது என்பதாலேயே இந்த வெளிச்சத்தை வெளியிட்டிருக்கிறோம்.

தன்னலத்தைத் தவிர வேறெதைப் பற்றியும் சிந்திக்க இயலாத 'சிந்தனையாளர்' களின் கையில் நமது இலக்கியம், இசை, நாடகங்கள், திரைப்படம், ஓவியம் ஆகிய எல்லாக் கலைகளும் ஒப்புவிக்கப்பட்டுள்ளன என்பது எங்கள் குற்றச்சாட்டு.

உண்மையின் ஆன்மாவிலிருந்து பிறந்து, எந்தவித முகமூடியும் அணியாமல் உலா வரும் எழுத்துக்களால்தான் நமது இலக்கியத்தைக் காப்பாற்ற முடியும் என்பது எங்களது நம்பிக்கை.

எங்களது எழுத்துக்கள் எங்களிடமிருந்து பிதுக்கி எடுக்கப்பட்டவை அல்ல; ஒரு மலர் மலர்வது போல, ஒரு செடி வளர்வது போல இயல்பாக எழுந்தவை. எங்களின் எழுத்து எங்களைச் சுற்றி உள்ள மக்களின் குரல், நாங்கள் வாழும் காலத்தின் எதிரொலி.

எங்களது நம்பிக்கை எல்லாம், ஒரு சின்ன மெழுகுவத்தியின் வெளிச்சத்தை அணைக்கக் கூடிய அளவுக்கு இருள் இந்த உலகில் இல்லை என்பதுதான்." ( வெளிச்சம் )

எழுத்தாளர் ஞானம்பாடி ( கவிஞர் இந்திரன் ) த. கோவேந்தன் துணையுடன் சென்னையில் இந்த இதழைத் தொடங்கினார்.

'ஜெயகாந்தனுடன் ஒரு மணி நேரம்' என்ற சுவாரஸ்யமான கட்டுரை, கிராமியப் பாடல் பாணிக் கவிதை, இசைப் பாட்டு, ஹெர்மன் ஹெஸ் நாவலான 'சித்தார்த்தா' அறிமுகம், மற்றும் 'புதுநானூறு' எனும் அருமையான புதிய படைப்பு ( நான்கு பாடல்கள் ) கோவேந்தன் எழுதியது. உதாரணத்துக்கு ஒன்று :

'அருகன் வரின் என்? புத்தன் தோன்றில் என்?
வள்ளுவன் மொழிந்தென்? மகம்மது முழக்கிலென்?
மார்க்சு கிளர்ந்தென்? இலெனின் வினை ஆற்றி என்?
காந்தி எழுந்தென்? சுவைட்சர் அருளிஎன்?
திருத்தத் திருந்தாத் திருட்டுக் கயவர்கள்
உளவரை உருப்படாதுலகே.'

'வெளிச்சம்' ஒரே ஒரு இதழ்தான் ( ஜூன் 1979) வெளிவந்தது.

இப்படி சிதைந்த கனவுகள் எத்தனையோ !

# 24. விழிகள்

மதுரை, விழிகள் இலக்கிய வட்டம் சார்பில் நடைபெற்ற சிறு பத்திரிகையான 'விழிகள்' 1976–ல் தோன்றியது. 'இது தொட்டுக் கொள்ளத் துடிக்கும் வடிவங்கள் மட்டுமல்ல, தூரங்களும் விஸ்தீரண மானவைதான்' என்ற உணர்வுடன் செயல்பட்டது.

சிறுகதை, கவிதை, கட்டுரை போன்ற இலக்கிய விஷயங்களோடு மட்டுமே 'விழிகள்' தன்னை ஒடுக்கிக் கொண்டதில்லை. நாடகம், தெருக் கூத்து, கலைத் திரைப்படங்கள், கலாசாரம், கல்வித் தரம் போன்ற பல விஷயங்களிலும் இது அக்கறை கொண்டிருந்தது.

தங்கத் தாமரை பரிசுபெற்ற கன்னடத் திரைப்படம், 'சோமன துடி' பற்றி விரிவான கட்டுரை, அதைத் தயாரித்த பி. வி. காரந்துடன் பேட்டி, காந்தி கிராமத்தில் இராமானுஜம் பொறுப்பில் நடைபெற்ற நாடகப் பயிற்சி முகாம் போன்ற விஷயங்களை 'விழிகள்' பிரசுரித்தது. புது நாடகங்கள் பலவற்றை வெளியிட்டுள்ளது.

சுந்தரபாண்டியன் என்பவர் ஆசிரியராகவும் வெளியீட்டாளராகவும் செயல்பட்ட இப்பத்திரிகையில் ராமசாமி ( ஆராமுதம் ) தான் நிறையவும் தீவிரமாகவும் எழுதியுள்ளார். நாட்டுப்புறக் கலைகள், கிராமியப் பாடல் கள், மக்கள் கலாச்சாரம், நிஜநாடக இயக்கம் முதலியவற்றில் ஈடுபாடு உடையவர் அவர்.

தற்காலத்திய மக்கள் கலாச்சாரத்தின் தன்மையிலும், தமிழ் மன நிலையிலும் அருவருப்பும் கசப்பும் கொண்டிருந்தனர் 'விழிகள்' வட்டத் தினர். அது 'விழிகள்' எழுத்துக்களில் நன்கு வெளிப்பட்டது.

'எது சரியானது என்பதைத் தீர்மானிக்கவே விடாதபடி, கொடி தூக்குவதற்கும் கோஷமிடுவதற்கும், சாணி எறிவதற்கும், மேளம் அடிப்ப தற்கும் மட்டுமே இந்த மனநிலை மனிதர்களை உருவாக்கியிருக்கிறது' என்று 'தமிழ் மனநிலை' பற்றியும்,

'தமிழ் மனநிலை இன்றைய கலாச்சாரத்தின் மொத்தத் தளத்திலும் நடந்துகொண்டிருக்கிற அருவருக்கத்தக்க யதார்த்தம், இந்தச் சீக்காளிக்

கலாச்சாரத்திற்கு எதிராக ஆரோக்கிய கலாச்சாரத்தை நிறுவுவதாகச் சொல்லிக்கொள்ளும் சிறுசிறு அறிவுஜீவிக் குழுக்களும் சாக்கடையில் நின்று மலேரியா ஒழிப்பு பற்றிப் பேசிக்கொண்டிருப்பது நம் கலாச்சாரத் தின் போலிமை' என்றும்,

காரமாகக் கருத்துக்களை அறிவித்திருக்கிறார்கள் கட்டுரை யாளர்கள்.

'மனுஷ வமிசத்தையே தினம் தினம் இழிவுபடுத்தும் செயல்கள், வெகுஜன சீரழிவுக் கலாசாரத்தைச் சுமந்து வரும்–காசு பணத்திற்காகப் பத்திரிகை விபச்சாரம் செய்து வரும் பத்திரிகைகளில் நடந்து வருகிறது. இதற்காக இதுவரை மனுஷ வமிசம் கோபப்படாமல் அதில் சுகம் கண்டு கொண்டே வந்திருக்கிறது.'

இவ்விதம், தற்கால நிலைகளைக் கண்டு கோபமும் ஆத்திரமும் கொண்ட மனங்களின் எழுத்துக்களை 'விழிகள்' தாங்கி வந்தது.

'கல்வி மதிப்புகளின் சீரழிவு குறித்து கவலைப்படுகிறவர்களுக்காக இது' என்று அவ்வப்போது கட்டுரைகள் வந்தன. பல்கலைக்கழக மட்டத்திலும், கல்வித்துறையிலும் நிலவுகிற சீரழிவுகளையும் குறைபாடுக ளையும் அவை குத்தலாகவும், உதாரணங்களோடு விரிவாகவும் பேசின.

தமிழ் சினிமாப் படங்களைப் பரிகசிக்கும் சிறுசிறு விமர்சனங்களை 'விழிகள்' வெளியிட்டது. உதாரணத்துக்குச் சில–

'பஞ்சவர்ணம்'– வசனம், பாடல்கள் நா. காமராசன். இவரைவிட குயிலன், புரட்சிதாசன்கள் புத்திசாலித்தனமாக எழுதுகிறார்கள். ஒரு படம் எப்படி எடிட் செய்யக்கூடாது என்பதற்கும், எப்படி உரையாடல் எழுதக்கூடாது என்பதற்கும், எப்படியெல்லாம் நடிக்கக் கூடாது என்பதற் கும், எப்படியெல்லாம் எடுக்கக் கூடாது என்று படிப்பதற்கும் இந்தப் படம் உதவும்.

சகலகலா வல்லவன்– முரட்டு ராஜா, போக்கிரி ராஜாவைத் தொடர்ந்து, கமலைக் கோமாளியாக்க ஏவி. எம். எடுத்த மசாலா. தமிழ்ச் சூழலில் இந்த 'எளவு' தான் விலை போகிறது.

எங்கேயோ கேட்ட குரல்–தாலி கட்டிய பெண் கணவனை விட்டு இன்னொருத்தனுடன் ஓடுகிறது என்பது தமிழ்ப் படத்துக்குப் புதுசு. ராதாவின் 'மார் ஆட்டி' டான்சும் மற்ற மசாலாக்களும் உண்டு. ரொம்ப நாட்களுக்குப் பிறகு மாமா அத்தை அத்தான் இந்த நெருக்கங்களைக்

கேட்க முடிகிறது. மற்றபடி ரஜனி தன் தலையில் ஒரு மூட்டை பளுவைத் தூக்கி வைத்திருக்கிற இறுக்கத்துடன் வயதான ரோலில் சிரமப்படுவது பாவமாயிருக்கிறது. முன்பெல்லாம் 'மார் ஆட்டி' டான்சு களை வில்லிகள்தாம் ஆடுவதுண்டு. இப்பொழுது கதாநாயகிகள் ஆடுவது கவனிக்கத்தக்க ஒரு முன்னேற்றம்!'

இவ்வாறே கிண்டல் தொனியிலும், காரசாரமாகவும், செய்தி, ரிப்போர்ட், மியாவ் என்ற தலைப்புகளில் பல தகவல்களை—அபிப்பிராயங் களை—சூடான எண்ணங்களை 'விழிகள்' தந்தது.

சோதனை ரீதியிலான சிறுகதைகளையும், புதுக் கவிதைகளையும் வெளியிட்டது. பாரதி நூற்றாண்டு விழா சமயத்தில் 1982 ஜனவரி இதழை 'பாரதி மலர்' ஆகத் தயாரித்தது.

தெருக்கூத்து, பகல் வேஷம் ஆகிய மக்கள் கலைகளின் ஆய்வு தொடர்பான கட்டுரைகளைப் பிரசுரித்தது.

'விழிகள்' குறிப்பிட்ட காலத்தில் தவறாது வெளிவர வேண்டும் என்று ஆசைப்பட்டது. 'வரும்' என அடிக்கடி உறுதி கூறியது. எனினும், காலம் தாழ்த்தி, நீண்ட இடைவெளிகளுக்குப் பிறகேதான் ஒவ்வொரு இதழும் வருவது சாத்தியமாக இருந்தது.

1983– ல் 'விழிகள்' ஒரு இதழ்கூட வந்ததாகத் தெரியவில்லை.

# 25. மானுடம்

'கலை இலக்கிய உலகில் பூத்தது' என்று கூறிக்கொண்டு திருச்சியில் 1979–ல் தோன்றியது 'மானுடம்'. கனமான விஷயங்களைத் தருவதில் அக்கறை கொண்ட இந்த 'இரு மாதம் ஒரு முறை' சிற்றேடு தனது இரண்டாவது இதழில் கலைப்படைப்பு என்பதை பசியைப் போல் ஒரு தேடலை வெளிப்படுத்துவதாக உணர்ந்து திரைப்படங்களை உருவாக்கிய இங்மர் பெர்க்மன் எழுதிய 'ஒவ்வொரு படமும் எனது இறுதிப் படம்' என்ற கட்டுரையின் தமிழாக்கத்தை முழுமையாக வெளியிட்டது.

3–வது இதழில் எஸ். ஆல்பர்ட் எழுதிய 'புதுக் கவிதையின் பாடு பொருள்' என்ற ஆய்வுக் கட்டுரை இலக்கிய ரசிகர்களின் கவனத்தை ஈர்த்தது. ஆற்றல் பெற்ற எஸ். ஆல்பர்ட் பின்னர் கவிதைகள், மொழி பெயர்ப்பு முதலியன எழுதியுள்ளார்.

'படித்தல் என்பது உண்மையைத் தேடுவது. அந்தத் தேடல் சுலப மற்றதும் முடிவுறாததும் ஆகும்' ( ஜார்ஜ் கிஸ்ஸிங்) என்ற சிந்தனையை 'மானுடம்' பிரகடனம் செய்தது.

'மானுடத்தில் தரமான படைப்புக்கள்–சமூக விழிப்புணர்வு, சமுதாய மாற்றத்திற்கான உந்துதல்கள்–இவற்றில் நம்பிக்கை கொண்டு செயல் படுபவர்களிடமிருந்து வந்தாலும், அத்தகைய நோக்கங்களை மறைமுகமாகக் கொண்டு, கலை இலக்கியம் மூலமாய் வாழ்வின் தீவிரத்தை உணர்த்துவோரிடமிருந்து வந்தாலும்....அவைகளின் இலக்கியத் தரம் கருதி வெளியிடத் தயாராயிருக்கிறோம். மானுடம்– படைப்பிலக்கியம், இலக்கிய விமர்சனம், நவீன திரைப்படம், ஓவியம் பற்றிய கட்டுரைகளையும், அரசியல் விமர்சனக் கட்டுரைகளையும் வரவேற்கிறது. படைப்பாளிகளின் மீதான விமர்சனங்களை வெளியிடுவதற்கில்லை' என்று ஒரு இதழில் ( இரண்டாவது ஆண்டின் முதல் இதழில் ) அறிவித்திருக்கிறது.

'புதிய பரிமாணங்களில் தெரு நாடகங்கள்; அவற்றின் மீதான சில எதிர்பார்ப்புகள்' ; 'ஓவியத்தில் சுருக்க நிகழ்முறை'; 'சார்த்தின் தத்துவத்தில் மனிதனின் குணாதிசயம்' (அம்ஷன் குமார் ), 'மேடை நாடக வளர்ச்சி' ( எஸ். ஆல்பர்ட் )–கதைகள், கவிதைகள். மொழி

பெயர்ப்புக் கவிதைகள் தவிர, 'மானுடம்' இதழ்களில் வந்த கட்டுரைகள் இவை.

'சிறு பத்திரிகைகள் ஒரு இயக்கமாக, எந்தத் தொடர்ந்த பாதிப்புகளையும் ஏற்படுத்தாவிட்டாலும், இன்று புது சினிமா, புது நாடகம் போன்று புது இலக்கியம் படைக்க விரும்புபவர்கள் சிறு பத்திரிகைத் தளத்தில் இயங்குவது தவிர்க்க முடியாததாகிவிட்டது. நம்மைச் சுற்றியுள்ள ஆரோக்கியமற்ற சமூக கலை இலக்கியச் சூழலைப் பற்றிய விமர்சனங்களைச் சிறு பத்திரிகைகளில்தான் நாம் தொடர்ந்து செய்ய முடியும். எனவே, சிறு பத்திரிகை ஒரு இயக்கமாக உருவெடுப்பதற்கு முயற்சி செய்வதுதான் இப்போது நாம் செய்யக் கூடியது. இன்றுள்ள சூழ்நிலையில் படைப்பிலக்கியம் படைப்பதுடன் ஒரு பிரக்ஞையுள்ள படைப்பாளியின் வேலை முடிவடைந்து விடுவதில்லை. ஒரு படைப்பிலக்கியம் சரியாகப் புரிந்துகொள்ளப்படக்கூட இங்குள்ள போலி மதிப்பீடுகள் தடையாக இருக்கின்றன. இந்நிலையில் ஒரு கட்டத்தில் இந்த சமூக கலாச்சாரப் போலிகளைத் தகர்க்கவும்— அதற்கும் மேலாக சரியான மதிப்பீடுகளை முன்வைக்க வேண்டியதும் ஒரு சிறு பத்திரிகையின் கடமையாகிறது. படைப்பிலக்கியத்துடன் சமூகவியல், கலாசாரம்—மற்றும் சார்புடைய துறைகள் பற்றிய விமர்சனக் கட்டுரைகளை மானுடம் தொடர்ந்து வெளியிட இருக்கிறது.'

இது மானுடம் 8—வது இதழின் ஆசிரியர் அறிவித்த குறிப்பு. இதன் ஆசிரியர் ஜீ. விஜயகுமார் (ஜீவி) கதை, கட்டுரை, கவிதைகள் எழுதியுள்ளார்.

1981 முதல் ( 8—வது இதழ் ) 'நவீன இலக்கியக் குரல்' என்று அறிவித்து வந்துள்ள மானுடம் இதுவரை பத்து இதழ்கள்தான் வந்திருக்கிறது.

10—வது இதழ் ( ஜனவரி 1983 ) ஒரு விசேஷ வெளியீடு ஆகும். திருச்சியில் 1982 அக்டோபரில் 'இலக்கு கலாசார இயக்கத்தின் திருச்சிக் குழு' இருநாள் கருத்தரங்கு நடத்தியது. 'சினிமாவும் நமது கலாசாரமும்' எனும் தலைப்பில் பலர் கட்டுரைகள் வாசித்தார்கள். அக் கட்டுரைகளின் தொகுப்பே இந்த இதழ்.

ஆரோக்கியமான சினிமா வளர— அசோகமித்திரன்; சினிமாவும் சமுதாயப் பொறுப்பும்—அம்பை; நமது சினிமாவும் நமது கலாசாரமும்—அம்ஷன்குமார்; 16 வயதினிலேயும் அதற்குப் பிறகும்— பிரபஞ்சன்;

மிருணாள் சென், அநீதி எதிர்ப்பு—கோ. ராஜாராம், பிராந்திய சினிமா, ஒரு மூன்றாவது சினிமாவை நோக்கி—தமிழவன்.

இவை இவ்விதழில் உள்ளன. சுவாரஸ்யமான கட்டுரைகள். சினிமா பற்றி பல்வேறு நோக்குகளில் எழுதப்பட்ட சிந்தனைகள்.

மானுடம் சில இதழ்களில் லினோகட் ஓவியத்தை அட்டையில் பிரசுரம் செய்தது.

'ஏனோ தமிழ்ச் சிற்றேடுகளில் சினிமா பற்றிய பார்வை ஏதும் சரியான முறையில் வருவதில்லை. நவீன ஓவியம் பற்றிய கட்டுரைகளும் சிறு பத்திரிகை வாசகனை மனத்தில் கொள்ளாது சரியான அறிமுகங்க ளின்றி வெளியிடப்பட்டுள்ளது. இதன் விளைவு நவீன ஓவியத்தை நிறைய சிறு பத்திரிகை வாசகர்கள் புதிய கலை உருவமாக ஏற்றுக் கொள்ளத் தயங்குவதாகும். மானுடன் நவீன ஓவியத்தை நமது வாசகர் களுக்கு அறிமுகம் செய்ய ஓரிரு கட்டுரைகள் மூலம் எளிய முறையில் முயன்றிருக்கிறது. சினிமா பற்றியும் அவ்வாறே செய்ய விரும்பி 'இலக்கு' கருத்தரங்க கட்டுரைகளை வெளியிட்டுள்ளோம். தொடர்ந்து வெளியிட இருக்கிறோம்' என்று ஆசிரியர் ஜீவி அறிவித்திருக்கிறார்.

'மானுடம்' தொடர்ந்து வெளிவரும் என்று அவர் குறிப்பிட்டிருந்த போதிலும், அப்புறம் அது வெளிவரவில்லை.

# 26. ஒரு விளக்கம்

மறுமலர்ச்சி இலக்கியம் என்ற பிரயோகம் 1930 களிலும் 40 களிலும் தமிழ்நாட்டில் அதிகச் செல்வாக்கு பெற்றிருந்தது.

'மணிக்கொடி' தமிழ்நாட்டின் முதலாவது மறுமலர்ச்சி இலக்கியப் பத்திரிகை என்ற மதிப்பை அடைந்திருந்தது. மணிக்கொடி எழுத்தாளர் கள் தங்களை 'மறுமலர்ச்சி எழுத்தாளர்கள்' என்று பெருமையுடன் அறிவித்தார்கள்.

தமிழ் இலக்கிய மறுமலர்ச்சிக்கு வித்திட்டவர் மகாகவி சுப்பிரமணிய பாரதியார். அவர் படைப்பிலக்கியத்தில் புதிய சுவை, புதிய பொருள், புதிய வளம் , புதிய சொற்கள் சேர்ப்பதில் ஆர்வம் கொண்டு எழுதினார். எளி மையும் இனிமையும் சேர்த்து மொழியை உயிரும் உணர்வும் உள்ளதாக ஆக்கினார். பழகு தமிழ்ச் சொற்களைப் படைப்புகளில் கலந்து எழுத்துக் குப் புதிய அழகும் வேகமும் தந்தார்.

பாரதியாருக்கு முற்பட்ட காலத்தில் தமிழ் இலக்கியம் பண்டிதர்க ளின்– மெத்தப் படித்த மேதாவிகளின்–தனி உடைமையாகக் கருதப்பட்டு வந்தது. பண்டிதர்கள் கம்பனும் திருவள்ளுவரும்தான் தமிழ் மொழியின் 'கதி' என்றும், கம்பராமாயணமும் திருக்குறளும்தான் மொழிக்கு வளம் அளிக்கும் இலக்கியம் என்றும் பேசிக்கொண்டிருந்தார்கள்.

அந்தக் குறுகிய நோக்கிற்கு மாற்று கண்டவர் பாரதியார். எனவே அவரை இலக்கிய மறுமலர்ச்சிக்கு வித்திட்டவர் என்றும் 'பொன் ஏர் பூட்டிய முதல்வன்' என்றும், தங்களுக்கு முன்னோடி என்றும் மணிக் கொடி எழுத்தாளர்களும் அவர்கள் காட்டிய பாதையில் முன்னேற முற் பட்ட மறுமலர்ச்சி எழுத்தாளர்களும் ஏற்றுக்கொண்டிருந்தார்கள்.

வெகுநாட்கள் வரை பண்டிதர்கள் பாரதியாரைக் கவிஞராகவும், அவருடைய படைப்புக்களைக் கவிதைகளாகவும் அங்கீகரித்தாரில்லை. அதேபோல மறுமலர்ச்சி இலக்கியத்தையும் மறுமலர்ச்சி எழுத்தாளர்க ளின் எழுத்துக்களையும் பழிப்பதையும் பரிகசிப்பதையுமே தங்கள் முக்கிய வேலையாகக் கொண்டிருந்தார்கள்.

'தமிழுக்குக் கதி கம்பராமாயணமும் திருக்குறளும்தான்' என்ற கருத்தைப் பிரசாரம் செய்து கொண்டிருந்த தமிழ் அறிஞர்களில் ஒருவர் ரா. பி. சேதுப்பிள்ளை. அவர் மறுமலர்ச்சி இலக்கியப் போக்கை எதிர்த்த வர்களுள் ஒருவராகவும் இருந்தார். 'மறுமலர்ச்சி என்று சொல்வதே தவறானது. ஒருமுறை மலர்ந்தது மாளுமே தவிர மறுபடியும் மலராது. எனவே, மறுமலர்ச்சி எனக் கூறுவது ஆகாசத் தாமரை என்பது போலாம். அவ்விதம் எதுவும் கிடையாது என்பதனால், மறுமலர்ச்சி என்ற பெயரால் இன்றைய எழுத்தாளர்கள் செய்து கொண்டிருப்பது தமிழ் மாள்ச்சிதான்—தமிழைச் சாகடிக்கிற வேலைதான்' என்று அவர் முழக்கம் செய்து வந்ததை ஒரு உதாரணமாகக் குறிப்பிடலாம்.

பண்டிதர்கள் இலக்கியம் என்று குறிப்பிட்டு மொழியின் வளர்ச்சி யைத் தேங்க வைத்து, வளம் குறையச் செய்து கொண்டிருந்தார்கள். இது புராதனப் போக்கு.

இதற்கு மாறுபட்ட வளமான போக்கு மறுமலர்ச்சி இலக்கியப் பணி.

செய்யுள்கள் ( பாடல்கள் ), காவியங்கள் மற்றும் அவை பற்றிய விரிவுரை, விளக்கங்கள், ஆய்வுரைகள்தான் இலக்கியம் ஆகும் என்று பண்டித மனப்பான்மை உடையவர்கள் சாதித்துக் கொண்டிருந்தார்கள். 'இலக்கியப் பத்திரிகைகள்' இத்தகைய விஷயங்களையே பிரசுரித்து வந்தன.

இனிய எளிய கவிதைகளும், சிறுகதைகளும், நாவல்களும் இலக்கி யம் ஆக முடியும்—ஆகும்—என்று வற்புறுத்தினார்கள் மறுமலர்ச்சி எழுத் தாளர்கள். அத்தகைய படைப்பு முயற்சிகளில் ஈடுபட்டார்கள்.

ஆற்றலும் ஆர்வமும் பெற்ற இவ்வகைப் படைப்பாளிகளுக்குச் சிறு பத்திரிகைகளே உரிய மேடைகளாகத் துணை நின்றன.

கால ஓட்டத்தில், மறுமலர்ச்சி என்ற சொல்லின் மீது அரசியல் சாயம் பூசப்பட்டது .

சுயமரியாதை, பகுத்தறிவு வாதம் , தமிழ் இன உணர்வு முதலிய வற்றைப் பிரசாரம் செய்துவந்த திராவிடக் கட்சியின் மேடைகளிலும் ஏடு களிலும் சி. என். அண்ணாதுரை தமிழ் இன மறுமலர்ச்சி, தமிழ்ப் பண்பாட்டு மறுமலர்ச்சி, தமிழர் சமுதாய மறுமலர்ச்சி என்றெல்லாம் நாவலிக்கலானார். 'எது மறுமலர்ச்சி ?' என்று ஒரு சிறு புத்தகமும் எழுதி, கொள்கை முழக்கம் செய்தார்.

'ரினெய்ஸான்ஸ் லிட்டரேச்சர்' என்ற தன்மையில் மறுமலர்ச்சி இலக்கியம் என வழங்கி வந்த பிரயோகம் மறைந்து போயிற்று. தற்கால இலக்கியம் வெறுமனே 'இலக்கியம்' என்றே குறிக்கப்படுவதாயிற்று. சிறுகதை, நாவல், கவிதைகள், சுயசிந்தனைக் கட்டுரைகள் முதலியன 'படைப்பிலக்கியம்' என்று பேசப்படலாயின.

1940 களில் 'முற்போக்கு இலக்கியம்' என்ற குரல் எழுந்தது. இது அரசியல் கட்சி சார்புடையதாகவே அமைந்தது. இப்போதும்கூட முற்போக்கு இலக்கியம் என்றால் கம்யூனிஸ்ட் சார்புடைய எழுத்துக்கள் என்று பொருள் கொள்வதே இயல்பாக இருக்கிறது.

சமூக உணர்வோடும்— சமுதாயப் பார்வையோடும்—மனிதாபிமானத் தோடும் ( மனித நேயத்துடனும் ) எழுதப்படுகிற எழுத்துக்கள் பொது வாக முற்போக்கு இலக்கியம் என மதிக்கப்படலாம்.

ஆனாலும், முற்போக்கு இலக்கிய ஆதரவாளர்கள் அத்துடன் திருப்தியடைய மாட்டார்கள். மார்க்ஸிய தத்துவ நோக்கில் சமூகப் பிரச்னைகளைக் கவனித்து—வரலாற்று அடிப்படையில் உண்மை ஆதாரங் களைச் சிந்தித்து— வளமான எதிர்காலத்துக்கு வர்க்க உணர்வோடு விடுதலை மார்க்கமும் நம்பிக்கை ஒளியும் காட்டக் கூடியதுதான் முற்போக்கு இலக்கியம் என வலியுறுத்துவர்.

இத்தன்மையில் முதன் முதலில் வழிவகுத்துக் காட்டியது 'ஜனசக்தி' பத்திரிகை ஆகும். அதன் வழியில் லோகசக்தி, நவசக்தி, புதுயுகம் போன்ற அநேக சிறு பத்திரிகை கம்யூனிஸக் கொள்கைகளையும் முற்போக்கு இலக்கியத்தையும் பரப்பப் பாடுபட்டன, 1940 களில்.

அவை எல்லாம், குறிப்பிடத்தகுந்த படைப்பாளிகளை அல்லது படைப்புகளை நாட்டுக்கும் மொழிக்கும் தந்துவிடவில்லை.

கவிஞர் தமிழ் ஒளியும் தோழர் கோவிந்தன் என்பவரும் முற்போக்கு இலக்கியத்தை வளர்க்கவும் வளம் செய்யவும் 'புதுமை இலக்கியம்' என்றொரு பத்திரிகையை ஆரம்பித்தார்கள், 1949– ல். அது இரண்டு இதழ்களோடு மறைந்து போயிற்று.

ஐம்பதுகளில் கவிஞர் கே. சி. எஸ். அருணாசலம் 'நீதி' என்ற பத்திரிகையை நடத்தினார். பொள்ளாச்சியிலிருந்து வெளிவந்த இந்த

மாதப் பத்திரிகை ஒ ர ள வு கவனிப்பைப் பெற்றிருந்தது. ஆயினும் குறுகிய காலமே வாழ்ந்தது.

இப்படி, வெற்றி பெறாத பல முயற்சிகளுக்குப் பிறகு சென்னை யில் 'சரஸ்வதி' தோன்றியது, 1955 ல். ஆசிரியர் : வ. விஜயபாஸ்கரன். இலக்கியப் பத்திரிகை என்ற தன்மையில் பல சாதனைகள் புரிந்து, தனக்கெனத் தனி வரலாறு படைத்துக் கொண்ட 'சரஸ்வதி' ஏழு வருடங்கள் நடந்தது ( இப் பத்திரிகை குறித்து இத் தொடரில் முன்பே எழுதப்பட்டு விட்டது).

தொ. மு. சி. ரகுநாதன் 'சாந்தி' என்ற பெயரில் முற்போக்கு இலக் கியப் பத்திரிகை ஒன்றை நடத்தினார். 1955– ல் திருநெல்வேலியிலிருந்து வெளிவந்த இம் மாசிகை ஒரு வருடமும் சில மாதங்களுமே உயிரோடி ருந்தது. விந்தன் நடத்திய 'மனிதன்' என்ற மாசிகையும் முற்போக்கு இலக்கிய இதழாகவே வந்தது.

'சரஸ்வதி' நடைபெற்றுக் கொண்டிருந்த காலத்திலேயே, இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த இலக்கியப் பத்திரிகையாக ப. ஜீவானந் தம் 'தாமரை' யைத் துவக்கி வைத்தார்.

# 27. தாமரை

'தாமரை' 1958–ல் பிறந்தது. ஆசிரியர் : ப. ஜீவானந்தம்; 'மாஜினி' துணை ஆசிரியராகப் பணியாற்றினார்.

'ஜீவா' வின் பாரதி இலக்கிய ரசனையும், பழம் தமிழ் ஈடுபாடும் தாமரை கட்டுரைகள் வாயிலாக நன்கு வெளிப்பட்டன.

முற்போக்கு இலக்கியத்தின் தன்மைகளை விளக்கும் கட்டுரைகளும், அந்த அடிப்படையில் எழுதப்பெற்ற கதைகளும் கவிதைகளும் பிரசுரமாயின.

ஜீவானந்தத்துக்குப் பிறகு மாஜினி பத்திரிகைப் பொறுப்பை நிர் வகித்தார். பின்னர், 1960 களில் தி. க. சிவசங்கரன், ஆ. பழநியப்பன், எம். கே. ராமசாமி ஆகிய மூவரைக் கொண்ட 'ஆசிரியர் குழு' 'தாமரை'யை வளர்க்கும் பணியை ஏற்று நடத்தியது.

இவர்களது ஆசிரியப் பொறுப்பு பத்து வருட காலம் நீடித்தது. இந்தக் காலகட்டத்தில் 'தாமரை' இலக்கியவாதிகளின் கவனத்தை வெகுவாய்க் கவர்ந்தது.

உ ல க இலக்கியங்களின் வளர்ச்சி, அண்டை மாநிலங்களில் வளரும் இலக்கியப் போக்குகள், சோவியத் ரஷ்யாவின் புதிய இலக்கியப் படைப்புகள் ஆகியவற்றைத் தமிழ் வாசகர்களுக்கு விரிவாக அறிமுகம் செய்தது தாமரை.

இதற்கென்றே சர்வதேச சிறுகதை மலர், (இந்திய) அயல்மொழிச் சிறுகதைச் சிறப்பிதழ் என்று அவ்வப்போது விசேஷத் தயாரிப்புகளை ஆசிரியர் குழுவினர் உருவாக்கினர்.

தமிழ்நாட்டின் இலக்கியப் படைப்பாளிகளது சிறுகதைகளைச் சேகரித்து சிறுகதைச் சிறப்பிதழ்கள் வெளியிட்டார்கள். வட்டார இலக்கிய வளர்ச்சியை அறிமுகப்படுத்தும் வகையில் 'கரிசல் இலக்கிய மலர்' தயாரித்தார்கள்.

விமர்சனக் கட்டுரைகளைச் சேகரம் செய்து வெளியிடுவதில் இக்காலக்கட்டத்திய தாமரை அதிக அக்கறை காட்டியது. மணிக்கொடி

எழுத்தாளர்களை விமர்சித்து தி. க. சிவசங்கரன் ஒரு கட்டுரைத் தொடர் எழுதினார்.

உலக நாடக இலக்கியம் குறித்து எம். கே. மணி சாஸ்திரி எழுதிய கட்டுரைத் தொடர் பாராட்டப்பட வேண்டிய நற்பணியாகும்.

'தாமரை' இலக்கிய விவாதங்களையும் வளர்த்தது.

தாமரை வெகுகாலம் வரை புதுக் கவிதையை வரவேற்றதில்லை. வேக வளர்ச்சி பெற்றுக் கொண்டிருந்த புதுக் கவிதையின் போக்கை—'எழுத்து' பத்திரிகை வெளியிட்ட 'புதுக்குரல்' கவிஞர்களது படைப்பு களை—மார்க்ஸிய தத்துவ நோக்கில் ஆய்வு செய்து, கண்டனக் கட்டுரை களை தாமரை வெளியிட்டது. அவற்றுக்கான மறுப்புக் கட்டுரைகளையும் வரவேற்றுப் பிரசுரித்தது.

பின்னர் முற்போக்குப் பாணியில் எழுதப்படும் புதுக் கவிதைகளை விரும்பி வெளியிட்டது. புதிய கவிஞர்களுக்குப் பேராதரவு தந்தது.

ஆசிய, ஆப்பிரிக்க விடுதலைக் கவிஞர்களின் படைப்புகளைத் தமிழில் தந்தது தாமரை. வியட்நாம் மக்களின் விடுதலைப் போராட்டத் தையும், அதன் பின்னணியில் தோன்றிய இலக்கியங்களின் பெருமையை யும் எடுத்துச் சொல்வதற்காக 'வியட்நாம்' மலர் வெளியிட்டது.

ஆசிரியர் குழுவினர் புதிய எழுத்தாளர்களை ஊக்குவித்தனர். இளம் எழுத்தாளர்களுக்கு யோசனைகள் கூறி வழிகாட்டினர்.

இப்படிப் பல வகைகளிலும் 'தாமரை'க்கு ஒரு தனித்தன்மை உண்டாக்கிய, இலக்கிய ரசிகர்கள் மற்றும் எழுத்தாளர்கள் மத்தியில் அதற்கு விசேஷ கவனிப்பு ஏற்படும்படி செய்த ஆசிரியர் குழுவினர், நூறு இதழ்கள் தயாரித்து முடித்துப் பெயர் ஈட்டிய பெருமையோடும் மகிழ்ச்சியோடும் ஆசிரியப் பொறுப்பிலிருந்து விலகிக் கொண்டார்கள்.

அதிலிருந்து 'தாமரை' தனது பெருமையை இழக்கலாயிற்று. அதைப் பொறுப்பாகவும் உற்சாகத்துடனும், போதிய இலக்கிய ஈடுபாட்டு டனும் நிர்வகித்து அதன் தனித்தன்மையைப் பாதுகாப்பதற்கு ஏற்றவர் கள் இல்லாது போனது இலக்கியவாதிகளுக்கும் முற்போக்குவாதிகளுக் கும் வருத்தம் அளித்துக் கொண்டிருக்கும் ஒரு குறையே ஆகும்.

'தாமரை' இலக்கிய விமர்சனங்களில் அக்கறை காட்டுவதை விட்டு விட்டு அவ்வப்போது அடிபடும் இலக்கியப் பிரச்னைகளில் கவனம் செலுத்தி, முற்போக்கு இலக்கியவாதிகளின் கருத்துக்களைச் சேகரித்துத் தருவதை மறந்துவிட்டது. சர்ச்சைக்குரிய புதிய படைப்புகள் குறித்த அபிப்பிராயங்களை வாசகர்களுக்கு அறிமுகம் செய்யும் பணியையும் அது துறந்துவிட்டது. இப்படிப் பல குறைபாடுகள் 'தாமரை'யைப் பற்றிக் கொண்டு விட்டன .

ஆயினும். அவ்வப்போது நல்ல சிறுகதைகளை அது தந்து கொண்டிருக்கிறது. பாரதி படைப்புகள் குறித்து ஆழமான ஆய்வுக் கட்டுரைகளை 'தாமரை' அதிகமாகப் பிரசுரித்திருக்கிறது. பாரதி நூற்றாண்டு விழா ஆரம்பத்தில் சிறந்த முறையில் ஒரு மலர் தயாரித்து வெளியிட்டது.

டாக்டர் கதிரேசன் அவர்கள் எழுதிய மருத்துவக் கட்டுரைகளை தாமரை தொடர்ந்து பிரசுரித்தது பாராட்டப்பட வேண்டிய ஒரு அரிய சேவையே ஆகும்.

நன்கு வளர்ச்சி பெற்றுள்ள 'தாமரை'யின் விலாசம் : 161, பிரகாசம் சாலை , சென்னை – 108.

# 28. சிகரம்

முற்போக்கு இலக்கியப் பத்திரிகையான 'தா ம ை ர' இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சி ( CPI- வலதுசாரி கம்யூனிஸ்டுகள் ) சா ர் பி ல் நடைபெறும் மாதப் பத்திரிகை.

இடதுசாரிக் கம்யூனிஸ்டுகள் ( CPM –மார்க்சிஸ்ட் கட்சி ) சார்பில் நடக்கிற மாதப் பத்திரிகை 'செம்மலர்' ஆகும். மதுரையிலிருந்து பிரசுர மாகும் இந்த முற்போக்கு இலக்கிய இதழும் புத்தக வடிவத்தில்தான் வருகிறது. மார்க்சிஸ்ட் தத்துவ நோக்கில் தீவிரவாதக் கருத்துக்களை வலியுறுத்தும் கதைகள், கட்டுரைகள், கவிதைகள் இதில் இ ட ம் பெறுகின்றன.

'நல்ல நாவல்' என்று இலக்கிய ரசிகர்களின் மதிப்புரையைப் பெற்றுள்ள சின்னப்பப் பாரதியின் 'தாகம்' செம்மலரில் தொடர் கதையாக வெளிவந்ததுதான்.

'மலரும் சருகும்', 'தேநீர்' ஆகிய முற்போக்கு நாவல்களை எழுதிய டி. செல்வராஜ் இந்தப் பத்திரிகையில் 'மூலதனம்' என்ற நாவலைத் தொடர்ந்து எழுதினார்.

'இலக்கியச் சிந்தனை' அமைப்பின் பரிசுகளைப் பெற்ற அநேக சிறுகதைகள் 'செம்மலரி'ல் வந்திருக்கின்றன.

'செம்மலர்' இப்பவும் இடதுசாரிகளின் இலக்கியப் பத்திரிகையாக நடந்து கொண்டிருக்கிறது.

இடதுசாரிகளின் இன்னொரு இ ல க் கி ய ப் பத்திரிகையாக, ச. செந்தில்நாதன் 'சிகரம்' என்ற மாத இதழை நடத்தினார்.

இந்த 'மக்கள் இலக்கிய மாத இதழ்' 1975 ஜூலையில் பிறந்தது.

'காலகட்டத்தின் கட்டளையை ஏந்தி, கலை இலக்கியப் பண்பாட்டுத் துறையில் தோகை விரிக்கிறது ஒரு மயில்; கீதம் இசைக்கிறது ஒரு குயில்.'

இப்படி இசைத்துக்கொண்டு 'ஒரு வாசல் திறப்பு'க்கு வழி வகுத் தது சிகரம்.

'இது ஓகோ என்றிருக்க வேண்டும் என்ற பேராசை எனக்குக் கிடையாது. இருக்கும் என்று எதிர்பார்க்கும் நப்பாசையும் கிடையாது.

ஏனென்றால் இது போர்க்களத்தில் பீரங்கி அல்ல, பீரங்கியின் ஒரு உறுப்பே.

களத்தில் துப்பாக்கியை ஏந்தி நிற்பவனுக்குக் கரத்தில் வலிமை மட்டும் இருந்தால் போதுமா? போதாது. புத்தி கூர்மை வேண்டும்; சாதுர்யம் வேண்டும். அதை வளர்க்க முயலும் சிறு ஏடு சிகரம்' என்று அதன் ஆசிரியர் அறிவித்திருந்தார்.

'மனிதாபிமான கோட்பாடுகளிலும் ஜ ன நா ய க நெறிகளிலும் உங்களுக்கு நம்பிக்கை இருந்தால் போதும். உங்கள் எழுத்து மனித குலத்தின் முன்னேற்றத்திற்கு உதவ வேண்டும் என்ற எண்ணம் உங்களுக்கு இருந்தால் போதும்.

சிகரம் இடம் கொடுக்கும்.

இந்த இடம் இடதுசாரி சக்திகள் பரந்த ஜனநாயக அமைப்பைக் கட்டுவதற்கும், ஒன்றுபடும் விஷயங்களில் ஒருமைப்பாட்டை வளர்த்துக் கொள்ளவும், எதிர் வர்க்கங்களுக்கு ஆதரவான இலக்கிய அம்சங்களை அம்பலப்படுத்துவதற்கும் கொடுக்கப்படும் இடமாகும்.'

இவ்வாறு ஆசிரியர் எழுதினார்.

'இலக்கியமும் சமுதாய மாற்றங்களும்' என்ற தலைப்பில் வி. பி. சிந்தன் எழுதிய கட்டுரை முதல் இதழில் பிரசுரமாயிற்று.

'இலக்கியம் என்பது சமுதாயத்தின் விளை பொருள். சமூக உறவு களும் உற்பத்தி முறைகளும் எந்த அளவு ஒரு சமுதாயத்தில் நிலவுகிறதோ, அந்த அளவு அந்தச் சமுதாயத்தின் இலக்கியமும் இருக்கும் .

சமுதாய மாற்றம் ஏற்படும் போதெல்லாம் இலக்கியத்திலும் மாற்றம் ஏற்படும். சமூக உணர்வின் துடிப்பைக் கிரகித்துக் கொண்டு அதை வெளிப்படுத்தும் இலக்கியங்கள் சமுதாய உணர்வின் அலைகளையும் பாதிக்கின்றன. சமுதாய மாறுதலை அவை உத்வேகப்படுத்துகின்றன.'— இக்கருத்தை சிந்தன் தனது கட்டுரையில் வலியுறுத்தியிருந்தார்.

தணிகைச்செல்வன், பறம்பைச் செல்வன், க. பொ. அலி கவிதைகள்; என். ஆர். தாசன், ம. ந. ராமசாமி எழுதிய கதைகள்; மு. செந்தமிழன்

எழுதிய 'ஷோலக்கோவ்–ஒரு கம்யூனிஸ்ட் எழுத்தாளர்' என்ற கட்டுரை; இளவேனில் 'கவிதா' என்ற தலைப்பில் எழுதிய தொடர் கட்டுரையின் பகுதி–இவை முதல் இதழின் விஷயங்கள்.

இவ்விதமே தரமான விஷயங்களுடன் மாதந்தோறும் வெளிவந்தது 'சிகரம்.'

என். ஆர். தாசன், ம. ந. ராமசாமி, சி. ஆர். ரவீந்திரன், பா. செயப் பிரகாசம், மேலாண்மை செ. பொன்னுசாமி ஆகியோர் அவ்வப்போது கதைகள் எழுதினார்கள்.

ம. ந. ரா. எழுதிய சில கதைகள் காரசாரமான விமர்சனங்களையும், எதிர்ப்புகளையும் எழுப்பியுள்ளன.

தணிகைச்செல்வன், தமிழன்பன், உதயை மு. வீரையன், கொ. மா. கோதண்டம், முத்துராமலிங்கம், ப. வேலுசாமி முதலியோர் கவிதைகள் அடிக்கடி வந்தன.

பிற மொழிக் கவிதைகளைத் தமிழாக்கி வெளியிடுவதிலும் 'சிகரம்' ஆர்வம் காட்டியது.

நஸ்ருல் இஸ்லாமின் வங்கக் கவிதைகள் மற்றும் சீனக் கவிதை கள், வியத்நாம் கவிதைகள் சில முதல் வருட இதழ்களில் வந்துள்ளன.

ஒரியக் கதை, வங்காளிக் கதை மொழிபெயர்ப்புகளும் பிரசுரம் பெற்றன.

'சிகரம்' பேட்டிகளில் கவனம் செலுத்தியது. முதலாவதாக 'வி. பி. சிந்தனுடன் ஒரு பேட்டி' வந்தது.

'வாழ்க்கையின் உண்மையான படப்பிடிப்பு மட்டும் ஒரு சிறப்புக்குரிய இலக்கியப் படைப்பாக நான் கருதவில்லை. சமுதாயத்தின் பல்வேறு பகுதிகளில் அவர்களின் பொருளாதார நலன்களால் உந்தித் தள்ளப்பட்டு பரஸ்பரம் மோதியும் அடக்கியும் எதிர்த்தும் எதிர்நீச்சலடித்தும் நடத்து கின்ற வர்க்கப் போராட்டத்தையும், அதன் விளைவாக சமுதாயத்தில் ஏற்படுகின்ற மாற்றங்களையும் கோடிட்டுக் காட்டுகிற படைப்பே சிறந்த இலக்கியமாகும்' என்று சிந்தன் கருத்து தெரிவித்திருந்தார்.

இந்தக் கருத்தை வலியுறுத்தும் கட்டுரைகளை 'சிகரம்' அவ்வப் போது பிரசுரித்தது. உதாரணமாக 'முற்போக்குச் சமுதாய மாற்றங்கட்கு கலையும் இலக்கியமும் ஓர் ஆயுதமே' –ஈ. எம். எஸ். எழுதியது. 'களத்தில் நாம்' –டி. செல்வராஜ்.

இளவேனில், உணர்ச்சிகரமான அழகிய நடையில் 'கவிதா' கட்டுரைத் தொடரில், இக்கருத்துக்குச் சாதகமான இலக்கியப் படைப்புகள் பற்றி விரிவாக எழுதினார்.

கே. முத்தையா, தமிழ்நாடு சி. ஐ. டி. யூ. தலைவர் கே. ரமணி, ஜோதிர்லதா கிரிஜா—பேட்டிகள் இடம்பெற்றன.

வாசகர் கருத்து 'பட்டறை' என்ற பகுதியில் வெளியிடப்பட்டது. வாசகர்கள் உள்ளது உள்ளபடி விமர்சிக்கத் தயங்கவில்லை.

'நந்தனார் நாட்குறிப்பு' எனும் பகுதி சுவாரஸ்யமாக இருந்தது. கலை, இலக்கிய வட்டாரப் பிரமுகர்களைப் பற்றிய சுவையான தகவல்களும் கிண்டல் குறிப்புகளும் இதில் காணப்படும்.

'ஆஸ்தான கவி பதில் தருகிறார்' என்ற கேள்வி— பதில் பகுதியும் விறுவிறுப்பாக அமைந்திருந்தது.

கே. முத்தையா 'சிலப்பதிகாரம்— உண்மையும் புரட்டும்' என்றொரு நீண்ட கட்டுரைத் தொடரை சிகரத்தில் எழுதி, இலக்கியவாதிகள் மற்றும் ஆய்வாளர்களின் சிந்தனையைத் தூண்டியிருக்கிறார்.

முற்போக்கு நாவல்கள், சிறுகதைப் புத்தகங்கள் பற்றி விரிவான விமர்சனங்கள் எழுதப்பட்டன.

சிகரம் 'மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியை ஆதரிக்கும் இலக்கிய ஏடாகவும் தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தின் அடியொற்றி நடக்கின்ற ஏடாகவும்' விளங்கியது. ஆகவே, தமிழ் எழுத்தாளர் சங்கம், தமிழ் எழுத்தாளர்கள் கலை இலக்கிய பெருமன்றம், தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கம் பற்றிய தனது எண்ணங்களை செந்தில்நாதன் விரிவாகவும் வெளிப்படையாகவும் தொடர்ந்து எழுதினார்.

மூன்றாவது வருஷத்தில் 'தமிழ்— தி. மு. க.— கம்யூனிஸ்ட்' பற்றிய அபிப்பிராயங்களை வெளியிட்டார்.

'சிகரம்' சிறுகதை, கவிதைத் துறைகளைவிட 'கட்டுரை' யில்தான் குறிப்பிடத்தகுந்த வெற்றி கண்டிருக்கிறது.

இதை ஆசிரியரே உணர்ந்து, ஒரு இதழில் குறிப்பிட்டிருக்கிறார். மார்க்ஸிய தத்துவக் கண்ணோட்டத்தில் எழுதப்படுகிற கதைகளை, அந்நோக்கில் எழுதுகிற இளம் எழுத்தாளர்களின் கதைகள், கவிதைகளையும்

பிரசுரித்து ஊக்கம் அளிக்க வேண்டியிருப்பதாலேயே இப்படி நேர்கிறது என்பது அவருடைய கூற்று.

'சிகரம் லாபத்திற்காக நடத்தப்படவில்லை. கலை– இலக்கியப்– பண் பாட்டுத் துறையில் முற்போக்கு முகாமை, வர்க்கக் கண்ணோட்டத்தைப் பலப்படுத்தும் இலட்சியத்திற்காகவே நடத்தப்படுகிறது' என்பதை அவ்வப் போது நினைவுறுத்தினார் அவர்.

கே. முத்தையா எழுதிய 'சிலப்பதிகாரம்' பற்றிய ஆய்வுக் கட்டுரை போலவே முக்கியமான மற்றொரு கட்டுரைத் தொடரையும் சிகரம் வெளியிட்டுள்ளது. ஜன. சுந்தரம் எழுதிய 'அகப்பாடல்களில் அரசியல் பிரச்னைகள்–சமூக உறவுகள்' என்ற தொடர் கனமான சிந்தனைகளைக் கொண்ட ஆழ்ந்த ஆராய்ச்சியாகும்.

தனிக் கட்டுரைகளில் க. கைலாசபதியின் 'தற்கால இலக்கியத்தில் சில போக்குகள்', மற்றும் 'ஈழத்துத் தமிழ் இலக்கியம்– ஓர் அறிமுகம்', சூரியதீபன் எழுதிய 'நடுத்தரவர்க்கப் பேனா', நல்லதம்பியின் 'கலைஞனும் சமூகமும்', 'பாரதி இலக்கியம்', ஆகியவை முக்கியமானவை.

சூரியதீபன் தற்கால உண்மைகளைச் சூடாகவும் அழுத்தமாகவும் குறிப்பிட்டிருக்கிறார். 'நடுத்தர வர்க்கப் பேனா' என்ற கட்டுரையில்.

'மக்களிடமிருந்து மக்களுக்குக் கொடுப்பது என்பது அரசியலுக்கு மட்டுமல்லாமல், கலை இலக்கியத்திற்கும் பொருந்துகிற ஒன்று. மக்களிட மிருந்து விஷயரசம் எடுத்து இலக்கியத்தில் பூசுகிறபோதுதான், அது காலத்தைக் காட்டும் கண்ணாடி என்பது சரியாகிறது.

'புதுக் கவிதை எழுதுவதே ஒரு பெரிய சமூக நிகழ்வு ஆகிவிடாது. புதுக் கவிதை எழுத பேனா தொட்டுவிட்டதாலேயே சமூக முன்னோட்டத் திற்கான பணியைச் செய்து விட்டதாக ஒரு பெருமை இன்றைய மத்திய வர்க்க எழுத்தாளர்களிடையே காணப்படுகிறது. வாழ்க்கை நிலைகளில் மாற்றம் கொள்ளாமல் எழுதுவது மட்டுமே தீர்வு கண்டு விடும் என்று எண்ணினால், அது நடுத்தர வர்க்கக் கனாக்களே.'

எழுதுகிறவர்களைச் சிந்திக்கும்படி தூண்டுகிற இந்தவிதமான எண்ணங்கள் இக்கட்டுரையில் அழுத்தமாகப் பதிவாகியிருக்கின்றன.

மூன்று வருடங்கள் 'சிகரம்' பெரிய அளவில் ( 'தீபம்' அளவில் ) வெளிவந்தது.

சில மாதங்கள் வராமல் நின்று, பின் 1979–ல் சிறு அளவில் ('விகடன்' சைஸ்) மீண்டும் வந்தது.

நா. காமராசன், தணிகைச்செல்வன், சிற்பி, புவியரசு, டொமினிக் ஜீவா, சத்யஜித் ரே, டைரக்டர் ருத்ரய்யா ஆகியோரது பேட்டிகளைப் பிரசுரித்தது.

சினிமாவில் ஆர்வம் காட்டியது. தரமான திரைப்படங்களை விமர்சித்து, நல்ல படங்களைப் பாராட்டி எழுதியது.

'சிகரம்' நாடகக் கலையிலும் சிறிதளவு கவனம் செலுத்தியது.

கோ. ராஜாராம் எழுதிய 'சிவப்பு நதி' என்ற கவிதை நாடகத்தை அச்சிட்டது. கோமல் சுவாமிநாதனின் மேடை நாடகங்களை விமர்சித்து எழுதியது. அவருடைய கட்டுரை ஒன்றைப் பிரசுரித்தது.

எல்லா சிறு பத்திரிகைகளுக்கும் உள்ள சிரமங்களும் பிரச்னைகளும் சிகரத்துக்கும் இருந்தன. ஒழுங்காக, காலம் தவறாது வெளிவர சிரமப்பட்டு, இறுதியில் நிற்க வேண்டிய நிலை அதற்கும் ஏற்பட்டது.

# 29. முற்போக்கு இலக்கிய இதழ்கள்

முற்போக்கு இலக்கியத்தில் ஈடுபாடு கொண்ட சிறு பத்திரிகைகள் பல 1970 களில் தோன்றின. அவை நீடித்து வெகுகாலம் வளர முடிந்ததில்லை. சில பத்திரிகைகள் தொடர்ந்து காலம் தவறாது பிரசுரம் பெற்றதுமில்லை. நின்று போவதும், திடீரென்று மறுபடியும் தோன்றுவதும் மீண்டும் மறைவதுமாக அவற்றின் வாழ்க்கையே பெரும் போராட்டமாகத்தான் அமைந்திருந்தது.

அவற்றின் முக்கியமான சிலவற்றைப் பற்றி இங்கே தெரிந்து கொள்ளலாம்.

இளவேனில் நடத்திய 'சிவப்பிலக்கிய மாத இதழ்'.

இளவேனில் கவிஞர். ஓவியர். மார்க்சிஸ்ட் சிந்தனையாளர். இந்திய மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியிடம் பற்றுக் கொண்டவர். 'கோபம் கொண்ட இளைஞர்'. உணர்ச்சி வேகமும் கருத்து ஓட்டமும் விறுவிறுப்பும் நிறைந்த உரைநடை எழுதக்கூடிய திறமைசாலி.

இந்தப் பண்புகள் அனைத்தும் 'கார்க்கி' இதழில் பிரதிபலித்தன.

'வாளோடும் தேன்சிந்தும்
மலரோடும் வந்திருக்கும்
நானோர் கோபாக்கினி
நானோர் இளவேனில்'

என்று முழக்கமிட்டவர், கார்க்கி ஏட்டில் இவ்வாறு பிரகடனப்படுத்தி வந்தார்—

'சமூகக் கொடுமையும் இலக்கியமும் மோதும்போது நாம் இலக்கியத்தின் பக்கம் நிற்போம். இலக்கியமும் மனிதனும் மோதும்போது நாம் மனிதனின் பக்கம் நிற்போம்.'

மார்க்சியக் கண்ணோட்டத்துடன் எழுதப்பட்ட கட்டுரைகள், கவிதைகள், சிறுகதைகளை கார்க்கி வெளியிட்டது. முற்போக்கு எழுத்தாளர்களில் பலர் அவ்வப்போது எழுதியுள்ளனர். உலக இலக்கியப் பிரச்னைகளிலும் அக்கறை காட்டியது.

சோவியத் ரஷ்ய எழுத்தாளர் பாஸ்டர்நாக்கிற்கு நோபல் பரிசு அளிக்கப்பட்டபோது, அது பலவிதமான சர்ச்சைகளைக் கிளறிவிட்டது. 'பாஸ்டர்நாக்கும் நோபல் பரிசும்' சம்பந்தமான கட்டுரை ஒன்றை 'கார்க்கி' பிரசுரித்தது.

அதேபோல ஸோல்ஸெனிட்ஸின் என்ற ரஷ்யப் படைப்பாளிக்கு நோபல் பரிசு வழங்கப்பட்டபோதும் சர்ச்சைகளும் விமர்சனங்களும் பரவலாக நிலவின. ஸோல்ஸெனிட்ஸின் பற்றியும், அவருடைய படைப்பு, பாத்திரமும் குறித்தும் 'கார்க்கி' கட்டுரைகள் வெளியிட்டது.

'இலக்கியம் பற்றிய லெனினியக் கொள்கை', 'எங்கள் சகாப்தத்தின் மகாகவி மயாகோவ்ஸ்கி', 'இந்திய மண்ணில் பொருள் முதல்வாதக் கருத்துக்கள்', 'புரட்சிக் கவிஞன் பெட்டோபி' ( ஹங்கேரியக் கவிஞன் )– இப்படி கனமான விஷயங்களைப் பிரசுரிப்பதில் 'கார்க்கி' ஆர்வம் கொண்டிருந்தது.

'சுதந்திரத்திற்குப் பிந்திய தமிழ் இலக்கியம்' குறித்து 'கார்க்கி' காரசாரமாக விமர்சித்தது. 'மனிதாபிமானி என்கிற கட்டத்தைத் தாண்டி வர்க்க எழுத்தாளராய் உயரும்போது' தான் ஒரு படைப்பாளி உண்மையான இலக்கியவாதி ஆகிறான். 'ஏனென்றால், வர்க்கத் தன்மை இல்லாத சுத்தமான இலக்கியம் என்று ஏதாவது உண்டா என்ன?' என்று இளவேனில் அழுத்தமாக அறிவித்தார்.

கவி பாரதியை அவர் அங்கீகரிக்கவில்லை. பாரதி பற்றிக் கடுமையாகவும், ஆத்திரத்தோடும் அவர், கோளாறும் குறைபாடும் நிறைந்த கருத்துக்களை வலியுறுத்தியிருக்கிறார்.

'சோஷலிச இந்தியாவில் முற்போக்குக் கவிஞன் என்று கதைக்கப் படும் பாரதி' என்றும்,

'இந்தியாவின் சகல வர்க்கங்களும் தீபாராதனை நடத்துகிற மகா–மகா–மகாகவி பாரதியின் இமாலயப் படைப்புக் கூட, பாட்டாளி வர்க்கத் திற்காக இப்போதுதான் பேனா பிடிக்கிற ஒரு நர்ஸரிக் கவிஞனின் நாலாந்தரக் கவிதைக்கு முன் குப்பை என்று மிகுந்த ஆரவாரத்துடன் சொல்வோம்' என்றும் 1972–ல் இளவேனில் எழுதியிருக்கிறார்.

இது எவ்வளவு அபத்தமான கருத்து என்பதைத் தரமான கவிதை ரசிகர்கள் எவரும் உணர முடியும்.

தனது நோக்கு சரியானது என்றும் அவர் வாதாடுகிறார்.

'பாரதியார் பற்றி அசட்டுத்தனமான அல்லது ஈவிரக்கமற்ற த்வனியில் விமர்சிக்கிறேன் என்கிறார்கள். இந்தத் தாக்குதல் இந்த நேரத்தில் அவசியமானதென்று நான் கருதுகிறேன். பாரதி என்கிற மனிதனை நாம் இழந்துவிட விரும்பவில்லை. ஆனால் பாரதி என்கிற கவிஞன் ஒரு சித்தாந்தவாதி. அவனுடைய சித்தாந்தம் கம்யூனிசத்துக் கெதிரான நோய்க் கிருமி. இந்த விஷக்கிருமியை நாம் எப்படி விழுங்கிக் கொள்ள முடியும்?

பாட்டாளி வர்க்க இலக்கியத்தை உருவாக்க வேண்டுமென்றால், பழைய இலக்கியங்கள் அனைத்தையும் மோதியே தீரவேண்டும். மலத் திலே நெல் கிடப்பது மாதிரி பழைய இலக்கியங்களில் சில முற்போக் குக் கருத்துக்கள் இருக்கலாம். அதற்காக மலக் குழிகளை அளைந்து கொண்டிருப்பது அபத்தமான காரியம். நாம் இந்தக் குழிகள் மேடுகளை யெல்லாம் பரம்படிப்போம். பரம்படிக்கப்பட்ட அந்தக் கம்யூனிஸ நிலத்தில் நெற்கதிர்களை மலைமலையாய் அறுவடை செய்வோம்.'

இப்படி 'முழுக்க முழுக்க வர்க்கத் தன்மையும் மார்க்ஸியப் பார்வை யும் கொண்ட போக்கு'டன் இளவேனில் 'கார்க்கி'யை நடத்தினார். சிரமங்களோடுதான். அடிக்கடி பத்திரிகை வராமலே போனது.

நீண்ட ஒரு இடைக்காலத்துக்குப் பிறகு, 'கார்க்கி'யின் அளவைச் சுருக்கி, ஒவ்வொரு மாதமும் ஒரு தனி விஷயத்தைக் கொண்ட சிறு வெளியீடு ஆகப் பிரசுரிக்க முனைந்தார் அவர். இதை 'கார்க்கியின் தொடர் வெளியீட்டியக்கம்' என்று அறிவித்தார்.

'இது பத்திரிகையல்ல. ஒவ்வொரு இதழும் ஒரு குறிப்பிட்ட விஷயத்தைப் பற்றியதாக இருக்கும். இந்த இதழ் நெருடாவைப் பற்றிய சிறு அறிமுகம். அடுத்த இதழ் மார்க்ஸ் என்னும் இலக்கியவாதி. அப்புறம் ஷேக்ஸ்பியர், பிரெஞ்சுப் புரட்சியும் இலக்கியமும் என்று இது மாதிரி தொடரும்' என்று அறிவிக்கப்பட்டது.

இந்த ஆசை நிறைந்த திட்டமும் பூரணமாக வெற்றி பெறவில்லை.

1981– ல் மீண்டும் 'கார்க்கி' புதிய வடிவத்தோடும் புது வேகத்தோ டும் தலைகாட்டியது. இலக்கியம், அரசியல் ஆகியவற்றுடன் சினிமா, நாடகம் ஆகியவற்றிலும் அக்கறை செலுத்த முனைந்தது. இத்தன்மை யிலும் அது தொடர்ந்து வர இயலாது போயிற்று. பிறகும், கார்க்கி அவ்வப்போது வெளிவருவதும், சில இதழ்களோடு நின்று போவதும்

ஒரு வழக்கமாகிவிட்டது. இம் முயற்சிகள் இளவேனில் ஆர்வத்தையும் ஆற்றலையும் புலப்படுத்துவனவாகும்.

## பிரச்னை

'சாதாரணத் தொழிலாளிகள் சில பேர் சேர்ந்து' வெகு ஜனங்களை எட்டக் கூடிய வகையில்— தொழிலாளர்களும் விவசாயிகளும் படித்துப் பயன்பெற வேண்டும் என்ற நோக்குடன்— முற்போக்கு மாத மிருமுறை பத்திரிகை ஒன்றை நடத்தினார்கள். முதலில் அதன் பெயர் 'பிரச்னை' என்று இருந்தது.

ஆரம்பத்தில் ஆசிரியர்கள் : ஆர். சாம்பசிவம், எஸ். இசக்கிமுத்து என்று அறிவிக்கப்பட்டது. சில இதழ்களுக்குப் பிறகு தெ. சண்முகம் ஆசிரியர் என்றும், முந்திய இருவரும் இணை ஆசிரியர்கள் எனவும் அறிவித்தார்கள்.

முதல் இதழ் 1972 அக்டோபரில் வெளிவந்தது. 10வது இதழ் முதல் அது பெயர் மாற்றம் பெற்றது. பிரச்னை 'உதயம்' ஆயிற்று.

'இலக்கியம் என்பது வாழ்க்கையிலிருந்து தோன்றியது. வாழ்க்கையைக் கண்டு சொல்வது. வாழ்க்கையைக் கண்டு சொல்வதோடு நின்று விடாது, அதை மாற்றியமைக்கவும் தூண்டுவது. புதிய வாழ்க்கைக்கு உட்படுத்துகிறது' என்ற அடிப்படையில் கதைகள், கவிதைகள், கட்டுரைகளை இந்த ஏடு வெளியிட்டது. சமூகப் பிரச்னைகள், அரசியல் விஷயங்கள், கலை மற்றும் இலக்கிய விஷயங்கள் பற்றி எளிய நடையில் விளக்கமாகவும் தெளிவாகவும் கருத்துக்களை எடுத்துக்கூறியது.

அஸ்வகோஷ் (ஏ. ஜி.) கதைகள், கவிதைகள், கட்டுரைகள் அதிகம் எழுதினார்.

மாவேலி ஜாப்ஸன், ஆத்மாநாம், அக்கினிபுத்திரன் முதலிய பலரும் இதில் கவிதைகள் எழுதியுள்ளனர்.

வியாபார நோக்குடன், லாபத்தையே கருத்தில் கொண்டு, நடத்தப்படுகிற ஜனரஞ்சகப் பத்திரிகைகளின் போக்கை— வாசகர்களின் மனசையும் பண்பையும் கெடுக்கக் கூடிய தரக் குறைவான எழுத்துக்களையும் சித்திரங்களையும் வெளியிடும் இயல்பை—1970 களிலேயே பிரச்னை— உதயம் வன்மையாகக் கண்டித்தது.

இன்றைய வாரப்பத்திரிகை சினிமா, அ ர சி ய ல் அனைத்தும்

மாறியாக வேண்டும்—மாற்றப்பட வேண்டும்— என்ற கருத்தை வலியுறுத்திய இச்சிற்றேடு சிந்தனைக்கு உரிய ஒரு எண்ணத்தை ஆணித்தரமாக எடுத்துச் சொன்னது—

'நமக்கென்று ஒரு அடிப்படையான சிந்தனை உருவாகும்போது தான் நாம் மாறுவோம். இந்த அடிப்படை சிந்தனைகளோடு நாம் இந்த வாரப் பத்திரிகைகளையும் சினிமாவையும் அண்டத் தெரிந்துகொண்டு, அதன் சுயரூபம் என்னவென்று புரிந்துகொண்டு, அதையெல்லாம் எதிர்த்துப் போராடத் தொடங்கும் போதுதான் இந்த வாரப் பத்திரிகைகள் மாறும், சினிமா மாறும்.'

பட்டறையில் உழைத்து சராசரி இருநூறு ரூபாய் சம்பளம் வாங்கும் தொழிலாளர் சில பேர் சேர்ந்து, மாதம் தலா இவ்வளவு ரூபாய் என்று பணம் போட்டு, பலவிதமான சிரமங்களையும் பொருட்படுத்தாமல் கடுமையான உழைப்பை பத்திரிகையின் வளர்ச்சிக்காகவும் ஈடுபடுத்தி வந்த ஆர்வமும் செயலும் மிகுந்த பாராட்டுதலுக்கு உரியன.

தற்போதைய காலகட்டத்தில் நம் பக்கத்து— சமூகப் பொறுப்பு வாய்ந்த— எழுத்தாளர்களின் வேலை எழுதுவதுடன் இருந்துவிட்டால் போதாது. நம்முடைய எழுத்து இடம் பெற ஒரு பத்திரிகை வேண்டும். பத்திரிகை ஆரம்பிப்பது சுலபமல்ல, கணிசமான பண வசதி இதற்குத் தேவைப்படுகிறது. இந்தப் பணத் தேவையையும் அடைந்து பத்திரிகை வெளிவருகிறது என்றால், பத்திரிகையின் குறிக்கோளுக்குரிய மக்களின் இடையில் பத்திரிகை செல்லவும், தொடர்ந்து வெளிவருவதற்கான பொருளாதார வசதியும் இலக்கியப் படைப்புக்களும் தேவைப்பட்டுக் கொண்டேயிருக்கிறது. அதே சமயத்தில் நாம் எதிர்க்க வேண்டியவர்களின் பிரமாண்டமான வசதிகளையும் கவனத்தில் கொள்ளவேண்டும்' என்றும் 'உதயம்' சம்பந்தப்பட்டவர்கள் அறிவுறுத்திக் கொண்டார்கள்.

இவ்வாறெல்லாம் சிந்தித்துத் திட்டமிட்டு நிதானமாகச் செயல்படக் கூடியவர்கள் கூட்டுறவு உணர்வுடன் நடத்திய போதிலும் 'உதயம்' பேராதரவு பெற்று நீடித்து வாழ வழியேற்படவில்லை இந்த நாட்டில்.

## சகாப்தம்

இது ஒரு 'இலவச இலக்கிய வெளியீடு'. இலக்கியப் பத்திரிகையான 'கணையாழி' யின் வடிவத்தில் 24 பக்கங்களோடு வெளிவந்தது. முதல் இதழ் 1977 செப்டம்பரில் பிரசுரமாயிற்று. 'அச்சிட்டு வெளியிடுபவர்

சு. பாலசுப்பிரமணியன்' என்று திருச்சி விலாசம் அச்சிடப்பட்டிருந்த போதிலும், சகல தொடர்புகளுக்கும் கலாமணி என்ற எழுத்தாளரின் சென்னை விலாசம்தான் கொடுக்கப்பட்டது.

'ஏதோ, உலகைப் புரட்டிவிடுகிற ஒரு பெரிய காரியத்தைச் செய்து முடித்துவிடுவோம் என்கிற பிரமை எங்களுக்கில்லை. ஆனால், அத்த கைய ஒரு பெரிய காரியத்துக்குத் தூண்டுகோல்களாய் இருக்க முடியும் என்கிற சிறிய நம்பிக்கை எங்களுக்கு நிறைய உண்டு.

வியாபார ரீதியில் இதை ஒரு பத்திரிகை ஆக்குவது எங்கள் நோக்கமல்ல. எண்ணற்ற புதிய இளம் தலைமுறை எழுத்தாளர்களை ஒருங்கிணைத்து இலக்கிய உலகில் ஒரு புதிய சகாப்தத்திற்கான முன்னுரையை எழுதிவிட வேண்டும் என்பதுதான் எங்களின் இதயத் துடிப்பு.'

இவ்வாறு 'ப்ரிய நெஞ்சங்களே' என விளித்து அறிமுகவுரை எழுதிய நண்பர்கள் தங்களைப் பற்றித் தன்னம்பிக்கையோடு நாவலித்த வரிகள் இவை–

'ஒரு சகாப்தம் தொடங்கிவிட்டது !

நாங்கள். . .

நிழல்களின் வசீகரங்களிலேயே மூழ்கிக் கிடக்கும் கனவுலகப் பிரஜைகள் அல்ல.

நிஜங்களின் போராட்டங்களை– அதன் நியாயங்களை கவிதாலங் காரத்தோடு பாடுகின்ற மண்ணின் புத்திரர்கள்—மக்களின் பிரதிநிதிகள்.

இளம் உள்ளங்களில் விஷம் தூவும் நசிவு இலக்கியத்தின் எதிரிகள் !

அத்தகைய காமசூத்திரப் படைப்புகளைக் கலாகோபத்தோடு விமர் சிப்போம். சமூகக் கொடுமைகளை, அதன் சீரழிவுகளை, கவித்வ ரோஷத்தோடு கடுமையாய்ச் சாடுவோம்.

முகாரிகளின் மூல காரணங்களை எடுத்துச் சொல்லி, நீலாம் பரியில் நித்திரை புரியும் நெஞ்சங்களைத் தட்டியெழுப்புவோம்

எங்கள் இதய வீணையின் இன்றைய ராகங்கள், நாளை பொன்னுலகின் விடியலில் பூபாளமாய் எதிரொலிக்கும் !

எங்கள் இலக்கு மிகவும் உன்னதமானது. எங்கள் பயணம் மிகவும் புனிதமானது. எங்கள் பாதை மிகவும் கரடுமுரடானது. எங்கள் பார்வையோ மிகவும் தெளிவாயிருக்கிறது.

நாங்கள் பயணம் தொடங்கிவிட்டோம். இலக்கிய வரலாற்றில் ஒரு புதிய சகாப்தம் தொடங்கிவிட்டது.

நாங்கள் : கலாமணி, மீராதாசன், ஜீவகன், கார்க்கியன், பார்த்திபன்.'

சகாப்தம் நம்பிக்கைக்கும் எதிர்பார்ப்புக்கும் உரிய தரமான பத்திரிகையாக வளர்ந்தது. இலக்கியவாதிகள், ரசிகர்கள் பலரும் அதன் இதழ்களைப் பாராட்டி வாழ்த்தினார்கள். கலாமணி ஆற்றல் உள்ள எழுத்தாளராகத் தெரியவந்தார்.

6—வது இதழ் முதல் அது 'மக்கள் சகாப்தம்' என்று பெயர் மாற்றம் பெற்று, 50 காசு விலையில், விற்பனைக்குரிய ஒரு பத்திரிகையாக வெளிவரத் தொடங்கியது.

பெயர்பெற்ற எழுத்தாளர்கள் சிலரும், திறமையை நிரூபிக்க முயன்றுகொண்டிருந்த இளைய எழுத்தாளர்கள் பலரும் அதில் எழுதினார்கள். அதன் 10—வது இதழ் கவிதைச் சிறப்பிதழாகத் தயாராயிற்று.

'சகாப்தம்' அவ்வப்போது புத்தக விமர்சனம், திரைப்பட விமர்சனம், இலக்கிய நிகழ்ச்சிகள் பற்றிய அபிப்பிராயங்கள் ஆகியவற்றையும் வெளியிட்டது.

முதல் ஆண்டில் பத்து இதழ்களைக் கொண்டு வந்த 'சகாப்தம்', இரண்டாம் வருஷத்தின் முதலாவது இதழை 1978 ஏப்ரல் மாதம் வெளியிட்டபோது, அந்த ஆண்டில் மேலும் 4 இதழ்கள் மட்டுமே பிரசுரமாகும் என்று மாதக் கணக்கிட்டு அறிவித்தது.

அந்தத் திட்டம்கூட நிறைவேறவில்லை என்பது வருத்தத்துக்குரிய விஷயம்தான்.

# 30. யாத்ரா

சிறு பத்திரிகைகளிடையே மிகத் தனித்தன்மை பெற்ற பத்திரிகை 'யாத்ரா.'

யாத்ரா முதல் இதழ் 1978 ஆகஸ்டு மாதம் வெளிவந்தது. 'கலை சார்ந்த கருத்துக்களுக்கேயான களன்' என்று அறிவித்துக் கொண்ட இம் மாதப் பத்திரிகையின் நோக்கம் இதுவெனப் பிரசுரிக்கப்பட்டது.

'பலதரப்பட்ட பார்வைகள், கருத்துக்கள், அபிப்பிராயங்கள், நேர் எதிர் எதிர் கோணங்களிலிருந்து வருபவைகூட, வரவேண்டும்—அவற்றை சகஜமாக எதிர்கொள்ளும் ஒரு ஆரோக்கிய கருத்துலகச் சூழல் உருவாக வேண்டும். பாதகமான கருத்துக்களைக் கண்டு உட்சுருங்குவதோ அவை வெளிவராதவாறு கோபப்படுவதோ சாதகமாகக் கருத்துக்களை எதிர் நோக்கி கையேற்றுவதோதான் இன்றைய நிலை. இது மாறவேண்டும்.'

ராமநாதபுரம் மாவட்டம், திருச்சுழி அஞ்சல், பண்ணை மூன்றடைப்பு என்ற இடத்திலிருந்து பிரசுரம் பெறுவதாக அறிவித்த 'யாத்ரா' வின் ஆசிரியர் அல்லது ஆசிரியர் குழுவினர் யார் என்று வெளிப்படையாகச் சொன்னதில்லை.

'யாத்ரா ஒரு குழுவினரது முயற்சி, குழுவில் தனித்தனியாகவும், கூட்டாகவும் பலர் பல பொறுப்புகளை ஏற்பார்கள். இது கூட்டுப் பொறுப்பு. தனியாகவும், கூட்டாகவும் யார் செய்யும் எதற்கும், குழு முழுதுமே பொறுப்பு. எந்தக் குழுவினதும், ஸ்தாபனத்தினதும், இயக்க செயல்பாட்டு முறை இதுவே. எனவே, பாதகமாகவோ, சாதகமாகவோ யாரும் எதிர்கொள்ள வேண்டியது. இக் குழுவின் எந்தச் செயலையும், குழுவின் கூட்டுச் செயலாகத்தான் எவ்விதமாகவும் எதிர்கொள்ளும் உரிமை. பாதகமாகவோ, சாதகமாகவோ, ஆதாரத்தோடு, ஆத்மார்த்தமாக, எதிர்கொள்ளும் உரிமை சமூகத்தில் உள்ள எல்லோருக்கும் உண்டு. அதைவிடுத்து இதைச் செய்தது இவனாக்கும், அதைச் செய்தது அவனாக்கும் என்றே வம்பு செய்து கொண்டு, தனிப்பட்ட ஒரு நபர் எவரிடமும் உள்ள தன் பகைமைக் காய்ச்சலை, பொறாமையை— துவேஷத்தை வெளிப்படுத்தும் முகாந்திரமாக, அதைச் சாக்கிட்டு,

குழுவினரின் செயல்பாட்டை அதன் நிதர்சனத்தில் எதிர்கொள்ளாமல், தான் வெறுக்கும் தனி நபரின் மீதுள்ள காய்ச்சலை மட்டுமே– குழுவின் செயல்பாட்டின் மீ து சேற்றை வாரி இறைவதுதான் உண்மையில் Politicking தனி நபர் தாக்குதல். தனி நபர் அரசியல்.'

'இரண்டாவது ஆண்டின் தொடக்கத்தில்'–13–ம் இதழில்– யாத்ரா இவ்வாறு கூறியது.

'யாத்ரா' ஒரு குழுவினரின் முயற்சி என்று கூறப்பட்டு வந்த போதிலும், அதில் வெங்கட்சாமிநாதன் குரலே தொனித்துக் கொண்டிருந்தது. அவரது கருத்துக்களை, சிந்தனைகளை விருப்பு வெறுப்புக்களையே அது எடுத்துக் காட்டியது என்பதை அந்தப் பத்திரிகையின் வாசகர்கள் நன்கு உணர முடிந்தது.

வெங்கட்சாமிநாதன் எழுத்தாற்றல் உடைய சிந்தனையாளர். தனக்கெனத் தனிப்பார்வைகளும் கருத்துக்களும் கொண்டவர். அவற்றை 'எழுத்து' காலம் முதல் அவர் அழுத்தமாகப் பதிவு செய்து வந்திருக்கிறார்.

'எழுத்து' மூலம் அறிமுகமான சிந்தனையாளர்– எழுத்தாளர்களில் வெங்கட்சாமிநாதனும் தருமு சிவராமும் முக்கியமானவர்கள். இவ்விருவரும் பரஸ்பரம் வியந்துகொண்டும் பாராட்டியும், தமிழ் எழுத்தாளர்கள்– தமிழ் கலாசாரம்–தமிழர் போக்கு முதலியவற்றைக் காரசாரமாகக் குறை கூறியும் விமர்சித்தும் எழுதிக் கொண்டிருந்தார்கள். இருவருமே நீளம் நீளமான கட்டுரைகள் எழுதும் இயல்பினர்–

காலவேகத்தில், இவ் இருவரும் தனித்தனி 'கட்சி' ஆயினர். வெங்கட்சாமிநாதனுக்குப் ப ல அபிமானிகளும் ஆதரவாளர்களும் உண்டு; தருமு சிவராமுவுக்கும் பல அபிமானிகளும் ஆதரவாளர்களும் உளர்.

இருவரும் பரஸ்பரம் ஒருவரை ஒருவர் அளவுக்கு அதிகமாகப் பாராட்டிக் கொண்டிருந்ததை மறந்துவிட்டு, பரஸ்பரம் தீவிரமாகவும் அதிகமாகவும் குறைகூறவும், பரிகசிக்கவும், பழித்துரைக்கவும் நீ ள நெடும் கட்டுரைகள் எழுதலாயினர். இவை எல்லாம் சிறு பத்திரிகைகள் பலவற்றின் பக்கங்களை ரொப்பின.

சிறு பத்திரிகைகளின் ஆரோக்கியமான வளர்ச்சியை இவ்விருவரும் பல வருட காலம் பாதித்து வந்திருக்கிறார்கள். இதை நான் சந்தர்ப்பம் நேரிட்டபோதெல்லாம் கூறி வருகிறேன். இக்கட்டுரைத் தொடரிலும் உரிய இடங்களில் குறிப்பிட்டிருக்கிறேன்.

வெங்கட்சாமிநாதனின் அபிமானிகள் சிலர்—அவருடைய எழுத்துக் களைத் தொகுத்து புத்தகமாக வெளியிடுவதற்காகவே தனியாக ஒரு பதிப்பகம் அமைத்தவர்கள்—அவருடைய கருத்துக்களையும் சிந்தனைகளை யும் மேலும் எடுத்துச் சொல்வதற்காக 'கருத்துக்களுக்கேயான களன்' ஆன 'யாத்ரா' வை நடத்த முன்வந்தார்கள். ஆகவே, அதில் வெங்கட் சாமிநாதன் சிந்தனைகளும், அவருடைய கருத்துக்களை ஆதரிப்போர் (மற்றும் பிரதிபலிப்பவர் ) எண்ணங்களுமே பெரும்பாலும் இடம் பெற்ற தில் வியப்பில்லை.

வெங்கட்சாமிநாதனின் சிந்தனை ஓட்டத்தையும் பார்வை வீச்சை யும் அவருடைய 'பாலையும் வாழையும்', 'ஒரு எதிர்ப்புக் குரல்' போன்ற நூல்களில் பரக்கக் காணலாம்.

சுருக்கமாகச் சொல்வதானால்—

அவர் எதிர்மறை அணுகுமுறையாளர். தமிழ் மண் பாலைத் தன்மை உடையது. பசுமையான, வளமான விஷயங்கள் இங்கு வேரூன்ற முடியாது. இந்நாட்டினருக்கே சுயசிந்தனை கிடையாது. கலை, இலக்கி யம் எதிலுமே உன்னதங்களை அறிய முடியாதவர்கள், தொட இயலாதவர் கள் இங்கே இருப்பவர்கள். உயர்ந்த விஷயங்களை உருவாக்கக் கூடிய ஆற்றல் 'உள்வட்டம்' ஆன ஒரு சிலருக்குத்தான் உண்டு. அவர்களின் தாக்கத்தால் விழிப்பு பெறும் 'வெளிவட்டம்' சிறிது பரவலாகச் செயல் படக் கூடும். . .

இந்த ரீதியில் வளர்வது அவருடைய சிந்தனை.

இது 'யாத்ரா' வின் பக்கங்களிலும் ஒளிவீசக் காணலாம். ஒரு உதாரணம்—

'உண்மையில் எங்களுக்கு மன வேதனையைத் தரும், சலிப்புத் தட்ட வைக்கும், இந்த பிராப்தங்களை என்னடா செய்வது என்று வெறுப்புடன், ஒரு புழுவைப் பார்ப்பதுபோல, சாக்கடையில் கால் வைத்து விட்டது போல, எங்களை அருவருப்பு கொள்ளச் செய்வது, இன்றைய தமிழ்ச் சூழலில், கருத்துலகில், இலக்கிய உலகில் காணும் கோழைத் தனம், பாமரத்தனம், அறிவு சூன்யம்.

யாரும் எத்தகைய கருத்துப் பரிவர்த்தனையும் கொள்ளத் தயாரா யில்லை. தைரியமில்லை. அதற்கு வேண்டிய ஸ்டாக் அவர்களிடம் அறவே இல்லை. அறைக்குள் உட்கார்ந்துகொண்டு, தங்கள் சகாக்க ளின் ஆதரவு அணைப்பில் முணுமுணுத்துக் கொள்கிறார்கள்.

கருத்துக்களை எதிர்கொள்ள, அறையை விட்டு வெளியே வந்து கருத்துக்களைச் சொல்ல இவர்களுக்கு அறிவார்ந்த தைரியம் இல்லை. தங்கள் பொச்செரிப்பை முணுமுணுத்துக் கொள்கிறார்கள்.

எங்களுக்குத் தெரியும், யாத்ரா பத்திரிகையில் நாங்கள் முன் வைக்கும் எண்ணற்ற கருத்துக்கள் இச்சூழலின் அஸ்திவாரத்தையே அதிர வைக்கும் சச்சரவு குணம் கொண்டவை. பெரிய கருத்துப் போர், புயல் வீசியிருக்க வேண்டும். ஆனால் நிகழ்வது எருமை மாட்டின் மீது பெய்த மழைக் கதைதான். வாய் திறப்பவர்களோ, தங்கள் கட்சிக்கு எதிராக முன் வைக்கப்பட்டுள்ள கருத்துக்களை எதிர்கொள்ளாமலேயே, தம் பார்வையினால் அக்கருத்துக்களைச் சாடி வீழ்த்த முடியாமலேயே, கிளிப்பிள்ளை மாதிரி தாம் சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்வதையே செய்கிறார்கள். இதை என்னென்பது ! அறிவுலகில் தடுக்கி வீழ்ந்துவிட்ட மரத்தனம் எனலாமா ?' ( இதழ்–13 )

'யாத்ரா' என்னென்ன செய்யவேண்டும் என்று கருதுகிறது என்பதை விளக்கி 6–ம் இதழில், ஆசை நிறைந்த திட்டம் ஒன்றை வெளியிட்டது. பாராட்டப்பட வேண்டிய அத்திட்டத்தைக் கூடியவரை செயல்படுத்தவும் முயன்றது.

இலக்கியப் பத்திரிகை செய்யவேண்டிய—ஆனால் செய்யத் தவறுகிற—முக்கிய காரியம் ஒன்றை 'யாத்ரா' சிறிது காலம் செய்தது. வாசகர்களின் கவனத்துக்குக் கொண்டுவரப்பட வேண்டிய சில புத்தகங்கள் பற்றி விரிவான கட்டுரைகள் எழுதியுள்ளது. பாலாவின் 'சர்ரியலிஸம்', எஸ். வி. ராஜதுரையின் 'அந்நியமாதல்', க. நா. சு. தொகுத்த 'தமிழ்ச் சிறுகதைகள்' பற்றி விசேஷக் கட்டுரைகளை அது பிரசுரித்தது.

பல புத்தகங்களைப் பற்றியும் அபிப்பிராயங்கள் தெரிவிப்பதற்காக 'பார்வைகள்' என்ற பகுதியை ஆரம்பித்து, பல பக்கங்களை ஒதுக்கியது. 'அபிப்பிராயங்களை அபிப்பிராயங்களாகவே சந்திக்க வேண்டும். சுதந்திரமான, மயக்கங்களுக்கும் பீதிக்கும் இரையாகாத, ஆரோக்கியமான கருத்துப் பரிவர்த்தனை—யார் சொன்னது என்ற அரிப்புக்கு ஆளாகாத, என்ன சொல்லப்பட்டுள்ளது என்றே அறியமுயலும், பின் அக்கருத்துக்களைச் சந்திக்க முயலும் பழக்கம்— இவை வேண்டும்' என்று, 'பார்வைகள்' பகுதி தொடங்கிய போது (15–ம் இதழில் ) 'யாத்ரா' அறிவித்தது. இந்தப் பகுதி நாலைந்து இதழ்களுக்குப் பிறகு தொடரவில்லை.

தமிழ்நாடு சரிவரத் தெரிந்து கொள்ளாத படைப்பாளிகள்,

ஆய்வாளர்களையும், அவர்களது சாதனைகளையும் 'யாத்ரா' வாசகர்களின் கவனத்துக்குக் கொண்டுவரப் பெரிதும் பாடுபட்டது. பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை பற்றிய சிறப்புக் கட்டுரை, ப. வ. இராமசாமி ராஜு என்ற நாடகாசிரியர் பற்றியும், அவரது பிரதாபசந்திர விலாசம் நாடகம் பற்றியும் அறிமுகக் கட்டுரைகள், 'ஆண்டி' என்ற புனைபெயரில் நாடகங்களும், நாடகக் கலை பற்றிய ஆய்வுரைகளும் எ ழு தி ய வி. ராமசுப்பிரமணியம் பற்றிய சிறப்பிதழ் ( 31–32–33 ) ஆகியவை குறிப்பிடத்தக்கவை.

'புதுமைப்பித்தன் கதைகளில் காலத்தின் கலைவண்ணம்' (சுந்தர ராமசாமி), மௌனி– மௌன உலகின் வெளிப்பாடு (வெங்கட்சாமிநாதன்) ஆகிய கட்டுரைகளும் முக்கியமானவை.

ந. முத்துசாமி, செ. ரவீந்திரன், ஜெயராமன், ஆர். ரவீந்திரன் முதலியோர் 'யாத்ரா' வில் அதிகம் எழுதினார்கள்.

தெருக்கூத்து, கணியான் ஆட்டம், தோற்பாவைக்கூத்து, மெலட்டூர் பாகவத மேளாநாட்டிய நாடகம் பற்றிப் பயனுள்ள, ஆதாரபூர்வமான கட்டுரைகள் பிரசுரமாகியிருக்கின்றன. 'கணியான் ஆட்டம்' பற்றி எழுதிய அ. கா. பெருமாள் 'நாட்டுப்புற வழிபாடுகள் நம்பிக்கைகள்' சம்பந்தமான ஆய்வாக 'இயக்கி அம்மன்' பற்றி விரிவான கட்டுரை எழுதினார். ஒரு இதழ் (மார்ச்–ஏப்ரல் 1980 ) தெருக்கூத்து சிறப்பிதழ் ஆக வெளிவந்தது.

இவ்வாறு புராதனக் கலைகள், வாழ்க்கை முறைகள் பற்றிய ஆய்வுகளில் அக்கறை காட்டிய 'யாத்ரா', நவீன நாடகத்திலும் கருத்து செலுத்தியது: ந. முத்துசாமியின் நாடகங்கள் பற்றிய அபிப்பிராயங்களையும், முத்துசாமியின் புதிய நாடகங்களையும் பிரசுரித்தது.

தி. ஜானகிராமன் நினைவு இதழாக, பல நல்ல கட்டுரைகளைத் தொகுத்து அளித்தது.

இதர சிறு பத்திரிகைகளின் முக்கியமான–ரசிகர்கள் கவனித்துப் படிப்பதற்கு ஏற்ற–கட்டுரைகள், ஆய்வுகள் வெளிவந்தால், அவற்றை எடுத்துச் சொல்வதற்காக 'யாத்ராவின் சிபாரிசு' என்றொரு பகுதியை அது வளர்த்தது.

30–ம் இதழில் 'பதிவுகள்' என்ற பகுதியை அது அறிமுகப்படுத்தியது. 'இதில் பலரும் பங்குகொள்ள வேண்டும் என்பது எங்கள் விருப்பம். சக யாத்ரீகர்கள் அனைவரும் பங்கு கொண்டு தங்கள் அனுபவங்களைப் பரிமாறிக் கொள்ள இந்தப் பகுதி பயன்படும். எந்த

ஒரு கலைப் படைப்பினையும், நிகழ்வினையும் எதிர்கொள்ளும்போது நாம் பெறும் அனுபவங்கள் மனத்தளவில் தங்கிவிடாமல் மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ளப்படும்போதுதான் அது ஒரு சம்பாஷணையாக பரிமாணம் கொள்கிறது. இத்தகைய சம்பாஷணைகள் நடந்தால்தான் புதிய கண்ணில் படாத பிராந்தியங்கள், பரிமாணங்கள், ஆழுங்கள், உக்கிரங்கள் எல்லாம் வெளிப்பட முடியும். பாலச்சந்தரின் வீணைக் கச்சேரியை எதிர்கொள்ள நேர்ந்த முத்துசாமியின் அனுபவங்கள் வெளிப்படும்போது சங்கீதத்தின் மூலம் ஏற்படும் கலைஞனின் தேடலும், அதன் மூலம் மனித மனம் கொள்ளும் விரிவும் புரிந்து கொள்ளப்படும்...' ( யாத்ரா–30 ).

ஆயினும் 'பதிவுகள்' யாத்ராவில் அடிக்கடி இடம் பெறவில்லை. அப்படி வெளியிடுவதற்கு 'சக யாத்ரீகர்கள்' முன்வரவில்லை என்றுதான் சொல்ல வேண்டும்.

இது குறித்து, 'யாத்ரா' மற்றொரு சந்தர்ப்பத்தில் சுட்டிக்காட்டிய கருத்து கவனத்துக்கு உரியது. சிறு பத்திரிகைகளும் வாசகர்களும் நினைவில் நிறுத்த வேண்டிய முக்கியமான கருத்தும்கூட.

'தற்போதைய தமிழ்ச் சூழலில் ஒரு கலாசார விழிப்புணர்வுக்குச் சிறுபத்திரிகை இயக்கம் எந்த அளவு தேவை என்பதைக் கருத்தில் கொண்டே நாங்கள் பலவித சிரமங்களுக்கு இடையிலும் யாத்ராவை நடத்துவதில் ஒரு விடாப்பிடியான தீவிரத்தைக் கொண்டிருக்கிறோம். இதில் எங்களுடைய தீவிரம் மட்டும் போதாது. இவ்வியக்கத்தில் பங்கு கொள்ளும் உங்களிடமிருந்தும் ஒரு பொறுப்புணர்வை யாத்ரா வேண்டுகிறது. இப்பொறுப்புணர்வின் ஒரு அம்சம் யாத்ராவிற்கு சந்தா அனுப்புவதும் ஆகும். ஒரு சிறு பத்திரிகையை நடத்தும் சிரமத்தை ஒரு சிலர் மட்டுமே தாங்கக் கூடுமா என்பதை நீங்களே நினைத்துப் பார்க்க வேண்டும். இன்றைய சூழலில் சிறு பத்திரிகை ஒன்றோடு சம்பந்தம் கொள்வது என்பது வெறுமனே அதனை வாசிப்பதோடு மட்டும் நின்று விடக்கூடாது. அப்பத்திரிகை தொடர்ந்து வெளிவரத் தங்களால் ஆன உதவிகளையும் செய்யக்கூடிய பொறுப்புணர்வு நமக்கு வேண்டும் என நாங்கள் நினைக்கிறோம்.

இந்தச் சமயத்தில் இன்னொரு விஷயத்தையும் சொல்லவேண்டும். யாத்ரா மாதிரியான சிறு பத்திரிகைகள் அக்கறை கொள்ளும் இலக்கியம், ஓவியம், தியேட்டர் போன்ற துறைகளோடு சம்பந்தப்பட்டவர்கள் இச் சிறு பத்திரிகைகளிடம் காட்டும் அலட்சியம். சிறு பத்திரிகை இயக்கம்

வெறுமனே எழுத்து, இலக்கியம் என்றில்லாமல் தன்னுடைய இயக்கக் களனை மற்ற கலாச்சாரங்களுக்கும் விரித்து ஒரு சமூக அக்கறையுடன் செயல்பட்டு வரும் சமயத்தில், இத்துறை சம்பந்தப்பட்டவர்கள் சிறு பத்திரிகைகளிடம் காட்டும் அலட்சியம் எங்களுக்கு மிகுந்த வேதனை யளிக்கிறது. அதே சமயத்தில் இக்கலாச்சாரத் துறைகளின் பாதிப்பினால் விழிப்புணர்வு பெற்ற பலர் சிறு பத்திரிகை இயக்கத்தின் அவசியத்தை உணர்ந்து இதனோடு தங்களை இணைத்துக்கொள்ள முன் வருவது எங்கள் அனுபவத்தில் நாங்கள் கண்ட உண்மை. எங்களுக்கு மிகுந்த ஆறுதல் அளிக்கும் விஷயமும் கூட.

மிகுந்த ஒருங்கிணைப்புடன் செயல்பட வேண்டிய சூழல் இது. ஒரு கலாச்சாரத் துறையில் ஏற்படும் வளர்ச்சி என்பது ஒரு பொறியாக மாறி மற்ற கலாச்சாரத் துறைகளையும் பாதிக்கவேண்டும். அதற்கான சூழல் உருவாக வேண்டும் என்று நாங்கள் விரும்புகிறோம். நான் ஒரு ஓவியன், நான் ஒரு தியேட்டர்காரன், எனக்குச் சிறு பத்திரிகை பற்றி அக்கறை தேவையில்லை என்று யாராவது நினைப்பார்களேயானால் அவர்களின் கலாச்சார அக்கறை பற்றி நாம் சந்தேகம் கொள்ளத்தான் வேண்டும். ஏனென்றால் இன்றைய சிறு பத்திரிகை இயக்கம் தன்னு டைய இயக்கக் களனை விரித்து மற்ற கலாச்சார துறைகளோடும் சம்பந்தம் கொண்ட ஒன்றாகிவிட்டது. இந்நிலையில் அனைவரும் பங்கு கொண்டு பேணிப் பாதுகாக்க வேண்டிய ஒரு இயக்கம் சிறு பத்திரிகை இயக்கம் என்பதை நாம் உணர வேண்டும். சக யாத்ரீகர்கள் அனை வருக்கும் நாங்கள் விடுக்கும் வேண்டுகோள் இது.' ( யாத்ரா–27 ).

சிறு பத்திரிகை மூலம் சாதனைகள் புரிந்து காட்ட வேண்டும் என்ற ஆர்வம் உடையவர்கள் நடத்துகிற ஏடுகள் மிகுந்த சிரமங்களோடுதான் உலாவ வேண்டியிருக்கிறது. இவை குறிப்பிட்ட கால எல்லையில் தேதி தவறாது வெளிவர முடிவதில்லை. சிறிது காலம் ஒழுங்காக இதழ்கள் வெளிவந்தாலும் போகப் போக, காலம் தவறுவது இவற்றின் இயல்பாகி விடுகிறது.

சில சிற்றேடுகள் நெடுங்காலம் பிரசுரமாகாமல் இருப்பதும், அவை நின்றுவிட்டன போலும் என நினைத்துக் கொண்டிருக்கிற போது திடீரென ஒரு இதழ் வருவதும், புதிய திட்டங்களை அறிவிப்பதும் சிறு பத்திரிகை உலக நியதியாகவே இருந்து வருகிறது.

'யாத்ரா' பத்திரிகையும் இந்த நியதியைத் தவறவிடவில்லை. காலம் தவறி வந்து கொண்டிருந்த 'யாத்ரா' 1983–ல் பல மாதங்கள் பிரசுரம்

பெறாமலே இருந்தது. டிசம்பரில் திடீரென்று 44-45-46 என்ற எண் களைத் தாங்கி ஒரு இதழ் வந்துள்ளது.

ஓவியர் ஆதிமூலம் தீட்டிய சித்திரம் ஒன்றை அட்டைப் படமாகக் கொண்ட இந்த இதழ் தமிழ் அறிஞர் திரு. வி. க. பற்றிய சிறப்பிதழாக விளங்குகிறது.

'மற்றுமோர் காந்தி' என்ற தலையங்கம். 'திரு. வி. க. வாழ்க்கைக் குறிப்புகள்' நூலிலிருந்து பல தகவல்கள், 'பின்னோக்கிய மறுபார்வை யில் திரு. வி. க.' என்று செ. ரவீந்திரன் எழுதிய கட்டுரை ஆகியவை திரு. வி. க. வை நன்கு புரிந்து கொள்வதற்கு உதவக் கூடியன.

மற்றும்–

'பரதநாட்டியம்–இன்றைய சில பிரச்னைகள் குறித்த ஒரு பேட்டி' ( 1973ல் வெங்கட்சாமிநாதன் கேட்ட கேள்விகளும், அம்பை தந்த பதில் களும். ) 13 பக்கங்கள்.

'கூத்துப் பட்டறையின் ஒரு சமீபத்திய நாடகம்' என்ற தலைப்பில் 'நிஜங்கள் என்னும் நாடகத்தைப் பற்றி கே. எஸ். ராஜேந்திரன் எழுதிய கட்டுரையும், அதே நாடகம் குறித்து ஞான இராசசேகரன் அபிப்பிராய மும் இந்த இதழில் இடம் பெற்றுள்ளன.

அடுத்து வரும் இதழ்களில்...

பின்னோக்கிய மறு பார்வையில்– மயிலை சீனி. வேங்கடசாமி; நா. ரகுநாதன் (ரஸிகன்); க. கைலாசபதி... சிறப்பிதழ்கள்; பரதநாட்டியம்; ரிச்சர்ட் ஷெக்னர்; கிராம மக்களிடையே; புது சினிமா–ஒரு ஆராய்வு' என்றும் யாத்ரா அறிவித்திருக்கிறது.

இந்த இதழிலும் 'சக யாத்ரிகர்களுக்கு' பொறுப்பை உணர்த்தும் விதத்தில் சில கருத்துக்களை 'யாத்ரா' அறிவுறுத்துகிறது. அதில் ஒரு முக்கிய பகுதி இது :

'இந்தப் பத்திரிகையினை நடத்திக் கொண்டிருக்கும் எங்களுக்கு எவ்வளவு பொறுப்பு தேவையோ அதே அளவு இந்தப் பத்திரிகையினைப் படிப்பவர்களுக்கும் இப்பத்திரிகையைப் பற்றிய பொறுப்பும் அக்கறையும்

இருக்கவேண்டும் என்று எதிர்பார்ப்பதில் ஏதும் தவறில்லையே. ஆனால் இன்றைய தமிழ்ச் சூழலில் அது தவறுதான் போலும். நாலரைக் கோடித் தமிழர்கள் இருக்கிறார்களாம் இங்கு. அதில் 200 பேர் தான் யாத்ராவை வாங்கிப் படிக்கிறார்கள். இந்த 200 பேர் தங்கள் பொறுப்பை உணர்ந்து செயல்படுகிறவர்களாக இருந்தாலே போதும். இவர்கள் தங்களைச் சுற்றிலும் பாதிப்புகளை உண்டாக்குவார்கள். இப் பாதிப்பு அலை அலையாகப் பரவும் என்றுதான் நம்பிக் கொண்டிருக்கி றோம். எந்தவொரு கலாச்சார முயற்சியும் ஒரு பெரும் மக்கள் கூட்டத்தை— ஆதரவை நம்பி ஆரம்பிக்கப்படுவதில்லை. மாற்றத்தை விரும்பும் பிரக்ஞையுள்ள நபர்கள் சிலரின் முயற்சியாலும், அதே மாதிரி யான கொள்கைப் போக்குள்ளவர்களின் பங்கு பெறுதலாலும்தான் கலாச்சார முயற்சிகள் வளர்ச்சி பெறமுடியும். இலக்கியப் பத்திரிகை ஒன்றினை நடத்திக் கொண்டிருப்பதும் கலாச்சார முயற்சிதான் என்று நாங்கள் நம்புகிறோம். இம் முயற்சியில் 'சக யாத்திரிகர்கள்' என்று நாங்கள் அழைக்கும் உங்கள் பொறுப்பை நீங்கள் உணரவேண்டும்.'

'யாத்ரா' வின் முகவரி : யாத்ரா, பண்ணை மூன்றடைப்பு, திருச்சுழி போஸ்ட், ராமநாதபுரம் மாவட்டம்.

# 31. இலக்கிய வெளிவட்டம்

ராமநாதபுரம் மாவட்டத்தில் தோன்றிய மற்றொரு தனித்துவமான சிறு பத்திரிகை 'இலக்கிய வெளிவட்டம்' ஆகும்.

சமூக நோக்கும் மார்க்ஸிய உணர்வும் கொண்ட தீவிரவாதப் பத்திரிகை இது. மார்க்ஸியத்தைப் பரந்த அடிப்படையில் ஏற்றுக் கொண்டவர்கள் இ. வெ. வட்டத்தில் எழுதினார்கள்.

'மார்க்ஸியம் என்பது மார்க்ஸ், ஏங்கல்ஸ் சொன்னவை மட்டுமின்றி, பின்வந்த காலகட்டங்களில், உலகம் பூராவும் தோன்றிய அந்தந்தப் பகுதியின் விசேஷத் தன்மைக்கு ஏற்ப மார்க்ஸிய ஆய்வுகளால் செழுமை சேர்த்த லெனின், ஸ்டாலின், மாவோ, கிராம்சி அல்துஸ்ஸர் போன்ற இவர்களின் படைப்புகளும் சேர்ந்தே மார்க்சியம் எனப்படுகிறது' என்று இ. வெ. வ. விளக்கம் தந்துள்ளது.

1976–ல் ஆரம்பிக்கப்பட்ட இந்தக் காலாண்டு ஏடு பலதரப்பட்ட விஷயங்களிலும் அக்கறை காட்டியது. இலக்கிய விவாதத்தில் ஆர்வம் கொண்டிருந்தது. பலவித அபிப்பிராயங்களை உடைய எழுத்தாளர்களும் படைப்பாளிகளும் தனது பணியில் ஒத்துழைக்க வேண்டும் என்று ஆசைப்பட்டது.

'பத்திரிகை, படைப்பாளிகள், வாசக விமர்சனங்கள்–இந்த அடிப்படையிலான கூட்டுறவு பங்கப்படாமல் வளரும் போதே அறிவார்ந்த சூழல் என்பது விஸ்தாரமடைய முடியும். எங்களுக்கு எல்லாந் தெரியுமாக்கும் என்று நாங்கள் எப்போதும் முதுகைத் திருப்பிக்கொண்டு நின்றதில்லை. இ. வெ. வ.திட்டமிட்டு யாரையும் புறமொதுக்கியதில்லை. சுகவீனமற்ற எக்கருத்தையும் விவாதத்துக்கு ஏற்கத் தயக்கமில்லை' என்று அது அறிவித்தது.

சிறு பத்திரிகை நடத்த முற்படுகிறவர்களில் அநேகர் பரபரப்பு ஊட்டுவதற்காகவும், எளிதில் கவனத்தைக் கவர்வதற்காகவும் தாங்கள் 'விஷயம் தெரிந்தவர்கள்' என்று காட்டிக் கொள்ளவேண்டும் என்ற ஆசையினாலும் தடாலடி விமர்சனங்கள், தாக்குதல்கள், சாதனைகள் புரிந்துள்ள முன்னோடிகளின் நற்பணிகளைக் கவனிப்புக்குக் கொண்டு வராமலே அவர்களது சில பலவீனங்களையும் குறைபாடுகளையும் மட்டுமே

வெளிச்சப்படுத்த விரைதல், பெயர் பெற்றவர்களைப் பழித்தலும் பரிகசித்தலும் போன்ற செயல்களில் உற்சாகமாக ஈடுபடுகிறார்கள். 1970 களில் சிறு பத்திரிகைக்காரர்கள் வெங்கட்சாமிநாதன், தருமு சிவராம் கட்டுரைகளை விரும்பிப் பிரசுரித்ததற்கு இதுவும் முக்கிய காரணமாகும்.

இ. வெ. வட்டமும் சில சமயம் இப்படிச் செயல்பட்டிருக்கிறது. உதாரணத்துக்கு, 'திருட்டு மாம்பழமும் தித்திக்கவில்லை' என்ற கௌதமன் கட்டுரையைக் குறிப்பிடலாம்.

க. நா. சுப்ரமண்யம் படைத்துள்ள நாவல்கள் பற்றியோ, அவரது இலக்கிய விமர்சனங்கள், க. நா. சு.வின் இலக்கிய விமர்சனங்களில் காணப்படுகிற குறைபாடுகள் போன்ற எதைப்பற்றியும் இ. வெ. வ. தனது வாசகர்களின் கவனத்துக்குக் கொண்டுவர ஆசைப்பட்டதில்லை. ஆனால் திடீரென்று க. நா. சு. வின் 'இலக்கியத் திருட்டு' பற்றி விரிவான கட்டுரையை வெளியிட முன்வந்தது.

திருட்டு மாம்பழம் தித்திக்காமலா இருக்கும் என்ற தன்மையில் இலக்கியத் தழுவலைக் கேலி செய்து க. நா. சு. எப்பவோ எழுதிய வரிகளை எடுத்துக் காட்டி, க. நா. சு. வும் திருடியிருக்கிறார்; ஆனால் அந்தத் 'திருட்டு மாம்பழம் தித்திக்கவில்லை' என்று சுட்டிக் காட்டுகிற கட்டுரை அது. கட்டுரையாளர் தனது விமர்சனத்துக்கு எடுத்துக் கொண்டது, க. நா. சு. என்றோ எழுதி வெளியிட்ட 'இரண்டு பெண்கள்' என்ற சிறு நாவல். அது பால் சாக்கின் 'கிழவன் கொரியாத்' (பெரீ கொரியாத்) என்ற படைப்பின் திருட்டு ஆகும்; தானே திருட்டு வேலை செய்திருப்பவர்—அதுவும் திறமைக் குறைவோடு செய்திருப்பவர்—இலக்கியத் திருட்டு பற்றிப் பரிகசிப்பது வேடிக்கைதான் என்று எடுத்துச் சொல்வதற்காக அக்கட்டுரை எழுதப்பட்டுள்ளது.

பெரியவர்கள், பெயர் பெற்றவர்கள் செய்கிற தவறுகளை சுட்டிக் காட்டுவது சரியல்ல என்று நான் சொல்ல வரவில்லை. அவர்கள் செய்திருக்கிற அரும்பெரும் காரியங்களை மறைத்துவிட்டும், மறந்துவிட்டும் சின்னத் தவறுகளையும் குறைபாடுகளையும் பெரிதுபடுத்த முன்வருவது நேர்மையுமல்ல, நியாயமும் இல்லை என்றே குறிப்பிட விரும்புகிறேன். '

இ. வெ. வ. மொழிபெயர்ப்புக் கட்டுரைகளையும் வெளியிட்டது. 'கொச்சைக் கலாச்சாரம்; கொள்ளை நோய்—எலெனா கார்ட்ஸெவா புத்தகம் பற்றி ஆன்ட்ரீ நுய்கின் மதிப்புரை'; கலை இலக்கியம் பற்றி

சூ என் லாய்– இவை போன்ற விஷயங்களே தமிழாக்கம் செய்யப் பட்டிருக்கின்றன.

'படைப்பு வேறு, படைப்பாளி வேறு'– ( படைப்புகளில் வெளிப்படுத் துகிற வகைகளிலேயே படைப்பாளியின் வாழ்க்கை முறைகளும் இருக்க வேண்டும் என்கிற கட்டாயம் எதுவும் இல்லை) என்ற கருத்தின் மீது மோதல்கள் ஏற்பட இ. வெ. வ. களம் அமைத்துக் கொடுத்தது .

இக் கருத்தை வலியுறுத்தும் விதத்தில் தமிழவன் 'கண்ணீர் மறைந் துவிடும். கவிதை மறையாது' என்றொரு கட்டுரை எழுதினார் .

'வார்த்தைக்கு உயிர் கொடுக்கும் வாழ்க்கை' என்ற தலைப்பில், நிவேதித்தா எதிர்ப்புத் தெரிவித்து விரிவாக எழுதினார்.

'தான் – படைப்பு –தமிழவன்' எண்ணங்களை ஆய்வு செய்து சில விளக்கங்கள் தந்திருக்கிறார் ஞானி.

தமிழவன் தனது கருத்தை வலியுறுத்தி 'பாம்பு செத்துப் போயிற்று' என்றொரு கட்டுரை எழுதினார்.

விவாத முடிவில், இருதரப்பு அபிப்பிராயங்களையும் சீர்தூக்கிப் பார்த்து 'ஸம்மிங் அப்' செய்துள்ளார், எஸ். வி. ராஜதுரை.

பயனுள்ள–சிந்தனைச் செறிவுள்ள கட்டுரைகள் இவை.

அதேபோல, 'மார்க்சியமும் கிறித்துவமும்' என்ற எஸ். வி. ராஜதுரை யின் 17 பக்கக் கட்டுரையும் குறிப்பிடத்தகுந்தது.

'இந்திய, கிரேக்க தத்துவ மரபுகள்–சில பிரச்னைகள்' என்ற தலைப்பில், சாரு நிவேதிதா, வெ. சாமிநாதன் சிந்தனைகளை விவாதத் துக்கு எடுத்துக்கொண்டு விரிவான மறுப்புரை எழுதியதும் கவனிப் புக்கு உரியது.

'வண்ணநிலவனுடன் உரையாடல்', 'வல்லிக்கண்ணனிடம் சில கேள்விகள்', மற்றும் வண்ணநிலவனின் 'பாம்பும் பிடாரனும்' சிறுகதைத் தொகுப்புப் பற்றிய சந்திரமூலரசன் எழுதிய 'வீம்புள்ள பிரக்ஞை'–

'நமது இலக்கு–அதற்கான செயல்பாடுகள்– ந. முத்துசாமி; ஜெனக ப்ரியா' கட்டுரை.

'ஜே. ஜே. சில குறிப்புகள்' பற்றி ராஜ்கௌதமன் கட்டுரை.

'தான்– படைப்பு– இயங்கியல் உறவுகள்– ஓர் எக்ஸிஸ்டென்ஷியல் மார்க்ஸிய அணுகல்'–சாருநிவேதிதா எழுதியது.

ஆகிய விஷயங்கள் வாசகர்களின் கவனத்தைக் கவர்ந்தவையாகும்.

1982 ஜூன் இதழில் இ. வெ. வ. ஒரு முக்கிய அறிவிப்பை வெளியிட்டது. இலக்கியம், கலை, கலாச்சாரம், சமூக விஷயங்களில் கவனம் செலுத்திய இ. வெ. வ. சாதி, சமயப் பிரச்னைகளுக்கு அதிகமான கவனிப்பைத் தரத் தீர்மானித்தது.

'சமூகத்தின் சாதி, சமயப் பிரச்னைகள் முன்னுரிமை தந்து விவாதிக்கப்படும். வர்க்கப் பிரச்னையை மார்க்ஸியம் பிரதானப்படுத்துகிறது என்ற கவனத்தை நாங்கள் மறக்கவில்லை. சாதி, சமயப் பிரச்னைகளுக்குள் வர்க்கப் பிரச்னைகள் நீக்கமற நிறைந்திருப்பதை நாங்கள் குறித்துக் கொள்கிறோம். இதே போலத்தான் அரசியலும். அரசியல் தனி டிபார்ட்மெண்ட் என்று யாரும் நம்பவில்லை.'

இந்நோக்கில் நாட்டின் நிகழ்ச்சிகள் பற்றிய குறிப்புகள், தகவல்கள் இடம்பெற்றன.

1983–ல் இலங்கையில் நிகழ்ந்த இனப்படுகொலை பற்றி இ. வெ. வ. அதிகக் கவலையும் தீவிர அக்கறையும் காட்டியது. தமிழகத்தின் தென் மாவட்டங்களில் உள்ள சிறு பத்திரிகைச் சூழல் சார்ந்தவர்கள், மற்றும் கலாச்சார அமைப்புகள் இணைந்த கருத்தரங்கம் ஒன்றை 'இலக்கிய வெளிவட்டம்' ஏற்பாடு செய்தது. 7–8–1983 அன்று மதுரையில் நடைபெற்ற இக்கருத்தரங்கில் சுயேச்சை எழுத்தாளர்கள்– படைப்பாளிகள் சிலரும் கலந்துகொண்டார்கள்.

அங்கே வெளியிடப்பட்ட கருத்துக்கள், தீர்மானங்கள் அனைத்தையும் தொகுத்துத் தரும் இ. வெ. வ. இதழ் நவம்பரில் வெளிவந்தது. இந்தச் சிறப்பிதழ் இலங்கைத் தமிழர் பிரச்னைகளையும் போராட்ட அனுபவங்களையும் தமிழ்நாட்டினருக்கு உணர்த்தும் நோக்குடன் தயாரிக்கப்பட்டுள்ளது.

இந்த இதழில் காணப்படும் சில விஷயங்கள்–

ஈழப் போராளிகளுடன் கலந்துரையாடல்.

இலங்கைத் தோட்டத் தொழிலாளர் பிரஜா உரிமை பற்றி.

இந்தியத் தமிழர்களும் வாக்குரிமையும்.

ஈழத் தேசிய இலக்கிய வளர்ச்சியில் மலையக எழுத்தாளரின் பங்கு பற்றி–மு. நித்தியானந்தன்.

மலையக சிறுகதை இலக்கியம்.

நெருப்பு ( சிறுகதை )–எஸ். கே. ரகுநாதன் ( 'சரஸ்வதி' இதழில் வந்த கதை–மறுபிரசுரம் ).

'இலக்கிய வெளிவட்டம்' ராமநாதபுரம் மாவட்டம் வ. புதுப்பட்டி என்ற ஊரிலிருந்து வெளிவரும் பத்திரிகையாகும்.

# 32. வாசகன்

பிரமாதமாக எதையும் சாதிக்க இயலாது போயினும் புதுமையாக ஏதாவது செய்துகாட்ட வேண்டும் என்ற துடிப்பு இளைஞர்களுக்கு ஏற்படுகிறது. கலை, இலக்கியங்களில் ஈடுபாடு கொண்ட இளைஞர்க ளாக இருந்தால் அவர்கள்—தனித்தனியாகவோ, சிலராகச் சேர்ந்தோ— சிறு பத்திரிகை ஒன்றை நடத்த முற்படுகிறார்கள்.

அப்படி ஒரு உந்துதலின் பேரில் சென்னையில் ஆரம்பிக்கப்பட்ட பத்திரிகைதான் 'வாசகன்'. அதை 'பத்திரிகை' என்றுகூட அவர்கள் சொல்ல விரும்பவில்லை. 'ஒரு தமிழ் இலக்கிய வரிசை' ('எ டமில் லிட்டரரி ஸீரீஸ்') என்று அறிவித்துக் கொண்டார்கள்.

'மெட்ராஸ் யூத் ஃபோரம்' என்ற அமைப்பின் வெளியீடு ஆக வ ந் த 'வாசகன்' மாலன், அக்ரீஷ் இருவரையும் ஆசிரியர்களாகக் கொண்டிருந்தது.

'சும்மா நடக்கவே' வாசகன் வெளிவருவதாக அதன் ஆசிரிய அறிவிப்பு கூறியது. ஏழாவது இதழில் பிரசுரமான அந்த அறிவிப்பு— புதுமையானது—உண்மைகளை எடுத்துக் காட்டுவது. அது பின்வருமாறு:

'ஒரு செப்டம்பர் பிற்பொழுதில் வாசகன் வெளியாயிற்று.

கால இயக்கத்தோடு ஏதும் ஒப்பந்தங்கள் அற்று. எதையும் ஸ்தா பிக்க அல்ல. இயங்க.

காலப் பிரக்ஞையும், ஸ்தாபனங்களும்தான் எதிரி, கலைக்கும் படைப்பாளிக்கும்.

காலத்தின் துரித நடையுடன் ஓடி ஓடி நடக்க வேண்டிய நிர்ப்பந் தத்தில் இலக்கியச் சிற்றேடுகள் தங்கள் பாதை பிறழ்ந்தவாறு இழு பட்டுப் போகின்றன.

ஒரு படைப்பாளியின் கூர்மைகள் ஸ்தாபனம் சீராக இயங்க வேண்டிய நிர்வாகக் காரணங்களில் சிதறிப் போகின்றன.

ஸ்தாபனமாகிப் போகும் இயக்கத்தில் தமிழ்ச் சிற்றேடுகள் எல்லாம் ஒரு தேர்ந்த படைப்பாளியைப் பலி கொடுத்திருக்கின்றன.

எங்களைப் பலிகொடுத்துக் கொண்டு எதையும் ஸ்தாபிக்க விருப்ப மில்லை எங்களுக்கு.

அரவான்கள் கிடைக்காமல் குருக்ஷேத்திரம் நிற்குமானால் போகட்டும்.

இது பற்றி விழிப்போடிருந்தது வாசகன்.

அதன் துவக்கம் நேர்ந்த அந்த மாலையிலேயே இது பற்றி முழுப் பிரக்ஞையுடன் பேசிற்று.

நடைமுறைச் சிக்கல்களை எதிர்கொண்டும் தொடர்ந்து அதன் தெளிவான நினைப்புடன் இயங்குகிறது.

எந்த இடத்தையும் அடைய அல்ல. சும்மா நடக்கவே விரும்புகி றோம் நாங்கள்.'

வாசகன் முதல் இதழ் 1973 செப்டம்பரில் வெளியாயிற்று. அதன் ஏழாவது இதழ் 1976 ஆகஸ்டில் பிரசுரமாயிற்று.

ஒவ்வொரு இதழிலும் தரமான கவிதைகளையும், வித்தியாசமான சிறுகதைகளையும், கவிதை–கலை சம்பந்தமான சிந்தனைக் கட்டுரை களையும் வாசகன் வெளியிட்டுள்ளது. தமிழில் ஆங்கிலத்தைக் கலந்து எழுதுவதில் உற்சாகம் காட்டியது.

அதில் வந்த சில தலைப்புகள் ஆங்கிலத்திலேயே இருந்தன. PERVERT பாண்டியனின் A to Z (இது இலக்கிய அக்கப்போர் பகுதி); 'SORRY FOR THE DISTURBANCE' (ஆசிரியர் குறிப்புகள்). சில கவிதைகள், கதைகள் ஆங்கிலத்திலேயே தலைப்பு பெற்றிருந்தன.

எழுத்தாளர்கள்– கவிஞர்கள் சிலர் ஓவியர்களாகவும் முன்னேற முயன்றார்கள். அவர்களது புதுமை ஓவியங்களை சில இதழ்களின் அட்டைச் சித்திரமாக வாசகன் அச்சிட்டு அவர்களது முயற்சியை ஊக்குவித்தது. உதாரணமாக, இரண்டாவது இதழில் பாலகுமாரன் வரைந்த ஓவியம், மூன்றாவது இதழ் அட்டையில் கல்யாண்ஜி ஓவியம்.

தமிழ்க்கவிதைகள் பற்றிய ஞானக்கூத்தன் சிந்தனைகள் : வாசக நோக்கில் தமிழ்ச் சிறுகதைகள்– தி. க. சிவசங்கரன்; ஸோல்ஸெனிட் ஸின் தோற்றங்கள்– ரேமண்ட் வில்லியம்ஸ் எழுதியதன் தமிழாக்கம் (மாலன்); என் சினிமா; மணி கௌல்– ஆங்கிலக் கட்டுரையின் மொழி பெயர்ப்பு (வெங்கட்சாமிநாதன்) கவிதை–என் நோக்கு: கோ. ராஜாராம்–

வாசகன் இதழில் வெளிவந்த குறிப்பிடத்தகுந்த கட்டுரைகள் இவை.

வாசகன் சாதனை என்று குறிப்பிட்டுப் பாராட்டப்பட வேண்டியது அதன் ஏழாவது இதழ் ஆகும்.

உண்மையில் அது ஒரு 'இதழ்' அல்லது 'ஏடு' இல்லை. ஒரு தனிப் புத்தகம் அது. பதினொரு சிறுகதைகளின் தொகுப்பு.

'வாசகன்–ஒரு தலைமுறையின் பதினொன்று சிறுகதைகள்' என்றே அது பெயரிட்டிருந்தது அதில் கண்ட அறிமுகம்:

'இந்த பதினொன்று சிறுகதைகள்.

ஒரு தலைமுறையின் தரிசனங்கள், வெளிப்பாடுகள், கோபங்கள், புழுக்கங்கள், முறுவல்கள், முணுமுணுப்புகள், தன்னுணர்வுகள்.

இந்த எல்லாக் கதைக்குள்ளும் இருக்கும் ஒவ்வொரு இளைஞர் களும் வெளியிலும் இருக்கிறார்கள்.

எழுதியவர்களாக, படிப்பவர்களாக,

நீங்களாக, நாங்களாக,

இவை இந்த தலைமுறையின் நிஜங்கள்.'

இத்தொகுப்பில் உள்ள கதைகள்–

1. நான் பர்ஸ் திருடிய நாள்–ஆதவன்
2. இருட்டில் நின்ற. . .–சுப்ரமண்ய ராஜு
3. அந்தத் தெருவின் முடிவில் ஒரு சுடுகாடு–ஜெயபாரதி
4. விளிம்பு–பாலகுமாரன்
5. நடப்பு–வண்ணதாசன்
6. 29–மாலன்
7. ஒரு கடிகாரத்தைச் சுற்றும் கனமான முட்கள்–இந்துமதி
8. நேர்க்கோடுகளும் கோணல் கோடுகளும்–எம். சுப்பிரமணியம்
9. பார்ட்டி–ஸிந்துஜா
10. புதியதோர் வேள்வியின் துவக்கம்–கபந்தன்
11. கோட்டு–கலாஸ்ரீ

இலக்கிய ரசிகர்கள் படிக்க வேண்டிய நல்ல சிறுகதைத் தொகுப்பு இது.

# 33. புதிய வானம்

தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றத்தின் குமரி மாவட்டக் கிளை தயாரித்து வெளியிட்ட முற்போக்கு இலக்கிய இதழ் 'புதிய வானம்'

இதன் மலர்ச்சி குறித்து அவர்கள் அழகாக அறிவித்திருக்கிறார்கள்–

'மாலையில் நிறையச் சிரித்துக் கொண்டும், சில வேளைகளில் எங்களுடைய சாதனைகளின் மேல் பூப் பின்னிக் கொண்டும், இந்த சாதனைகளின் மத்தியில் ஒருவருக்கொருவர் இன்பமாக நெருங்கி வந்து கொண்டும் நாங்கள் கடைசியில் படிப்படியாகக் கலை இலக்கியப் பெரு மன்றமென்னும் ஒரு முழுமையான ஒன்றாக மாறிப் போனோம்.

குமரி மாவட்டக் கலை இலக்கியப் பெருமன்றத்தின் நெடுநாளை யக் கனவு தன் முதல் இதழ்களை விரித்திருக்கின்றது. முற்போக்குக் கலைநெஞ்சங்களின் இதயச் செழிப்பில் வேர்பரப்பி, மனித இல்லங்க ளின் முன்றில்களில் கொடி வீசி, மெல்லப் படர்ந்து வந்த செல்லச் செடி அபூர்வமாக மொட்டெடுத்து அழகாக இதழ் விரிக்கத் தொடங்கி இருக்கிறது.

ஆனால் இது அழகுக்காக, செல்வ மாளிகையின் முற்றத் தொட்டி களில் வளர்ந்து, அடுக்கடுக்காகப் பூத்து உதிர்ந்து போகும் வெறும் அழகு மலர் இல்லை. பூக்குங்கால் அழகு, புதிய மணம், இனித்திடுந் தேன்.

ஆனால், பூ கருத்தரிக்கும், காய் காய்க்கும், கனிந்து விதை கொடுக்கும். இந்த ஓராயிரம் விதைகள் உங்கள் முற்றங்களில் விழுந்து நூறாயிரம் செடிகளைத் தோற்றுவிக்கும். எங்கள் ஒரு பூ உங்கள் வீடு களைச் சுற்றி ஒரு கோடி பூக்களை விரிய வைக்கும். இது எங்கள் நம்பிக்கை !'

'புதிய வானம்' இலக்கியப் பிரக்ஞை உடையவர்கள் மத்தியில் மட்டும் பரவினால் போதாது என்று அவர்கள் கருதினார்கள்.

'களையெடுத்துக் களைத்து, நீரோடையில் காலாட, வயல் வரப்புக ளில் உட்கார்ந்திருக்கும் சகோதரிகள்... சங்கொலி பிதுக்கித் தள்ளச்

சோர்ந்து டீக்கடை பெஞ்சில் சாய்ந்து சுடுநீர் குடிக்கும் சகோதரர்கள்... மாலைக் காற்று விரட்டிய கோடைச் சருகுகள்போல வீடு நோக்கி ஓடும் என். ஜி. ஓ. தோழர்கள்' ஆகியோர்களிடமும் அவர்களது கனவு வேரூன்றி, முளைத்துக் கிளைத்துச் செழித்து வளர்ந்து பயன் தர வேண்டும் என்று ஆசைப்பட்டார்கள்.

பொறுப்பாசிரியர்–அ. இராஜேந்திரன்; ஆசிரியர்– செந்தீ; ஆசிரியக் குழு–பொன்னீலன், ஜெகன், தாமரை நடராசன், சு.பிரம்மநாயகம், அருண் பாஸ்கர் என்று 'ஒரு ஆரோக்கியமான கூட்டுறவில்' புதிய வானம் நன்றாக வளர்ந்தது.

இக் குழுவினரும், குமரி மாவட்டத்தில் உள்ள எழுத்தார்வம் கொண்ட இளைஞர்களும் பல முற்போக்குப் பத்திரிகைகளிலும் எழுதி வந்த பற்பலரும் புதிய வானத்தில் கவிதைகள், கதைகள் எழுதினார்கள். கவிதைகளே அதிகம் இடம் பெற்றுள்ளன.

விமர்சனத்திலும் புதிய வானம் அக்கறை காட்டியது. அவ்வப்போது சில புத்தகங்களுக்கு ஆய்வுரை எழுதியது. 'கவிமணியின் கையறு நிலைப் பாடல்கள்' என்ற ஒப்பியல் திறனாய்வுக் கட்டுரையைத் தொடர்ந்து வெளியிட்டது. நாட்டுப் பாடல்களைச் சேகரம் செய்து இதழ் தோறும் பிரசுரித்து வந்தது.

சமுதாயப் பார்வையோடு கதைகள், கவிதைகள் எழுதவேண்டும் என்ற முற்போக்கு இலக்கிய உணர்வை அது இளைஞர்களிடம் தூண்டி விட்டது. புதிது புதிதாகப் பலர் எழுதலானார்கள். புதிய வானம் போன்ற வெளியீட்டைப் பிரசுரிக்கும் முயற்சியும் இதர சில அணியினரிடையே தலைதூக்கியது.

இதெல்லாம் புதிய வானம் நண்பர்களுக்கு மகிழ்ச்சி தந்தது. ஆனாலும், அவர்கள் தங்கள் சுயவிமர்சனத்தில் ஒரு உண்மையைச் சிந்திக்கத் தவறவில்லை.

'புதிய வானம் இலக்கிய ஏடு என்ற வகையில் தர வளர்ச்சி அடைந்து வருகிறது என்றாலும் உழைக்கும் மக்களின் கரங்களிலும் அது திகழ வேண்டும்; அவர்களின் வாழ்வுப் பிரச்னைகளை, அணுகு முறை தெளிவினை அது ஏற்படுத்த வேண்டும், சமுதாயத்தின் பிற் போக்குத்தனங்களை இனஞ்சுட்டி, முற்போக்கு முனைப்பினை ஏற்படுத்த வேண்டும் என்றெல்லாம் நமது ஆசைகளை வெளியிட்டோமே; அவைகள் எந்த அளவிற்கு நிறைவேறியிருக்கின்றன என்பதை நின்று நிதானிக்க வேண்டியிருக்கிறது' என்ற ஆசிரியக் குறிப்பு அதன் 9–ம் இதழில் காணப்படுகிறது.

1975 செப்டம்பர் மாதம் பிறந்தது 'புதிய வானம்.' 'ஒரு இன்பமான இயக்கப் பூர்வமான கூட்டு முயற்சியின் விளைவாக' நன்கு வளர்ந்து வந்த புதிய வானம், 'சக்திகளை ஒருமுகப்படுத்தி, மக்கள் இலக்கியப் பாதை நோக்கி உறுதியுடன் அடியெடுத்து வைக்கும் கடமை உணர்ச்சி யோடு செயல்பட்டது.

1977 ஜனவரி இதழை (14) ஜீவா மலர் ஆகவும், அக்டோபர் இதழை (16) பாரதி மலராகவும் வெளியிட்டது.

இடையில் ஏற்பட்ட தேக்கம் 16–ம் இதழுக்குப் பிறகு நீண்ட காலத் தேக்கமாக மூன்று வருடங்கள் நீடித்திருக்கிறது. மீண்டும் 1980 அக்டோ பரில்தான் 17–ம் இதழ் பிரசுரம் பெற்றுள்ளது.

ஆசிரியக் குழுவில் சில பெயர் மாற்றங்கள் நிகழ்ந்திருந்தன. அந்த இதழின் ஆசிரியக் குறிப்பு இது–

'மூன்று ஆண்டுகளுக்கு முன்–

இந்திய வானில் சில பாழ் மேகங்கள் சூழ்ந்த இருட்டுப் பொழுதில் புதிய வானம் கண்ணுக்குத் தெரியாமல் போகவேண்டியதாயிற்று. அந்தச் சூழ்நிலைகளை இப்போது ஆராயத் தேவையில்லை என நினைக்கிறோம்.

மீண்டும் 'புதிய வானம்' ஒரு விடியலின் வெளிச்சக் கீற்றை நோக்கித் தன் ஆர்வப் பயணத்தைத் தொடங்குகிறது.

இந்த மூன்று ஆண்டு இடைவெளியில் நமது குமரி மாவட்டக் கலை இலக்கியப் பெருமன்றத்தின் வளர்ச்சி பெருமிதத்திற்குரியது. மூன்று ஆண்டுகளுக்கு முன் மூன்று கிளைகள். இன்று ஏழு கிளைகளும் அதனை ஒருங்கிணைத்துச் செயல்படுத்தும் மைய அமைப்புமாகத் தன் செயல்பாடுகளை விரிவுபடுத்தி இருப்பதோடு, கூர்மைப்படுத்தவும் செய்து கொண்டிருக்கிறது.

மனிதாபிமான படைப்பாளிகள் நம் மன்றத்தில் பல்கிப் பெருகிய நிலை! கிளைகள்தோறும் கையெழுத்து ஏடுகள்! அவர்களின் புயல் கருக் கொண்ட மேகங்களைத் தாங்கிக் கொள்ள அந்தக் கையெழுத்து ஏடுகள் மட்டும் போதாது; புதிய வானம் மீண்டும் வந்தே தீர வேண்டும் என்ற நிலை.

பொருளாதார நெருக்கடிகளை உள்ளடக்கிக் கொண்டு புதிய வானம் இரு மாதத்திற்கொருமுறை கொண்டுவர எண்ணியுள்ளோம்.

முற்போக்குக் கலை இலக்கியப் படைப்பாளிகளின் ஆர்வமுனைப்புகளால் புதிய வானம் முன்னைவிட பன்மடங்கு வீச்சுடன் வெளிவரும் என்று நம்பிக்கை கொண்டிருக்கிறோம்.'

அவர்களுடைய தன்னம்பிக்கையைப் பாராட்டலாம். ஆயினும், கால ஓட்டத்தில் அவர்களது இந்த நம்பிக்கை பொய்த்துவிட்டது என்பதைக் குறிப்பிடத்தான் வேண்டும்.

# 34. மகாநதி

'சோஷலிஸ்டு எதார்த்தவாதம் உண்மையான நிலைக்கண்ணாடியைப் போல, வாழ்க்கையை மானசீகமாக அல்ல, தூலமாகக் காட்டுகிறது. வாழ்க்கையைச் சரித்திர பூர்வமாக உருவாகி வரும் சமுதாய அமைப்பிலும் அதன் பல்வேறு புரட்சிகரமான வளர்ச்சிகளிலும் காட்டுகிறது. சோஷலிஸ்டு எதார்த்தவாதம் மனித வர்க்கம் முழுமைக்கும் மனித வாழ்வின் சகல துறைகளிலும் சோஷலிச உணர்வுடன் பயிற்சி அளிக்கிறது.'

ப. ஜீவானந்தம் வலியுறுத்திய இக்கருத்தைப் பிரதிபலிக்கும் விதத்தில் நடந்தது 'மகாநதி'. மதுரையிலிருந்து வெளிவந்த 'இருமாதம் ஒரு முறை' கலை இலக்கிய வெளியீடு இது. 1970 களின் இறுதிக் கட்டத்தில் பிரசுரமான இந்த முற்போக்கு இதழின் ஆசிரியர் பரிணாமன். மதுரையில் உள்ள முற்போக்கு இலக்கியவாதிகள் குழுவாகச் செயல்பட்டு, 'மகாநதி'யை ஒரு தரமான இலக்கியப் பத்திரிகையாக உருவாக்கி வந்தார்கள்.

'த மி ழ் இலக்கியத்தில் முற்போக்குத் திசைவழியில் பார்க்கவும் படைக்கவும் நமக்குக் கற்றுக் கொடுத்தவர் ஜீவா. இலக்கியத்திலும் நல்லது, நசிவு என்று பிரித்துப் பார்க்கவும், நல்லது, மக்கள் இலக்கியமாக, மகா நம்பிக்கைவாதக் கண்ணோட்டத்தைப் பெறவும் நமக்குக் கிடைத்த ஆதர்சம். ஜீவாவிடம் நாம் பெற்ற சொத்து. ஜீவாவிடம் பெற்ற ஜீவதாகங்கள் ஆங்காங்கே வேரூன்றி மரமாகி, காய்த்துக் கனிந்து, மீண்டும் விதை பரப்பும் பக்குவம் பெற்றிருப்பது மறைக்க முடியாத உண்மை. மகாநதியின் தோற்றத்திற்கு அதுதான் காரணம்.'

இப்படி நன்றி உணர்வோடு ஆசிரியர் குழுவினர் ஓராண்டு நிறைவுற்றதும் அறிவித்தார்கள். மேலும் பெருமையோடும் திருப்தியோடும் அவர்கள் தெரிவித்திருப்பது இது—

'மத்தியதர வர்க்கத்தினருடன் கூடவே உழைக்கும் மக்கள் மத்தியிலும் அழகியல் உணர்வுடன் படைக்கும் ஆற்றல் பெற்ற படைப்பாளிகள் வளர்ந்துவிட்டதும் உழைப்பாளி மக்களிடமிருந்து புறப்படும் எழுத்தாளர்களை இரண்டாம் தரமாக நோக்க முடியாத நிலையும் முற்போக்கு இலக்கிய இயக்கம் பெற்ற வெற்றி. இந்த வெற்றியைப் பரந்த அளவில்

மேலும் கொண்டு செல்வது, அளவிடற்கரிய பணியானாலும், அதில் ஒரு சில துளிகளை மகாநதி தனது ஆறு இதழ்களில் நிறைவேற்றியிருக்கிறது என்று பெருமைப்படுகிறது. எத்தனை அம்சங்கள் என்று பார்ப்பதை விட, எப்படிப்பட்ட அம்சங்கள் அரங்கேறி இருக்கின்றன என்று பார்த்தால் இப்பெருமை துலாம்பரமாகும்.'

இது நியாயமான பெருமையே ஆகும். 'மகாநதி' தரமான சிறுகதைகளையும், பயன் நிறைந்த சிந்தனைக் கட்டுரைகளையும் பிரசுரித்துள்ளது.

சமுதாயப் பார்வையுடன் அழகியல் உணர்வும் கொண்ட தன்மையில், ரசனைக்கு உரிய நல்ல கதைகளை சகுந்தலை என்ற பெயரில் எழுதியவர் படைத்திருக்கிறார். 'சூழலூதி வருவான் குமிந்தன்', 'தேவனே தேவனே', 'ஜென்மபூமி' ஆகியவை குறிப்பிடப்பட வேண்டியவை.

மற்றும், கொ. மா. கோதண்டம் எழுதிய 'மலைக்காட்டிடையே ஒரு மாட்டுக் கிடை'. பெரிய தனக்காரர்களின் மாடுகளை மலைமீது பாதுகாத்து வளர்க்கும் தொழிலாளர்களின் வாழ்க்கையை விரிவாக வர்ணிக்கும் கதை; இராகுலதாசனின் 'தாய்' போன்ற நல்ல கதைகளை 'மகாநதி' வெளியிட்டிருக்கிறது.

கட்டுரைகள் விஷயத்தில் மகாநதி மிகுந்த அக்கறை காட்டி, பல் முக்கியமான பிரச்னைகளை அலசியிருக்கிறது. வட்டார இலக்கியம் சம்பந்தமான ஆய்வுகள் குறிப்பிடத்தகுந்தவை.

'வட்டார இலக்கியம் எனும் பாகுபாடு' என்ற தலைப்பில் தி. சு. நடராசன் எழுதியதும், 'படைப்பிலக்கியத்தில் வட்டார வழக்கும் கிராமமும் நமது தேசிய ஜனநாயக மரபும்' என்ற நவபாரதி கட்டுரையும் தற்கால இலக்கிய முயற்சிகளை அறிமுகம் செய்வதோடு, வட்டார வழக்கின் தன்மைகள் குறித்தும் ஆழமாகச் சிந்தித்துள்ளன. 'வட்டார வழக்கு, கொச்சை எல்லாம் மொழிவளம், உள்ளடக்கம் என்பதைக் கூர்மைப் படுத்துவதற்குத்தானே ஒழிய, அவற்றை மழுங்கடிக்க அல்ல' என்று நவபாரதி தன் கட்டுரையில் அழுத்தமாகச் சுட்டிக் காட்டியிருக்கிறார்.

கட்டுரை மொழிபெயர்ப்புகளும் தரப்பட்டன. மாயகோவ்ஸ்கி கவிதை பற்றிய சோவியத் அறிஞர்கள் பலரின் கருத்துக்கள், காலமும் கலைஞனும் என்ற செக்கோஸ்லாவேகியக் கட்டுரை; கமலேசுவரின் இந்திக் கட்டுரைகள்; நாவலின் மொழிநடை குறித்து எம். பக்தின் எழுதியது— இவை 'மகாநதி' யில் வந்துள்ளன.

இலக்கியப் பத்திரிகை செய்ய வேண்டிய ஒரு முக்கிய காரியத்தை மகாநதி தவறாமல் செய்து வந்திருப்பதைப் பாராட்ட வேண்டும். வாசகர் களின் கவனத்துக்குக் கொண்டு வரப்பட வேண்டிய நல்ல புத்தகங் களை விரிவான கட்டுரைகள் மூலம் அது அறிமுகம் செய்தது.

உருபுவின் நாவல் 'சுந்தரிகளும் சுந்தரன்மார்களும்', இந்திரா பார்த்தசாரதியின் நாடகம் 'நந்தன் கதை', இன்குலாபின் 'வெள்ளை இருட்டு', சிற்பியின் 'சர்ப்பயாகம்', தமிழவனின் 'புதுக்கவிதை பற்றிய நாலு கட்டுரைகள்', ஐசக் அருமைராசனின் 'கீறல்கள்', வண்ணநிலவ னின் 'கடல்புரத்தில்', ராஜம் கிருஷ்ணனின் 'அலைவாய் கரையில்' ஆகியவை பற்றிய கட்டுரைகள் அப் படைப்புகள் குறித்து அறிந்து கொள்ள உதவும்.

நல்ல திரைப்படங்கள் குறித்தும் விரிவான கட்டுரைகளை 'மகாநதி' வெளியிட்டது. போலந்து திரைப்படம், ஆந்த்ரேவாய்தாவின் 'தி பிராமிஸ்ட் லேண்ட்', தெலுங்கு திரைப்படம், மிருணாள் ஸென்னின் 'ஒரு ஊரின் கதை' ஆகியவை முக்கியமானவை.

இந்த 'இரு மாதம் ஒருமுறை' இலக்கிய இதழ் அதிகமான கவிதை களையும் வெளியிட்டது. 'கவிஞன் உலகின் எதிரொலி; தன்னுடைய சொந்த ஆத்மாவின் அழுகுரல் அல்ல' என்ற மாக்சிம் கார்க்கியின் கூற்றைத் தனது கவிதைக் கொள்கையாகக் கொண்டு, சமுதாயப் பார்வை யுடன் கூடிய புதுக் கவிதைகளையே இது பிரசுரித்தது. பரிணாமன், பொன்மணி, கே. சி. எஸ். அருணாசலம், சூர்யகாந்தன் உள்ளிட்ட பல கவிஞர்கள் தங்கள் படைப்புகளினால் மகாநதிக்கு உயிர்ப்பும் உணர்வும் அளித்தார்கள்.

புதுமைக் கருத்துக்கள் மக்களை அடைய வேண்டும் என்ற நோக்குடன் பரிணாமனும் மற்றும் சிலரும் நாட்டுப் பாடல் பாணியில் கவிதைகள் எழுதியிருக்கிறார்கள். 'புதிய தாலாட்டு' ஒன்றிரண்டையும் மகாநதி பிரசுரித்திருக்கிறது.

'ஒரு தொலைநோக்கு கொண்ட இதழ்' என்ற தன்னடக்கமான பெருமையுடன், தேசிய–சர்வதேசிய உள்ளடக்கம் நிறைந்ததுதான் தேசிய வாழ்வு என்ற பொறுப்புணர்ச்சியுடன், தேசிய வாழ்வில் இலக்கியத்திற்கும், கலை, கலாச்சாரத்திற்கும் பங்கு உண்டு என்ற அந்தரங்க சுத்தியுடன் செயல்பட்ட 'மகாநதி' தரமான முற்போக்கு இலக்கிய இதழாகத் திகழ்ந்தது.

இதுபோன்ற ஒரு பத்திரிகை இன்றும் தேவைதான். ஆனால், 'மகாநதி' ஒன்பது இதழ்களோடு மறைந்து விட்டது.

# 35. முழக்கம்

மிகப் பரவலான சர்குலேஷனைக் கொண்ட வணிகப் பத்திரிகைகள், தங்கள் வாசகர்களை கவர்ச்சிப்பதற்காக, தரக்குறைவான– பண்பாட்டையும் ஒழுக்கத்தையும் சிதைத்துச் சீரழிக்கக் கூடிய– விஷயங்களையும் சித்திரங்களையும் உற்சாகமாக வெளியிடுவதை ஒரு வியாபார உத்தியாகக் கையாண்டு வருகின்றன, பலப்பல வருடங்களாகவே.

இலக்கிய வளர்ச்சியையும் சிந்தனை விழிப்பையும் நோக்கமாகக் கொண்ட சிறு பத்திரிகைகள், பெரிய பத்திரிகைகளின் இந்தப் போக்கைச் சுட்டிக்காட்டி, சூடாக விமர்சித்தும் கண்டித்தும் கருத்துப் பிரச்சாரம் செய்யத் தவறியதில்லை. 'தாமரை', 'உதயம்' போன்ற ஏடுகள் இப்பணியைத் தீவிரமாகவே செய்திருக்கின்றன.

இந்த எதிர்ப்புக் குரலை முதலாவது இதழிலேயே வீரமுழக்கம் செய்து கொண்டு மற்றொரு தரமான இலக்கியப் பத்திரிகை தோன்றியது 1980 ஜனவரியில்.

அதன் பெயரே 'முழக்கம்'தான்.

பூம்புகார்–மேலையூர் (சீர்காழி வட்டம்) என்ற இடத்திலிருந்து வெளிவந்த 'முழக்கம்' காலாண்டு ஏடு ஆகும்.

'புது இதழ்கள் தமிழில் நிறையவே வருகின்றன. அவற்றில் பெரும்பாலானவற்றின் குறிக்கோள் பணம்.

பரபரப்பான ரசனை, பயனில்லாத பொழுதுபோக்கு இவற்றுக்காகத் தமிழ் மக்கள் நிரம்பவே செலவழிப்பார்கள் என்பதையுணர்ந்து அவை இயங்குகின்றன.

பெண்களைத் தூரிகையால் துகிலுரிகின்ற ஓவியத் துச்சாதனர்களும், வக்கிரத்தையே மையாக்கி எழுதும் எழுத்து வணிகர்களும் விலங்குகளின் நிலைக்குத் தமிழ் வாசகர்களை அழைத்துச் செல்லும் கொடுமை நிகழ்கிறது.

ஆபாசங்களையே அழகுகளாகவும், வக்கிரங்களையே மேன்மைகளாகவும் ஏற்றுக் கொள்கிற அளவு பல வாசகர்கள் மந்தப்பட்டுப் போய் விட்டனர்.

சமுதாய ரீதியான ஒரு பண்பாட்டுச் சிதைவின் எல்லா அலங் கோலங்களையும், பணத்திற்காகவே திட்டமிட்டு வளர்க்கும் வியாபாரப் பத்திரிகைகள் நாளுக்கு நாள் வலிமை பெறுகின்றன.

இவ்வியாபாரப் பத்திரிகைகளின் நடுவே, உயர்ந்த குறிக்கோள்க ளோடு கூடிய இலக்கிய ஏடுகள் வெற்றி பெற முடியுமா ? வெற்றி பெற முடியும் என்ற நம்பிக்கையோடுதான் 'முழக்கம்' ஒலிக்கிறது.

வெற்றி என்பதை விற்கப் போகும் பிரதிகளின் எண்ணிக்கையை வைத்து முடிவு கட்டப் போவதில்லை. நடுவில் நின்று போய்விடாமல் தொடர்ந்து வெளிவருவதே கலை–இலக்கிய ஏடுகளுக்கு ஒரு வெற்றி தானே !' ( முழக்கம்–முதல் இதழ். )

இவ்விதம் சிந்தித்து, அந்தச் சிந்தனையை 'முழக்கம்' ஆக்கத் துணிந்தவர் ஆ. செகந்நாதன், எம். ஏ. அவர் மேலும் அறிவித்தார்:

' 'முழக்கம் இதழின் நோக்கம் என்ன?'

இப்படி நண்பர்கள் வினவியபோது, திட்டவட்டமான விடையை உடனடியாக என்னால் தரமுடியவில்லை. இலக்கிய ஏடாக இது இருக்கும்; கவிதை, சிறுகதை, ஆய்வு, சமுதாயப் பிரச்னைகள் பற்றிய கட்டுரை இவை இருக்கும் என்று கூறினேன். இவை பத்திரிகையின் உள்ளடக் கமே தவிர நோக்கம் அல்லவே !

பின் எதுதான் நோக்கம் ? இலக்கியத்தை ஊடகமாக்கிச் சமுதாய ரீதியான ஒரு விழிப்புணர்ச்சியை உருவாக்குவதுதான் நோக்கம் என்பது ஓரளவு சரியாக இருக்கும். இதைவிட அதிகமான கனவுகள் இப்போது வேண்டாம். சொப்பனக் கூடங்களில் இறக்கை கட்டிக் கொண்டு மிதப் பதைவிட நாம் வாழும் நிஜமான மண்ணில் புரள்வதுகூட மேலானது. இந்த ஏடு நிஜங்களை அறிமுகப்படுத்தும். நிழல்களை அடையாளங் காட்டும்.'

'முழக்கம்' முதல் இதழே நம்பிக்கை அளிக்கும் தரமான தயாரிப்பாக அமைந்திருந்தது.

புவியரசு, வல்லிக்கண்ணன், சக்திக்கனல், ஆ. தனஞ்செயன், செந்நீ, தீவண்ணன் மற்றும் சிலரது கவிதைகளோடு கலீல் கிப்ரான் கவிதை ஒன்றின் தமிழாக்கமும் இடம்பெற்றிருந்தது.

இலக்கிய விவகாரங்கள்– ஒரு விசாரணை என்ற தலைப்பில்

ஜெயகாந்தன் விமர்சனம் செய்யப்பட்டிருந்தார். ஆழ்ந்த அவ்விமர்சனத்தை எழுதியவர் க. வீரையன்.

உழைக்கும் வர்க்கத்துடன் ஒரு சந்திப்பு (பூம்புகார் மீனவர்கள் நிலை பற்றிய கட்டுரை), ஒரு குடியரசில் சில நாடகங்கள் (கல்வித் துறை பற்றிய நையாண்டி சித்திரம்), ரசிகனின் குறிப்பேட்டிலிருந்து (சுவாரஸ்யமான நடைச்சித்திரம்) ஒரு கதை, சில புத்தகங்களுக்கு மதிப்புரை—இவ்வளவும் இருந்தன. 'ஆனந்த விகடன்' அளவில் 66 பக்கங்கள். ஆர்ட் பேப்பர் அட்டை. அட்டையில் வர்ணச் சித்திரம் உண்டு.

இரண்டாவது இதழின் முகப்புத் தோற்றம் எடுப்பாக இருந்தது. விஷய கனம், ஆழம் என்பது குறித்து ஆ. செகந்நாதன் தெளிவான ஒரு விளக்கம் தந்திருந்தார்.

'இன்னும் ஆழமாகவும், கனமாகவும் முழக்கம் வரவேண்டுமென்று சிலர் எழுதியுள்ளனர். இந்தக் கருத்தில் எனக்கொன்றும் முரண்பாடு இல்லை. ஆனால் ஆழம், கனம் இவற்றுக்கு அவர்கள் கற்பிக்கும் விளக்கத்தில்தான் எனக்கு உடன்பாடில்லை. எந்த விஷயம் சமுதாய விழிப்புக்கு அவசியமோ அதைச் சொந்த சிந்தனையோடு அலசிப் பார்ப்பதும், எந்த விஷயம் கலை இலக்கிய வளர்ச்சிக்குப் பயன்படுமோ அதை அழுத்தமாக வரைவதும்தான்— ஆழம், கனம் இவற்றின் அர்த்தங்கள் என்று முழக்கம் கருதுகிறது.

கனமாக எழுதவேண்டும் என்பதற்காக, வேண்டுமென்றே காங்கோ காடுகளிலுள்ள ஒரு நூதன விலங்கு எப்படிக் குட்டி போடுகிறது என்று எழுதுவதால் யாருக்கு என்ன பயன்?

எழுதப்படுகிற செய்தியைத் தாண்டிக் கொண்டு,— தன்னை எப்படியாவது ஒரு அறிவு ஜீவியாகக் காட்டிக் கொள்ள வேண்டும் என்ற அரிப்பில் மட்டுமே வரும் படைப்புகளை ஆழமானவை என்று ஏற்றுக் கொள்ளும் 'பெருந்தன்மை' முழக்கத்திற்கு இல்லை. மக்களை நேரடியாகத் தொடக்கூடிய கலைத்தன்மை நிறைந்த படைப்புகளை முழக்கம் தொடர்ந்து தரும்' (முழக்கம்—2).

இவ்விதம் அறிவித்த 'முழக்கம்' இதைச் செயலில் காட்டத் தீவிரமாக முயன்றதை அதன் இதழ்கள் காட்டின.

இரண்டாவது இதழில், 'வல்லிக்கண்ணனுடன் ஒரு பேட்டி' யில், தமிழ் எழுத்துலகின் தொடர்பாகச் சில சிந்தனைகள் உரையாடப் பெற்றுள்ளன.

'விமர்சனமில்லாத இலக்கியம் விளக்கில்லாத தெருக்களைப் போல' என்று ஒரு சிந்தனையை எடுத்துக் கூறிய முழக்கம் விமர்சனக் கட்டுரைகளைப் பிரசுரிப்பதில் ஆர்வம் காட்டியது.

'இலக்கிய விவகாரம்' பகுதியில் க. வீரையன், தி. ஜானகிராமன் படைப்புகளை விமர்சனத்துக்கு உள்ளாக்கி, தனது கருத்துக்களைத் தெரிவித்துள்ளார். 'நவீன இலக்கியவாதிகள்– ஒரு பார்வை' என்று த. தியாகராசன் எழுத்துலகில் காணப்படுகிற ஆரோக்கியமற்ற போக்கு ஒன்றைச் சட்டிக்காட்டினார்.

'தமிழ் இலக்கியத் துறை இன்று ஒரு நோய்க்கு ஆட்பட்டிருக்கிறது. பொதுவான நோக்கில் வளர்ச்சியைக் கண்டு வரும் படைப்பு இலக்கிய வாதிகளும், விமர்சகர்களும் அர்த்தமில்லாத சில மனநோய்களால் பாதிக் கப்பட்டுள்ளனர். தங்களையே மையமாக்கிக் கொண்டு வெறும் ஆரவாரம், ஜம்பம் இவையே முதல் தரமான இலக்கியவாதியின் இயல்புகள் என்று கருதிக் குழம்பியிருக்கிறார்கள். ஒருவரையொருவர் நாகரிக விளிம்பைத் தாண்டித் தாக்கிக் கொள்வதற்கும் தங்களுக்குள்ளாகவே மிதப்போடு முழங்கிக் கொள்வதற்கும் இவர்கள் சூட்டுகிற அல்லது கருதுகிற பெயர் தான் என்ன? பெருமிதமா ? அல்லது வறட்டு ஜம்பமா என்று தெரிய வில்லை. எந்த எழுத்தாளனுக்கும் அவனது சுயமிதப்பு கல்லறை கட்டி விடும். அவனது சுடர்மிகும் எழுத்துக்கள் கூட அவனது திமிர்த்தனத் தால் அஸ்தமித்துப் போய்விடும்.'

ஊன்றி உணர்தற்குரிய இத்தகைய உண்மைகளை வெளிப்படுத்தி யது இந்தச் சிந்தனைக் கட்டுரை.

'புதுமைப்பித்தன் கதைகள் இன்றும் புதுமையே' என்றொரு ஆய்வை இரெ. சண்முகவடிவேல் எழுதியிருந்தார். மற்றும் கதைகள், ஓரங்க நாடகம், கவிதைகள் ஆகியவற்றையும் இரண்டாவது இதழ் கொண்டிருந்தது.

'ஒரு இலக்கிய இதழுக்கு ஏற்படக்கூடிய வாடிக்கையான சிக்கல் களை' முழக்கமும் சந்தித்துக் கொண்டிருந்ததால், இந்தக் காலாண்டு ஏடு காலம் தவறுவதையும், மிகுந்த தாமதத்தை அனுஷ்டிப்பதையும், பக்கங்களைக் குறைப்பதையும், நீண்ட இடைவேளைக்குப் பிறகு இரண்டு இதழ்களை ஒன்றாக்கி வெளியிடுவதையும் நடைமுறையாகக் கொள்ள நேரிட்டது.

1982–ல் 'முழக்கம்' பாரதி மலராக ஒரு இதழைத் தயாரித்து வெளி யிட்டது. அது நல்ல கட்டுரைகளைக் கொண்டிருந்தது. பாரதியும்

பண்பாடும் ( த. அகர முதல்வன் ), மனம் வெளுக்க வேண்டும் ! ( சக்திக் கனல் ), பாரதியின் கடவுள் கொள்கை (பாரதிப் பித்தன்) பாரதி என்னும் பொதுவுடமைவாதி, பாரதியின் சமுதாய எதார்த்தப் பார்வை, பாரதி வழி யில் தமிழ்க் கவிதை என்ற தலைப்புகளில் பாரதி படைப்புகள் குறித்த பல்வேறு பார்வைகள் தொகுக்கப்பட்டுள்ளன.

கடைசி மூன்று கட்டுரைகளை ஆ. செகந்நாதன் எழுதியிருந்தார். இவை தரமான ஆய்வுகள் ஆகும். மூன்றாவது கட்டுரையில் பாரதிக்குப் பின் வந்த தமிழ்க் கவிஞர்களை விரிவாகவும், விருப்பு வெறுப்பற்ற நோக்குடனும் அவர் விமர்சித்துள்ளார். அவருடைய முடிவுரை சிந்தனை ஒளி கொண்டது; சிந்திக்கத் தூண்டுவது.

அந்தப் பகுதி இது தான்—

'பாரதிக்குப் பின்னர் தமிழ்க் கவிதைகள் பெருகியுள்ளன என்பதில் மறுப்பில்லை. பாரதி தனக்கு முன்னர் இருந்த பிற்போக்குத்தனங்களை யெல்லாம் விட்டுவிட்டுப் புதுமைகளைப் படைத்தான். பாரதியின் கவிதை களை மூன்று முக்கியமான தன்மைகளுக்காகப் போற்றுகிறோம்.

1. சமுதாய மாற்றங்களை வரவேற்ற முற்போக்குத்தனம். 2. பாரதியின் உணர்வோடு இயைந்த உண்மைத்தன்மை. 3. இனிமையும் எளிமையும்.

இம் மூன்று தன்மைகளும் ஒருங்கே நிலவும் கவிதைகளை வேறு யாரிடமும் காண இயலவில்லை என்பது அவநம்பிக்கையால் எழுந்த முடிவல்ல. பாரதிக்குப் பின் வந்தோர் பலர் முற்போக்குத்தன்மை, எளிமை, இனிமை ஆகியவற்றில் பாரதிக்கு வாரிசுகளே. ஆனால் அரசி யல் கட்சிச் சார்பு, வயிற்றுப் பிழைப்பு உத்தியோகம் ஆகியவற்றால் விளைந்துள்ள சந்தர்ப்பவாதப் போக்கும் அச்சமும் அவர்களை முடக்கி விட்டன. பாரதிதாசன், கண்ணதாசன், சுரதா, முடியரசன் ஆகியோரின் கவிதைச் சாதனைகளை ஒடுக்கியது கட்சிச் சார்புகளே. மேத்தா, மீரா, சிற்பி, புவியரசு, தமிழன்பன் என்று நீளும் பட்டியலும் ஒரு மகாகவியின் உதயத்தைத் தடுப்பவை, உத்தியோகம் விளைவிக்கும் அச்சமும் ஜாக்கி ரதை உணர்ச்சியுமே.

அச்சமே நரகம் அதனைக் கட்டு
நல்லதை நம்பி நல்லதே செய்க

என்றான் பாரதி. அச்சத்தை வென்றவர்கள் தங்களைப் பாரதியின் வாரிசுகளாகக் கூறிப் பெருமிதமுறலாம். தன்னம்பிக்கையோடு அப்படிப்

பெருமிதமுறும் தகுதி வாய்ந்தவர்களிடையே நாளையே ஒரு மகாகவி தோன்றுவான்.'

செகந்நாதனின் இந்த விமர்சனம் கவிதை எழுதுவோரிடையே ஒரு விழிப்பு உணர்வைத் தோற்றுவித்தால் நல்லது.

'முழக்கம்' இந்தச் சிறப்பு இதழில் பாரதி சம்பந்தமான கட்டுரைக ளோடு வேறு சில விஷயங்களும் இடம் பெற்றிருந்தன. கண்ணதாசன்–ஒரு மதிப்பீடு ( ஆ. இராமச்சந்திரன்) ; முதல் மூன்று தமிழ் நாவல்கள் ( ஒரு மதிப்பீடு )–வல்லிக்கண்ணன்; மக்கள் கவிஞர் கே. சி. எஸ். அருணா சலம் அவர்களுடன் ஓர் உரையாடல்; சில கவிதைகள் ஆகியவை இதழின் விஷயச் சிறப்புக்கு மேலும் கனம் சேர்த்துள்ளன.

1983 இதழ் ஒன்றும் விஷய கனம் பெற்றிருந்தது. 'தமிழ் நாவல்க ளின் உள்ளடக்கம்' என்ற வல்லிக்கண்ணன் ஆய்வும், புதிய கவிதையில் மார்க்ஸியத் தாக்கம் பற்றிய ஆ. செகந்நாதன் ஆய்வும் இலக்கிய மாணவர்களுக்கு நல்ல விருந்து ஆகும்.

1983 டிசம்பர் எனத் தேதியிட்ட 'முழக்கம்' இதழின் முக்கிய அம்ச மாக 'மேத்தாவின் புதுக்கவிதைகள்' பற்றிய ஆ. செகந்நாதன் ஆய்வு அமைந்துள்ளது. மேத்தாவின் கவிதைகளில் உள்ள சிறப்புகளையும் குறைபாடுகளையும் இந்த விமர்சனம் சுட்டிக்காட்டுகிறது. ஆ. தனஞ் செயன் கவிதை, 'இலங்கையில் ஓர் ஒத்திகை' மற்றும் புத்தக மதிப்புரை, தகவல்கள் இந்த இதழின் உள்ளடக்கம் ஆகும்.

இலக்கிய விமர்சனத்தில் அதிக அக்கறை காட்டிய 'முழக்கம்' கால தாமதத்தைத் தவிர்க்க இயலாது போயினும், தொடர்ந்து பல சிரமங் களை எதிர்கொள்ள வேண்டியிருப்பினும், ஓய்ந்து நிற்காது வெளிவரும் என்று அதன் ஆசிரியர் கூறியபோதிலும், காலம் அதற்கும் முடிவு கட்டிவிட்டது.

# 36. சில புதிய முயற்சிகள்

தமிழ்நாட்டின் கலை, இலக்கியப் பத்திரிகை நிலைமைகளில் அதிருப்தி கொண்டு— உலக நாடுகளில் நிகழ்கிற முயற்சிகளையும் வளர்ச்சிகளையும் கவனித்து, அவைபோல் எல்லாம் தமிழில் இல்லையே என்று மன உளைச்சல் கொண்டு— தமிழிலும் சகல துறைகளிலும் புதுமைகள் படைக்க வேண்டும் என்று ஆசையும் உந்துதலும் கொண்டு, அவ்வப்போது புதிய முயற்சிகள் சிறு பத்திரிகைத் துறையில் மேற்கொள் ளப்படுவதும் இயல்பாக இருந்து வருகிறது.

இந்த விதமான முயற்சிகளில் இரண்டு— 'காற்று', 'தேடல்' என்பவை ஆகும்.

'சென்றிடுவீர் எட்டுத் திக்கும்— கலைச் செல்வங்கள் யாவும்— கொணர்ந்திங்கு சேர்ப்பீர் !' என்ற பாரதி வாக்கை குறிக்கோளாகக் கொண்டு 'காற்று' கோயம்புத்தூரில் தோன்றியது. நாடகக் கலையில் ஆர்வம் மிகக் கொண்டுள்ள கவிஞர் புவியரசு அதன் ஆசிரியர்.

'யுகோஸ்லாவியக் கவிஞர் 'வாஸ்கோ பாப்பா' பற்றிய அறிமுகமும், அவரது கவிதைகள் சிலவும்; யூஜின் அயனெஸ்கோ அறிமுகமும், அவரது நாடகமான 'தலைவர்' தமிழாக்கமும் முதல் இதழில் தரப்பட்டிருந் தன. சத்யஜித் ரேயின் திரைப்படக் கலை சம்பந்தமான சிந்தனைகள் ('அவர் பிலிம்ஸ், தேர் பிலிம்ஸ்' என்ற நூலிலிருந்து எடுக்கப் பெற்றவை) 'தேடல்' எனும் தலைப்பில் இடம் பெற்றன. சி. ஆர். ரவீந்திரன் கதை 'ஜனனம்' உண்டு.

புவியரசு எழுதியிருந்தார்—

'சில புதிய முயற்சிகள்— பத்திரிகை, நாடகம், சினிமா முதலிய துறைகளில்.

கனவுகள் நனவாகும் காலம் இது. மனதில் உறுதியுண்டு. கருத் தில் தெளிவுண்டு. வறுமை ஒன்று தவிர வேறு எந்தக் குறையும் இல்லை. அதையும் வெல்ல வேண்டும். வெல்வோம்.

'காற்று' முதல் மடலில் வெளிநாட்டுச் சரக்கு அதிகம் என்று நீங்கள் கருதலாம். அது அப்படித்தான் இருக்கும். அதற்கு இணையான

மிகச் சிறந்த படைப்புகளை நண்பர்கள் அனுப்பினால் மகிழ்ச்சியோடு அதற்கு முதலிடம் தருகிறோம்.

இது பாட்டாளிகள் ஏடல்ல. படிப்பாளிகளுக்கான ஏடு. படைப்பாளி களின் பாலம்.

மனித வரலாற்றில் தத்துவப் போராட்டம் நிலையானது. இது, அக, புற வயப் பார்வை முரண்பாடுகளின் மோதல்களை அடிப்படையாகக் கொண்டது.

சர்வதேச ரீதியாகத் தொடர்ந்து ஏற்படும் அரசியல், பொருளாதார, கலாச்சார மாற்றங்கள் ஒவ்வொரு அமைப்பையும் பாதிக்கிறது.

மிக நீண்ட இலக்கியப் பாரம்பரியமுள்ள தமிழ் அஞ்சி, ஒடுங்கி தாக்கங்களிலிருந்து தப்பி ஒளிந்து, ராஜா ராணிக் காலத்துக் கனவுல கிலே வாழ்ந்துவிட முயற்சி செய்து கொண்டிருக்கிறது. இது முடியாத காரியம்.

அங்கங்கே பல உலகத் தாக்கங்களை ஏற்படுத்த வேண்டியது புத்தி யுள்ள தமிழனின் கடமை.

இந்த நோக்கத்தோடு புதிய காற்று வீசுகிறது. உலக இலக்கியங்க ளையும், தரமான சுய படைப்புகளையும் அறிமுகம் செய்யும் களமாக இது அமையும்' ( புவியரசு ).

'காற்று' தரமான நாடகம், கவிதை, கதைகளைப் பிரசுரித்தது. 'இரண்டு மாதங்களுக்கு ஒரு முறை' வெளிவரும் என்று திட்டமிடப் பட்டிருந்த போதிலும், அப்படி அது வரவில்லை. எப்பவாவதுதான் வந்தது. வருடத்துக்கு ஒன்று அல்லது இரண்டு இதழ் என்ற ரீதியில் இதுவரை சில இதழ்கள் வந்துள்ளன.

'தேடல்' திருநெல்வேலியில் தொடங்கப்பட்டது. ஆசிரியர்– ஜோதி விநாயகம். இவர் விமர்சன உணர்வை வலியுறுத்தும் நோக்குடன் இந்த இதழை ஆரம்பித்தார்.

'ஆங்கிலத்திலும் பிறமொழி இலக்கியங்களிலும் வந்திருக்கிற மரபுத் தொடர்ச்சியான நூல்களைப் பற்றி பலகோணங்களிலும் நின்று பார்க் கிற கட்டுரைகளும், அவை தொகுக்கப்பட்ட புத்தகங்களும் உண்டு. ஷேக்ஸ்பியர் பற்றின விமர்சனப் புத்தகங்களின் பட்டியலே ஒரு கல்லூரி நூலக விபரப் பட்டியலில் ஏழு பக்கம் வருகிறது. இங்கு நாம் தேர்ந் தெடுத்துக் குறிப்பிடுகிற புதுமைப்பித்தன், மௌனி, கு. ப. ரா; ந. பிச்ச மூர்த்தி, க. நா. சு., சி. சு. செல்லப்பா, லா. ச. ரா. தி. ஜானகிராமன்,

ஜெயகாந்தன், சுந்தர ராமசாமி குறித்தே சரியான விமர்சனம் கிடையாது. இலக்கியக் கோட்பாடுகள் பற்றி அந்நிய நாட்டு இலக்கியங்களில் எவ் வளவோ விவாதங்கள் நடந்திருக்கின்றன. இங்கு எழுதுகிறவர்களுக்கே இலக்கியக் கோட்பாடுகள் வேண்டுமென்று தோன்றவில்லை (இலக்கியக் கோட்பாடுகளை வைத்துக் கொண்டு எழுதப் போவதில்லை—அது வேறு விஷயம்). தமிழாசிரியர்கள் எழுதி வந்திருப்பவை எவையும் கருத்தில் கொள்ளும்படியாய் இல்லை. தமிழாசிரியராய் இருப்பதற்கும் இதற்கும் சம்பந்தம் இல்லை. வெளிநாட்டுப் பேராசிரியர்கள் யாரும் பேராசிரியர் என்கிற தகுதி பற்றி இல்லாது அவர்களுடைய இலக்கியப் பிரக்ஞையா லேயே இலக்கிய உலகில் இடம் பெறுகின்றனர். அவர்களுடைய இலக் கியப் பிரக்ஞையாலேயே அவர்கள் நல்லாசிரியர்களாகவும் இருந்தனர். இலக்கியக் கோட்பாடுகளும் நிர்த்தாட்சண்யமான விமர்சனங்களும் இலக்கிய உலகில் நிறையப் பேருடைய ஸ்தானங்களை நிர்ணயிக்கும். எழுதுவதெல்லாம் இலக்கியம் என்ற சுத்த சமரச சன்மார்க்க அபேதவா தம் மறையும். பொய்யான ஸ்தானங்களையும் அது பற்றிய மயக்கங்களை யும் போக்கும்.'

'தேடல்' விமர்சனக் கட்டுரைகளை ஓரளவும், சுய படைப்புகளை மிகுதியாகவும் வெளியிட்டுள்ளது. கலாப்ரியா, கல்யாண்ஜி, உமாபதி, விக்ரமாதித்யன் மற்றும் சிலரது கவிதைகள்; பூமணி, வண்ணதாசன், ஜோதிவிநாயகம் கதைகள்; சுந்தர ராமசாமி, நகுலன் கட்டுரைகள் பிரசுர மாயின. வண்ணநிலவன் ஒரு நாடகமும், கலாப்ரியா கவிதைகள் பற்றி விமர்சனமும் எழுதினார். கூத்தாட்டத்தில் 'பொண் வேஷம்' என்ற விஷயம் பற்றி ராஜநாராயணன் சுவாரஸ்யமான ஒரு கட்டுரை எழுதியுள்ளார்.

'தேடல்' 1978—ல் இரண்டு இதழ்களும் 1983—ல் இரண்டு இதழ்க ளும் வந்துள்ளன.

# 37. விடியல்

''விடியல்' விமர்சன நோக்கங்கொண்ட கலை இலக்கிய இதழாக வெளிவரும். விடியல் பிரசுரிக்கும் ஒவ்வொரு எழுத்தும் கடுமையான விமர்சனத்தை எதிர்நோக்கியே அச்சேறுகின்றன.

சுத்த இலக்கியம் படைக்கிறவர்கள், மக்கள் இலக்கியம் என்ற பெயரில் தவறான கண்ணோட்டத்துடன் எழுதுகிறவர்கள் ஆகியோர் கடுமையாக விமர்சிக்கப்பட்டால் புரட்சிகர இலக்கியத்தின் இலக்கு தெளிவாகும் என நம்புகிறோம். வி டி ய ல் இதைத் தொடர்ந்து செய்ய இருக்கிறது.

தத்துவக் கண்ணோட்டத்துடன் ஒரு விடியலுக்கான பயணத்தை மேற்கொண்டவர்களுக்கு இந்த இதழ் ஒரு கலை இலக்கியப் பாதையை அமைத்துத் தர முயலும். சுரண்டலமைப்பைத் தகர்க்கும் வல்லமை பெற்ற புரட்சிகரத் தத்துவத்திற்கு விடியல் கடமைப்பட்டுள்ளது.'

இவ்வாறு அறிவித்துக் கொண்டு, 1975 ஜனவரியில் 'விடியல்' தனது புறப்பாட்டைத் துவக்கியது. மாதப் பத்திரிகையாக சில இதழ்கள் மாசிகையாக வந்த பிறகு, 1976–ல் 'மாதமிரு முறை' யாக வளர்ந்தது.

மாத இதழில் இன்குலாப், பரிணாமன், கங்கைகொண்டான் ஆகியோரின் கவிதைகளைக் கடுமையாக விமர்சித்துக் கட்டுரைகள் பிரசுரமாயின. திரைப்படங்கள் பற்றிய விமர்சனங்களும் எழுதப்பட்டன. மற்றும் கதைகள், கவிதைகளும் இடம்பெற்றன.

கவிஞர்கள் பற்றிய தீவிரமான விமர்சனங்களை வெளியிடுவதன் காரணத்தையும் ஒரு இதழில் 'விடியல்' குறிப்பிட்டது.

'ஒரு பக்கம் சீறுவதும், மறு பக்கம் குடை பிடிப்பதுமான போக்கினைக் கவிஞர்கள் கையாண்டால் அவர்களின் படைப்புகள், மண்ணினைக் கிழித்துக் கதிர்களைக் குலுங்கச் செய்யும் கோடிக்கணக்கானோருக்கும், பெருத்த எந்திர ஒலிகளிடையே தங்களது உழைப்பையும் தேய்த்துக் கொள்ளும் லட்சக்கணக்கானோருக்கும் துரோகம் செய்வதற்குத் தான் கைலாகு கொடுக்கும். இதில் நம் கவிஞர்கள் கவனமாய் இருக்க

வேண்டும். ஒரு புதிய ஜனநாயகப் புரட்சியில் நம்பிக்கை கொண்ட கவிஞர்கள் மட்டுமே தெளிவாக எழுத முடியும்.'

ஆனாலும் இத்தகைய விமர்சனங்கள் தொடர்ந்து பிரசுரிக்கப்பட வில்லை.

1975 மே மாத இதழில் இலங்கைப் படைப்புகளுக்கு முதலிடம் கொடுக்கப்பட்டது. தெளிவத்தை ஜோசப்பின் 'காலங்கள் சாவதில்லை' என்ற நாவல் விரிவாக விமர்சிக்கப்பட்டிருந்தது.

விடியல் ஐந்தாவது இதழ் ( ஜனவரி 1976 ) முதல், மாதமிருமுறை யானதுடன், தனது போக்கையும் மாற்றிக் கொண்டது. 'துணுக்குகளைக் கோத்தாற் போன்ற ஒரு வித்தியாசமான பாணியில் விஷயங்களைச் சொல்ல முயன்றிருக்கிறோம்' என்று இந்தப் போக்கைப் பற்றிய சிறு குறிப்பும் காணப்பட்டது.

பல நாடுகள் பற்றிய தகவல்கள், குறிப்புகள், வெளிநாட்டுத் தலை வர்கள் பற்றிய சிறு கட்டுரைகள் முதலியன பிரசுரமாயின. சிறு சிறு கவிதைகளும் இடம் பெற்றன. தரமான படைப்புகள் கிடைப்பது சிரமமாக இருப்பதே இதற்குக் காரணமாகும் என்று அறிவிக்கப்பட்டது.

உள்நாட்டுச் செய்திகளைவிட வெளிநாட்டுச் செய்திகளே அதிகம் தரப்பட்டுள்ளன. 'வெளிநாட்டுச் செய்திகளுக்குள்ள தனி வரவேற்பு கவனத்தில் கொள்ளப்படுகிறது. விடியல் இந்த மண்ணில் நின்று கொண்டுதான் உலகைப் பார்க்க விரும்புகிறது என்பது இங்கு தெரிவிக் கப்படுகிறது' என்ற அறிவிப்பு எழுதவேண்டிய அவசியமும் விடியலுக்கு ஏற்பட்டது.

1976 ஏப்ரல் முதல் 'வி டி ய ல்' வாரப்பத்திரிகையாக மாற்றம் கொண்டது. அரசியல் குறிப்புகள், அயல்நாட்டு விஷயங்கள், கேள்வி–பதில் பகுதி, உருவக் கதை–இவற்றுடன் 'மாணவன்' எழுதிய 'குரல்கள்' என்ற தொடர் நாடகமும் வெளிவந்தது. கலை இலக்கிய விவகாரங்கள், விமர்சனங்கள் முதலியன இடம் பெறவில்லை. இது குறித்து வாசகர்கள் குரல் கொடுத்ததும் உண்டு.

டாக்டர் கோவூர் பற்றிய ஒரு இதழைத் தயாரித்தது ( இதழ்–16 ) விடியல். 'தீ மிதித்தல், அலகு குத்திக் கொள்ளுதல், உடலில் கொக்கி களை மாட்டிக் கொண்டு தொங்குகாவடி என 'கடவுளின் அருளால்' செய்யப்படும் காரியங்கள் யாவும் கடவுட் செயல் அல்ல என்பதை விஞ்ஞான பூர்வமாக டாக்டர் கோவூர் வெளிப்படுத்துகிறார். கோவூரும் அவரைச்

சார்ந்த பகுத்தறிவுவாதிகளும் மேற்கண்ட தெய்வீக (!) செயல்களை, கடவுள் இல்லை என்று முழக்கிக் கொண்டே செய்து காட்டி வெகு ஜனங்களிடையே நாத்திகப் பிரசாரத்தில் வெற்றி கண்டு வருகின்றனர். ஆவி, மறுஉலகு, பூர்வ ஜன்மம் போன்ற கட்டுக்கதைகளையும் இவர்கள் பொய்யாக்கி வருகிறார்கள்' என்று அறிமுகமும், மற்றும் சுவையான தகவல்களும் தரப்பட்டன.

சீனாவின் தலைவர் மாவோ எழுதிய கவிதைகள், விஞ்ஞானி பாவ்லோவ் பற்றிய கட்டுரை, சோவியத் ரஷ்யாவின் போக்கைக் குறை கூறும் விஷயங்கள், அமெரிக்காவின் செயல்களைக் கண்டிக்கும் கட்டுரைகள் விடியலில் பிரசுரமாயின.

விடியல் டாக்டர் கோவூரை ஆதரித்துக் கட்டுரையும் செய்தியும் வெளியிட்டதை எதிர்த்தும் பாராட்டியும் கடிதங்கள் நிறைய வந்ததாக அறிவிக்கப்பட்டுள்ளது. தொடர்ந்து பல கடிதங்கள் வெளியிடப்பட்டன.

அடுத்து, 'செக்ஸிலிருந்து மார்க்ஸியம் நோக்கி...' ( வெண்மணி ராஜன் எழுதியது ) என்ற கதை ஒன்று வெளிவந்தது. அதுவும் சூடான விமர்சனங்களைக் கிளப்பி விட்டது.

விடியலின் 25 வது இதழ் (25–7–76 ) முக்கியமானது. அதில் விரிவான சுய விமர்சனம் ஒன்றை அது வெளியிட்டது.

அதன் சில பகுதிகள் பின்வருமாறு :

'பொதுவாக விடியல் இதழ்கள் நெடுக ஏகாதிபத்திய எதிர்ப்புக் கட்டுரைகள்தான் இடம் பெற்றிருக்கின்றன. விடியல் தனக்குப் பிரதான எதிரியாக வரித்துக் கொண்டிருக்கிற நிலப்பிரபுத்துவத்தைக் கருவறுப்ப தற்கு சொற்ப முயற்சியே எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது. நிலப்பிரபுத் துவத்தை மூர்க்கத்தனமாக எதிர்க்கும் கதைகள், கவிதைகள், கட்டுரை கள் ஆகியவை வெளியாவதற்கான வாய்ப்புக்களை அகலப்படுத்தியிருக்க வேண்டும்.

விடியலில் மிக அழுத்தமாகப் பதிந்துவிட்ட மூன்று குறைகள்... அவசியமாகக் குறிப்பிட வேண்டிய அவசியத்தைத் தந்திருக்கின்றன.

1. 7 வது இதழில் வெளியான 'மாட்டு வண்டிகள்' என்ற கட்டுரை.

2. 10 வது இதழில் வெளியான கோவூரைப் பற்றிய பாராட்டுரை. மற்றும் அவற்றைத் தொடர்ந்து 19, 20 இதழ்களில் பிரசுரிக்கப்பட்ட 'கோவூர் பொருள்முதல் வாதியா ?' என்ற கடிதத் தொடர்.

3. 19 வது இதழில் வெளியான 'செக்ஸிலிருந்து மார்க்ஸியம் நோக்கி' என்னும் சிறுகதை.

1. 'இரயில்களைவிட அதிக பாரம் இழுக்கும் மாட்டு வண்டிகள்' என்ற கட்டுரை அடிப்படையிலேயே தவறான கண்ணோட்டத்துடன் எழுதப்பட்டுள்ளது.

'மாட்டு வண்டிகள் உணவு தானியங்களை எடுத்துச் செல்லும் கிராமப்புறங்களின் பிரதான போக்குவரத்துச் சாதனமாக இருப்பதால்—இந்தியா ஒரு நிலப்பிரபுத்துவ சமுதாய அமைப்புடைய நாடு' என்கிற தொனியில் கட்டுரை எழுதப்பட்டுள்ளது.

சமுதாய அமைப்பு எத்தன்மை வாய்ந்தவை என்பதை இங்கு நிலவும் உற்பத்தி உறவுகளை வைத்துத்தான் தீர்மானிக்க இயலும். ஆனால் மேற்படி கட்டுரை உற்பத்திக் கருவிகளை வைத்து சமுதாயத்தை தீர்மானிக்கும் ஒரு கொச்சைத்தனமான கண்ணோட்டத்தினைத் தந்திருக் கிறது. அடிப்படையையே தகர்க்கும் இத்தவறு விடியலில் இடம்பெற்றது மிகத் தவறு. இதை விடியல் உணருகிறது.

2. 'கோவூரின் சாதனைகள் பொருள் முதல் வாதத்திற்கு வலுவூட்டு கிறது என்பதால் டாக்டர் கோவூரை நாம் பாராட்டக் கடன்பட்டிருக்கி றோம்' என்று 16 வது இதழில் குறிப்பிட்டிருக்கிறோம்.

விமர்சனத்துடன் கோவூரையும் நாம் பார்த்திருக்க வேண்டும். கருத்தை—மனப்பான்மையை மாற்றினால் சமுதாயத்தை மாற்றிவிடலாம் என்று நம்புகிற வெறும் நாத்திகரான கோவூர்மீது விடியல் தனது விமர் சனத்தை வைக்கத் தவறிவிட்டது உற்பத்தி உறவுகளை ஒரு புரட்சியின் மூலம் மாற்றியமைத்து பாட்டாளி வர்க்க சர்வாதிகாரத்தைக் கொண்டு வரப் பாடுபடும் ஒரு மார்க்ஸிஸ்டாக கோவூர் தன்னை வளர்த்துக் கொள்ள வேண்டும் என்று ஆணித்தரமாக கூறக்கூட முகமில்லாமல் போய்விட்டது வருத்தத்திற்குரியது.

3. 19வது இதழில் 'செக்ஸிலிருந்து மார்க்சியம் நோக்கி...' என்ற வெண்மணி ராஜனின் சிறுகதை வெளியிடப்பட்டிருந்தது.

சுதந்திரமான செக்ஸ் உறவு என்பதில் ஒரு வரையற்று ஃப்ராய்டிச சூழலுக்குள் சிக்கிக் கொண்ட அந்த மார்க்ஸிய விரோதக் கதையை வெளியிட்டதில் விடியல் தலை குனிகிறது.

விடியல் தனது பயணத்தில் நிகழ்ந்த இத்தகைய வழுக்கல்களை உணர்ந்து கொள்கிறது. அவை இனி நேராது பார்த்துக் கொள்ள வேண்டும் என்று விழிப்புணர்வினைக் கைக்கொள்கிறது.'

இதை அடுத்து எழுதப்பட்ட அறிவிப்பு விசேஷ முக்கியத்துவம் வாய்ந்தது :

'விடியல் கடந்த ஆறே மாதங்களில் அனைத்து அணிகளின் ஊடேயும் ஏற்படுத்தியுள்ள சலசலப்பு கொஞ்சநஞ்சமல்ல. திரிபுவாதிகளும் புரட்டல்வாதிகளும் விடியலின் உதயக் கதிர்களைக் கண்டு கதிகலங்கி போனார்கள். அவர்கள் விடியலைத் தொலைத்தே தீர்வது என்று விசேஷ அக்கறையுடன் வரிந்து கட்டிக்கொண்டு வேலை செய்தார்கள்—விடியல் தான் ஏற்றுக் கொண்ட தத்துவத்தின் பலம் கொண்டு இவற்றையெல் லாம் பொடிபடச் செய்து புறந்தள்ளியது.

இருபத்தைந்து இதழ்களைக் கொண்டு வந்திட்ட பெருமிதம் நம் தலைகளை நிமிர்த்தும் இந்த வேளையில் அதற்குக் காரணமான தோழர்கள் தன் நன்றியைப் பெற்றுக்கொள்கிறார்கள்.

ஊக்குவித்தும், உதவி செய்தும், போற்றியும், புகழ்பாடியும் விடிய லைப் பேணிய அனைத்துத் தோழமை நெஞ்சங்களும், குறிப்பாக, கடல் கடந்த ஈழநாட்டின் தோழர்களும் இங்கு நினைவுகூரப்படுகிறார்கள்.

ஈழநாட்டின் தோழர்கள் இயக்கத்தைப் பற்றி தத்துவார்த்த ரீதியில் கடிதங்களில் விசாரித்திருந்தார்கள். இயக்கத்தோடு, அதாவது எந்த இயக்கத்தோடும் தொடர்பு வைத்திராத விடியல் அவற்றிற்குப் பதிலளிக்க முடியவில்லை. ஆனால் அரசின் கண்களுக்கு நாம் முக்கியப் புள்ளி களாகிவிட்டோம் என்று தெரிந்தது. விடியலின் ஒவ்வொரு எழுத்தும் கண்ணில் விளக்கெண்ணெய் விட்டுக்கொண்டு கண்காணிக்கப்பட்டது— விளைவு? கடிதங்கள் உடைக்கப்பட்டன—படுகின்றன. நமது தோழர்களுக் கிடையில் பணம் அனுப்பி உதவும் அவசியம் உணரப்படாததாயிருக்கிறது. அப்படித் தப்பித் தவறி சந்தாவென, நன்கொடையென வந்த மணியார் டர்கள் 'No such address' என்று காரணங் காட்டி (!) திருப்பி அனுப்பி வைக்கப்பட்டன.

இப்படிப்பட்ட நிலைகளுடன் மாரடித்துக்கொண்டு, அச்சகக் கூலி; காகிதம், பிளாக்குகள் என செலவழித்துக்கொண்டு, தொடர்ந்து பத்திரி கையைக் கொண்டுவர சாத்தியமில்லாமல் இருக்கிறது. எனவே

இருபத்தைந்தாவது நிறைவு இதழான இந்த இதழுடன் விடியல் தற்காலிகமாக நிறுத்தப்படுகிறது. இதனைத் தொடர்ந்து கொண்டு வருவது நீங்கள் தீர்மானிக்கிற விஷயம்.

அப்படியானால் இதனைத் தொடர்ந்துகொண்டு வரும் உத்தேசம் அல்லது அக்கறை உங்கள் தரப்பில் எப்படி என்று நீங்கள் கேட்பீர்களானால் தனது 'நியூரைன்லாந்து கெஸட்' பத்திரிகையை நிறுத்த நேர்ந்த பொழுது மாமேதை மார்க்ஸ் குறிப்பிட்டதை மீண்டும் சொல்வது மிகப் பொருந்தும் :

'எங்களது கருத்தை யாரும் அழிக்க முடியாது. நாங்கள் மீண்டும் ஒரு போர்க் குதிரையின் மீது ஏறி வருவோம். விடைபெற்றுக் கொள்கிறோம். ஆனால் கடைசி முறையாக அல்ல.'

25 வது இதழின் கடைசிப் பக்கத்தில் கடைசி விஷயமாக ஒரு சீனக் கவிதை அச்சிடப்பட்டது. அதன் தலைப்பு : 'நன்றி ! போய் வருகிறோம்.'

கடைசி வரியும் இதுவேதான்–

சிறு பத்திரிகை வரலாற்றில் விடியலின் வரலாறு வித்தியாசமானது– தனி ரகமானது. இது மேலே சொல்லியுள்ள விவரங்களிலிருந்து புலனாகும்.

'விடியல்' 21–ஏ, குட்டி மேஸ்திரி தெரு, சென்னை–1 என்ற விலாசத்திலிருந்து வெளிவந்தது, அதன் ஆசிரியர் : கே. எம். வேணுகோபாலன்.

# 38. இடதுசாரிப் பத்திரிகைகள்

மார்க்ஸிய நோக்குடன், சமூக யதார்த்த (சோஷலிஸ்ட் ரியலிசம்) எழுத்து முயற்சிகளை வளர்ப்பதற்கென்று பலப்பல சிறு பத்திரிகைகள் தோன்றி மறைந்திருக்கின்றன.

அவற்றில் பெரும்பாலானவை உருப்படியாக எதையும் செய்து காட்டியதில்லை. 'தாமரை', 'செம்மலர்', வழியிலே நடக்க முயன்ற இப் பத்திரிகைகள் சுயமான சிந்தனைத் திறனோ செயலாற்றலோ கொண்டிருக்கவில்லை. 'சமூக யதார்த்த'ப் பாணிக் கதைகளையும் புதுக் கவிதைகளையும், 'அரைத்த மாவையே அரைத்தது போன்ற' ரசமான விஷயங்களையும் பிரசுரித்து அவை பக்கங்களை நிரப்பின.

ஆகவே, அந்த விதமான பத்திரிகைகள் பலவும் 'ஆசை பற்றி' ஆரம்பிக்கப்பட்ட ஆர்வ முயற்சிகள் என்றே கணக்கிடப்படல் வேண்டும்.

இந்த ரகச் சிறு பத்திரிகைகள் சென்னையில் மட்டுமின்றி, தமிழகத்தின் பல்வேறு மாவட்டங்களிலும் தோன்றின. சில முயற்சிகள் ஒரு வருடம்–ஒன்றரை வருடம் என்ற கால அளவுக்கு உயிருடன் இருந்திருக்கின்றன.

இவற்றில் வெளியான கதைகள் 'சோஷலிஸ்ட் ரியலிச' மரபுப்படி அமைந்திருந்தனவே தவிர ஆழம், கனம், புதுமை, சமூகப் பிரச்னைகளைக் கூர்ந்து கவனித்து எழுத்தில் பிரதிபலித்தல் முதலிய தன்மைகள் கொண்ட படைப்புகளாக உருவானதில்லை.

எனவே, இந்தப் பத்திரிகைகள் புதிய தரமான படைப்புகளை அறிமுகப்படுத்தவோ, திறமையுள்ள புதிய எழுத்தாளர்களைக் கண்டு ஆதரித்து, அவர்களது வளர்ச்சிக்குத் தளம் அமைத்துக் கொடுக்கவோ உதவியதில்லை என்றே சொல்லவேண்டும்.

'தாமரை', 'செம்மலர்' ஆகிய தரமான முற்போக்கு இலக்கியப் பத்திரிகைகளில் எழுதிவந்த எழுத்தாளர்களின் படைப்புகள் இப்புதிய சிறு பத்திரிகைகளில் வரவுமில்லை. புதிய இளம் எழுத்தாளர்களின் எழுத்து முயற்சிகளை வரவேற்பதாகச் சொல்லிக் கொண்டே பத்திரிகைகள்

சாரமற்ற எழுத்துக்களைப் பிரசுரிக்க வேண்டிய நிலையிலேயே இருந்தன. கவனிப்புப் பெற்றிருந்த முற்போக்கு இலக்கியவாதிகளின் கதை, கவிதை கட்டுரைகள் அபூர்வமாக எப்போதாவது இச் சிற்றேடுகளில் தலைகாட்டுவது நடைமுறையாக இருந்தது.

1970 களில் தோன்றிய முற்போக்கு இலக்கியப் பத்திரிகைகளில் 'ஜீவா' எனும் திங்கள் இதழும் ஒன்று. இதன் ஆசிரியர் ஏ. விஜயன். சிறப்பாசிரியர் கவிஞர் செவ்வியன்.

கம்யூனிஸ்டுத் தலைவர் ஜீவாவின் ( ப. ஜீவானந்தம் ) நினைவை கவுரவிக்கும் வகையிலும், அவருடைய கொள்கையைப் பரப்பும் நோக்குடனும் இந்தப் பத்திரிகை வெளிவந்தது. ஜீவா பற்றிய கட்டுரைகள், குறிப்புகள் தொடர்ந்து வெளியிடப்பட்டன. வழக்கமான பாணியில் கவிதைகள் மிகுதியாக இடம்பெற்றன. கவிஞர் திருச்சி தியாகராசன் தொடர்ந்து கவிதைகள் எழுதியதோடு, 'பழந்தமிழ் இலக்கியத்தில் புரட்சிக் கருத்துக்கள்' என்றொரு கட்டுரை வரிசையும் எழுதி வந்தார். 'பாரதிக்குப் பின் கவிஞர் வளர்ச்சி' என்ற தலைப்பில் விமர்சன அறிமுகம் அவ்வப்போது வெளியாயிற்று. இது மேலோட்டமான மதிப்பீடாக இருந்ததே தவிர, ஆழ்ந்த விமர்சனமாகவோ, முறையான ஆய்வாகவோ அமைந்ததில்லை. சினிமா விமர்சனக் கட்டுரைகளை டி. எஸ். ரவீந்திர தாஸ் எழுதினார். 'கேள்வி பதில்' பகுதியை தா. பாண்டியன் கவனித்துக் கொண்டார்.

'பாட்டாளி தோழன்' என்றொரு பத்திரிகை சென்னையிலிருந்து பிரசுரமாயிற்று. ஆசிரியர்–டி. ஞானையா. ரசமான தகவல் துணுக்குகளை அதிகம் வெளியிட்ட இந்த இதழ் விறுவிறுப்பான கட்டுரைகளைப் பிரசுரிப்பதில் ஆர்வம் கொண்டிருந்தது. 'நக்சலைட்டின் சிறை அனுபவங்கள்', 'இந்திய சுதந்திரம்–மறைக்கப்பட்ட வரலாறு' போன்றவை உதாரணங்கள். வழக்கமான கதைகள், கவிதைகளும் உண்டு.

தேவகோட்டை சமூகச் சிந்தனை இலக்கியக் குழு 'நாம்' என்ற மாத இதழை நடத்தியது. மக்களுக்குச் சிந்தனை விழிப்பு ஏற்படுத்த வேண்டும் என்பது இதன் லட்சியமாக இருந்தது. அதன் நோக்கத்தை இவ்வரிகள் நன்கு எடுத்துக் கூறும் :

"இந்த முதலாளித்துவ அரசியலமைப்பை மாற்றினால் அல்லது இன்றைய படுமோசமான நிலைமை மாறாது என்பது விஞ்ஞானபூர்வ சமூகச் சிந்தனையாளர் முடிவு. ஆகவே, முதலாளித்துவப் பொருளாதார முறையை மாற்றி மக்கள் நலனுக்கான சோஷலிசப் பொருளாதார

முறையை நடைமுறைக்குக் கொண்டு வருவதற்கான அரசியல் சமுதாய மாற்றங்கள் ஏற்பட வேண்டும். அதற்கு நாட்டில் உள்ள இடதுசாரி— ஜன நாயக அணியினர் ஒன்றுபட்டுச் செயலில் இறங்க வேண்டும். இடதுசாரி— ஜனநாயக அணிகளிலுள்ள கலாச்சாரப் பகுதிகளில் பத்திரிகைகள் இந்தச் செய்தியை முன்னுக்குக் கொண்டுவந்து முழக்க வேண்டும். நாட்டு நலனும், மக்கள் நலனும் நாசகரமாக வீழ்ச்சியுறுவதைத் தடுத்து, நல் வாழ்வைச் சமைக்க விஞ்ஞானபூர்வ சமூகச் சிந்தனையாளர்கள்—ஜன நாயகவாதிகள் அனைவரும் செயல்படுக !'' ( 'நாம்' ).

இதே நோக்குடன் கோவையிலிருந்து 'துளிகள்' வெளிவந்தது, இளம் எழுத்தாளர்களை ஊக்குவித்தது. முற்போக்கு எண்ணங்களை எழுத்தாக்கும் தோழர்கள் சமுதாயப் பார்வையோடு கவிதைகளும், கதைகளும் எழுதி இப்பத்திரிகைக்கு உயிரூட்டி வளர்த்தார்கள். பாராட்டத்தகுந்த விதத்தில் 'துளிகள்' ஒரு ஆண்டு மலரைத் தயாரித்தது.

கோவையிலிருந்து பிரசுரமான மற்றொரு இதழ், 'இளைய கரங்கள்'. 'சமுதாய உறவுகள் பொருளாதாரத்தால் நிர்ணயிக்கப்படுவதால் வளர்ச்சி சிதைகிறது. இக்குறையை அறிவின் வளர்ச்சி ஒன்றாலேயே வெல்ல முடியும். அவ்வறிவினைப் பெற முயலும் எண்ணமே இளையகரங்களின் செயல்திட்டம். மனிதன் தான் படைத்த பணத்திற்குத் தானே அடிமையா னால் மானிடத்தின் அழிவு தொடங்குகிறது என்று பொருள். அதைக் களைந்து புதிய பண்பாட்டு வளர்ச்சிக்கு வித்திட இளையோர் உலகம் தயாராக வேண்டும். கல்வி, சிந்தனை செயல்—இவை நமது பாதையாகட் டும்' என்று அது வலியுறுத்தியது. இந்த அடிப்படையில் கட்டுரைகளையும் கதைகளையும் தயாரித்து வெளியிட்டது.

சேலத்திலிருந்து வந்த 'ஜன்னல் பார்வை' என்ற இதழும் அறிவு விழிப்பு ஊட்டக்கூடிய சிந்தனைக் கட்டுரைகளை வெளியிட்டது. இதில் த. ராசு எழுதிய கட்டுரைகள் சிந்திக்கத் தெரிந்தவர்களுக்கு நல்ல விருந் தாக அமைந்திருந்தன. மகாகவி பாரதியாரின் வாழ்க்கைச் சித்திரம் திரைப்படமாகத் தயாரிக்கப்படும் என்ற செய்தியை ஆதாரமாக்கி த. ராசு வளர்த்திருந்த 'கமான் ஜெயகாந்தன் ! கமான் பாரதி !' என்ற சிந்தனையும், மற்றும் 'மதுவிலக்கு' எனும் கட்டுரையும் அவரது தனித்த பார்வையையும் சிந்தனை வேகத்தையும் புலப்படுத்தின.

( தேனி ) அல்லிநகரம் பொன் விஜயன் 'புதிய நம்பிக்கை' என்ற மாத இதழைப் பிரசுரித்தார். மிகுந்த சிரமங்களோடு, முற்போக்கு இலக்கியப்

பத்திரிகையை நல்லமுறையில் நடத்த வேண்டும் என அவருக்கு இருந்த ஆர்வம் 'புதிய நம்பிக்கை' யின் இதழ்களில் பிரதிபலித்தது. ஆயினும் தரமான எழுத்தாளர்களின் ஒத்துழைப்பு அவருக்கு அதிகம் கிட்ட வில்லை என்பதையும் ஒவ்வொரு இதழும் காட்டியது. 'புதிய நம்பிக்கை' யின் சிறப்பு அம்சங்களில் ஒன்றாக விளங்கியது, பெயர் பெற்ற படைப் பாளிகளைப் பேட்டி கண்டு, 'கண்டோம், கேட்டோம், சொல்கிறோம்' என்ற பகுதியாக வெளியிட்டது. அசோமித்திரன், நீல. பத்மநாபன், வண்ணநிலவன், வல்லிக்கண்ணன், இலங்கை எழுத்தாளர் டானியேல் ஆகியோரின் பேட்டிகள் முக்கியமானவை.

கும்பகோணம் வே. மு. பொதியவெற்யன் 'முனைவன்' என்ற காலாண்டு இதழை வெளியிட்டார். முதலில் இது இதழியல் இதழாகத் தயாரிக்கப்பட்டது. பின்னர் முனைவன் ஒவ்வொரு இதழும் ஒவ்வொரு மாதிரி உருவாக்கப்பட்டது.

மொத்தத்தில், சமுதாயப் பார்வை கொண்ட முற்போக்கு இலக்கிய ஏடு ஆகவே அது வெளிவந்தது. புத்தக மதிப்புரைப் பகுதி இதழ் தோறும் இடம்பெற்றது. இலங்கையில் நிகழ்ந்த இனவெறிப் படுகொலை பற்றி இதர பத்திரிகைகள் வெளியிடாத தன்மையில் கருத்துக்களையும் கட்டுரைகளையும் பிரசுரித்துள்ளது. இதன் 11–ம் இதழில் கோ. கேசவன் 'சிற்றிலக்கியங்கள் சில குறிப்புகள்' சம்பந்தமாக எழுதிய முன்னுரை, பேராசிரியர் அ. மார்க்ஸ் எழுதிய 'பாரதியும் பகவத்கீதையும்' என்ற ஆய்வுரை, மற்றும் கனமான சிந்தனைக் கட்டுரைகள் இடம் பெற்றிருந்தன.

'இது நாள் வரையில்
பாதம் மிதியாத் தளங்களின் மீதும்
கன்னிச் சுவடுகள் பதிப்போம்–இனி
எதிர்வரு நாளில்
பதிந்து பதிந்தவை பாதங்களாகப்
புதுயுகத் தடங்கள் விதிப்போம் !'

என்ற வரிகளை லட்சிய முழக்கமாகக் கொண்டுள்ள 'முனைவன்' ஒவ்வொரு இதழும் நீண்ட கால இடைவெளிகளோடுதான் வெளி வந்திருக்கிறது.

குறிப்பிட்ட ஒரு வட்டாரத்தில் செய்தி, கலாச்சார ஏடாக விளங்கி, மக்களின் கலை, அரசியல், சமூக உணர்வு மட்டத்தை உயர்த்தவேண்டும் என்ற நோக்குடன் சில முற்போக்கு இதழ்கள் செயலாற்றியுள்ளன.

மதுரையிலிருந்து வெளிவந்த 'தடம்' மாத இதழ் இத்தன்மையது. வேடசந்தூர் வட்டாரத்தின் செய்தி, கலாச்சார ஏடாகத் தடம் இயங்கியது. கிராம மக்களின் பிரச்னைகளை வெளிப்படுத்துவது; கிராமிய இலக்கியங்களை, கலையைக் கண்டெடுத்துப் பரப்புவது; மறைந்து கிடக்கும் எழுத்தாளர் களைக் கண்டெடுத்து, அறிமுகப்படுத்தி வளர்ப்பது; புதிய எழுத்தாளர் களை உருவாக்குவது—இவற்றையும் தன் நோக்கங்களாகக் கொண்டிருந் தது தடம்.

வேடசந்தூர் வட்டாரத்தில் நடைபெற்ற விவசாயிகள், தொழிலாளர் கள் போராட்டங்கள் பற்றிய கட்டுரைகள் மற்றும் விறுவிறுப்பான கட்டு ரைகள், கவிதைகள் தடம் இதழ்களில் பிரசுரம் பெற்றன. அவ்வட்டாரத் தில் வழங்கி வந்த பழம் பாடல்களை, நாட்டுப் பாடல்களை— சேகரித்து இதழ்தோறும் வெளியிட்டது.

அட்டைப் படங்களை வித்தியாசமான முறையில் தடம் அச்சிட்டு வந்தது. அது தயாரித்து அளித்த 'சுதந்திர தின மலரும்' வித்தியாச மானதாகவே இருந்தது.

"சுதந்திர தினத்தைப் பற்றிய எங்கள் அறிவின் அளவைக் கொட்டி அளப்பதைக் காட்டிலும் கிராம மக்களின் அனுபவங்களை வெளியிடு வோம் என்று அவர்களை அணுகினோம்.

அப்புறம்தான் தெரிந்தது— முதலில் அவர்கள் சுதந்திரம் என்ற ஒன்றைப் பற்றிக் கவலைப்படுவதில்லை என்பதும், அந்த நிலையில் அவர்கள் இல்லை என்பதும்.

அப்படி இருக்க போலித்தனமாக சுதந்திர தின மலர் என்று தாம் தூம் என்று நாங்களே எழுதிக் குவிக்கவும் விரும்பவில்லை.

கிடைத்தவற்றை மட்டுமே பிரசுரிக்கிறோம், இது சிறப்பிதழ் ஆனா லும் சரி, ஆகாவிட்டாலும் சரி என்று" ( தடம், ஆகஸ்ட்—1981 ).

கிராமவாசிகள்— பலதரப்பட்டவர்கள்— சாதாரணர்களிடம் சுதந்திரம் பற்றிக் கருத்து சேகரித்து, 'சொதந்திரம்....அப்படீன்னா என்ன ?' என்று தலைப்பிட்டுப் பிரசுரித்துள்ளது 'தடம்'.

தடம் வெளியீட்டுக்குப் பொறுப்பேற்றிருந்த 'ஆசிரியர் குழுவினர்' பெயர் எதுவும் தரப்பட்டதில்லை.

மதுரையிலிருந்து வெளிவந்த மற்றுமொரு சிறு பத்திரிகை 'நிஜங்கள்'. ஆசிரியர் ஏ. மஹபூப் பாட்சா. இதுவும் தீவிர கதியிலேயே இயங்கியது.

சமூகத்தில் பல்வேறு துறைகளில் காணப்படும் ஊழல்களைச் சாடியது. பல்கலைக்கழகங்களின் சீர்கேடுகளை அம்பலப்படுத்தியது. கல்லூரிகளில் நிகழ்ந்த போராட்டங்கள் குறித்த உண்மை விவரங்களை விறுவிறுப்பான கட்டுரைகளாகப் பிரசுரித்தது.

உதாரணம் : திருச்சி ஜோசப் கல்லூரியில் நிகழ்ந்தவை பற்றி 'ஓ... வெள்ளையடிக்கப்பட்ட கல்லறைகளே !', 'காந்தி கிராமத்தில் பிராமணர்–மலையாளி லடாய்' (காந்தி கிராமம் பல்கலைக்கழகத்தில் நடந்தது பற்றி ), ' மதுரை பல்கலை (ளை)க் ` கழகம்'. . . இப்படிப் பலப் பல.

இன்குலாப், பாவண்ணன், வண்ணச் சிறகு முதலியவர்களின் கவிதைகள் தொடர்ந்து பிரசுரமாயின. கல்வித் துறையில் மண்டியுள்ள சீர்கேடுகள் மீது 'நிஜங்கள்' மிகுந்த வெளிச்சமிட்டு, உண்மைகளை எடுத்துக் காட்டியது.

இந்த ரீதியான பத்திரிகைகள் சில இப்போதும் வந்துகொண்டிருக் கின்றன.

கன்னியாகுமரி மாவட்டம், தக்கலையிலிருந்து 'குடிசை' வெளிவருகி றது. சமுதாயக் கல்விக்கான கிராமிய இயக்க வெளியீடு என்று அறி முகம் செய்து கொள்ளும் குடிசை பலவிதமான சமுதாயப் போராட்டச் செய்திகளுக்கும் முக்கியத்துவம் தருகிறது. பல மட்டங்களிலும் நிகழ்ந்து வருகிற ஊழல்களை அம்பலப்படுத்தும் கட்டுரைகளைப் பிரசுரிக்கிறது. கருத்து பொதிந்த கார்ட்டூன்களையும், புதுக்கவிதைகளையும், ரசமான தகவல்களையும், நாட்டு நிலையைச் சுட்டிக் காட்டும் புள்ளி விவரங்களை யும் அச்சிடுகிறது.

சிறு பத்திரிகைகளின் நிலை குறித்து 'குடிசை' எழுதியுள்ள ஒரு குறிப்பு கவனத்துக்கு உரியதாகும். . .

'பேருந்துகளில் இறங்குவோரை இறங்கவிடாமலே முட்டி, மோதி, இடித்து ஏறும் மனித அவசரத்தில், புரட்டிய உடனே எறிவதற்கு அல்லா மல், சிறிது சிந்தனை செலுத்துவதற்கு வேண்டிய மக்கள் பிரச்னைக ளைத் தொடும் சிறு பத்திரிகைகளின் வாழ்நாள் நிலைக்குமா என்ற கேள்விகள் இப்போதும் இருந்து கொண்டிருக்கும்போது, சிறு பத்திரிகை களின் வளர்ச்சியும் பாராட்டத்தகும் விதத்தில் வளர்ந்து வருகிறது. இவைகளுக்கு ஒரு சிறிய வட்டம்தான் என்ற நிலை மாறி இவை பரந்த வட்டங்களிலும் கவனத்தை ஈர்க்கும்போது இவர்களின் வேலை களிலும் உற்சாகம் கிளம்பும்.' 'குடிசை' யும் நீடித்து நிலைக்கவில்லை.

# 39. ஆர்வத்தின் மலர்ச்சிகள்

பத்திரிகை நடத்த வேண்டும் என்ற ஆசை யாரை எப்படிப் பிடித்து ஆட்டும் என்று சொல்வதற்கில்லை. வணிக நோக்கில் நடத்தப்படுகிற பெரிய பத்திரிகைகளையும், ஏதேதோ நோக்கில் பிறப்பிக்கப்படுகிற சிறு பத்திரிகைகளையும் பார்த்துப் பார்த்து, நாமும் ஒரு பத்திரிகை நடத்தி னால் என்ன என்ற எண்ணம் அநேகரைச் செயலுக்குத் தூண்டுகிறது. தனியராகவோ, சிலர் சேர்ந்தோ பத்திரிகை நடத்தத் துணிந்து விடுகிறார்கள்.

இவர்களுடைய ஆர்வத்தின் விளைவுகள் பத்திரிகை உலகில் சாதனைகள் புரிந்துவிடுகின்றன என்று சொல்வதற்கில்லை. குறிப்பிட்டுப் 'பெயர் சொல்லும்படியாக' நினைவில் நிற்கும் தரத்தனவாக இத்தகைய பத்திரிகைகள் விளங்கின என்றும் கூறுவதற்கில்லை.

சிறு பத்திரிகைகள், இளம் எழுத்தாளர்களின் எழுத்துக்கள் அச் சேறுவதற்கு உதவுகிற அரங்கங்கள் ஆக உதவுகின்றன. வளர்ந்து கொண்டிருக்கும் எழுத்தாளர்களின் ஆக்கங்கள் பலவும் வெளிச்சத்தைக் காண்பதற்கு இவை தாராள இடம் தருகின்றன. சிறு பத்திரிகைகள் பரபரப்பான கருத்துக்களை, விறுவிறுப்பும் வேகமும் நிறைந்த—சர்ச்சைக் குரிய எண்ணங்களை—அவ்வப்போது ஆழமற்ற மேல்பரப்புச் சிந்தனைக ளாகத் தூவி வைக்கின்றன. அத்தகைய எழுத்துக்கள் வெளிவந்த சமயத்தில் அவை, சம்பந்தப்பட்டவர்களின் பேச்சுக்கும் கவனிப்புக்கும் உரியனவாக அமைகின்றன. அவ்வளவுதான்.

இந்த விதமான பத்திரிகைகள் எல்லாக் காலத்திலும் இருந்திருக் கின்றன. குதிரைப் பந்தயத்தில் 'அவையும் ஓடின' என்று சொல்லப் படுவது போல, இவையும் பத்திரிகை உலகில் வந்தன, நடந்தன, இருந் தன, மறைந்தன என்று கூறலாம்.

1930–40களில் 'பிரசண்ட விகடன்', 'அணிகலம்', 'திருமகள்', 'வசந் தம்', 50 களில் 'புதுமை', 'ரசிகன்', 60 களில் கன்னிக்கண்ணனின் 'உதயம்' என்று பலப்பல. சரியான 'பத்திரிகை வரலாறு' எழுதப் பெற்றால் பட்டியலில் சேரக்கூடிய சிறு பத்திரிகைகளின் பெயர்கள் அதிகமாகவே இருக்கும்.

1970களிலும் இப்படி அநேகம் பத்திரிகைகள் வந்துள்ளன. ஜயந்தி என்று ஒரு மாத இதழ். ஆசிரியர் : நெ. சி. சாம்பமூர்த்தி. 'ஆனந்த விகடன்' அளவில் வந்து கொண்டிருந்தது. 1972 செப்டம்பரில் தொடங்கி, 1977 ஏப்ரல் வரை 46 இதழ்கள் வெளிவந்துள்ளன. 'நடுநிலை இலக்கிய இதழ்' ஆன ஜயந்தியில் கவிதைகள், கதைகள், இலக்கியச் சிந்தனை கள், புத்தகத் திறனாய்வுக் கட்டுரைகள் பிரசுரமாயின.

ராஜபாளையம் எழுத்தாளர்கள் அனைவரும்– கொ. மா. கோதண்டம், மு. கு. ஜகந்நாத ராஜா, கொ. ச. பலராமன், பூ. அ. துரைராஜா, இரா. கதைப்பித்தன்– ஜயந்தியில் எழுதினார்கள். சிவசு, இளசை அருணா போன்றவர்களும் எழுதினார்கள். வல்லிக்கண்ணன், நீல. பத்மநாபன், நாஞ்சில் நாடன் படைப்புகளையும் ஜயந்தி பிரசுரித்திருக்கிறது. பிறமொழி இலக்கியங்களை (மலையாளம், தெலுங்கு ) சேர்ந்த கதைகளின் மொழி பெயர்ப்புகளும் இதில் வந்தன.

கற்சிலை என்றொரு மாதமிருமுறை, 1973 ஜனவரியில் ஆரம்பித்து 1974 மே வரை வந்திருக்கிறது. ஆசிரியர்– கு. பரமசிவம்.

எழுத்தாளர் கு. பரமசிவம் படைப்பாளி விந்தனின் நெருங்கிய நண்பர். விந்தன் பற்றிய தொகுப்பு நூல் ஒன்றைத் தயாரித்து வெளி யிட்ட இவர் எழுத்தாளர் விந்தனின் வாழ்க்கை வரலாற்றை நல்ல முறை யில் எழுதியிருக்கிறார். இது 1980களின் சமாச்சாரம்.

கற்சிலை சாதாரணப் பத்திரிகையாக வந்துள்ளது. சினிமா பற்றிய தகவல்கள், அரசியல் மற்றும் சமூகப் பிரச்னைகள் சம்பந்தமான கருத் துக்கள், சுமார் ரகக் கதைகள், கவிதைகளை வெளியிட்டுள்ள இப் பத்திரிகை நல்ல, 'சோவியத் சிறப்புக் கட்டுரைகள்'– இலக்கியம் சம்பந்த மானவை–பலவற்றை அச்சிட்டிருக்கிறது. மறைந்த கவிஞர் தமிழ் ஒளியின் பெருமையை அடிக்கடி அறிவுறுத்தியது (15–வது இதழுக்குப் பிறகு சினிமா விஷயங்கள் கைவிடப்பட்டன ).

தமிழ் ஒளியின் கவிதைகள், கட்டுரைகள் பலவற்றை மறுபிரசுரம் செய்த கற்சிலை, தனது 17–வது இதழை 'தமிழ் ஒளியின் பொன்விழாச் சிறப்பிதழ்' ஆகத் தயாரித்துள்ளது. இந்த இதழுக்குப் பிறகு, பத்திரிகை யின் 'சிறப்பாசிரியர்' உமா மகேசுவரன் என்று பொறிக்கப்பட்டுள்ளது.

உமா மகேசுவரன் அதற்குப் பல மாதங்கள் முன்பிருந்தே விறுவிறுப் பான நடையில் சர்ச்சைக்குரிய விஷயங்களை எழுதி வந்திருக்கிறார்.

பிறகும் தீவிரமாகக் கருத்துக்களை எடுத்துக் கூறியிருக்கிறார். த. கோவேந்தன், ஞானம்பாடி, ஏ. சுவாமிநாதன் ஆகியோர் உற்சாகத்துடன் ஒத்துழைக்கிறார்கள்.

புதுக் கவிதையை எதிர்த்தும், க. நா. சு. வைச் சாடியும், சரித்திர நாவல்களைக் கண்டித்தும் ஆழமில்லாத, பரபரப்பு ரீதியான, சிறு கட்டுரைகளைக் கற்சிலை வெளியிட்டிருக்கிறது.

முதல் ஆண்டு முடிந்ததும், 'கற்சிலை' 'சுயவிமர்சனம்' செய்து கொண்டது. அதில் பெருமையோடு இப்படி அறிவித்துள்ளது—

'கற்சிலை இதழ் மூலம் பெருத்த அளவில் பொருளாதாரம் நட்டமாகிவிட்டது என்று பொய் சொல்லிப் புலம்பிட நாங்கள் விரும்பவில்லை. அப்படிச் சொல்பவர்களைக் கண்டால் நாங்கள் மிகுந்த கோபம் கொள்கிறோம்.

நாங்கள் அறிந்தவைகளை— தெரிந்தவைகளைப் பலருக்கு அறிவிப்பதற்கும் தெரிவிப்பதற்கும் ஆயுதமாகக் கொண்டுள்ள ஒரு கருவிக்கு ஆகும் செலவை நாங்கள் ஒரு பொருட்டாகக் கருதவில்லை. எங்களுக்கு ஆயுதமே முக்கியம் ! இலட்சக்கணக்கான வாசகனுக்கு எங்கள் அறிமுகம் தேவையில்லை; இலட்சியப் பிடிப்புள்ள வாசகனுக்கு நாங்கள் அறிமுகமாகிட விரும்புகிறோம்.

நாங்கள் கையில் எடுத்துள்ள ஆயுதம் சினிமா நடிகைகளுக்கும், ஏழை எளியவர்களைச் சுரண்டிக் கொழுக்கும் முதலாளியத்திற்கும் துணை போகாது. புதியதோர் உலகைச் சமைக்கப் போராடிக் கொண்டிருக்கும் புதிய தலைமுறைக்குப் போர்க் கருவியாகப் பயன்படும்.

தமிழ்ப் பத்திரிகை உலகில் நாங்கள் பெரிய சாதனை உண்டாக்க விரும்பவில்லை. ஏனெனில் இவ்வுலகில் புகழ் அடைந்துள்ள 'சாதனை', மனிதனின் சுயமரியாதைக்கும் சுதந்திரத்திற்கும் அப்பாற்பட்ட நச்சுத்தனத்தின் பேருருவே. நாங்கள் இத்தகைய 'சாதனை' க்குரிய மனிதர்களைத் தோல் உரித்துக்காட்டவே எமது ஆயுதத்தைப் பயன்படுத்துவோம்.' (மலர்–2, இதழ்– 1 ... 16–1–74 ).

'போகும் வழி நீளமென்று
புத்தி உணர்ந்தாலும்
போகும் வழி யெங்கள்
போக்குக்கு இசைந்த வழி' என்ற வலிய கவிதை வரிகளோடு பயணத்தைத் தொடர்ந்த கற்சிலை அதன் பிறகு நீண்ட நாட்கள் நடக்கவில்லை.

இத்தகைய பயணங்கள் 1980 களிலும் துணிந்து தொடங்கப் படுகின்றன.

பயணம் என்ற பெயரிலேயே ஒரு பத்திரிகை புது டில்லியில் தோன்றி யது. சிறப்பாசிரியர் : து. முத்துக்கிருஷ்ணன். இதர பத்திரிகைகளின் போக்கில் திருப்தி அடைய முடியாத சில இளைஞர்களின் முயற்சி.

முதலாவது இதழ் இலட்சிய ஒலிபரப்போடு வெளிவந்தது. வழக்க மான (சுமாரான) புதுக் கவிதைகள், வித்தியாசமான கதைகள், புத்தக விமர்சனம் பிரசுரமாயின.

பயணம் மூன்று இதழ்கள்தான் வந்தது.

தஞ்சாவூரில் தொடங்கப்பட்ட பத்திரிகை மஞ்சு. 'பழமையைத் திரும்பிப் பார்த்துப் பின் புதுமையாய் இனிமையாய்–பல செய்திட வேண்டும் என்ற குறிக்கோளை நெஞ்சில் நிறுத்திச் செயல்படுவோம்' என முன்வந்துள்ள இளைஞர்களின் கூட்டு முயற்சி.

'எல்லாத் துறைகளிலும் சிந்தனைத் தேன்துளிகளைப் பொழிகின்ற இதழாக' மஞ்சு தயாரிக்கப்படுகிறது. இளைய எழுத்தாளர்கள் அநேகர் உற்சாகமாக எழுதுகிறார்கள். எழுத்துத் துறையில் அனுபவமும் நல்ல பெயரும் பெற்றுள்ள தஞ்சாவூர் எழுத்தாளர்களின் துணையும், 'மஞ்சு' க் குக் கிடைத்திருக்கிறது. ப்ரகாஷ், நா. விச்வநாதன், சி. எம். முத்து ஆகி யோரின் படைப்புகள் மஞ்சுவில் வெளிவந்துள்ளன.

தஞ்சாவூர் இலக்கிய நண்பர்கள் 'சும்மா இலக்கியக் கும்பல்' என்று கூறிக் கொண்டு கூடிப்பேசியும், இலக்கிய சர்ச்சைகள் செய்தும், புது மைகள் பண்ணியும் மகிழ்ந்து கொண்டிருக்கிறார்கள். மஞ்சுவின் நான்காம் இதழ் 'தஞ்சை சும்மா இலக்கியக் குழுவினர் தரும் சிறப்பிதழ்' ஆக வெளிவந்திருக்கிறது.

இந்தச் சிறப்பிதழில் நல்ல கதைகள்–ஜனரஞ்சகப் பத்திரிகைகளில் பிரசுரமாகிற கதைகளிலிருந்து வெகுவாக மாறுபட்டவை– இடம் பெற்றுள்ளன. அவற்றை ப. சிங்காரம் ('புயலிலே ஒரு தோணி' என்ற குறிப்பிடத்தகுந்த நாவலைப் படைத்தவர்), நா. விச்வநாதன், சி. எம். முத்து, கரிச்சான் குஞ்சு, மு. செந்தமிழன், ஸ்வாமிநாத ஆத்ரேயன் ஆகியோர் எழுதியிருக்கிறார்கள். மற்றும் கவிதைகளும் கட்டுரைகளும் உள்ளன.

'மஞ்சு' வின் ஒவ்வொரு இதழ் அட்டையிலும் புதுமை ஓவியம் அச்சிடப்பட்டு, அதற்கு சுவாரஸ்யமான– விரிவான விளக்கம் உள்ளே

தரப்பட்டுள்ளது. மஞ்சுவின் முகப்போவியங்களுக்கு ரசனை நிறைந்த விளக்கவுரைகளை எழுதியிருப்பவர் 'இலக்கியன்' (ப்ரகாஷ்) தான்.

மஞ்சு இதுவரை ஐந்து இதழ்களை வெளியிட்டிருக்கிறது.

மதுரையிலிருந்து வருவது 'புதிய பார்வை'. 1982 செப்டம்பரில் தொடங்கப் பெற்ற இந்தத் திங்களிதழ் 'அறிவன்' என்பவரை சிறப்பாசிரியராகவும், மற்றும் சிலரை ஆசிரியர் குழுவினராகவும் கொண்டு இயங்கியது.

'சமுதாய, இலக்கிய, மெய்ப்பொருளியல் கண்ணோட்டத்தில்' புதிய பார்வை வளர்ந்தது. மெய்யறிவைப் போதிக்கும் வள்ளுவத்தையும், மெய்ப் பொருளறிஞர் ஜே. கிருஷ்ணமூர்த்தியின் அறிவுரைகளையும் இது எடுத்துக் கூறியது. பகவான் ரஜ்னீஷின் கொள்கைகளையும் வாசகர்களது கவனத்துக்குக் கொண்டு வந்தது.

இலக்கிய ரீதியில் மரபுக் கவிதைகளை மட்டுமே ஆதரித்து வந்த 'புதிய பார்வை' புதுக் கவிதையை எதிர்க்கும் கட்டுரை ஒன்றைப் பிரசுரித்தது, ஒரு விவாதத்துக்கு இடம் அளித்தது. பிறகு 'வளரட்டும் புதுக் கவிதை' என்று அறிவித்து, புதுக் கவிதைப் படைப்புகளை வரவேற்றுப் பிரசுரிப்பதில் ஆர்வம் கொண்டு விட்டது.

'வெண்பாப் போட்டி' நடத்தி, இதழ்தோறும் வெண்பாக்களை இரண்டு பக்கங்கள் பிரசுரித்தது.

'பழமையின் சுமையினின்றும் விடுபடுவோம்—என்றும் புதிய பார்வையைப் போற்றி வாழ்வோம்' எனக் கொள்கை முழக்கம் செய்த 'புதிய பார்வை' காலத்துக்கும் நவ சிந்தனைக்கும் ஒத்துவராத— முரண்பட்ட— கருத்துக்களைப் பிரசாரம் செய்வதிலும் ஆர்வம் கொண்டிருந்தது.

விலைமகளிர் விடுதிகளை நாடு முழுவதும் திறக்க வேண்டியது அவசியம் என்று ஒரு கட்டுரை மூலம் அழுத்தமாக அறிவித்தது புதிய பார்வை. இயற்கை உணவுகளை உண்டு இயற்கை வாழ்வு வாழ வேண்டியதன் அவசியத்தையும் அது வலியுறுத்தியது. தனித்தமிழுக்கு ஆதரவு காட்டவும் முற்பட்டது.

'மெய்யறிவைத் தேடிப் பார்க்கும் புதிய பார்வை' வாழும் வழியாகக் கடைப்பிடிக்க விரும்புவது—

'மறைந்த காலத்தை மறப்போம். வருங்கால நினைவு நமக்கு வேண்டாம். நிகழ்கின்ற காலத்திலே நிறைவைக் காண்போம்' என்பதாம்.

# 40. வித்தியாசமான வெளியீடுகள்

சிறு பத்திரிகைகளுள்ளும் வித்தியாசமானவையாக அவ்வப்போது சில பத்திரிகைகள் தோன்றி, தமக்கெனத் தனி நோக்கும் பாதையும் கொண்டு செயல்படுவதும் நடந்து வருகிறது.

பேராசிரியர் நா. வானமாமலை நடத்திய 'ஆராய்ச்சி' அப்படிப்பட்ட ஒரு வெளியீடு ஆகும்.

மார்க்ஸிய தத்துவ அடிப்படையில், சமுதாயப் பார்வையோடும் வரலாற்றுப் பின்னணியோடும் பல பிரச்னைகளையும் ஆராய்ந்து கட்டுரைகள் எழுதிப் புகழ் பெற்றவர் நா. வானமாமலை. நாட்டுப் பாடல்களை ஆராய்ந்து தொகுத்தவர். சமூக, பொருளாதார, தத்துவ, கலை, இலக்கியம் சம்பந்தமான விஷயங்களை ஆராய்ந்து எழுதுவதாக அவர் நடத்திய 'ஆராய்ச்சி' எனும் காலாண்டு ஏடு தனித் தன்மையோடு, பயனுள்ள விஷயங்களைத் தாங்கி வந்தது.

பேராசிரியர் நா. வானமாமலை, மார்க்ஸிய நோக்குடன் சிந்தித்து ஆராயக்கூடிய திறமை பெற்ற விமர்சகர்கள் குழு ஒன்றை உருவாக்கினார். அவர்கள் எழுதிய கட்டுரைகளும் 'ஆராய்ச்சி' யில் வெளிவந்தன.

இலக்கியப் படைப்பாளிகள் சிலரது நாவல்கள், சிறுகதைகள் பற்றிய விமர்சனங்களையும் 'ஆராய்ச்சி' வெளியிட்டது.

அது இலக்கியவாதிகளையும், ரசிகர்களையும் எட்டியதைவிட, சர்வ தேச ரீதியில் பல்கலைக்கழகங்களையும் ஆராய்ச்சி மாணவர்களையும் அதிகம் தொட்டது என்று சொல்லலாம்.

'ஆராய்ச்சி' யை நினைவுபடுத்தும் விதத்தில்— ஆனால் முற்றிலும் தனியானதொரு போக்கில்— '1/4' என்ற காலாண்டு ஏடு 1980—ல் வெளி வந்தது. ஆசிரியர்—மலர்மன்னன்.

'தற்காலத் தமிழ் இலக்கியம் மற்றும் தமிழ் கலாச்சாரத்திற்கான இதழ்' என்று கூறிக்கொண்டு, 15 ரூபாய் விலையில், பெரிய அளவில், 96 பக்கங்களோடு இக் காலாண்டு ஏடு வெளிவந்தது. முதல் இதழ் 1980 ஜூலை—செப்டம்பர் எனத் தேதியிடப் பெற்றிருந்தது. இத்தொகுப்பில் அதன் நோக்கம் குறித்து மலர்மன்னன் விரிவாக எழுதியிருந்தார்.

த.15.

'சிறுகதை, கவிதை, நாவல், பகுதி, நாடகம் ஆகியவற்றுக்கு முக்கிய இடம் அளிக்கப்படுகிறது. காலப்போக்கில் இங்குள்ள இன்றைய சித்தி ரக்காரர்களின் சித்திரங்கள், வண்ண ஓவியங்களை வெளியிடுவதும் சாத்தியமாகும் என்கிற நம்பிக்கை உள்ளது' என்றும்,

'நமது இலக்கியம் மற்றும் கலைகளில் சிரத்தையுள்ள யாவரும் கூடிச் செய்யும் கூட்டு முயற்சியாகவே இதனைக் கொள்ள வேண்டும்... எல்லா சித்தாந்தக்காரர்களுக்குமான பொது மேடையே இது' என்றும் அறிவிக்கப்பட்டிருந்தது.

திருவிழாவும் கூத்தும்—ந. முத்துசாமி, தொழில் ரீதி நாடகங்களும் புதிய போக்குகளும்—கோமல் சுவாமிநாதன், சி. சுப்பிரமணிய பாரதியார் கவிதைகள் : ஓர் உள்முகத்தேடல்—ஞானக்கூத்தன், ஹிட்லரும் ரிச்சர்ட் வாக்னரும்—வெங்கட் சாமிநாதன், சுந்தர ராமசாமி எழுதிக்கொண்டிருந்த 'ஜே. ஜே.—சில குறிப்புகள்' நாவலின் ஒரு பகுதி, குறுக்கீடு—சா. கந்தசாமி கதை, சாவி—லஷ்மி கண்ணன் கதை; மற்றும் கவிதைகள் (காரை சிபி, ஆனந்த், வைத்யா, ஜே. ஆர். ரமணன், அ. யோகராசா— எழுதியவை—10 பக்கங்கள்) இவை முதல் இதழின் உள்ளடக்கம்.

இரண்டாவது இதழில் வெளிவந்தவை: தமிழ்நாட்டுக் கிராமங்களின் முப்பதாண்டு பொருளாதார வளர்ச்சி (1950–80) உண்மை நிலவரம்—எஸ். ஆர். சத்யா, தெ. பொ. மீனாட்சி சுந்தரன் பற்றி செ. ரவீந்திரன், பாதல் சர்க்கார் நாடகப் பட்டறை சிந்தனைகள்—பிரபஞ்சன், உலகத் தமிழா ராய்ச்சி நிறுவனம்: ஓர் அறிமுகம்— ச. வே. சுப்பிரமணியன், ஹிட்லரும் ரிச்சர்ட் வாக்னரும்—வெங்கட் சாமிநாதன், மூங்கில் குருத்து—திலீப்குமார் கதை, கழுகு—லா. ச. ராமாமிருதம் கதை, சுந்தர ராமசாமியின் 'ஜே. ஜே. சில குறிப்புகள்' நாவலின் மேலும் சில பக்கங்கள், நகுலன் எழுதிய 'குகன்' கவிதை (100 பக்கங்கள்).

காலாண்டு வெளியீடு பரந்த எல்லைகளில் கவனம் செலுத்த விரும்பியது. இதை மூன்றாவது இதழும் எடுத்துக் காட்டியது.

காரை சிபி எழுதிய 'புதுவைத் தமிழர் வாழ்க்கையில் பிரெஞ்சு கலாச்சாரத் தாக்கம்' என்ற கட்டுரை 15 பக்கங்கள். ந. முத்துசாமியின், 'அன்று பூட்டிய வண்டி' நாடகம், தெருக்கூத்து பற்றிய கட்டுரை, கிராமப் பொருளாதாரம் சம்பந்தமான எஸ். ஆர். என். சத்யா கட்டுரை இரண்டாம் பகுதி மற்றும் சாந்தன், அம்பை, நாஞ்சில்நாடன், சுரேஷ், குமார இந்திர ஜித் கதைகள்; கலாப்ரியா, நீலமணி, நிமல. விஸ்வநாதன், திரிசடை கவிதைகள்.

தற்கால ஓவியரின் ஓவியம் ஒன்று ஒவ்வொரு முறையும் அட்டைச் சித்திரமாக அச்சிடப்பட்டு, அந்த ஓவியரைப் பற்றிய அறிமுகக் குறிப்பும் வெளியிடப்பட்டது.

மலர் மன்னன் மிகுந்த சிரத்தை எடுத்துக் கொண்டு சிரமத்தோடு தான் ஒவ்வொரு இதழையும் உருவாக்கினார். காலாண்டு ஏடு தரம் உள்ளதாகவே அமைந்திருந்தது. பல்கலைக்கழகங்கள், சர்வதேச அமைப் புகள், கல்லூரிகள் முதலியவற்றோடு நெருங்கிய தொடர்புகொண்டு வளர விரும்பியது இச்சிறு பத்திரிகை.

பாராட்டுக்களும், உற்சாகமூட்டும் ஆதரவும் மலர் மன்னனுக்கு ஓரளவுக்குக் கிடைத்தன. குறை கூறலும், விலை வெகு அதிகம் என்ற விமர்சனமும் அதே அளவுக்கு இருந்தன. பொருளாதார சிரமங்கள் இருக்கவே செய்தன.

ஆகவே, காலாண்டு ஏடு குறிப்பிட்ட காலக் கணக்கின்படி வெளி வரவில்லை. நான்காவது இதழை, பக்கங்கள் குறைத்து (48 பக்கங்கள்), விலையையும் 5 ரூபாய் எனக் குறைத்து வெளியிட வேண்டிய கட்டாயம் மலர்மன்னனுக்கு ஏற்பட்டது.

'பணத்திற்காக அலைகிற பலவீனம் ஏற்பட்டு, இதழைத் தரமாகக் கொண்டு வருவதில் காட்டும் கவனம் சிதறிப் போகும் என்பதனாலேயே விளம்பரம் சேகரிப்பதில் ஆர்வமற்றிருந்தேன்' என்று குறிப்பிட்ட அவர் விளம்பரங்கள் வெளியிட்டுப் பணபலம் தேடவேண்டிய அவசியமும் உண்டாயிற்று.

ஆயினும், வளர வேண்டிய இந்தக் காலாண்டு வெளியீடு வாழ முடியாமலே போய்விட்டது.

'குமரி மலர்' என்பது தனித்தன்மையுடன் வெகுகாலம் வந்து கொண்டிருந்தது. ஆரம்பத்தில் அது ஒவ்வொரு மலரிலும் புதிய புதிய கட்டுரைகளையே பிரசுரித்து வந்தது.

இரண்டாவது உலக மகாயுத்தக் காலத்தின்போது, பத்திரிகைக் கட்டுப்பாட்டுச் சட்டம் அமலுக்கு வந்தது. புதிதாகப் பத்திரிகைகள் துவங்குவதற்கு அனுமதி வழங்க அரசு மறுத்தது. ஆனால், புத்தகங்கள் வெளியிடலாம் என்ற நிலை இருந்தது.

ஏ. கே. செட்டியார் 'மாதம் ஒரு புத்தகம்' என்று சொல்லி 'குமரி மலர்' என்ற தொகுப்பு வெளியீட்டை ஆரம்பித்தார். கட்டுரைகள், கதை, கவிதைகளின் தொகுப்பு.

குமரி மலர் காட்டிய வழியில் பலப்பல 'மலர்' களும், 'மாதம் ஒரு புத்தகம்' களும் தோன்றின. மறைந்தன. குமரி மலர் தனது போக்கில் அமைதியாகச் சென்றது.

வெகுகாலம் வரை, டி. கே. சி., வ. ரா. , சாமிநாத சர்மா போன்ற அறிஞர்கள் எழுதித் தந்த கட்டுரைகளைப் பிரசுரித்தது. பிறகு தன் போக்கை 'குமரி மலர்' மாற்றிக்கொண்டது. காந்திஜியின் மணிமொழிகள், ராஜாஜி விட்டுச் சென்ற பழைய கட்டுரைகள், கடிதங்கள், திரு. வி. க. எழுத்துக்கள் முதலியவற்றைப் பிரசுரிக்கலாயிற்று. ஆனந்தரங்கம் பிள்ளை டயரிக் குறிப்புகள், பார்வைக்கு அகப்படாதிருந்த பழங்காலக் கட்டுரைகள், கடிதங்கள், அபூர்வப் பொருள்களாகிவிட்ட மிகப் பழைய சஞ்சிகைகளில் பிரசுரமான விஷயங்கள்—இப்படி, வாசகர்களுக்கு எளிதில் கிடைக்க முடியாத அபூர்வங்களைத் தேடி எடுத்து அச்சிட்டுத் தந்தது.

சந்தாதார்களுக்கு மட்டுமே என வந்து கொண்டிருந்த 'குமரி மலர்' இவ்வகையில் ஒரு நல்ல பணி செய்துள்ளது பலருக்கும் தெரியாது. ஏ. கே. செட்டியார் மரணம் அடைகிறவரை அது தனது வழியில் நிதான மாகச் சேவை புரிந்து வந்தது.

அதேபோல அமைதியாக, பாராட்டப்பட வேண்டிய விதத்தில் தமிழ்ப் பணி புரிந்து வந்த இன்னொரு பத்திரிகை 'உலக இதய ஒலி' ஆகும்.

காந்தியத்தில் மிகுந்த பற்றுதலும் நம்பிக்கையும் கொண்ட சர்வோ தயவாதியான டி. டி. திருமலை நடத்திய மாதப் பத்திரிகை இது. ரசிகமணி டி. கே. சி. அவர்களிடம் மிக்க ஈடுபாடு கொண்டவர் அவர். இப்பண்பு களை அவருடைய பத்திரிகை வெளிப்படுத்தியது.

காந்திய தத்துவங்களை, சமூக ஒழுக்கம், தனிமனிதப் பண்பாட்டு உயர்வு முதலியவற்றை வலியுறுத்தும் கட்டுரைகளை டி. டி. திருமலை இனிய எளிய நடையில் ரசமாக எழுதி வந்தார். அவற்றுடன் டி. கே. சி. யின் எழுத்துக்களையும், கடிதங்களையும் பிரசுரித்தார். அறிஞர்கள், சிந்தனையாளர்களிடமிருந்து கட்டுரைகள் வாங்கி வெளியிட்டார். இவற் றோடு இன்னுமொரு நல்ல காரியமும் செய்து வந்தார்.

தமிழில் எத்தனையோ நல்ல நூல்கள் பிரசுரமானது உண்டு. அவை முதல் பதிப்போடு மறைந்தே போயின. அவற்றின் சிறப்பை, பின்வந்த ரசிகர்கள் அறிந்து கொள்வதற்கான வாய்ப்பு இல்லாமலே போய் விட்டது.

அதேபோல, தமிழ்நாட்டில் வெவ்வேறு காலகட்டத்தில் நல்ல பத்திரிகைகள் தோன்றி, பயனுள்ள அரிய விஷயங்களைப் பிரசுரித்து, பின் இருந்த இடம் தெரியாமல் போய் மறைந்துள்ளன. அவற்றில் பிரசுரமான தரம் நிறைந்த கட்டுரைகளும் நயம் கலந்த கதைகளும் பின்னர் தொகுப்புகளில் இடம்பெறும் வாய்ப்பைப் பெறவுமில்லை.

அத்தகைய விஷயங்களை—தற்கால வாசகர்கள் தெரிந்து கொள்ள வேண்டும் என்று தோன்றுவதை—தேடி எடுத்து மறு பிரசுரம் செய்து தந்தது 'உலக இதய ஒலி'.

தரமான அந்தப் பத்திரிகையும் பரந்த வாசக உலகத்தைப் பெற்ற தில்லை—பெற முடிந்ததில்லை.

ஃ ஃ ஃ

புத்தகங்களை அறிமுகம் செய்வதற்கென்றும், மதிப்புரை விமர்சனம் மற்றும் புத்தகங்கள், ஆசிரியர்கள் பற்றிய விஷயங்களை அறிவிப்பதற்கா கவும் தனிப் பத்திரிகைகள் தமிழிலும் வெளிவந்தது உண்டு.

புத்தக வெளியீட்டாளர்கள் தங்களுடைய பிரசுரங்கள் பற்றிய தகவல் அறிவிப்புகளுக்காக சிறு பத்திரிகைகள் நடத்தியிருக்கிறார்கள். க. நா. சுப்ரமண்யம் 1940 களில், புத்தகங்கள் பற்றிய விஷயங்களை மட்டுமே வெளியிடும் 'ராமபாணம்' என்றொரு பத்திரிகை பிரசுரித்தார்.

1960 களில் 'நூலகம்' என்ற பத்திரிகையைக் கவிஞர் குயிலன் நடத்தினார். பிறகு 'வாசகர் வட்டம்' அதன் பொறுப்பை ஏற்று, தரம் குறையாத மாத இதழாகச் சில காலம் நடத்தி வந்தது.

1983—ல் சிவகங்கை அன்னம் வெளியீட்டுக்காக கவிஞர் மீரா 'அன்னம் விடு தூது' என்ற வெளியீட்டைத் தயாரித்து வெளியிட்டார். இரண்டு மாதங்களுக்கு ஒருமுறை வெளிவந்த அச்சிற்றேடு புத்தகங்கள் பற்றிய பயனுள்ள தகவல்களை, மதிப்புரைகளை, விமர்சனக் கட்டுரை களையும் மற்றும் சுவாரஸ்யமான விஷயங்களையும் பிரசுரித்தது. ஆறு இதழ்கள் வந்ததற்குப் பிறகு, 1984—ல் 'அன்னம் விடு தூது' பூரண மாத இதழாக மாற்றப்பட்டுவிட்டது. புத்தக உலகச் செய்திகளைவிட,

இதர பல விஷயங்களிலும் கவனம் செலுத்துவதில் அது முனைப்புக் கொண்டு விட்டது. அதுவும் பத்து இதழ்களே பிரசுரம் பெற்றது.

புத்தகங்கள் பற்றிய சிந்தனைகள், விமர்சனக் கட்டுரைகள், கவிதை கள் மற்றும் பயனுள்ள விஷயங்களைப் பிரசுரிப்பதற்கென்றே 'நூல் நயம்' என்ற மாத வெளியீடு தோன்றியது.

இலக்கிய சர்ச்சைகள், புத்தக விமர்சனங்கள், நல்ல கவிதைகள், பேட்டிகள் ஆகியவற்றை வெளியிட்டு வந்த 'நூல் நயம்' நம்பிக்கை ஏற்படுத்தும் நல்ல பத்திரிகையாக விளங்கியது. 'அடுத்த இதழில்' சில முக்கிய விஷயங்களை எதிர்பார்க்கும்படி ஆவலைத் தூண்டும் பட்டியல் தந்த மூன்றாவது இதழோடு இது ஒடுங்கிவிட்டது.

# 41. படிகள்

சிறு பத்திரிகை என்பது இன்று தனக்கானதொரு தத்துவத்தையும் இலக்கணத்தையும் உருவாக்கிக் கொண்டுள்ளது. பல்லாயிரக்கணக்கான சாதாரண வாசகப் பெருமக்களினின்றும் வேறுபட்டிருப்பது மட்டுமேயன்றி பல இடர்ப்பாடுகளுக்கிடையிலும் தங்களுக்கான மதிப்புகளைத் ( Values ) தேடுவதிலும் தமிழர்களில் ஒரு சிலரேனும் மாறுபட்டிருக்கிறார்கள் என்பதை சிறு பத்திரிகைகள் ஓர் இயக்கமாக இயங்குவதிலிருந்து தெரிந்து கொள்ள முடிகிறது. இது தமிழுக்கு மட்டுமே உரிய நிகழ்வு என்பதால் தமிழின் மொத்த வரலாற்றை, அதன் கலாச்சார, சிந்தனா வடிவ அமைவுகளை மீண்டும் ஆய நம்மைத் தூண்டுகிறது. நம் தமிழ்க் கலாச்சார உருவாக்கத் தொடர்ச்சிக்குள்ளேயே இன்று மலைபோல் குவியும் ஜனரஞ்சகத்தனமான, ஆழமற்ற, தேடலற்ற எழுத்துக்கான கூறு களின் குணாம்சங்கள் அடங்கியுள்ளனவோ என்று ஆய வேண்டியுள்ளது. நாடகங்கள் என்ற பெயரில் தோன்றும் வார்த்தைக் குப்பைகளும், திரைப் படங்கள் என்ற பெயரில் நடக்கும் கோமாளித்தனங்களும் வெறும் ரசனையற்ற தன்மை மட்டுமே அல்ல என்று நம்ப வேண்டியுள்ளது. ஓவியம் என்பது ஓர் தொடர்ந்த கலாரூபமாய் நமக்கு எட்டவில்லை. தமிழ்த் துறைகளில் ஆராய்ச்சிகள் நடக்கும் விதம், தன்மை, நாம் மேற் சொன்னதினின்றும் மாறுபடுவதில்லை. அரசியல் அல்லது இலக்கியச் சொற்பொழிவுகளில் வார்த்தைகளின் சப்தத்திற்குக் கொடுக்கப்படும் முக்கியத்துவம் வார்த்தைகளின் இன்னொரு அம்சமான அர்த்தத்திற்குக் கொடுக்கப்படுவதில்லை. தமிழ்ப் பத்திரிகைகள் செய்திகளை வெளியிடும் முறை–பிறமொழிப் பத்திரிகைகளுடன் ஒப்பிடும்போது, வேதனையே தருகிறது.

"இந்த நோய்க் கூறுகளை ஏதோ ஒருவகையில் சிறு பத்திரிகை கள் புரிந்து கொண்டுள்ளன. ஆனால் தீர்வுகள்தான் ஒவ்வொரு பத்திரி கையிலும் மாறுபடுகின்றன. இப்பிரச்னைகளைச் சந்திக்கும் போதெல் லாம் பேசுகின்ற, சிந்திக்கின்ற, அலசுகின்ற ஒரு சிலரின் செயல்பாட்டு வடிவமே 'படிக' ளின் வெளிப்பாடு.

படிகள், பத்தோடு பதினொன்றாக வெளி வருகின்ற பத்திரிகை அல்ல.

சில அடிப்படைகளைப் புரிந்துகொண்டு பொறுப்புடன் இந்தத் தமிழ்ச் சூழலில் நடந்து கொள்ளும் ஜீவித முறையின் இயல்பான செயல் வடிவ எழுத்து ரூபமே படிகள். எனவே படிகள் எதிர்நோக்க வேண்டிய இடர் களை, இடைஞ்சல்களை முன் யோசனையுடன் சந்திக்கும் திராணியுடன் தான் வெளிவருகிறது.''

இப்படி அறிவித்துக் கொண்டு, 1978 டிசம்பரில், பெங்களூரில் தோன்றியது படிகள்.

ஆழமான சிந்தனைகளை மேற்கொள்ள முன்வந்த, காலாண்டு ஏடு ஆன, படிகள் தனக்கெனத் தனித் திட்டம் வகுத்திருந்தது : 1. தமிழின் மொழியியல் விஞ்ஞான அறிவைக் கல்வி நிலையச் சூழ்நிலையிலிருந்து விடுபட வைத்து, அக்கறை கொள்ளும் வாசகர்கள் முன் வைப்பது தேவை. இவ்விஷயத்தில் ஏதாவது செய்ய முடியுமா என்ற சாத்தியப்பாடு களைத் தேடல்.

2. தமிழ்ப் பாடநூல்களாக மாணவர்கள் மீது திணிக்கப்படும் நூல் கள் மொழி அறிவையோ இலக்கிய அறிவையோ உண்மையில் ஊட்ட வல்லன அல்ல. இப்பாடநூல் தேர்வும் நம் கலாச்சாரச் சீரழிவின் ஒரு குறையீடு. ஆகையால், பாடநூல்களைப் பற்றிய ஆய்வை வெளியிடுதல்,– முடிந்தால், பிற பல்கலைக்கழக நூல்களுடன் ஒப்பிடும் கட்டுரைகளை யும், கல்வி அமைப்பின் குறைகளைப் பாடநூல்களுடன் ஆயும் கட்டுரை களையும் பிரசுரிப்பது.

3. ஓர் மொழி வளர்வது, வெறும் சொற்கூட்டத்தின் அதிகரிப்பால் மட்டும் அல்ல; சிந்தனையின் அதிகரிப்பாலும் ஆகும். சிந்தனையால் மொழியும், மொழியால் சிந்தனையும் விருத்தி அடைகின்றன என்ற இயக்கவியல் பார்வை கொண்ட படிகள், உலகின் பிற அறிவுத்துறை களைச் சார்ந்த ஞானம் மட்டுமே நம் அறிவை விசாலமாக்க முடியும் என்று நம்பி, இந்தியச் சூழ்நிலையில் பிற மாநிலங்களில் ஏற்கனவே முக்கியத்துவம் பெற்ற மானுடவியல், சமூகவியல் போன்ற துறைகளில் கட்டுரைகள் பிரத்யேகமாய்ப் போட விரும்புகிறது.

4. தத்துவச் சிந்தனை மீது ஒளி செலுத்த விரும்புகிறது. பிற நாட்டுத் தத்துவ ஆசிரியர்கள் போக்குகள் பற்றி அறிமுகம் செய்யும். தேவைப்பட்டால் விவாதங்கள் வரவேற்றுப் பிரசுரிக்கும்.

5. சிறு பத்திரிகைகள் உதவியால் இலக்கிய உணர்வு ஓரளவு வளர்ந்திருந்தாலும், ஓவியம், சிற்பம், இசை, நாடகம், திரைப்படம்

போன்றன பற்றிய சிந்தனை வளரவில்லை. இத்துறைகளிலும் கவனம் செலுத்தப் பெறவேண்டும்.

6. கலைகள், இலக்கியம் போன்ற அடிப்படைகள்—எந்த மனமட்டத்தில் தத்துவம் இங்கு நுழைகிறது, இலக்கிய இயக்கங்கள் பற்றிய அறிமுகங்கள், இலக்கியக் கோட்பாடுகள் தமிழில் இதுவரை வளர்ந்தனவா; ஏன் வளரவில்லை; இனி வளர்த்தெடுப்பதற்கான வழிமுறைகள் யாவை போன்ற அடிப்படை விஷயங்களிலும் தமிழ்ச் சிந்தனை பரிச்சயம் செய்து கொள்ள வேண்டும்.

இவ்வளவு விஷயங்களையும் செய்யமுடியுமா என்ற மலைப்பு இருந்தாலும், இவ்வளவையும் செய்துவிட்டால் ஏற்படக்கூடிய தமிழ்மொழி வளம், தமிழ்ச் சூழ்நிலையின் ஆரோக்யம் போன்றவை மெய்சிலிர்க்க வைப்பதாயிருக்கும். நம் எண்ணம் வெறும் மொழி வளர்ச்சியுடன் மட்டும் சார்ந்தது அல்ல. மனித வளர்ச்சியுடன் சார்ந்தது. அந்த வளர்ச்சி அறிதலில் அடங்கியுள்ளதுபோலவே அறிதலின் உயர்ந்தபட்ச அறிதலாகிய செயல் முறையிலும் அடங்கியுள்ளது. படிகள் செயல்பாட்டிலிருந்து அகலாதிருக்கும் மனிதனையே படைக்க விரும்புகிறது என்றும் அறிவித்தது.

இன்னுமொரு முக்கிய கருத்தையும் அது வலியுறுத்தியது.

'வாசகர்கள் கடமை முக்கியமானது. நீங்கள் முதலாளித்துவ பத்திரிகை ஏற்படுத்தி வைத்துள்ள Consumer களாகப் படிகளைப் படிக்க வேண்டியதில்லை. படிகள் தன் இயக்கத்தை ஆசிரியர் குழு—எழுத்தாளர்கள்—வாசகர்கள் என்ற மூன்று பரிமாணங்களின் இணைந்த போக்கில் தான் காண்கிறது. ஒவ்வொரு வரியையும் வாசகர்கள் விமர்சிக்க வேண்டும். அப்படித்தான் படிகளின் 'பங்குதாரர்களாக முடியும்.'

'படிகளுக்குச் சமூகவியல், தத்துவம், தமிழிலக்கியம், மார்க்ஸியம் ஆகிய துறைகளில் ஈடுபாடுள்ள சிலர் ஆசிரியர் குழுவாய் இருந்து ஆலோசனைகளை ஆசிரியருக்கு வழங்கவும், கட்டுரை விமர்சனங்கள், படைப்புக்கள் தேர்ந்தெடுக்கவும் ஒத்துழைப்பதாய்க் கூறியுள்ளனர். இந்தப் பின்பலத்தில் நிற்பது படிகளுக்கு ஓர் பிரத்யேகத் தன்மையைக் கொடுக்கிறது' என்றும் கூறிக்கொண்டது.

முதல் இதழில், 'யூரி பரபாஸ்' என்ற சோவியத் எழுத்தாளரின் 'எஸ்தெட்டிக்ஸ் அன்ட் பொயட்டிக்ஸ்' என்ற புத்தகத்தை வைத்து எழுதப் பட்ட 'சோவியத் அழகியல்' எனும் மதிப்புரை கௌதமன் எழுதியது;

ஜாக் ஸ்டவ்டர் ஆங்கிலத்தில் எழுதிய 'காலனிய—ஏகாதிபத்தியச் சூழலில் மானிடவியல்' கட்டுரையை அஜிதா தமிழில் தந்திருந்தார். இச்சிறப்புக் கட்டுரை 18 பக்கங்கள். 'விவாதத்திற்கு' என்று 'ஞானி' எழுதிய 'இந்தியச் சூழலில் கலை இலக்கியவாதிகளின் கடமை' பற்றிய கட்டுரையின் ஒரு பகுதி, சில கவிதைகளும் பிரசுரமாகியிருந்தன.

படிகள் சிறு பத்திரிகைகள் பற்றி அதிகம் சிந்தித்தது. 'சிறு பத்திரி கைகள் கூட வெறும் இலக்கியம் என்று கூறியே இன்றைய தமிழகத் தைப் பீடித்துள்ள நோயை அகற்ற முடியும் என்று நினைக்கின்றன. நாங்கள் இலக்கியமும் சமூக நோய்களும் அரசியலும்கூட ஓர் பொது வான— முழுமையான எல்லா அறிவுத்துறைகளின் மொத்த விழிப்புணர் வால்தான் மாற்றம் பெறும், முன்னேறும் என்று நம்புகிறோம்' என அழுத்தமாகக் கூறியது.

இது குறித்து மூன்றாவது இதழில் விரிவாகவே எழுதியது.

'படிகள் சிறு பத்திரிகைகளைப் பற்றித் திடமான சில கொள்கை களைக் கொண்டுள்ளது. இக்கொள்கைகளை ஒரு மனோகரமான காலை வேளையில் உருவாக்கிக் கொள்ளவில்லை. பல நாளைய நீண்ட விவா தத்திற்குப் பிறகே உருவாக்கினோம். அவ்விஷயங்களில் சமூகவியலைச் சிறப்பாய்க் கற்கும் மாணவர்கள் சிலர் முக்கிய பங்கேற்றனர். இவர்கள் படிகளுடன் இணைந்திருப்பதுதான், படிகளுக்குப் பிற தமிழகப் பத்திரிகை களைவிட தனியான குணத்தைக் கொடுத்துள்ளது.

சிறு பத்திரிகைகளை முதலில் இரண்டாகப் பிரிக்க வேண்டும். வெறும் இலக்கியம் பற்றிப் பேசும் கொல்லிப்பாவை, யாத்ரா, சுவடு, வைகை, சாதனா போன்றவை ஒருபுறம். விழிகள், பரிமாணம், இலக்கிய வெளிவட்டம், பிரக்ஞை போன்ற கட்சிக்குட்படாத இடதுசாரிப் பண்புடன் வரும் சிறு பத்திரிகைகள் மற்றொரு புறம் (கட்சிப் பார்வை கொண்ட பத்திரிகைகளை இங்கே விட்டுவிடுகிறோம்). வேறு சில பத்திரிகைகள் நிலைபாடு தெளிவாகவில்லை என்பதால் அவையும் இங்கே சேர்க்கப் படவில்லை.

இவ்விருவகைச் சிறு பத்திரிகைகளையும் முக்கியமானவைகளாகக் காண்கிறோம்.

வெறும் இலக்கியச் சிறு பத்திரிகைகள், பெரும் ஜனரஞ்சகத்திற்கு எப்படியும் எதிர்ப்பானவைதான். கசடதபற, எழுத்து, நடை இலக்கியப்

பத்திரிகைகளின் சாதனை மறக்கக் கூடியதல்ல. ஜெயராஜ், குங்குமம், குமுதம் வகையறாக்களால், நாணயமான தமிழின் தெருக்கூத்து மரபைச் சாகக் கொடுத்துள்ளோம். அதுபோல் நகரக் கலாச்சாரங்களும் அழிகின் றன. இலக்கியப் பத்திரிகைகள் என்று கூறிக் கொள்பவை கலாச்சாரத் தின் ஓர் அங்கமான இலக்கியத்தை மட்டும் கவனிக்கின்றன அல்லது சினிமா, நாடகம் மட்டும் கவனிக்கப்படுகிறது. இப்பத்திரிகைகள் தங்க ளைச் சற்று உயர்த்தி கலாச்சார இதழ்களாய் மாற்றிக் கொள்ளாதபடி அவற்றின் குறுகிய இலக்கிய அறிவும், பரந்த பார்வையின்மையும் செய் கின்றன என்றாலும்—தங்களின் அஞ்ஞானத்தையும் மீறி இந்த இலக்கி யப் பத்திரிகைகள் வியாபார இலக்கியத்தையும், அவற்றின் நடைமுறை களையும் எதிர்ப்பதால் அவற்றிடம் ஓரளவு இடதுசாரித் தன்மை உண்டு என்று நம்புகிறோம். அதே நேரத்தில் சக்திமிக்க கலாச்சார இயக்கங் களாய் இப்பத்திரிகைகள்—யாத்ரா, கொல்லிப்பாவை, சாதனா, சுவடு, வைகை போன்றன— உருவாக்கம் பெற எங்கள் விமர்சனங்களையும் தாக்குதல்களையும் அவை மீது வைக்கிறோம்.

விழிகள், பரிமாணம், இலக்கிய வெளிவட்டம் போன்ற பத்திரிகை களை நாங்கள் மிகுந்த மதிப்புடன் அரவணைக்கிறோம். இவை எங்களை ஒத்த, சமூக, இலக்கிய, கலாச்சாரப் பார்வையைக் கொண்டி ருக்கின்றன. மேலும் அவை அரசியலிலும் தங்களுக்கான நிலை பாட்டைத் தேர்ந்துள்ளது மிக்க மகிழ்ச்சியைத் தருகிறது. காரணம், தமிழகச் சூழலில் இன்று செயல்படும் வெறும் இலக்கியப் பத்திரிகைகூட தன் இலட்சியத்தை உண்மையில் நிறைவேற்ற, வெறும் இலக்கிய சிரத்தை மட்டும் காட்டினால் போதாது என்பதை ஒரு சித்தாந்தமாகவே முன்வைக்கத் தயாராகி உள்ளோம்.

தற்சமயம் கலாச்சார இயக்கம் அரசியலைப் புறக்கணிக்க முடியாது என்று நினைக்கிறோம். அதற்காக நேரடி அரசியலில் ஈடுபடச் சொல்ல வில்லை. உங்களுக்கென்று அரசியலிலும் ஒரு பார்வை வேண்டுமென்கி றோம். சிறு பத்திரிகைகளுக்குப் பொருந்தும் இப்பார்வை எழுத்தாளர் களுக்கும் பொருந்தும்.

மொத்தத்தில் இருவகைப் பத்திரிகைகளுக்கும் உள்ள பொதுப் பண்பு இப்போது முக்கியமாய் கவனிக்கப்பட வேண்டியது. வியாபாரக் கலாச்சாரம் என்ற அரக்கிதான் நம் எல்லோரின் முதல் குறி. காரணம், தமிழில் பத்திரிகை வியாபாரம் அமெரிக்கா மாதிரி பூதாகாரமாய்ப் பெருக ஆரம்பித்துள்ளது. சிறு பத்திரிகைகளின் முதல் எதிரி ஜனரஞ்சகப்

பத்திரிகைகள் என்று காணவேண்டும். அதன்பின், ஜனரஞ்சகம் என்பது பற்றிய ஆழமான ஆய்வில், பண்டிதரும் பட்டதாரிக் கும்பலும் கண்ணில் தென்படுவர். அதுபோலவே, சிறு பத்திரிகைகளுக்குள் உள்தாக்குதல் குறையும்; கட்சிக் கட்டுப்பாட்டுடன் வெளிவரும் பத்திரிகைகளின் வறட்டுத்தனமும் வெளிப்படாதிருக்காது. மும்முரமான தாக்குதல், பெரும் பத்திரிகை பல்கலைக்கழகங்கள் என்று திரும்பும். சிற்றிலக்கியப் பத்திரிகைகளின் லட்சியமான இலக்கியப் பார்வையும் ஆழங் கொள்ளும்' (படிகள்—ஜூன் 1979 ).

படிகள் சிறு பத்திரிகைகள் மீது கொண்ட அக்கறையையும், கண்ணோட்டத்தையும் அவை சம்பந்தமான கருத்துக்களின் முக்கியத்துவத்தையும் கருதியே விரிவான மேற்கோள்களை இங்கே சேர்க்க நேரிட்டது.

ஜனரஞ்சகப் பத்திரிகை உலகில் பெரும் கவனிப்புப் பெற்று, வாசகர்களின் பாராட்டுதலைப் பெரும் அளவில் சம்பாதித்த சுஜாதாவைப் பேட்டி கண்டு அந்த உரையாடலை விரிவாகப் பிரசுரித்தது படிகள் வரலாற்றில் விசேஷமாகக் குறிப்பிடத்தக்கதாகும்.

'சுஜாதா பெரும் பத்திரிகை உலகில் புகழுடன் விளங்கும், சிறு பத்திரிகைச் சூழலை நன்கு அறிந்த, நன்கு மதிக்கும் ஒரே எழுத்தாளர் என்ற முறையில் தமிழகச் சந்தையில் ( market ) நடக்கும் பெரும் பத்திரிகை இலக்கிய வியாபாரத்தைச் சுட்டிக் காட்டவும், தனி நபர் லாப நோக்கம் சமூகத்தில் ஓர் அங்கமான இலக்கியத்தையும் Commodity யாக மாற்றுவதை விளக்கவும் அவரை அணுகினோம்... சுஜாதா மீது தனிநபர் தாக்கு நடத்துவதால் தமிழ் இலக்கிய வியாபாரச் சூழலை அழிக்க முடியாது. வேண்டுமென்றால் ஒரு சுஜாதா எழுதாமல் இருக்கலாம், நம் வசைபாடலுக்குப் பயந்து ! ஆயிரம் சுஜாதாக்கள் வருகிறார்களே ! எங்கள் எண்ணம் சுஜாதாக்கள் வியாபாரப் பத்திரிகை குணத்துக்கு ஏற்பவுள்ள விதிகளுக்குத் தக உருவாகிறார்கள் என்பதே. எனவே இந்தச் சமூக நிகழ்வைச் சரியாய் விளக்குவதும், விளங்கிக் கொள்வதும் நம் கடமை. தனிநபர் பொறுப்பை நாங்கள் குறைக்கவில்லை என்பதைப் பேட்டியின் கேள்விகளில் உள்ள பண்பைக் கூர்ந்து கவனிப்பவர்கள் புரிவார்கள். இத்தகைய ஆய்வு இதுவரை பெரும் பத்திரிகை எழுத்தாளர்களைப் பயன்படுத்தி, சமூகவியல் பார்வையில், செய்யப்படவில்லை' (படிகள்).

படிகள் ஆழ்ந்த நோக்கின் ஆதாரத்தோடும், சிந்தனை கனத்தோடும் கேள்விகள் கேட்டுள்ளது. சுஜாதா (ஸ்ரீரங்கம் எஸ். ரங்கராஜன்) மனம் திறந்து பதில்கள் சொல்லியிருக்கிறார். ஆனாலும், மேம்போக்காகவும், நமக்கு ஏன் வீண் விவகாரம் என்ற எண்ணத்தில் பல கேள்விகளுக்கு, ஆம், இது மிக அருமையான ஆப்ஸர்வேஷன் என்று ஒத்துப் பாடியும், பாராட்டியும் நழுவியிருக்கிறார் என்பதை அவருடைய பல பதில்கள் புலப்படுத்துகின்றன.

பெரும் பத்திரிகை வாசகர்கள் குறித்து சுஜாதா சொல்லியிருப்பது ரசமான விஷயம் :

'ஒரு பெரும் பத்திரிகை வாசகன் எப்படி இருப்பான் என்று யாராவது ஆராய்ச்சி டாக்டரேட் கூட வாங்கலாம். நான் இது வரை நிறைய வாசகர்களைச் சந்தித்திருக்கிறேன். அவர்களிடம் பொதுவாகவே ஒரு Philistinism இருக்கிறது. சினிமா பார்ப்பது, கிரிக்கெட் காமெண்ட்ரி கேட்பது, பிக்னிக் போவது, சனிக்கிழமை டி. வி, பார்ப்பது, ஆர்கெஸ்ட்ரா, சங்கீதம் போன்ற வெறும் பொழுதுபோக்கு சமாசாரங்களுடன் கதை படிப்பதும் அவர்களுக்கு ஒரே ரகம். எனக்கு வரும் கடிதங்கள் பெரும்பாலும் மேம்போக்காக என் கதைகளைத் திகட்டத் திகட்டப் புகழ்ந்துவிட்டு, ஒரு கையெழுத்திட்ட போட்டோ கேட்கும் கடிதங்கள். இதற்கு என்ன காரணம் என்று யோசித்துப் பார்த்ததில் தெரிந்தது– நிச்சயம் இலக்கியப் பிரக்ஞை ஏதும் இல்லை. Association with the famous. அவ்வளவுதான். இதே கடிதத்தை அவன் ரஜினிகாந்துக்கும் எழுதுவான், கவாஸ்கருக்கும் எழுதுவான். எனவே பெரும் பத்திரிகையின் லட்சக்கணக்கான வாசகர்களில் தொண்ணூறு சதவிகிதத்திற்கு மேல் மேம்போக்கான வாசகர்கள், இலக்கியப் பிரக்ஞை இல்லாதவர்கள். அவர்களுக்கு இந்த மாதிரி சர்க்கரை தடவித்தான் தரவேண்டியிருக்கிறது. நீங்கள் கேட்கலாம், ஏன் பெரிய பெரிய பத்திரிகைகளில் எழுதாமலே இருந்து விடலாமே என்று. அது defeatism. என் குறிக்கோள், அந்த பத்து சதவிகிதத்தை அதிகமாக்குவது. அதற்காக இந்தக் கத்தி நடப்பு செய்ய வேண்டியிருக்கிறது' (சுஜாதா).

படிகள் இதர சிறு பத்திரிகைகளிலிருந்து முற்றிலும் மாறுபட்ட தன்மையிலேயே செயலாற்றியது. தனது நோக்கை அடிக்கடி எடுத்துச் சொல்ல வேண்டிய அவசியம் படிகளுக்கு இருந்தது.

'படிகளின் குறிக்கோள் வெறும் கலை சார்ந்த களன் அல்ல.

அதாவது ஓவியம் அல்ல, சிற்பம் அல்ல, நாடகம் அல்ல, கவிதை அல்ல, திரைப்படம் அல்ல, இசை அல்ல. ஆனால் இவைகளையும் மற்றும் அரசியல், சமூகவியல், தத்துவம், பொருளாதாரம், மானுடவியல், சரித்திரம், விஞ்ஞானம் முதலியவற்றையும் சேர்ந்த கலாச்சாரக் களனேயாகும்... கலாச்சாரம் என்று—வெறும் கலை சார்ந்த, இலக்கியம் சார்ந்த களனை யாரும் சொல்வதில்லை. வாழ்வின் இயக்கம் பற்றிக் கவலைப்படும் அனைத்துத் துறைகளையும் தழுவி அலசுவதுதான் கலாச்சார ஆய்வின் வேலை. படிகள் தன்னால் முடிந்த எல்லாத் துறைகளையும் தொட்டு நிற்கும் ஜீவித விருக்ஷம்...தமிழின் வாழ்வு பற்றிய முழுமையே எங்கள் அக்கறை. சமூகவியலாரும் மானுடவியலாரும் சொல்லும் 'கலாச்சாரம்' தான் எங்கள் களன்' என்று படிகள் அழுத்தமாக அறிவித்து வந்தது.

தமிழ்ப் பத்திரிகைகள்—சிறு பத்திரிகைகள் கூட—அக்கறை காட்டியிராத பல கனமான விஷயங்களைத் தனது வாசகர்களுக்கு அறிமுகப் படுத்துவதில் படிகள் ஆர்வம் கொண்டிருந்தது.

'சமூகவியலில் ஒரு புதிய திருப்பத்தைத் தோற்றுவித்த– அமெரிக்க நாட்டின் தலைசிறந்த சமூக விஞ்ஞானி– சமூக விஞ்ஞானத்தைச் சரியான பாதையில் கொண்டு சென்றவர்' என்று கீர்த்தி பெற்றவரான ரைட் மில்ஸ் பற்றி அறிமுகக் கட்டுரை (சிவராமன்).

'மார்க்ஸியத்திற்கு இன்று வரை அளிக்கப்பட்டுள்ள புரிந்து கொள்ளுதலில்—லெனினிசம், டிராட்ஸ்கியிசம், ஸ்டாலினிசம், மாவோயிசம் போல் குவேராயிசமும்' ஒன்று; அது 'ஒரு கூர்மையான ஆழமான ஆய்வுக்குரியது' என்று ஷே குவேரா பற்றி அறிமுகமும் ஆய்வும், (சேதுராமலிங்கம்).

எதற்கு எழுதுகிறோம்—ழான் பவுல் சார்த்தர் எழுதிய கட்டுரையின் தமிழாக்கம்.

மார்க்ஸியம்—தேடல்களில் எழும் பிரச்னைகள்—ராயன் ( 13 பக்கங்கள்).

புதிய இலக்கியக் கோட்பாடுகளைக் கற்பித்தலில் எழும் பிரச்னைகள்.

சமூக மாற்றமும் புதிய ஆதிக்க சக்திகளின் தோற்றமும்— நூல் அறிமுகம் ( பி. எஸ். ஆர். ).

சார்த்: ஓர் தத்துவத் தேடலின் புதிய பரிமாணங்கள் (சாரு நிவேதிதா ).

சோழர் காலச் சமுதாயமும் அரசும்: வேளாளர்களும் பிராமணர் களும் ( நூல் அறிமுகம்—பி. எஸ். ஆர். ).

இன்றைய கன்னட இலக்கிய விமர்சனம் : அன்னிய பாதிப்புகளும் சாதனைகளும் ( கன்னட மூலம் : கெ. வி. நாராயணன் ).

எழுத்து உடையும் காலத்தினூடே—நாகார்ஜுனன்.

க. நா. சு. வுடன் ஓர் உரையாடல்.

படிகள் வெளியிட்டுள்ள முக்கியமான கட்டுரைகள் இவை.

சிந்தனைக் கனம் நிறைந்த— படிக்கிறவர்களைச் சிந்திக்க வைக்கிற— விஷயங்கள்.

இவை தவிர ஈழம் பற்றிய பல கட்டுரைகள், தத்துவம் சம்பந்த மான சில சிந்தனைகள், விவாதங்கள், குறிப்புகளும் உண்டு.

மரபு ரீதியான எண்ணங்கள், போக்குகளிலிருந்து வெளிப்பட்ட சிந்தனைகளையும் பார்வைகளையும் கொண்ட கட்டுரைகளைத் தமிழவன் எழுதியிருக்கிறார். கதையும் கடவுளும்; கலாப்ரியாவின் கவித்துவக் குயில்; வன்முறையும் பாலுணர்வும் ஆகியவை குறிப்பிடத்தகுந்தவை. ஜே. ஜே. சில குறிப்புகள் என்ற புதுமையான நாவலுக்குத் தமிழவன் புதுமையான வகையில் விமர்சனமும் எழுதினார். ஸ்ட்ரக்சுரலிச விமர்சனம் என்று குறிப்பிடப்படும் அது உரையாடல் தன்மையில் எழுதப்பட்டிருந்தது.

இந்த விமர்சனத்திற்கு எதிரான குரல்களும் பின்னர் வெளிவந்தன. 'எழுத்து உடையும் காலத்தினூடே' என்ற தலைப்பில் பிரசுரமான நாகார் ஜுனன் உரையாடல், தமிழவனின் ஸ்ட்ரக்சுரல் விமர்சனம் குறித்தும், சுந்தர ராமசாமியின் நாவல் பற்றியும், மற்றும் இலக்கிய விமர்சனம், எழுத்து முறைகள் போக்குகள் குறித்தும் ஆழ்ந்து சர்ச்சித்துள்ளது.

பல்வேறு புதிய புத்தகங்கள் பற்றிய வேகமான விமர்சனங்களை— சூடான முறையில்—படிகள் வெளியிட்டது.

சிறுகதைகளில் படிகள் நாட்டம் கொள்ளவில்லை. என்றாலும் இரண்டு மூன்று கதைகளை அது பிரசுரித்தது. அவற்றுள் ஒன்று, நோபல் பரிசு பெற்ற எழுத்தாளர் கேப்ரியல் கார்சியா மார்க்வெஸ்

எழுதிய 'ஒரு செவ்வாய் பகல் தூக்கம்' என்ற கதையின் தமிழாக்கம் ( ஆங்கில வழி தமிழாக்கம் : விசாலாக்ஷி ). இதே கதை வேறு இரண்டு சிறு பத்திரிகைகளிலும் ( வெவ்வேறு எழுத்தாளர்களால் மொழிபெயர்க்கப் பட்டு ) பிரசுரமாயிற்று.

அபூர்வமாக எப்போதாவது கவிதைகளையும் படிகள் வெளியிட்டது. ஜெனகப்பிரியா, ஆத்மாநாம், விக்ரமாதித்தன் கவிதைகள் இடம்பெற்றுள் ளன. தலித் கவிதைகளின் மொழிபெயர்ப்பும், ஈழக் கவிதைகள் சிலவும் வெளியிடப்பெற்றுள்ளன.

உள்ளும் வெளியும் என்ற பகுதியில் பல பொதுவான விஷயங்கள், பிரச்னைகள், விவகாரங்கள் பற்றியும் படிகள் விறுவிறுப்பான குறிப்புகள் தந்தது. கன்னடப் பாடப் புத்தகங்களும் நவீன ப்ரக்ஞையும், தமிழ்ப் பாடநூல்கள், புதிய நாடக இலக்கியம், சாதிப்போர்வையில் வர்க்கப்போர், ஹரிஜனங்கள் நிலை, வியாபாரக் கலாச்சாரம்—இப்படி பலதரப்பட்ட விஷயங்கள் பற்றிய குறிப்புகளை இப்பகுதியில் காண முடியும்.

படிகள் சில தீவிரமான செயல்பாடுகளிலும் முனைந்தது. சிறு பத்திரிகைகளை ஒன்று சேர்த்து 'இலக்கு– கலாச்சார இயக்கம்' ஒன்றை நடத்த முன்வந்தது. வியாபாரக் கலாச்சாரம் பற்றிப் பேசியும் எழுதியும் எதிர்ப்பு காட்டுவதோடு நின்றுவிடாமல், செயல் முறையிலும் எதிர்ப்பை அறிவிக்க வேண்டும் என்று இலக்கு திட்டமிட்டது.

மதுரையில் உலகத் தமிழ் மாநாடு என்ற பெயரில் கோடிக்கணக் கான ரூபாய் செலவு செய்யப்பட்டு ஒரு 'கும்பமேளா' நடத்தப்பட்டபோது, இலக்கு இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் அங்கே தங்கள் எதிர்ப்புக் குரலை வெளியிட்டார்கள்.

அது சம்பந்தமாக படிகள் எழுதிய குறிப்பு இது :

'எழுத்தாளர்கள், புத்திஜீவிகள், கலாச்சாரவாதிகள் எல்லாம் சமூகத் தைப் பாதிக்கும் நிகழ்வுகளின்போது கைகட்டி சும்மா இருக்கக் கூடாது என்று இலக்கு செயல்பாட்டில் இறங்கியது. இந்திய சுதந்திரப் போராட் டக் காலத்திலும் சரி, நாசிகளின் எதிர்ப்பு இயக்கமும் சரி, அதிகமான புத்திஜீவிகளின் ஆதரவு இவ்வியக்கங்களுக்கு இருந்தது. தற்காலத் தமிழகத்தின் வாழ்வுச் சூழலில் புத்திஜீவிகளும் எழுத்தாளர்களும் பொது அக்கறை அற்றவர்களாய் தொடர்ந்தபோது இலக்கு முதன்

முதலில் இந்தப் போக்கை எதிர்த்தது., கீழ்வெண்மணியாயிருந்தாலும் சரி, நெருக்கடி நிலைமையாயிருந்தாலும் சரி, உலகத் தமிழ் மாநாட்டு ஏமாற்றுத்தனமாயிருந்தாலும் சரி, தமிழக எழுத்தாளர்கள், அறிவாளிகள் போன்றோர் மௌனம் சாதித்தே வந்திருக்கிறார்கள். இச்சூழலில் சமூகப் பொறுப்புணர்ச்சியுடன் இலக்கு நடத்திய ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு எதிர்ப்பு தமிழகத்தின் நாலு கோடித் தமிழர்களில் ஒரு சிறு கூட்டமாவது சுய உணர்வுடன் இருக்கிறது என்பதை வருங்கால சரித்திராசிரியனுக்கு விளக்கியது.

இலக்கு என்ற அமைப்பு, இலக்கியம், திரைப்படம்—நாடகம் தொடர்பாய் தமிழ்நாட்டில் என்ன நடந்தது, எத்தகைய போக்குகள் வெளிப்பட்டன என்றெல்லாம் ஆராய்வதற்காக சென்னையில் ஒரு கருத்தரங்கு நடத்தியது.

'சிறு பத்திரிகைகள் மத்தியில் தோன்றிய ஜனரஞ்சக எதிர்ப்பு இயக்கம் தன் சமூகப் பங்கை செயல்பாட்டுத் தளத்திலும் ஆற்ற முன்வருவது சரித்திரத்தில் முக்கியமான நிகழ்வு. இங்கு அகவயப்பட்ட இருட் குகைகளிலிருந்து வெளிப்படுவதும், புற உலகை தைரியமாய் ஏறெடுத்துப் பார்ப்பதும் சாத்யப்படுகிறது. இலக்கு செய்ய விரும்புவது போன்ற காரியங்கள் பொறுப்புடைய எல்லோராலும் ஊக்கப்படுத்தப்படும்' என்று படிகள் எழுதியது.

படிகள் தனது வாசகர்களிடையே ஒரு 'சர்வே' நடத்தியது. பலருக்கும் ஒரு படிவம் அனுப்பி, கேள்விகளுக்கு உரிய பதில்களை எழுதி அனுப்பும்படி கேட்டது. வந்து சேர்ந்த படிவங்களை ஒப்பிட்டு புள்ளி விவரங்கள் சேகரிக்கப்பட்டன. அவற்றை ஆய்வு செய்து, பெங்களூர் பல்கலைக்கழகத்தில் சமூகவியல் ஆய்வு செய்யும் பி. எஸ். ஆர். எழுதிய கட்டுரை படிகளில் பிரசுரமாயிற்று.

அந்தக் கட்டுரையின் முடிவுரை இது :

'மொத்தத்தில், சிறு பத்திரிகை வாசகர்களில் அதிகமானவர்கள் 40 வயதிற்கும் குறைவான மத்தியதர வர்க்கப் பின்னணியிலிருந்து வந்துள்ள, கல்லூரிப் படிப்புள்ளவர்கள். பலவாறான சிறு பத்திரிகைகளில் எழுதியும் வரும் இவர்கள், அதிக சமூக அக்கறையும், சமூக மாற்றத்திற்கான முயற்சிக்குச் சாதகமான மனநிலையையும் உடையவர்கள். சீரிய இலக்கிய வளர்ச்சிக்கும் சிக்கலான விஷயங்களில் விவாதங்களையும்

த.16.

மேற்கொள்ளும் இவர்களிடமிருந்துதான் கலாச்சார மேம்பாட்டுச் சக்திகளைப் பெறமுடியும்.'

படிகள் பாராட்டப்பட வேண்டிய ஒரு நோக்கைக் கொண்டிருந்தது. வணிக நோக்குப் பத்திரிகைகள் ஜனரஞ்சகம் என்று கூறிச் செயல்படுகின்றன. அவற்றுக்கு எதிர்ப்பு தெரிவிக்கும் சிறு பத்திரிகைகளோ வாசகர்களைக் கருத்தில் கொள்ளாது குறிப்பிட்ட ஒரு குழுவினருக்காக உருவாக்கப்படுகின்றன. இவ்விரண்டும் சரியில்லை என்று படிகள் கருதியது.

'ஜனரஞ்சகத்திற்கும் எலீட்டிசத்திற்கும் இடைப்பட்ட சீரிய பாதையை வளர்த்தெடுக்க வேண்டும். சரியான இப்பாதை இதுவரை வளரவில்லை. வாசகரை மறுக்கும் குழு இலக்கியத்தையும், வாசகரை மயக்கும் ஜனரஞ்சகத்தையும் ஒரு சேர விமர்சிக்க வேண்டும். ஜனரஞ்சகத்தை முற்றாய் மறுக்கவும் முடியாது. சமீபத்திய சிறு பத்திரிகைகளில் உருவாகி வரும் வாசகரை மறுக்கும் எழுத்துக்களையும் முற்றாக மறுக்க முடியாது. இரண்டையும் விமர்சித்து ஆரோக்கியமான கூறுகள் இரண்டிலிருந்தும் எடுக்கப்பட வேண்டும்'—படிகள்.

# 42. பரிமாணம்

தமிழ்நாட்டில் 'மார்க்சிஸ்டுகள்' என்று சொல்லிக் கொள்கிறவர் களுக்கு மார்க்ஸிசம் சரியாகவே தெரியாது; மார்க்ஸிய தத்துவத்தை அவர்கள் புரிந்து கொள்ளவேயில்லை என்று குறை கூறுகிற சிந்தனை யாளர்கள் பலர் இருக்கிறார்கள்.

மார்க்ஸிஸ்டுகள் என்று கூறிக்கொண்டு சோவியத் ரஷ்யாவை முழுமையாக ஆதரிக்கிற இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சியைச் சேர்ந்தவர் களும், சோவியத் ரஷ்யாவின் போக்கை விமர்சித்தும் குறைகூறியும் சீனாவின் போக்கை ஆதரிக்கும் மார்க்ஸிஸ்டு கம்யூனிஸ்டுக் கட்சியின ரும், உண்மையில் சரியான மார்க்ஸிஸ்டுகள் அல்லர் என்பது இந்த அறிவாளிகளின் அபிப்பிராயம் ஆகும்.

இவர்கள் மார்க்ஸியத் தேடலில் தொடர்ந்து ஈடுபடுகிறவர்கள். இவர்கள் 'New Lefts' என்று அறியப்படுகிறார்கள். இந்தவிதச் சிந்தனையாளர்களின் கட்டுரைகளும்– இவர்களது சிந்தனை வளர்ச்சிக் குத் துணைபுரிகிற அமெரிக்க, ஐரோப்பிய சிந்தனையாளர்களின் கட்டு ரைகளது மொழிபெயர்ப்புகளும்–படிகள், இலக்கிய வெளிவட்டம் போன்ற பத்திரிகைகளில் இடம் பெற்றுள்ளன. இந்த ரீதியான சிந்தனைகள், இலக்கிய விமர்சனங்களுக்கென்றே தனிப் பத்திரிகைகள் நடப்பதும் உண்டு.

கோயம்புத்தூரில் தோன்றிய 'பரிமாணம்' அப்படிப்பட்ட ஒரு பத்திரிகை ஆகும்.

"கலை இலக்கியத் துறையில் மார்க்ஸியம் ஆற்றல் மிக்க கோட் பாடாக இடம் பெற்றுள்ளது. கலை இலக்கியப் படைப்புகளின் வரலாற் றுப் பின்னணியை விளக்குவதில் மார்க்ஸியத்தின் சாதனை வியப்புக் குரியதாகி இருக்கிறது. ஒரு சமுதாயத்தின் வளர்ச்சியில் கலை இலக்கி யத்தின் பணியைச் சுட்டுவதில் மார்க்ஸியம் சரியான திசை வழியைக் காட்டுகிறது.

கலை இலக்கியவாதிகளின் ஆளுமைக்குள் வரலாறும் சமூகமும் இயங்குவதை மார்க்ஸியம் எடுத்து விளக்கும்போது, அத்தகைய தன்னறிவு பெற்ற படைப்பாளிக்குள் விசுவரூப தரிசனம் வாய்க்கிறது.

இந்த தரிசனம்– இந்த விரிந்த பார்வை– அற்புதங்களைச் சாதிக்கிறது.

ஆற்றலையும் கலையழகையும் இயல்பாகத் தனக்குள் தாங்கிய மனிதன், வரலாற்றுக் களத்தில் வித்தாகிறான். மார்க்ஸிய நோக்கில் இலக்கியவாதியின் விளைவு இத்தகையது.

அப்படியானால், மார்க்ஸியம் கலை இலக்கியப் பிரச்னைகளை முற்றாகக் கண்டதா, தீர்த்ததா என்பது கேள்வி.

மார்க்ஸியம் சந்தித்த பிரச்னைகளிலும் தீர்க்கப்படாதவை பல. தமிழகச் சூழலில் இது மேலும் உண்மை. தமிழகத்தின் கலை இலக்கியப் பிரச்னைகளைக் கண்டறிதலிலும் அவற்றைத் தீர்ப்பதிலும் மார்க்ஸியவாதி களுக்கு மிக முக்கிய கடமை உண்டு.''

இந்தப் பார்வையோடு பரிமாணம் செயல் புரிந்தது. தாமரை, செம் மலர் ஆகிய முற்போக்கு இலக்கியப் பத்திரிகைகளில் வந்த கதைகளை யும், முற்போக்கு இலக்கியப் படைப்பாளிகளின் நாவல்களையும் தீவிர ஆய்வுக்கு உட்படுத்தியது. தமிழ் இலக்கியத்தில் மார்க்ஸியர்களின் பார்வை, சாதனைகள் பற்றிய 'இலக்கியத் தேடலி'ல் அது ஈடுபட்டது.

கவிதை மொழிபெயர்ப்புகள், சமூகவியல், அறிவியல், தத்துவக் கட்டுரைகளின் தமிழாக்கம், சுயசிந்தனைக் கட்டுரைகள், விவாதங்கள் முதலியவற்றை 'பரிமாணம்' பிரசுரித்து வந்தது.

குணா, தமிழவன், கதிரவன், நாகராஜன், ஞானி முதலியவர்கள் இதில் எழுதினார்கள்.

# 43. தீவிரவாதப் பத்திரிகைகள்

'ஊருக்கு நல்லது சொல்வேன்—உண்மை தெரிந்தது சொல்வேன்' என்ற நோக்குடன், சமூகம், அரசியல், கலை. இலக்கியம் முதலிய சகல துறைகளிலும் கவனம் செலுத்தி, நிஜ நடப்புகளையும், தீவிரமான கருத்துக்களையும், சூடான சிந்தனைகளையும், காரசாரமான விமர்சனங்களையும் எடுத்துச் சொல்வதற்கென்றே சில சிறு பத்திரிகைகள் வந்து கொண்டிருக்கின்றன.

இவை எந்த அரசியல் கட்சி சார்பையும் கொண்டிருக்கவில்லை. அனைத்துக் கட்சிகளின் போக்குகளையும் விமர்சிக்கின்றன. வணிகப் பத்திரிகைகள், பெயர் பெற்ற கவிஞர்கள், எழுத்தாளர்கள், கலையுலகப் பிரமுகர்களின் உண்மைத் தன்மைகளை அம்பலப்படுத்துவதில் ஆர்வம் காட்டுகின்றன. சமூகத்தில் காணப்படுகிற சிறுமைகளையும் சீரழிவுகளையும் பிற்போக்குத்தனங்களையும் சாடுகின்றன. முற்போக்கான கதைகள், கவிதைகள், கட்டுரைகளையும் பிரசுரிக்கின்றன. அவ்வப்போது பிரபலஸ்தர்களைப் பேட்டி கண்டு, தங்கள் நோக்கில் கேள்விகள் கேட்டு, அவர்களது அபிப்பிராயங்களை வெளிப்படுத்துகின்றன.

'மன ஓசை' என்ற மாத இதழ் இவ்வகையைச் சேர்ந்தது. இது இதர பத்திரிகைகளில் வருகிறவற்றைவிட வித்தியாசமான கதைகளையும், உணர்ச்சிகரமான—எழுச்சியூட்டக்கூடிய— கவிதைகளையும் கட்டுரைகளையும் பிரசுரித்துள்ளது. கவிஞர்கள், கலைஞர்கள் பற்றிய சூடான விமர்சனங்களை வெளியிட்டிருக்கிறது. இதன் சினிமா விமர்சனங்களும் விறுவிறுப்பாகவும் கடுமையாகவும் அமைந்து காணப்படுவது வழக்கம்.

இந்தப் பத்திரிகையின் கேள்வி—பதில் பகுதியும் வேகம் நிறைந்ததுதான். ஒரு உதாரணம்—

கே : வாரத்தில் ஒரு நாள் உண்ணாவிரதம் இருப்பது நல்லது தானே?

ப : இதைப் பணக்காரர்களுக்குச் சொல்லும். அவர்களுடைய உடம்புக்கும் நல்லது. நாட்டுக்கும் நல்லது. ஏற்கெனவே உண்ணாமல்தான்

ஏழைகள் தூங்கி எழுகிறார்கள். அவர்களிடம் போய் இதைச் சொன்னீ ரானால் நன்றாக வாங்கிக் கட்டிக் கொள்வீர். அவர்கள் பட்டினி கிடக் காமல் இருக்க ஏதாவது வழி தெரிந்தால் சொல்லும். இல்லை என்றால் வாயை மூடிக்கொண்டு இரும்.

வேறொரு கேள்விக்கு உரிய பதில் எழுத்துலகத்தின் உண்மையை அம்பலமாக்குகிறது : 'மக்கள் பக்கம் நின்று எழுத முடியாதவர்கள் எல்லாம் இன்று வளவள என்று எழுதிக் கொண்டிருக்கிறார்கள். மக்கள் நலனில் அக்கறை இல்லாதவர்களிடம் நிறையப் பணம் இருக்கிறது. அந்தப் பணத்தைக் கொண்டு புத்தகங்களின் தரத்தை வளர்க்க முடியாது. புத்தகங்களின் எண்ணிக்கையைத்தான் கூட்ட முடியும்.

இலக்கியப் பணி, சமூகப் பணிகளை நோக்கமாகக் கொண்டு, 1976 முதல் வெளிவருகிறது 'மன ஓசை'.

கருத்துக்களைத் தீவிரமாக வெளியிடும் மற்றொரு மாத இதழ் 'தேன்மழை'. இது மாணவர் இயக்கப் பத்திரிகை. கல்லூரி மாணவர் களே இதன் ஆசிரியர், நிர்வாக ஆசிரியர், ஆசிரியர் குழுவினராகச் செயல்புரிகிறார்கள். சில வருடங்களுக்கு ஒருமுறை இப் பொறுப்பினர் களில் மாறுதல் ஏற்பட்டுப் புதியவர்கள் பணியாற்றுவதில் ஈடுபடு கிறார்கள்.

மாணவர் பிரச்னைகள், உரிமைப் போராட்டங்கள், கல்லூரிகளில் நிகழும் தில்லுமுல்லுகள்—ஊழல்கள், கல்வித் துறையில் காணப்படுகிற குறைபாடுகள் பற்றிய கட்டுரைகள் வேகத்துடன் எழுதப்படுகின்றன. நாட்டில், வாழ்க்கையில் நிகழ்கிற சகல ஊழல்களையும், சீரழிவுகளையும் தீவிரத் தன்மையோடு சுட்டிக் காட்டுகிறது 'தேன்மழை'. பெரிய பத்திரி கைகளில் வருகிற செய்திகளின் பின்னே மறைந்து கிடக்கும் மறுபக்க உண்மைகளையும், அரசியலில் ஆட்சியின் மற்றும் பல்வேறு கட்சிகளின் இயல்புகளையும் உணர்ச்சிகரமான நடையில் வெளிப்படுத்தும் கட்டுரை கள் இதில் பிரசுரம் பெறுகின்றன. மாணவர்கள் எழுதும் முற்போக்கு உணர்வு கொண்ட கதைகள், கவிதைகளும் இடம் பெறுகின்றன.

தீவிரமான எண்ணங்களை எடுத்துக் கூறும் பத்திரிகைகளில் 'சுட்டி' யும் சேர்கிறது. கையகல அளவில் வரும் சிறு பத்திரிகை இது. மாதம்தோறும் முதல் தேதியன்று தவறாது வெளிவரும் சுட்டி பல வருடங்களாகப் பிரசுரமாகிறது.

வணிகப் பத்திரிகைகள் பலவற்றினது உண்மைத் தன்மையையும் 'மசாலாப் பத்திரிகைகள்' என்ற தலைப்பில் சுட்டி வெளியிட்டு வாசகர்களைப் பெரிதும் ஈர்த்தது. அதேபோல் பிரசித்தி பெற்ற எழுத்தாளர்கள் பற்றியும் எழுதியது. சினிமா உலகப் பிரமுகர்கள் பற்றி கட்டுரைத் தொடர்கள் இதில் வெளிவந்துள்ளன. சமூக, அரசியல் துறைகளில் மலிந்துவிட்ட ஊழல்கள், குறைபாடுகள் பற்றிச் சிறு சிறு கட்டுரைகளும் தகவல்களும் வருகின்றன. கிண்டலும், பரிகாசமும் கலந்த கவிதைகள், குறிப்புகள் சுட்டியில் அதிகம் காணப்படும். வீட்டு வைத்தியம், மனித உடல் உறுப்புகள் பற்றிய மேலோட்டமான கட்டுரைகள், புத்தகங்கள் பற்றிய செய்திகள் தொடர்ந்து வருகின்றன.

வரவர 'சுட்டி' துணுக்குகள்—பிற பத்திரிகைகளிலிருந்து 'நன்றி' யுடன் எடுத்துப் பிரசுரிக்கும் புதுமையான, ரசமான, சூடான, சுவையான தகவல்கள் முதலியவற்றுக்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பது தெரிகிறது. சாதாரணமான கதைகளும் சுட்டியில் வெளிவரும்.

ஆரம்ப காலத்தில் 'சுட்டி'யின் துணிச்சலான போக்கினால் தாக்கம் பெற்ற இளைஞர்கள், தமிழகத்தில் வெவ்வேறு பகுதிகளில், சுட்டி மாதிரி பத்திரிகைகள் தொடங்குவதில் முனைப்புக் கொண்டார்கள். அம்முயற்சிகள் பலவும் ஒரு சில இதழ்களோடு முடிந்து போயின.

'மன ஓசை' மாதிரி 'புதிய கலாசாரம்' என்றொரு தீவிர ஏடு வந்து கொண்டிருக்கிறது. இதன் தீவிரப் போக்கு இளைஞர்களுக்கு உற்சாகம் அளிக்கிறது. இது பற்றி ஈடுபாட்டுடன் பேசி மகிழ்கிறார்கள்.

இன்றைய நிலைமைகளில் அதிருப்தி கொண்ட இளைஞர்கள் புதுமை வளர்ச்சிக்கும் சமூக மாற்றத்துக்கும் வாழ்க்கை நலனுக்கும் தங்களால் இயன்றதைச் செய்ய வேண்டும் என்ற துடிப்புடன் செயலாற்றுவதில் ஈடுபடுகிறார்கள். ஒரு அமைப்பு ஏற்படுத்திக் கொண்டு கூட்டங்கள், பட்டிமன்றங்கள், கருத்து அரங்குகள் நடத்திக் கருத்துப் பரிமாற்றங்கள் செய்வதோடு தங்கள் எண்ணங்களை வெளியிடுவதற்காக ஒரு பத்திரிகையும் நடத்துகிறார்கள்.

இவ்வகையான சிற்றேடுகள் அவ்வப்போது வெவ்வேறு இடங்களில் தோன்றி வெளிவந்திருக்கின்றன.

கோயம்புத்தூரில் 'இலக்கிய இயக்கம்' இப்படிச் செயல் புரிந்த

அமைப்புகளில் ஒன்று. அது 'துளிகள்' என்ற பத்திரிகையை 1981– ல் ஆரம்பித்துச் சில வருடங்கள் நடத்தியது.

'சமுதாய மாற்றத்தை விரைவுபடுத்தும் நோக்கத்தோடு பொதுமை நலக் கோட்பாட்டில் மக்களை ஒன்றுபடுத்துதல், நாட்டுப்புற மேம்பாட்டை மையமாகக் கொண்டு புதிய, எளிய, இலக்கிய வடிவங்களை மக்களுக்குத் தருதல், சிற்றூர் மக்களை அறவே எட்டாத மொழிக் கலவையை விலக்கி எளிய இலக்கிய வழியாக்கல்–இவற்றை நோக்கமாகக் கொண்டு இலக்கிய இயக்கம் பணிபுரிந்தது.

பயனுள்ள சிந்தனைகளைத் தூண்டும் நல்ல எழுத்துக்களோடு 'துளிகள்' வெளிவந்தது. அதன் அமைப்பும் நன்றாக இருந்தது.

கோவை நகரில் இலக்கிய, சமுதாய இளைஞர் அமைப்பான இளைய கரங்கள், 'இளையகரங்கள்' என்ற பத்திரிகையை நல்ல முறை யில் சில காலம் பிரசுரித்தது.

'தனக்குத் தானே அன்னியமாகிப் போய் தனக்கென ஓர் உலகைத் தேடி வெறுமையில் வாடும் இளைய நெஞ்சங்களே !

உங்கள் சோகங்களைப் பகிர்ந்து நம்பிக்கையுடனும் நல்ல நட்புட னும் புதுவுலகில் சஞ்சரிக்க இதோ ஓர் இதழ் ! தோள் கொடுக்க வாருங்கள், தோழர்களாய்ச் சேருங்கள்.

உங்கள் உலகம் உங்களை வரவேற்கிறது !' என்று இளைஞர்களை ஒன்று சேர்க்க இது முயன்றது.

வழக்கமான பல அம்சங்களோடு, சமுதாயவியல், சட்டவியல், மருத் துவம் போன்றவைகளிலும் 'இளையகரங்கள்' கட்டுரைகள் பிரசுரித்தது. இயக்கச் செய்திகளையும் வெளியிட்டு வந்தது.

கடலூர் 'இலக்கியச் சிந்தனை' என்ற இளைஞர்கள் அமைப்பு 'கோடுகள்' எனும் இதழை 1983–ல் வெளியிட்டது. ஆரம்ப எழுத்தாளர் களின் ஆர்வ முயற்சியாகவே இது அமைந்திருந்தது.

மதுரை மாவட்டம், த. ஆண்டிப்பட்டி, இளைஞர் மற்றும் சமுதாய வளர்ச்சி நிறுவனம் 'விழி' என்ற இதழை வெளியிடுகிறது. சமூக சிந்தனை தழுவிய படைப்புகளுக்கு முக்கியத்துவம் தருகிறது 'விழி'.

'விழித்தலும் விழிக்க வைத்தலுமே எங்கள் விதிமுறைகள். இது இளைஞர்களுக்குள்ளிருக்கின்ற சக்திகளை வெளிப்படுத்த தட்டுகின்ற முரசு. இந்த எழுத்துக்களால் இரவு விடியாமல் இருக்கலாம். ஆனால் தூங்குகிறவர்கள் விழித்தாக வேண்டும். மக்களைச் சுரண்டல் வலையி லிருந்தும் மூடப் பழக்கங்களிலிருந்தும், ஏமாற்றுவோர் கையிலிருந்தும் வெளிப்படுத்தும் வழிகளை எழுதுங்கள்' என்று விழி அறிவிக்கிறது.

இளைஞர் இயக்கச் செயல்கள், இளைஞர் கொள்கைகள் போன்ற வற்றையும் பிரசுரிக்கிறது.

செங்கல்பட்டு மாவட்டம், திருவள்ளூர் வட்டம், ஈக்காடு என்ற இடத்தில் சமூகநலப்பணி புரிகிற 'ஐகோடெப்' வழிகாட்டி என்ற இதழை வெளியிட்டு வருகிறது. சிறிது காலம் இது டைப் செய்யப்பட்டு ரோனியோ இயந்திரம் மூலம் பிரதிகள் தயாரிக்கப்பட்டு, பத்திரிகையாக வந்துகொண்டிருந்தது. பின்னர் அச்சுப் பத்திரிகையாக வளர்ச்சி பெற்றுள்ளது.

கிராமப்புறச் சீர்திருத்தம், கிராம மக்களின் நலனுக்கான சிறு தொழில்களின் வளர்ச்சி, குழந்தை நலம், சமூகப் பணிகள் முதலியவற் றில் 'வழிகாட்டி' அக்கறை காட்டுகிறது. கவிதைகள், கதைகளையும் பிரசுரிக்கிறது.

சென்னை, செந்தூரம் இலக்கிய வட்டம், 'செந்தூரம்' என்ற இதழைக் கொண்டு வருகிறது. ஆரம்ப காலத்தில் கையெழுத்துப் பத்திரிகையாக வளர்ந்த செந்தூரம் 1984 ஏப்ரல் முதல் அச்சுப் பத்திரி கையாகப் பிரசுரம் பெறுகிறது. இரண்டு மாதங்களுக்கு ஒருமுறை வெளிவரும் இந்த இதழின் ஆசிரியர் : கே. ஜகதீஷ்.

'வாழ்ந்து கெட்டவர்களின் வரலாறுகளும், வாழத் துடிப்போரின் எழுச்சிகளும், வாழ்க்கைக்கு விஷம் கலக்கும் மனிதர்களின் தோலுரிப் பும் இந்த இந்த இதழில் சங்கமிக்கின்றன.

பல பெரிய பத்திரிகைகள் பணம் சம்பாதிக்கும் நோக்கத்தோடு கவர்ச்சியான மசாலாத்தனங்கள், ஆப்செட் உதவியுடன் ஊரெங்கும் விநியோகம் செய்கையில், இது போன்ற சிறு பத்திரிகைகள் மலர்வதும் வளர்வதும் ஒரு வேதனை நிறைந்த போராட்டம்தான். என்ன செய்வது? போராட்டம் இல்லாமல் வாழ்வே இல்லையே !

நம்பிக்கையுடன்தான் நாங்கள் எழுதத் துவங்கியிருக்கிறோம். மக்கள் கலாச்சாரம் மலரச் செய்யும் மகத்தான நோக்கோடு, இலட்சியக் கனல்களால் எங்கள் எழுத்துக்கள் எழுகின்றன. நாளைய இலக்கியப் பாதைக்கு இன்று ஒரு புதிய அஸ்திவாரம் போடுகிறோம்.

நிகழ்காலப் பிரச்னைகளை மறந்த கற்பனைகள் எங்களுக்கு வேண்டியதில்லை. ஒரு புதிய உலகைப் படைக்கும் உத்வேகமுள்ள கருத்துக்களே எங்களுக்குத் தேவை.'

இப்படி 'செந்தூரம்' முதலாவது இதழில் அறிவிக்கப்பட்டுள்ளது.

இலக்கியம் யாருக்காக, இலக்கியமும் வாழ்க்கையும் என்பன போன்ற சிந்தனைக் கட்டுரைகள்; கவிஞர் மாயகோவஸ்கி, தந்தை பெரியார், சிரிப்பு நடிகர் சார்லி சாப்ளின் பற்றிய குறிப்புகள்; கார்ல் மார்க்ஸ், மாவோ சிந்தனைகள்; கதைகள், கவிதைகளும் செந்தூரம் இதழ்களில் வந்துள்ளன. தரமான திரைப்படம், நல்ல சினிமா இயக்குநர் பற்றியும் கட்டுரைகள் பிரசுரமாகியிருக்கின்றன. கவிஞர் எஸ். அறிவு மணி, கவிஞர் இன்குலாப் பேட்டிகளையும் செந்தூரம் வெளியிட்டுள்ளது.

முற்போக்கு இலக்கிய இதழ்களில், திருப்பூரிலிருந்து 1979–80களில் வெளிவந்த 'விழிப்பு' என்ற பத்திரிகை குறிப்பிடப்படவேண்டியது ஆகும். மு. நடராஜன் ஆசிரியராகவும் வெளியிடுபவராகவுமிருந்து நடத்திய இப் பத்திரிகையில் முற்போக்கு இலக்கியப் படைப்பாளிகள் பலரும் எழுதி வந்தனர். வறுமையையும், வாழ்வின் வெறுமையையும், போராட்ட நிகழ்ச்சிகளையும் காட்டும் நிழற்படங்கள் அட்டைச் சித்திரமாக அமைந்து, இப்பத்திரிகைக்கு ஒரு தனித் தோற்றம் தந்தன. கடைசிக் கட்டத்தில் இது 'யுகவிழிப்பு' என்ற பெயரைத் தாங்கி வந்தது.

# 44. சர்வோதயம்

உயர்ந்த குறிக்கோளுடன் நடத்தப்படுகிற ஒரு சிறு பத்திரிகை 40 வருடங்களுக்கு மேலாகவே, கொள்கைப் பிடிப்பை விட்டுவிடாமல், தான் தேர்ந்து கொண்ட லட்சியப் பாதையில் முன்னேறப் போராடிக் கொண்டிருக்கிறது. இது வியப்புக்கும் போற்றுதலுக்கும் உரிய ஒரு சாதனைதான்.

இந்த அரிய சாதனையை நிகழ்த்திக் கொண்டிருக்கும் சிறு பத்திரி கையின் பெயர் 'சர்வோதயம்'. இந்த மாத இதழ் இப்போது (1985–ல்) 42–வது ஆண்டில் அடி எடுத்து வைத்திருக்கிறது.

தமிழ்நாடு சர்வோதய சங்கம் என்ற அமைப்பின் சார்பில் நடை பெறுகிற 'சர்வோதயம்' கிராம மேம்பாட்டிற்காகவும், மக்களின் வாழ்க்கை வளத்துக்காகவும், நாட்டின் கைத்தொழில் வளர்ச்சிக்காகவும், மனிதகுலத் தின் நலன்களை வலியுறுத்துவதற்காகவும் காந்திய–சர்வோதயக் கொள் கையைப் பரப்புவதைத் தனது குறிக்கோளாகக் கொண்டிருக்கிறது. இக் கொள்கை பரப்பும் ஒரே இதழாகத் தமிழகத்தில் வெளிவரும் இப் பத்திரி யின் ஆசிரியர்–திரு. வெ. இராமச்சந்திரன்.

இவர் தமிழ்நாடு சர்வோதய சங்கத்தின் முன்னாள் தலைவரும், அகில இந்திய காதிக் கமிஷனின் முன்னாள் செயலாளரும் ஆவார். தொழில் துறை, பொருளாதாரம், சமூகவியல், கல்வித் துறை முதலிய பல விஷயங்களில் அக்கறையும் ஆர்வமும், அறிவுத் தேர்ச்சியும், தெளிந்த சிந்தனையும், அச்சிந்தனையை விரிவாகவும் விளக்கமாகவும் எடுத்துச் சொல்லும் ஆற்றலும் இவர் பெற்றுள்ளார். சர்வோதயம் இதழ்களில் இவர் எழுதும் கட்டுரைகள் இவருடைய திறமைக்கும் உழைப்புக்கும் சான்றுகளாக விளங்குகின்றன.

கிராமப் பொருள்கள் வளர்ச்சியை முக்கியமானதாகக் குறிப்பிடும் சர்வோதயம், காந்திய வழியை–காந்திய தத்துவத்தை, அதன் உயர்வை எடுத்துக் கூறுகிறது. தனிமனித ஒழுக்கம், நேர்மை, சத்தியம், அயராத உழைப்பு, சுய கட்டுப்பாடு முதலியவற்றின் அவசியத்தைச் சுட்டிக் காட்டு கிறது. அதற்கேற்ற சான்றோர் வாக்குகள், அறிஞர் பொன்மொழிகள்,

தலைவர்களின் சிந்தனைகளை இதழ்தோறும் பிரசுரிக்கிறது. 'இம்மாதச் சிந்தனை' ஒரு முக்கிய அம்சமாகும்.

செய்திகளோடு தொடர்புகொண்ட கருத்துச் சித்திரம் அழகிய முறையில் அட்டைப்படமாக அச்சிடப்பட்டு, உ ள் ளே 'அட்டைப்பட விளக்கம்' என்று ஒரு ஆய்வுக் கட்டுரை விரிவாகப் பிரசுரம் பெறுகிறது.

காந்தியப் பொருளாதார அடிப்படையில் பல்வேறு தொழில்கள், கைத் தொழில்கள், சிறு தொழில்கள்—அவற்றின் நிலைமை, அவை எதிர் கொள்ளும் பிரச்னைகள்—பற்றிய ஆய்வுக் கட்டுரைகள் புள்ளி விவரங்க ளுடன் ஒவ்வொரு இதழிலும் வெளிவருகின்றன.

இந்த ரீதியில், மீன் பிடிப்புத் தொழில், மீனவர் பிரச்னைகள், கரும்பு விளைவித்தல், சர்க்கரைத் தொழில், அச்சுத் தொழில் போன்ற விஷயங்கள் சில இதழ்களில் ஆராயப்பட்டுள்ளன.

காந்தியப் பொருளாதாரத்துடன் கதர், கிராமக் கைத்தொழில், கிராம மேம்பாடு, இயற்கை மருத்துவம், இலக்கியம், சிறு துணுக்குகள், சுவையான பல தகவல்கள், சிந்தனைக்குரிய விஷயங்கள் மற்றும் அரசியல் விவகாரங்கள் சம்பந்தமான கட்டுரைகளை சர்வோதயம் வெளி யிடுகிறது.

நாட்டின் சுதந்திரமும் மக்களின் வாழ்க்கை நலனும் வளமும் பாது காக்கப்படவேண்டும். அதற்கு ஒருமைப்பாடும் ஒற்றுமையும் காத்து வளர்க்கப்பட வேண்டியது அவசியமாகும். இதை ஆணித்தரமாகக் கூறும் கட்டுரைகள் சர்வோதயத்தில் வருகின்றன.

'பாரதத்தைக் கா த் து பலமடைய, வளமடையச் செய்வதற்கு அண்ணல் காந்தியடிகள் காட்டியுள்ள வழியே சரியானது என்பது நமது உறுதியான நம்பிக்கையாகும். இப்பணி இனி மக்களின் ஆற்றலால்தான் நடைபெற முடியும். மக்களின் சக்தியை ஒன்று திரட்ட கிராமங்கள் தோறும், தெருக்கள்தோறும் சென்று மக்களை விழிப்படையச் செய்ய வேண்டும். அவர்களை ஒன்று திரட்ட வேண்டும். பயிற்சியடைந்த ஊழியர்களின் படை ஒன்றைத் தோற்றுவிக்க வேண்டும். ஒரு கட்சி அரசு போய் வேறு கட்சியின் அரசு அமைய வேண்டும். ஆட்சிமுறை புதியதாக இருக்க வேண்டும். புதிய சமுதாய அமைப்பு வேண்டும் என்பது மட்டும் போதாது, கீழே இருந்து மேல் மட்டம் வரை ஒரு

மாற்று ஏற்பாடு வேண்டும். தற்போதுள்ள அரசியல் சுழலில் சுற்றிக் கொண்டிருப்பதால் எத்தகையதொரு பலனும் ஏற்படப் போவதில்லை. சமுதாயத்தில் நமது முன்னோர்கள் நமக்களித்துள்ள நீதி, நேர்மை என்ற மூலதனம் எஞ்சியுள்ளது; அதைக் காக்க வேண்டும். கீழேயிருந்து புதிய பாரதத்தைத் தோற்றுவிக்கும் பணியைத் துவக்க வேண்டும். இதுவே உண்மையான நிர்மாணப் பணியாகும்.'

இன்றைய இந்தியாவின் நிலையைப் பற்றிச் சிந்திக்கும் ஒரு கட்டு ரையின் முடிவுரை இது.

'இன்று—

சத்தியத்தின்மீது நம்பிக்கை கொண்டவர்கள் தன்னம்பிக்கையற்றவர் களாக, சமுதாய நம்பிக்கையை இழந்தவர்களாகக் காணப்படுகிறார்கள். ஆதலால், அவர்கள் புலம்புகின்றார்கள். வெறும் புலம்பலால் என்ன பயன் விளையும் ?

தூங்கிக் கிடக்கும் தனிமனித, சமுதாய, மனச்சாட்சியைத் தட்டி எழுப்ப வேண்டும்.

உண்மையின் குரல் உரத்துக் கேட்க வேண்டும்.

உண்மையை நிலைநாட்டத் தொடர்ந்து போராடக் கூடிய மக்கள் சக்தியின் எழுச்சி வேண்டும்.

காந்தியடிகளின் வாழ்க்கை நமக்கு வழிகாட்டி. அவருக்குச் சத்தியத்தின் வெற்றி, தானே கிடைக்கவில்லை. அதற்காக அவர் செய்த தியாகத்தை நாம் உணர்ந்தாக வேண்டும்.

... ... ... ...

சத்தியம் உயிரோட்டமுள்ளதாக, சத்தியத்தில் நம்பிக்கை கொண்ட வர்கள் ஒன்று திரண்டு, ஒருங்கிணைந்து செயல்பட வேண்டும். செயல் பட்டால்—

வாய்மை வெற்றி பெறக் காண்போம்.'

வாய்மையின் உயர்வை உபதேசிக்கும் ஒரு கட்டுரையின் இறுதிப் பகுதி இது.

'காந்தியடிகளின் கருத்துக்கேற்ப யாதொரு வளர்ச்சித் திட்டம் வகுப்பினும் அதில் "தனக்கு" (சுயநலத்துக்கு) இடமே இல்லை. இத்த கைய தன்னல உணர்வற்ற ஒரு மனிதனை மையமாக வைத்ததொரு

சமுதாயத்தையே அவர் காண முயன்றார். அவனுக்குத் தனதென்றிருப்ப தெல்லாம் அவனது ஆன்மாவும், ஒரு வாழ்க்கை இலக்கும், தன்னுணர் வுமே. இந்த உணர்வு சுதேசிய வண்ணமாகத் தன்னைச் சுற்றியுள்ள சமுதாயத்திலும், அத்தகைய சிறு சமுதாயங்களைக் கொண்ட நாட்டளவி லும், மனித இனம் என்ற உணர்வால் உலகனைத்திலும் செயல்படும். உலகில் போர் மூளுகிறது என்றால் காரணம் உலகில் ஏதோ கோளாறு காரணமாக இல்லை; மனித உள்ளங்களில் போர் தொடர்ந்து நடைபெறு வதாலேயே. எனவே, உலக அரங்கில் சமாதானம் நிலவ பிரகடனங்க ளால் மட்டும் முடிந்து விடாது. மனித உள்ளங்களிலிருந்து வன்முறை யைக் களைந்தாலன்றி, ஊரிலோ, நாட்டிலோ, உலகிலோ சமாதானம் நிலவ முடியாது. இதைத் தனிமனிதன் தனக்குத் தானே கட்டுப்பாடு களை ஏற்றும், தக்க கல்வி கற்றும், உரிய பயிற்சிகள் வழியாகவும், சமுதாய, பொருளாதார அமைப்புகளைத் திருத்தியமைத்து, பொருள் குவியாமை, சுரண்டலின்மை வழியாக ஓர் அகிம்சை சமுதாயத்தை நிர்மாணம் செய்ய மனப்பூர்வமாக முயன்றாலன்றி அடைவது சாத்திய மில்லை.'

சர்வோதயம் ஆசிரியர் வெ. இராமச்சந்திரன் எழுதிய ஒரு கட்டுரை யில் காணப்படும் கருத்து இது.

இத்தகைய உயர்ந்த லட்சியத்தை உணர்த்தும் கட்டுரைகள் சர்வோ தயம் இதழ்களில் வெளிவருகின்றன. இந்நோக்கில் காந்திஜி, வினோபா, ஆச்சார்ய கிருபளானி, ஜெயப்பிரகாஷ் நாராயண் முதலிய தலைவர்கள் வலியுறுத்தி வந்த கருத்துரைகளும் பிரசுரம் பெறுகின்றன.

சர்வோதயம் மற்றும் கதர் இயக்கம் சம்பந்தமான செய்திகள் 'சுற்றி வந்தபோது' என்ற பகுதியில் தரப்படுகின்றன. கேள்வி– பதில் பகுதியும் உண்டு.

சர்வோதயம் இலக்கியத்திலும் அக்கறை கொண்டிருக்கிறது. சமுதாய நோக்குடன் எழுதப்படும் கவிதைகளைப் பிரசுரிக்கிறது. உயர்ந்த கருத்துக்களை வெளிப்படுத்தும் தொடர் கதை ஒன்றையும் வெளியிடுகிறது. சர்வோதயம் கோவையிலிருந்து பிரசுரமாகிறது.

# 45. இன்னும் சில பத்திரிகைகள்

## புது விடியல்

'இன்று வரும் மாறுதல்களை நாம் மறக்கமுடியாது. ஆனாலும் சமுதாய சீர்திருத்த வழிகளில் வரும் சிக்கல்களைத் தகர்ப்பது அவசியமே....

புது விடியல்—இது எந்த அரசியல் உலாவிலும் சேராது. ஆனால், தனியாகவே வாசகர்களை உள்ளடக்கிச் செல்லும். இது எந்த முலாம் பூச்சுகளிலும் முகம் புதைத்துக் கொள்ளாது. ஒரு தெளிந்த சிந்தனையை, செம்மையான பாதையை இதனுள் காணலாம்.

காகிதக் கவர்ச்சியில் ஈடுபட்டவர்கள் இந்தப் பத்திரிகையைப் படிக்க வேண்டிய அவசியமில்லை. இவர்களுக்கு வேண்டுமானால் உளுத்துப்போன சிந்தனைகள் வெளியே பற்றாக்குறையின்றிக் கிடைக்கும்.

சிலர் தடுமாறுகிறபோதும், தடம் மாறுகிறபோதும், தாக்கி விட்டுச் செல்லும்போதும், பெருஞ்சோதனைகளை இது சாதனையாகவே மாற்றிப் படைக்கும் !'

முதல் இதழில் இவ் 'வெளிச்ச வரிகள்' அறிவிப்போடு, கும்பகோணம், புது டபீர் தெரு, பழ. ராதாக்கண்ணன் 'புது விடியல்' என்ற இதழை 1984 செப்டம்பர் முதல் பிரசுரித்தார். சமூக நோக்குடன் பல பிரச்னைகளையும் ஆராயும் கட்டுரைகள், கதைகள், கவிதைகள் வெளியிடப்பட்டுள்ளன.

சிறந்த படைப்பாளியும், 'பசித்த மானுடம்' என்ற அருமையான நாவலின் ஆசிரியருமான கரிச்சான் குஞ்சு (ஆர்.நாராயணசுவாமி ) 'அவன் கதை' என்ற ரசமான தொடர் கதை ஒன்றை இதில் எழுதினார்.

மஞ்சள் பத்திரிகைத்தனமான எழுத்துக்களை வளர்க்கும் வணிகப் பத்திரிகைகளையும், பணத்துக்காகப் பெரிய பத்திரிகைகளின் தேவைகளைப் பூர்த்தி செய்வதில் உற்சாகமாக ஈடுபடும் எழுத்து உற்பத்தியாளர்களையும் புதிய விடியல் காரசாரமாகக் கண்டனம் செய்து வந்தது.

## புது விழிகள்

இதுவும் கும்பகோணத்திலிருந்துதான் வெளிவந்தது. ஆசிரியர் இராம. உமாசந்திரன். இம்மாத இதழ் சமூகப் பிரச்னைகளைச் சூடாக ஆராய்ந்தது. கவிதைகள், கதைகளோடு புத்தக விமர்சனத்திலும் இது அக்கறை காட்டியது. படைப்பாளிகளைப் பேட்டி காண்பதோடு, சமூகத்தின் அடிமட்டத்தில் வசிக்கிற உழைப்பாளி மக்களையும் (உதாரணமாக, கூலி விவசாயத் தொழிலாளர்கள், துப்புரவுத் தொழிலாளர்கள் போன்றவர்களை) பேட்டி கண்டு, அவர்களுடைய பிரச்னைகளையும் குறைகளையும் வெளிச்சத்துக்குக் கொண்டு வந்தது.

கரிச்சான் குஞ்சு இதில் சர்ச்சைக்குரிய விஷயங்கள் பற்றி கட்டுரைகள் எழுதினார்.

## நீலமலை பனி மலர்

இது 1979–1980–ல் நடைபெற்ற தரமான சிறு பத்திரிகை. கனமான விஷயங்களைப் பிரசுரித்து வந்தது. இலக்கியத்துடன் நவீன ஓவியம், சினிமா, சமூகப் பிரச்னைகளிலும் அக்கறை கொண்டிருந்தது. சார்த், ஆல்பெர் காம்யு பற்றிய ஆய்வுகளை வெளியிட்டது. அபத்த நாடகங்களில் ஆர்வம் காட்டியது. தி. ஜானகிராமன், வெங்கட் சாமிநாதன் பேட்டி கண்டு பிரசுரித்திருந்த உரையாடல் குறிப்பிடத்தகுந்தது. தமிழவன், நிவேதிதா, கௌதமன், மணிக்கண்ணன், நாகூர் ரூமி முதலியோர் இதில் எழுதியிருக்கிறார்கள்.

சிறு சூழலும் சரி, அதற்கப்பாலும் சரி. மார்க்ஸியத்தின் வசீகரம் பரவலாக உணரப்படுவதும், அதன் தாக்கத்திற்கு இத்தலைமுறையினரின் பெரும்பான்மையான அறிவுஜீவிகள் உட்படுவதும் காணமுடிகிறது. இந்த உண்மையினைக் கண்மூடித்தனமாக ஆதரிப்பதில் நாங்கள் தயக்கம் கொள்வதுடன், இப்போக்கினை ஓர் ஆழமான ஆய்வுக்கும் விவாதத்திற்கும் உட்படுத்தவும் விழைகிறோம். வெறும் அறிவைப் பூசித்து மனித விமோசனத்திற்கான எழுச்சிகளில், போராட்டங்களில் சிரத்தையற்ற லபுடான்கள் எத்துணை மார்க்ஸியம் பேசினாலும் அவர்களில் நம்பிக்கை கொள்ள பனி மலர் தயாராயில்லை. நல்ல விஷயமாயிருப்பினும் கூட அவைகளைத் 'தெரிந்து கொள்வதற்கும்' 'அறிந்து கொள்வதற்கும்' நிறைய வித்தியாசம் உண்டு. ஒன்றைத் தெரிந்து கொண்டதனால் மட்டும் அதனை அறிந்து கொண்டவனாய் ஒருவன் மாறிவிட முடியாது. இது பனிமலர் அறிவித்த கருத்துரையாகும்.

உதக மண்டலத்திலிருந்து வெளிவந்தது பனிமலர். ஆசிரியர் அரு. அய்சானுல்லா.

'ப்ருந்தாவனம்' பெங்களூரிலிருந்து வெளிவரும் இலக்கியப் பத்திரிகை.

'அறிவுத்தேடலுக்கான ஒரு முயற்சி என்ற ஒத்துக் கொள்ளலுடன் வெளிவந்த ப்ருந்தாவனம், இன்னும் அதிகத் தெளிவுள்ள ஒரு பாதையைத் தனக்கென வகுத்துக் கொள்வதில் சிறிது காலம் தாழ்த்தி, மறுபடியும் வெளிவந்துள்ளது' என்று அதன் ஆறாவது இதழில் அறிவித்தது.

'சிறு பத்திரிகைகள் தங்களுக்கென ஒரு வட்டத்தை இட்டுக் கொண்டு அவற்றினுள்ளேயே உழலும்போது, பெருவாரியான வியாபாரப் பத்திரிகை வாசகர்கள் மத்தியில் தங்கள் கருத்துக்களை எடுத்துச் சொல்வதில் தேக்கமடைகின்றன அல்லது தோல்வியுறுகின்றன. இந் நிலையைத் தவிர்க்கச் சிறு பத்திரிகை வாசகர்களுக்கு மட்டுமேயல்லாது, மற்ற வாசகர்களுக்கும் பொதுவான விஷயங்கள் குறித்த கருத்துக்களை வெளிப்படுத்துதல் அவசியமாகிறது. எனவே வியாபாரப் பத்திரிகைகள் இன்று தங்கள் வாசகர்களிடையே அறிமுகப்படுத்தியுள்ள கலை இலக்கியப் போக்குகளையும் வாழ்க்கை மதிப்பீடுகளையும் விமர்சித்து, மாற்றுப் படைப்புக்களை அவர்கள் மத்தியில் அறிமுகம் செய்கின்ற வழியிலும் இடைநிலைப் பத்திரிகைகளின் (middle magazines) அவசியத்தை வலியுறுத்தும் வகையிலும் ப்ருந்தாவனம் செயல்படும்.

இத்தகைய நிலைப்பாட்டில் எந்தக் குறிப்பிட்ட அரசியல் கோட்பாடுகளுடனும் இனம் காணுவதை ப்ருந்தாவனம் தவிர்க்கிறது' என்று அறிவிக்கப்பட்டிருக்கிறது.

# 46. இலக்கிய இதழ்கள்

சமூகப் பார்வையோடு எழுதப்படுகிற 'முற்போக்குக் கவிதைகள்' எழுதுவோர் அதிகரித்து வருகிற காலத்திலேயே, தனிமனிதப் பார்வையுடனும் உள்ளத் தேடல் ஈடுபாட்டுடனும் தூய இலக்கிய உணர்வோடு கவிதைகள் எழுதுகிறவர்களும் வளர்ந்து வருகிறார்கள்.

வெறும் இலக்கியம் என்று மட்டுமல்லாது கலை, ஓவியம், நாடகம், பொருளாதாரம், சமூகப் பிரச்னைகள் மற்றும் மனிதரைப் பாதிக்கும் பல்வேறு விஷயங்களிலும் கவனம் செலுத்த வேண்டும் என்று வலியுறுத்தி, அந்நோக்குடன் செயல்படுகிற சிறு பத்திரிகைகள் பல உள்ளன. அதே சமயத்தில் தனி இலக்கியத்துக்காக (ப்யூர் லிட்டரேச்சர், ஸீரியஸ் லிட்டரேச்சருக்காக) என்று மட்டுமே நடத்தப்பட்ட, படுகிற இதழ்களும் உள்ளன.

இவற்றில் முக்கியமான சிலவற்றை இங்கே கவனிக்கலாம்.

ழ—கவிதை மாத ஏடு. ஆசிரியர் : ஆத்மாநாம்.

'எழுபதுகளின் துவக்கத்தில் வெளிவந்து கொண்டிருந்த கவிதைகளின் போக்குகளிலிருந்து மிகச்சில கவிஞர்களே தங்களது தனித்துவத்தையும் புதியதோர் எதிர்க் குரலாய் உறுதிப்படுத்திக் கொண்டுள்ளார்கள். இன்றைய கவிதைகள் கருப்பொருளிலும் வெளிப்பாட்டுத் திறத்திலும் சிறப்புற்று இருக்கின்றன. தலைமுறை இடைவெளி இன்றைய கவிதைகளில் காணக் கிடைக்காத ஒன்று. புதிய உள்ளோட்டத்துடன் வாழ்க்கையின் பல்வேறு பிரச்னைகளையும் தத்துவ தரிசனங்களையும் இவை முன் நிறுத்துகின்றன. இத்தகைய கவிதைகளை 'ழ' தனது இருபத்திநான்கு இதழ்களில் அளிக்க முயற்சித்துள்ளது. நவீன உருவத்தோடும் புதிய உள்ளடக்கத்தோடும் செறிவுடனும் கூடிய கவிதைகள் புதியவர்களிடமிருந்து நிறைய வர வேண்டும்.'

இப்படி 'ழ' தனது 24—ம் இதழில் (கடைசி இதழ்) அறிவித்துள்ளது.

ஞானக்கூத்தன், ஆத்மாநாம், பிரம்மராஜன், கலாப்ரியா, கல்யாண்ஜி, காஸ்யபன், தேவதச்சன், ஆர். ராஜகோபாலன் முதலிய கவிஞர்களும்,

க. நா. சுப்ரமண்யம், நகுலன் போன்ற முன்னோடிகளும், மற்றும் பல புதியவர்களும் 'ழ' வில் எழுதியிருக்கிறார்கள். பிறநாட்டுக் கவிஞர்களின் படைப்புகளையும் 'ழ' மொழிபெயர்த்து அளித்தது.

'ழ' கவிதையில் மிகுந்த அக்கறை காட்டியது. 'பொருளே இல்லாத கோஷங்களைப் பொய் அபிமானங்களில் கலந்து ஒரு காகிதத் தயாரிப் புத் தொழில்போல் கவிதைத் தொழில் புரிய கும்பல் கும்பலாக நபர்கள் புறப்பட்டிருப்பதைப் பார்த்துக் கொண்டிருக்க நேர்வது நிச்சயமாக அவஸ் தைதான்....இதுவரை அநேகமாகக் கவிதைகளை மட்டுமே வெளியிட்டு வந்ததுபோக, இனி கவிதை குறித்த கட்டுரைகளையும் 'ழ' தாங்கி வரப் போகிறது. கவிதை என்பதை ஓர் அறிவார்த்த வேஷமாகத் தரித்திருப்ப வர்களை அடையாளம் காட்ட கட்டுரைகளால்தான் முடியும். கவிதை நிஜம். பொய்யையே வாழ்க்கையாகக் கொண்டிருப்பவர்களையும் பற்றிக் கவிதை எழுதலாம். ஆனால் கவிதையில் பொய்ம்மை கூடாது. கவிதை யென்ற பெயரில் புனையப்படுகிற பொய்களைக் களைய முற்படுவது அதனால்தான் அவசியமாகிறது.'

'ழ' அதன் 9–ம் இதழில் இப்படிக் கூறியது. அவ்விதமான கட்டுரை கள் சில அவ்வப்போது 'ழ' வில் வந்துள்ளன.

புதிதாக வெளிவந்த கவிதை நூல்கள் பற்றிய விரிவான விமர் சனங்களை 'ழ' பிரசுரித்திருக்கிறது.

'அனுபவத்தில் பார்க்கும்போது இன்றைய கவிதைகளுக்கு இளைஞர்களிடையே நல்லவிதமான வரவேற்பும் எதிர்விளைவுகளும் இருக்கத்தான் செய்கின்றன. ஒரு நல்ல கவிதையை இனங்கண்டு கொள்ளும் கூர்மைப்படுத்தப்பட்ட உணர்வை இளைஞர்களிடத்தில் எளி தாகவே பார்க்க முடிகிறது. இருந்தும் துரதிர்ஷ்டவசமாக எல்லாத் தயாரான இளைஞர்களுக்கும் கவிதை போய்ச் சேருவதில்லை. அப்படியே போய்ச் சேர்ந்தாலும் தொடர்ந்து கவிதைகளுடன் பரிச்சயத்திற்கான வாய்ப்பு கைவரப் பெறாமல் போகிறது. இரண்டு வழிகளின் மூலமாக இதைச் செய்ய முடியும் என்று எண்ணத் தோன்றுகிறது. ஒன்று, கவிதைகளை வெளியிடும் பத்திரிகைகள் கவிதை ஒரு உன்னதமான கலை வெளிப்பாடு என்பதை உணர்ந்து கொண்டு அதற்கான சரியான அந்தஸ்தைத் தரவேண்டும். இரண்டு, கவியரங்கங்களில் கவிஞர்களை அவர்களின் கவிதைகளை வாசிக்கச் சொல்ல வேண்டுமே தவிர, தலைப்புகள் கொடுத்து வாசிக்கச் சொல்லக் கூடாது. இவைகளே

உண்மையான கவிதைகளை இளைஞர்களுக்குக் கொடுக்கக் கூடும்.'

கவிதையின் நலனுக்கான இத்தகைய கருத்துக்களையும் 'ழ' முன் வைத்தது. அது தொடர்ந்து வந்திருந்தால், கவிதையில் சோதனைகளை யும் சாதனைகளையும் கணிசமான அளவில் புரிந்திருக்கக் கூடும் என்ற எண்ணத்தை 'ழ' வின் இதழ்கள் தருகின்றன.

'ழ' முதல் இதழ் 1978 மே மாதம் வெளிவந்தது. அதன் 24 –ம் இதழ் 1983 ஜனவரியில் வந்தது.

**கவனம்**— இலக்கியத் தரமான கவிதை, கட்டுரை முதலியவற்றைப் பிரசுரிப்பதற்காக 1981 மார்ச்சில் தோன்றிய சிற்றேடு. ஆசிரியர் ஞானக் கூத்தன்.

'பத்திரிகை என்ற சாதனம் படைப்பிலக்கியத்தைச் சேர்த்து இன்னும் பிற துறைகளையும் கவனிக்கக் கூடியது. சிற்றேடுகள் இன்ன மும் இலக்கியத்தையே குறியாகக் கொள்ள வேண்டிய கட்டாயத்தில் இருந்த போதிலும்கூட, கருத்துக்களைக் கொண்டு செல்லும் சாதனம் என்ற அளவில் பிற துறை நிகழ்வுகளை அறிந்து கொள்ள வேண்டு வது அவசியமாகும். இந்த முறையில் நவீன ஓவியம் சிற்றேட்டியக்கத் தில் பெரும் பங்கு வகிக்கிறது. இவ்வாறே இதர துறைகளும் பங்கு பற்றும்பொழுது இந்த நூற்றாண்டின் புதிய தமிழ்ப் பத்திரிகையின் உருவம் முழுமையாகப் பிடிபடும். ஏனென்றால் முழுமையான பத்திரிகை என்பது ஒரு துறையின் நஷ்டத்துக்குக் கிடைப்பதாகாது. முழுமையான பத்திரிகை பலதுறைகளைக் கவரக் கூடியதானாலும், அதனாலேயே ஒரு துறைக்குப் பிரத்யேகமான பத்திரிகை வேண்டுவதன் அவசியத்தைப் போக்கிவிடாது. எந்தத் துறையோடும் அளவளாவும் இலக்கியம் படைப்பிலக்கியத்தோடு சிற்றேட்டில் சேர்க்கப்படலாம். இன்றைய சிற்றேடு கள் படைப்பிலக்கியத்தாரால் நடத்தப்படுவதால், இலக்கியமே முதன்மை பெறுவது தவிர்க்க முடியாதது. ஆனால் இந்த மூளைக்களத்தில் இதர கலைகள் வேண்டப்படாதவை அல்ல. அவை மகிழ்ச்சியுடன் உள்ளே இழுத்துக் கொள்ளப்பட வேண்டிய உறவுகள்.'

கவனம் முதலாவது இதழ் தலையங்கத்தின் கடைசிப் பகுதி இது.

தனித்தன்மை கொண்ட கவிதைகள், கதைகள், கட்டுரைகளை

கவனம் பிரசுரித்தது. ஞானக்கூத்தன் எழுதிய 'பாரதியின் புதுக்கவிதை', காஸ்யபன் எழுதிய 'நாவல் படிப்பது பற்றி' (3 இதழ்களில் தொடர்ந்தது) ஆகிய கட்டுரைகள் குறிப்பிடத்தகுந்தவை.

இலக்கிய உணர்வு, அவ் உணர்ச்சி வெகுவாகப் பரவுதல் குறித்து கவனம் கருத்து செலுத்தியது. அதன் 5-ம் இதழ் தலையங்கக் குறிப்பு இது–

'இலக்கியப் பத்திரிகைகளை வாசிப்பது மட்டுமின்றி அவற்றில் பிரசுரமாகும் படைப்புகளைக் குழுவாக விவாதித்து விமர்சனம் செய்வது, அதன் ஆசிரியர்களை நேரடியாகச் சந்திக்கச் செய்து விவரங் களில் தெளிவு காணுவது போன்றவை மிகவும் பயனுள்ளவையாகத் தோன்றுகிறது. இது இன்றைய இலக்கிய அமைப்புகள் தொடர்ந்து செயல்படும்போது சரியாகவே தெரிய வருகிறது எனலாம். இலக்கியப் பத்திரிகைகளின் பணிகளுக்குத் தொடர்ச்சியான அடுத்த கட்ட முக்கிய பணியாக இதைக் கருதவும் முடியும்போது, இலக்கிய அமைப்புகளின் முக்கியம் இன்னும் கூடிப் போகிறது.'

1981 மார்ச் மாதம் ஆரம்பிக்கப்பட்ட கவனம், 1982 மார்ச்சில் வந்த ஏழாவது இதழுடன் நின்றுவிட்டது.

**ஸ்வரம்–** இக்கவிதை மாத இதழின் வளர்ச்சி சுவாரஸ்ய மானது.

உதகமண்டலம், ராக்லேண்ட்ஸ், ஜே. எஸ். எஸ். கல்லூரி மாணவர் நந்தலாலா இலக்கிய வேகத்துடன் ஒரு இனிய முயற்சியில் ஈடுபட்டார். முதலில் சிலரது கவிதைகளை ஒரு இன்லண்ட் லெட்டர் தாளில் அச்சிட்டு இலவசமாக ரசிகர்களுக்கு அனுப்பினார்.

அவர் எனக்கு எழுதிய 14-2-82 கடிதம் அவருடைய இலக்கிய தாகத்தை வெளிப்படுத்தியது :

'உங்களுடைய கடிதம் கிடைத்தது. அந்த சந்தோஷத்தை எப்படிச் சொல்வது என்பது தெரியவில்லை. என்னுடைய இந்தச் சின்ன முயற் சிக்கு வாழ்த்துச் சொல்லி வந்த முதல் கடிதம் உங்களுடையது.

காபி குடிப்பதை நிறுத்தினேன். சினிமா பார்ப்பதைக் குறைத்தேன். அதில் கிடைக்கும் பணத்தில் நல்ல புத்தகங்கள் வாங்கினேன். பின்பு

இப்படியொரு யோசனை. நண்பர்களின் உதவியால் ஆரம்பித்தேன். இதழ் இலவசம்தான்.

எதையும் சாதிக்கும் முனைப்பில் அல்ல. சும்மா நடக்கவே.'

முதல் ஸ்வரம் (இன்லண்ட்) தாளில் மாலன், ப்ரியதர்ஷன், ஆர். பி. எஸ்., சுப்ரபாரதி மணியன், 'அஞ்சிதநுட்பன்' ஆகியோரின் கவிதைகள் அச்சாகியிருந்தன.

இரண்டாவது இதழ் நீளமான வெள்ளைத்தாளில் (ஃபுல்ஸ் கேப் பேப்பரில்) அச்சாகி வந்தது, இளம் கவிஞர்களின் கவிதைகளோடு. இளைஞர்களின் உற்சாகம் ஊற்றுப் பெருக்காய் அதில் சிதறித் தெளித் துக் கொண்டிருந்தது.

'என்னவென்று இப்போது சொல்ல ? ஏகமாய் அடுக்கி, ததும்பும் எண்ணங்களை வரிசைப்படுத்த ஆசை இருந்தாலும் கொஞ்சமாய் மட்டும் இங்கே ஸ்வரத்தை இப்படி வித்யாசமாய் இசைத்திருக்கிறோம். மனசிற்குள் திருப்திப் பூக்கள் மலர்ந்திருக்கின்றன. சந்தோஷம் சிறு ஊற்றாய் ஊறிக் கொண்டிருக்கிறது. இன்னும் செய்ய வேண்டிய கனவு கள் நிறைய. பார்ப்போம். 13 இளம் மனசுகளின் பாதிப்புகள் விளைவித்த 13 கவிதைகள் இந்த ஸ்வரத்தில். இவைகள் பிடிக்கலாம், பிடிக்காமல் போகலாம். உங்கள் எண்ணங்களை எங்களோடு பகிர்ந்து கொண்டால் மிக மகிழ்வோம்.'

நந்தலாலா மற்றும் நண்பர்களின் உற்சாகமும் ஆர்வமும் மாதத் துக்கு மாதம் அளவில் பெருகி மலர்ந்தன. 4 –ம் இதழ் ஒடுக்கமான நீள வடிவில் அச்சுப் புத்தகமாக உருவெடுத்தது.

'எப்படியோ கவிதை, வாழ்க்கையின் பிரிக்க முடியாத ஒரு அம்ச மாகப் போய்விட்டது. இனிப் பேசிப் பயனில்லை. பின்னுக்குத் திரும்பி விட வழியில்லை. கவிதை ஒரு அசட்டுத்தனம் என்று சொன்னால் என்ன ? பைத்தியக்காரத்தனம் என்று சொன்னால்தான் என்ன ? கவிதையை நெஞ்சிலிருந்து துடைத்தெறிந்து விடமுடியாது. அது ரத்த ஓட்டத்தையே கடற்பஞ்சு கொண்டு ஒத்தி உறிஞ்சி துடைத்தெடுத்து விடுகிற மாதிரி. ஒன்றும் பயனில்லை. விடுங்கள். புதைகுழி வரைக்கும் தொடர்ந்து வருகிற நோய் அல்லது பேய் இது. எப்படி வைத்துக் கொண்டாலும் சரி. இது ஒன்றும் புதிதில்லை. இந்த மாதிரி கிறுக்கர் கள் காலங் காலமாக இருந்தே வந்திருக்கிறார்கள். அவர்களை யாரும் ஒன்றும் செய்துவிட முடியவில்லை.'

புவியரசின் இந்த வரிகளை நினைத்துக் கொள்ள, எதிர்ப்படும் சின்னச் சின்ன நெருடல்களெல்லாம் காணாமல் போகிறது.

'சந்தோஷமாய் இருக்கிறது. எதையும் சாதிக்கும் முனைப்பில் அல்ல, சும்மா நடக்கவே. மாலனின் வார்த்தைகள் மனசில், கனவில் கற்பனை கள் சிலதைப் பறித்து இந்த ஸ்வரத்தில் கொண்டு வந்தாயிற்று. பிடரி சிலிர்க்கக் கனைக்கும் அசுவமாய் உற்சாகம் எங்களுக்குள். மலைச் சாரல் கவியரங்கம் முடிந்த பின் புதுரூபமெடுத்த, போன ஸ்வரத்தை சுள்ளிய பிப்ரவரி முதல் ஞாயிறின் வெயிலில்— கார்டனில் பெற்றுக் கொண்டு வாழ்த்துக்களையும் விமர்சனத்தையும் சொன்ன எங்கள் இனிய ஸ்நேகிதர், பேராசிரியர் சீனிவாசனுக்கு நன்றி. ஸ்வரத்தின் கவிதைகளைப் பற்றிப் பேசிய பலரும் கவிதை உலகில் கம்பீரமாக எழுந்த வானம்பாடியைப் போல, மலைகளின் கொழிக்கும் பசுமையோடு, வளமையோடு, ஸ்வரம் கவிதை உலகில் எழும்ப வேண்டும் என்றார்கள். எங்களுக்கும் அதே ஆசைகள் நிறைய, நிறைய. அந்த அளவிற்கு உயர்கிறோமோ இல்லையோ, அந்த இலக்கை அடைய வேணுமென்கிற உந்துதலே, ஆசைகளே, மகிழ்ச்சியான விஷயமாய் இருக்கிறது. ஸ்நேகி தத்துடன் நீண்ட கைகளைக் கோத்துக்கொண்டு உயரிய இலக்கை நோக்கி அடியெடுத்து வைக்கிறோம்.'

இப்படி உற்சாகத்தின், சந்தோஷத்தின் வெளிப்பாடாகப் பூத்துக் கொண்டிருந்த 'ஸ்வரம்' அதன் 8–ம் இதழ் முதல் (செப்டம்பர் 1982) புதிய வடிவத்தை அடைந்தது. பிரம்மராஜன் அதன் சிறப்பாசிரியர் ஆனார். ஸ்வரம் தரம் நிறைந்த இலக்கியச் சிற்றேடு ஆக வளர லாயிற்று.

புதுமையான, நல்ல கவிதைகள் ஸ்வரம் இதழ்களில் வெளிவந் துள்ளன. ஐரோப்பியக் கவிஞர்களின் கவிதை மொழிபெயர்ப்புகள் அதிகம் அறிமுகம் செய்யப்பெற்றன. கவிதை நூல்களின் விமர்சனம் காரசாரமாக எழுதப்பட்டது.

இது குறித்து 12–ம் இதழில் (ஜனவரி 1983) ஆசிரியர் இவ்வாறு எழுதியுள்ளார் :

'உள்நாட்டு அஞ்சல் கடிதத்தில் துவங்கப்பட்ட ஸ்வரம் இன்று முழு வதும் கவிதைக்காகத் தன்னை ஈடுபடுத்திக் கொள்ளும் ஒரு இலக்கியச் சிற்றேடாக மாறி நிற்கிறது. 8–ம் இதழிலிருந்து தன் அமைப்பை மாற்றிக் கொண்டதோடன்றி உள்ளடக்கங்களையும் மாற்றியுள்ளது.

தமிழ்க் கவிதையின் இன்றைய சாத்தியப்பாடுகள் அறியப்பட வேண்டு மெனின் கவிதைகள் மீதான தாட்சண்யமற்ற விமர்சனங்களும், கட்டுரை களும் வெளிவர வெண்டும்

இன்று எழுதவரும் இளம் கவிஞர்களுக்கு கவிதைக் கலை பற்றி அடிப்படை தெரியாத போலிகளும் அரைப் போலிகளும் முன்மாதிரிகள் ஆகிவிடுவது சோகமான விஷயம். எனவே தான் ஸ்வரம் ஐரோப்பிய மற்றும் ஆங்கிலக் கவிஞர்களின் மொழிபெயர்ப்புக் கவிதைகளைக் தொடர்ந்து வெளியிட இருக்கிறது.

ஸ்வரம் தோற்றத்திலும், அச்சு அமைப்பிலும் எளிமையான அழகுடன் வசீகரமாகத் திகழ்ந்தது, 16–ம் ( மே 1983 ) இதழுக்குப் பிறகு ஸ்வரம் வரவில்லை.

ழ, கவனம், ஸ்வரம் – இச் சிற்றேடுகள் நவீன ஓவியங்களை அட்டைப் படமாக வெளியிட்டு வந்தன.

**மீட்சி :** உதகமண்டலத்திலிருந்து, ஸ்வரம் கவிதை இதழின் புதிய பரிணாமம் போல மீட்சி என்ற மாத இதழ், 1983 ஆகஸ்டில் தோன்றி யது. பிரம்மராஜன் கவனிப்பில் இது வளர்ந்து வருகிறது.

தனது ஓராண்டைச் சிறப்பாகப் பூர்த்தி செய்துள்ள 'மீட்சி' குறிப் பிடத்தகுந்த நல்ல தரமான இலக்கியச் சிற்றேடு ஆகும்.

சர்வதேசக் கவிஞர்களை அறிமுகம் செய்து கட்டுரை எழுதுவதோடு, அவர்களின் கவிதைகளை மொழிபெயர்த்து இலக்கியப் பணி புரிந்து கொண்டிருக்கும் பிரம்மராஜன் மீட்சியில் பல கவிஞர்களைப் பற்றிய கட்டுரைகளையும் அவர்களது படைப்புகளையும் தந்திருக்கிறார்.

ஆர்தர் கெஸ்லர் பற்றிய நினைவுகளும் வரலாறு பற்றிய சிந்தனை களும்; ஜோர்ஜ் லூயி போர்ஹே கவிதைகள்; எஹூதா அமிக்ஹாய் என்ற ஹீப்ரு மொழிக் கவிஞர், அவரது கவிதைகள்; டென்னசி வில்லியம்ஸ் கவிதைகள் முக்கியமானவை. டி. எஸ். எலியட்டின் 'தி வேஸ்ட் லேண்ட்' ஐ முழுமையாக மொழிபெயர்த்து 'பாழ் நிலம்' என மீட்சி வெளியிட்டுள் ளதை விசேஷமாகக் குறிப்பிட வேண்டும்.

ஜோர்ஜ் லூயி போர்ஹேயின் 'வாளின் வடிவம்', கேப்ரியல் கார்சியா மார்க்வெஸ் எழுதிய 'செவ்வாய்க்கிழமை மதிய உறக்கம்' கதைகளின் மொழிபெயர்ப்பும் மீட்சியில் வந்துள்ளன.

வில்லியம் ஃபாக்னர் பேட்டி, ஜோசப் ப்ராட்ஸ்கி மீதான விசாரணை (லெனின்கிராட் நகரில் நடைபெற்றது), சர்ரியலிசத்தின் கவிதைக் கோட்பாடுகள்—இத்தகைய விஷயங்களையும் மீட்சி பிரசுரித்திருக்கிறது.

சுய படைப்பான சிறுகதைகளும் கணிசமான அளவில் மீட்சியில் வெளிவந்துள்ளன. கோணங்கி, வண்ணதாசன், விமலாதித்த மாமல்லன், சுகுமாரன் கதைகள் வித்தியாசமானவை; அவரவர் படைப்பாற்றலை வெளிப்படுத்துபவை. நல்ல கவிதைகளையும் மீட்சி பிரசுரித்துள்ளது.

கம்யூனிஸ்டுகளும் கலையும் என்ற தலைப்பில் ஞானி சிந்தனையைத் தூண்டும் ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார். திரைப்படம் பற்றிய கட்டுரைகளும், வண்ணதாசன் சிறுகதைகள்—சா. கந்தசாமி நாவல்களுக்கான விமர்சனக் கட்டுரைகளும் மற்றும் பல நூல்கள் பற்றிய விமர்சனங்களும் வந்திருக்கின்றன.

மீட்சியின் 10—ம் இதழ், கர்நாடக இசை— விவாதத்திற்கான சில குறிப்புகள் என்ற விசேஷக் கட்டுரையைக் கொண்டுள்ளது. இந்த இதழை இசைச் சிறப்பிதழ் என்று கூறலாம். 'இசை— சில அடிப்படை அணுகல்கள்' குறித்து பிரம்மராஜன்—சுகுமாரன் ஒரு கட்டுரை எழுதியுள்ளனர். 'செய்தி' என்ற தி. ஜானகிராமனின் இசை சம்பந்தமான ஒரு கதையும், அவருடைய 'நெகிழ்ச்சி' எனும் கட்டுரையும் பிரசுரம் பெற்றுள்ளன.

11—ம் இதழ் ஆத்மாநாம் நினைவு இதழாக அமைந்திருக்கிறது. 12—ம் இதழ் (1984 அக்டோபர்—நவம்பர்) ஓராண்டு நிறைவுச் சிறப்பிதழ் ஆகும். சுந்தர ராமசாமி, வண்ணதாசன், கோணங்கி கதைகள் இதில் உள்ளன. மற்றும் கவிதைகளும் கட்டுரைகளும்.

மீட்சியும் நவீன ஓவியங்களை அட்டைப் படமாக வெளியிட்டு வருகிறது.

**மையம்** (காலாண்டு இதழ்)

சென்னை, திருவல்லிக்கேணியிலிருந்து வெளிவரும் 'மையம்' 1983 அக்டோபர்—டிசம்பர் இதழாகத் தனது முதல் இதழைக் கொண்டு வந்தது. ஆசிரியர் : ஜெயதேவன்.

'பத்திரிகை, எழுதுபவருக்கும் வாசகருக்குமான பொதுவான மேடையாக இயங்குகிறது. இலக்கியம் மட்டுமின்றி பல்வேறு கலைகளைப் பற்றிய முடிவான கருத்துக்களைப் பத்திரிகை வெளிப்படுத்த முடியும். பத்திரிகைக்கான முறைகள் உள்ளன. நவீன கலைகளுக்கும் நவீன படைப்பாளிகளுக்கும் உரிய ஸ்தானத்தை அளித்து போஷிப்பது பத்திரிகைக்கு அவசியமாகிறது. எந்தக் கலைப் படைப்பிலும் உரிய நேர்மையைக் காப்பது இதனால் முக்கியமாகிறது. சிறு பத்திரிகையின் முடிவும் துவக்கமும் எந்த உயிருக்கும் அமைந்த விதிபோல் தீர்மானமானது. படைப்பிலக்கியம் மேற்சொன்ன விதியிலிருந்து முற்றிலும் வேறுபடுகிறது. ஏனெனில் எந்தக் கலையும் உண்மையில் நம் வாழ்வுக்கு நிறைவைத் தருபவை. இந்த அடிப்படையைத் தன்னுடைய முக்கிய அம்சமாக மையம் கருதுகிறது' என்று அது அறிவித்துள்ளது.

ஓவியர் கே. எம். ஆதிமூலம் வரைந்த ஓவியம் ஒன்றை முதல் இதழின் அட்டைப்படமாக வெளியிட்டு, 'ஆதிமூலத்தின் அக உலகம்' என்று சா. கந்தசாமி எழுதிய கட்டுரையை உள்ளே பிரசுரித்தது. ஆங்கிலக் கவிதைகளின் மொழிபெயர்ப்பும் மற்றும் சுயபடைப்புகளும் மையம் இதழ்களில் இடம் பெறுகின்றன.

கதைகள், கட்டுரைகள், புத்தக மதிப்புரை முதலியனவும் வருகின்றன. நீல. பத்மநாபன், நகுலன், காஸ்யபன், ஞானக்கூத்தன், கலாப்ரியா, ஆனந்த், ஆர். ராஜகோபாலன், காளி–தாஸ் முதலியவர்கள் ( ழ, கவனம் சிற்றேடுகளில் எழுதிய பலரும்) மையம் காலாண்டு இதழில் எழுதுகிறார்கள்.

**உயிர்மெய் :** கோவையிலிருந்து வெளிவரும் கவிதை இதழ். வித்தியாசமான, புதுமையான, தரமான கவிதைகளை வெளியிடுவதில் அக்கறை கொண்டுள்ளது. பிறமொழிக் கவிதைகளை மொழிபெயர்த்து வெளியிடுவதில் ஆர்வம் காட்டுகிறது. பிரம்மராஜன் கட்டுரைகளும், மொழிபெயர்ப்புகளும் வருகின்றன.

'தமிழ் கவிதையுலகு தேங்கிக் கிடக்கிறது. தற்பொழுது சொல்லிக் கொள்ளக்கூட கைக்கடக்கமாய்த்தான் உள்ள கவிஞர்கள் பற்றி, புற்றீசலென வெளிவருகிற படைப்புகள் பற்றிய தொடர்ந்த வியாக்யானம், புதுக்கவிதை என்றொரு பதம் இனியும் உபயோகத்தில் இருப்பது பற்றிய முரண், கவிதை–கவிதையில்லாதவை என்று இருக்க வேண்டியதன் நியாயம், இவையனைத்தையும் நாங்கள் உணர்ந்தே இருக்கிறோம்.

நாங்கள் மாணவர்களாய் இருந்தபொழுது தொடங்கி இப்பொழுதும் இதைத் தொடர்வதால் முந்தைய குறைகளையும் கலை வறட்சியை யும் முழுக்க விடுத்து, புதிய வடிவங்களுக்கும் சமகால உலக கவிதை களுக்கும், முக்கியமாக கவிதை மீதான கட்டுரைகளுக்கும் இடமளிக்க எண்ணியுள்ளோம்' என்று 'உயிர்மெய்' 1984-ல் ஒரு இதழில் அறிவித் துள்ளது.

'மிருணாள்சென் கூறுகிறார். I try to disturb you and get disturbed in the process. இதுதான் உண்மையான கலையின், கலைஞனின் எதிர்பார்ப்பும்' என்று கூறுகிற உயிர்மெய் அவ்வழியில் செயல்படுவதில் ஆர்வம் காட்டுகிறது எனக் கருதலாம்.

**நிகழ்** : இலக்கிய இதழ். கோவையிலிருந்து வெளிவருகிறது. ஆசிரியர் –இரத்தினம்.

சூடாகவும் விறுவிறுப்பாகவும் புதிய நூல்கள் பற்றிய திறனாய்வை நிகழ் பிரசுரிக்கிறது. ஞானி புத்தகத் திறனாய்வு செய்வதுடன்,சிந்திக்கத் தூண்டுகிற கனமான கட்டுரைகளையும் இதில் எழுதுகிறார். டி. எஸ். இலியட்டின் இலக்கியக் கொள்கை என்ற தலைப்பில் அவர் எழுதிய நீண்ட கட்டுரை முக்கியமானது. இலக்கிய உலகம், எழுத்தாளர்கள் பற்றிய செய்திகளையும் குறிப்புகளையும் அவ்வப்போது தருகிறது.

முதல் இதழில் 'தற்காலத் தமிழிலக்கியத்தில் தேக்கம்' எனும் பொருள் குறித்து ஞானி, சுகுமாரன், நிர்மல் விஸ்வநாதன், அறிவன், அரசு, அமரநாதன் ஆகியோர் சர்ச்சை செய்து வெளியிட்ட உரையாடல் உபயோகமான எண்ணங்களைக் கொண்டுள்ளது.

சா. கந்தசாமியின் நாவல்கள் ஆய்வு செய்து 'சா. கந்தசாமியும் கண்ணாடித் துண்டும்' என்று ஞானி எழுதிய கட்டுரை உண்மையான மதிப்பீடாக விளங்குகிறது.

கதைகள் , கவிதைகள், மொழிபெயர்ப்புகளை வெளியிட்டு வந்த நிகழ் 4-ம் இதழிலிருந்து இதர பிரச்னைகளிலும் அக்கறை கொள்ளத் தொடங்கியது.

'தற்கால அரசியல், பொருளியல், கலாச்சாரச் சூழலில் கலை இலக்கியம் பற்றிய சரியான பார்வையின் தேவை பற்றி நாம் விவரிக்க

வேண்டியதில்லை. கலை இலக்கியங்களை அரசியலின்—அது போலவே பிற தேவைகளுக்கு அடிமைப்படுத்தும் போக்கு தமிழகச் சூழலில் தீவிரப் பட்டிருக்கிறது. இதனால் கலை இலக்கியம் பற்றிய பார்வையும் அனுபவ மும் சீர்குலைவதோடு, இறுதியில் அரசியல், கலாச்சாரம் பற்றிய பார்வையும் சீர்குலையும். அரசியல்வாதிகளோ, கலை இலக்கியவாதிகளோ இந்த ஆபத்து பற்றி அதிகம் கவலைப்படுவதாகத் தெரியவில்லை.

அரசியல்வாதிகளுக்குக் கலை வெறும் சாதனம். தாங்களே கலை இலக்கியவாதிகள் என்று பெருமிதம் கொள்ளும் சில படைப்பாளி களுக்கு, கலை இலக்கியமே கதிமோட்சம். இந்த இரு எல்லைகளில் பயணம் செய்வது, சிற்சில சந்தர்ப்பங்களுக்குத் தேவையாக இருந்தா லும், இந்தத் தீவிர எதிர் நிலைகளின் உண்மை முழுமையாக அகப்படு வதில்லை. ஒரு எதிர்நிலை தீவிரம் கொள்ளும்போது, அப்போக்கே அதன் எதிர் நிலையைத் தோற்றுவிக்கிறது என்பதைக் கவனத்தில் கொண்டால் இது புரியும்.

இன்றைய உலக, இந்திய, தமிழகச் சூழலில் முக்கியத்துவம் பெற்று வரும் ஒரு பிரச்னை, சூழலியல் பற்றியது. இதைப் போலவே சரியான 'விஞ்ஞானக் கண்ணோட்டம் எது' என்பது பற்றியும், 'பெண் விடுதலை' என்ற தீவிரமான பிரச்னையும் பல பரிமாணங்களில் ஆராயப்பட வேண்டியவை. இவை பற்றி அரசியல்வாதிகளுக்கும், அதுபோலவே கலை இலக்கியவாதிகளுக்கும் கவலை இல்லை. அரசியலும் கலை இலக்கியமும் சந்திக்கும் ஒரு ஆதார தளத்திலிருந்து மேற்குறித்த பிரச்னைகள் எழுகின்றன. இவை பற்றி நிகழ் சில கட்டுரைகளை வெளியிட முயற்சி செய்கிறது.

நிகழ் தமிழில் வெளிவரும் மிகச் சிறிய இதழ். சிறியதாயினும் மேற்குறித்தவற்றில் அக்கறை கொள்கிறது' என்று அது அறிவித் துள்ளது.

**புதிய தலைமுறை** என்ற பெயரில், 1970 களில் கோவையிலிருந்து ஒரு இலக்கிய இதழ் வெளிவந்தது. அது புதிய எழுத்தாளர்களை ஊக்குவித்தது. தரமான படைப்புகளை வெளியிட்டது. ஞானி போன்ற வர்களின் சிந்தனைகள் அதில் பிரசுரமாயின என்று வண்ணநிலவன் தகவல் தருகிறார். இப்போது 'புதிய தலைமுறை' யின் இதழ் ஒன்றுகூட என் பார்வைக்குக் கிடைக்காததால், அதுபற்றிய விரிவான குறிப்புகளைத் தர இயலவில்லை.

**விருந்து** என்னும் இலக்கியத் திங்கள் இதழ் திருமதி ப.கலாவதி பி. ஏ. யை ஆசிரியராகக் கொண்டு, 1975–76–ல் புதுச்சேரியில் பிரசுர மாயிற்று. இது மரபுக் கவிதை, புதுக் கவிதை இரண்டையும் வெளி யிட்டு வந்தது. தேவமைந்தன் ( அ. பசுபதி), பழமலய், சக்திப்புயல் முதலி யவர்கள் எழுதியிருக்கிறார்கள்.

**ராகம்**– திருச்சியில் தோன்றியுள்ள புதிய இலக்கியப் பத்திரிகை. ஆர். ரமேஷ்குமார், எம். செந்தில்குமார், ஐ. பிரான்சிஸ் மனோகர், எம். டி. முத்துக்குமார் ஆகியோரை ஆசிரியர் குழுவாகக் கொண்டு இயங்குகிற இம் மாத இதழ் 1984 ஆகஸ்ட் முதல் வருகிறது. 'தீபம்' அளவில் பெரியதாய், 48 பக்கங்களைக் கொண்டு தயாரிக்கப்படும் ராகம் புதிய சோதனைகளில் துணிச்சலோடு ஈடுபடுகிறது.

'ஒரு வருட காலம் கையெழுத்துப் பிரதியில் வந்த ராகம் இன்று அச்சில் உயிர்பெற்றிருக்கிறது. இன்று தெருவிற்கு ஒரு பத்திரிகை வந்துகொண்டிருக்கும் நேரத்தில் ராகம் வெளிவரும் அவசியம் என்ன ?

பெரும்பாலான பத்திரிகைகள் பிஸினஸ் பண்ணிக் கொண்டிருக் கும் நேரத்தில் ராகம் உண்மையான எழுத்துக்களைத் தரிசிக்க ஆசைப் பட்டு அச்சு உரு எடுத்திருக்கிறது.

எழுத்து சுதந்திரமானது. நிபந்தனைகள் வைத்து, கடிவாளம் மாட்டி எழுதச் சொன்னால் நிஜ எழுத்தைச் சந்திக்க முடியாது. கல்லூரி மாணவர்களின் சிந்தனையில் தமிழ்ப்பட பாதிப்பும், பிரபல எழுத்தாளர்களின் பாதிப்பும் நிறையவே இருக்கின்றன என்ற அபிப் பிராயத்தைப் பொய்யாக்க இதோ ஒரு ராகம் இருக்கிறது என்று காட்டு வோம். மாணவர்களாலும் ஆக்கபூர்வமாய் செய்ய முடியும் என்று நிரூபிப்போம்.

ராகம் ஆரம்ப கால எழுத்தாளர்களுக்கு அரவணைப்பாய், குரு குலமாய் இருக்க ஆசைப்படுகிறது. வித்தியாசமான எழுத்துக்களை, புதுமை முயற்சிகளை இருகரம் கூப்பி வரவேற்கிறது. . .'

இந்தக் கொள்கை அறிவிப்புடன் தோன்றிய ராகம் இலக்கிய இதழை நடத்துகிறவர்கள் கல்லூரி மாணவர்கள்; தமிழுக்குப் புதியவர் கள்; ஆங்கிலம் மூலம் உலக இலக்கியப் பரிச்சயம் பெற்றவர்கள். அந்த அனுபவத்தை, அறிவை, ஆற்றலைத் துணை கொண்டு, தமிழில்

புதுமைகள் பண்ண வேண்டும் என்று ஆசைப்படுகிறவர்கள். தங்களால் இயன்றதைச் செய்து கொண்டிருக்கிறார்கள்.

ஸில்வியா என்ற பெயரில் ஒருவர் புதுமையான இலக்கிய உத்தி களில் சிறுகதை எழுதுகிறார். ப்ரக்ஞை, நனவு ஓட்டம், சிலசில சுவாரஸ்யமான விஷயங்களை நினைப்பது என்ற தன்மைகளில் 'ஸ்வப்ன சிநேகிதா !' எனும் அவரது முதல் இதழ் கதை பற்றி அவர் எழுதியிருக் கும் முன்னுரை ரசமான விதத்தில் இதைத் தெளிவுபடுத்துகிறது.

'முதலிலேயே சொல்லி விடுகிறேன். இந்தக் கதை அந்நியக் குடும் பத்தைச் சேர்ந்தது. இது ஓர் 'ஞாபகக் கதை'. ஞாபகக் கதை என்றவுடன் மலையாள சினிமாவில் ப்ளாஷ்பேக் என்ற பெயரில் முதலில் குண்டு குண்டாய் பிரமீளாவைக் காட்டிவிட்டு அடுத்த சீனில் அந்தக் குண்டு மாறாமல் பிரமீளாவைத் தாவணியில் அடக்கி, பிரா அவிழ்ப்பார்களே, அந்த சமாச்சாரம் என்று நினைத்துவிடாதீர்கள். ஞாபகம் என்பது இக் கதையில் ஒரு பெண்ணின் ஞாபகம். வயதான பிரக்ஞை. இதன் பெக்யூலியாரிட்டி என்னவென்றால் சில கடந்த கால சாக்லேட் விஷயங் களை பிரக்ஞை பெரிதுபடுத்தும். சில பாவக்காய் விஷயங்களைச் சொல்லவே சொல்லாது. அல்லது மிகவும் கட்பண்ணி எடிட் பண்ணி டூரிங் டாக்கீஸ் ஃபோர்த் பிரிண்ட் மாதிரி சொல்லும். காலம் ஒரே கண்ணோட்டத்தில் பார்க்கப்படும். கொஞ்சம் போரடிக்கும். கொஞ்சம் மறந்து போகும். இன்னும் எவ்வளவோ கொஞ்சங்கள். ரிஸ்க் எடுக்கத் தயாராக இருப்பவர்கள், பலகீனப்பட்ட பிரக்ஞை சில சமயம் தேதி விஷயங்களில் குழம்பிப் போகும் என்பதனையும் ஞாபகம் வைத்துக் கொள்வார்களாக.'

ரசமாகக் கதை எழுதத் தெரிந்த ஸில்வியா ஒவ்வொரு இதழிலும் தனித்தனி ரகமான கதை எழுதியிருக்கிறார்.

எஸ். டி. எம். புத்தக மதிப்புரை எழுதுகிறார். மிகுந்த படிப்பு அறிவுள்ளவர் என்பது இவரது கட்டுரைகளில் வெளிப்படுகிறது. சுந்தர ராமசாமியின் ஜே. ஜே. சில குறிப்புகள், எம். ஜி. சுரேஷின் 'தாஜ்மகாலுக் குள் சில எலும்புக் கூடுகள்', தேவதேவன் கவிதைகள் 'மாற்றப்படாத வீடு', 'கவிதை பற்றி ஆத்மாநாம்' ஆகிய புத்தகங்களின் மதிப்புரைகள் 'ராகம்' இதழ்களில் வந்துள்ளன.

'கலியுகம்' என்ற கடைசிப் பக்கம்—பா. அரசுக்கண்ணன் எழுதுவது— இன்ட்ரஸ்டிங் ஆக இருக்கிறது.

இதர பத்திரிகைகளில் வருவதைவிட மாறுபட்ட கலைகளையும் வித்தியாசமான கவிதைகளையும் தருவதற்கு ராகம் முயற்சி செய்கிறது. தற்கால ஐரோப்பிய, ஆங்கிலேய, அமெரிக்கப் படைப்பாளிகள் பற்றிய அறிமுகக் கட்டுரைகளைப் பிரசுரிக்கிறது. சில படைப்புகளை மொழி பெயர்த்துத் தருகிறது.

'ராகம்' ஆறு இதழ்கள்தான் பிரசுரம் பெற்றது. பிறகு வெளிவரவில்லை.

# 47. பாராட்டப்பட வேண்டிய முயற்சிகள்

அதிக சர்க்குலேஷனையே முக்கிய நோக்கமாகக் கொண்டு, அதற்காக வாசகர்களைக் கவரும் மசாலாத்தனங்களைத் திணித்து, மக்களின் ரசனைத் தரத்தை மலினப்படுத்தியபடி முன்னேற முயல்கின்றன வணிகப் பத்திரிகைகள்.

அவை தமக்குள் போட்டி வளர்த்து மினுமினுப்பாகக் 'காகிதரேஸ்' நடத்திக் கொண்டிருக்கிற காலத்திலேயே இலக்கிய உணர்வுடைய ரசிகர்கள் தங்கள் இலக்கிய ஆர்வத்தை வெளிப்படுத்தும் முயற்சிகளில் உற்சாகமாக ஈடுபடுவது நாடு நெடுகிலும் நடந்து வருகிறது.

அத்தகையவர்கள் மாதம்தோறும் கூடுகிறார்கள். கவிதைகள் படிக்கிறார்கள். சிறுகதை எழுதி வாசிக்கிறார்கள். பத்திரிகைக் கதைகளை விமர்சனம் செய்கிறார்கள். கையெழுத்துப் பத்திரிகை தயாரிக்கிறார்கள். சிலசமயம் 'சைக்ளோஸ்டைல்' பத்திரிகையாகக் கொண்டுவர முடிகிறது சிலரால். உற்சாகமும் ஊக்கமும் மிகுதிப்படுகிறபோது அச்சுப் பத்திரிகை நடத்தவும் முற்படுகிறார்கள்.

இவற்றில் எல்லாம் இலக்கியத்தரம் உயர்வாக இருப்பதில்லை என்பது இயல்பான விஷயமாக இருந்தபோதிலும், இத்தகைய முயற்சிகள் பாராட்டப்பட வேண்டியவையே ஆகும். மசாலாத்தனப் பத்திரிகைகளின் பகட்டிலும் பளபளப்பிலும் தங்களை இழந்துவிடாமலும், இலக்கிய உணர்ச்சி மழுங்கிப் போகும்படி விட்டுவிடாமலும், இளைஞர்கள் தங்கள் ரசனையைக் காப்பாற்றிக் கொண்டு வருவதும், அதை வளர்ப்பதற்கான வழிகளில் ஊக்கத்தோடு ஈடுபடுவதும் உண்மையிலேயே பெரிய விஷயங்கள்தான்.

இந்தவிதமான முயற்சிகள் பலவும் பரவலான கவனிப்புக்கு வருவதில்லை. அவை குறித்த சில வட்டாரங்களில் உள்ள உற்சாகிகள் மத்தியிலேயே இயங்குகின்றன என்றே சொல்ல வேண்டும்.

சிற்சில முயற்சிகள் வெளியார்களின் கவனத்துக்கும் கொண்டு வரப்படுகின்றன.

அப்படிப்பட்டவைகளில் **'சோலைக் குயில்கள்'** என்ற மாத வெளியீடும் ஒன்று ஆகும். இது திருச்சியிலிருந்து வருகிறது.

திருச்சியில், பல்வேறு தொழில்களில் ஈடுபட்டிருக்கும் இளைஞர்கள், ஒவ்வொரு மாதமும் கடைசி ஞாயிறு அன்று கூடுகிறார்கள். கவிதை பற்றிய விமர்சனங்களை வரவேற்கிறார்கள். தங்களைச் 'சோலைக் குயில்கள்' என்று கூறிக் கொள்கிறார்கள்.

மாதம்தோறும் கவி அரங்கத்தில் படிக்கப்பட்ட கவிதைகளில் தேர்ந்தெடுத்த சிலவற்றைச் 'சோலைக் குயில்கள்' என்ற சிறு இதழாக ( 10 பக்கங்கள் ) அச்சடித்து வெளியிடுகிறார்கள். நான்கு வருடங்களாக இது நடைபெற்று வருகிறது.

சமுதாயப் பார்வை கொண்ட கவிதைகளே மிகுதி. இரண்டாம் ஆண்டின் முடிவில் 'சோலைக் குயில்கள்' பெரிய அளவில் ஒரு மலர் தயாரித்து வெளியிட்டது. தரமான கட்டுரைகளும் கவிதைகளும் அதில் இடம் பெற்றிருந்தன.

தஞ்சை மாவட்டம் குத்தாலம் என்ற இடத்தில் உள்ள இலக்கிய அன்பர்கள் **'கேமரா'** என்ற பெயரில் 'சைக்ளோஸ்டைல்' பத்திரிகை ஒன்றை நடத்தினார்கள். அந்தப் பத்திரிகைக்கு முக்கியப் பொறுப்பேற்றி ருந்த கேசவன், மனோகரன், ராஜசேகர் ஆகியோரது பெயர்களின் முதல் எழுத்துக்களைக் கொண்டு 'கேமரா' என்ற பெயர் உருவாக்கப்பட்டது.

கதை, கட்டுரை, கவிதைகளோடு இலக்கிய விமர்சனங்களும் கேமராவில் பிரசுரமாயின. 'மணிக்கொடி காலம்', 'சரஸ்வதி காலம்' நூல்களிலிருந்து சேகரம் செய்த தகவல்களையும் அது வெளியிட்டது. அது நீண்ட காலம் பிரசுரம் பெறவில்லை.

**முகம்**– சென்னை, கருணாநிதி நகர் இலக்கிய வட்டம் அன்பர் கள் மாதம்தோறும் கூடி இலக்கிய சர்ச்சை செய்கிறார்கள். சிறப்புச் சொற்பொழிவுகளுக்கு ஏற்பாடு செய்கிறார்கள். அத்துடன் 'முகம்' என்றொரு மாத இதழையும் வெளியிடுகிறார்கள்.

நான்கு ஆண்டுகளாக நடைபெறும் 'முகம்' மாமணி என்ற இலக்கிய ரசிகர்–எழுத்தாளரின் உற்சாகமும் ஊக்கமும் நிறைந்த உழைப் பின் விளைவால், தரமான இதழாகப் பிரசுரம் பெறுகிறது. எண்ணதாசன்

என்ற பெயரில் அவர் கவிதைகள் எழுதுகிறார். கிந்தனார் பதில்கள் என்ற சுவாரஸ்யமான கேள்வி–பதில் பகுதி இந்தச் சிற்றேட்டின் சிறப்பு அம்சமாக விளங்குகிறது. மாமணி எழுதும் கதைகள், வெங்கடேசன் எழுதும் வாழ்க்கை வரலாற்றுக் கட்டுரைகள், பேட்டிக் கட்டுரைகள், கவிதைகள் 'முகம்' பத்திரிகைக்கு உயிரூட்டுகின்றன.

**கேரளத் தமிழ்** : திருவனந்தபுரம் தமிழ்ச் சங்கம் 'கேரளத் தமிழ்' என்ற சிறு பத்திரிகையைப் பிரசுரித்து வருகிறது. பிரபல எழுத்தாளர் ஆ. மாதவன் இதன் ஆசிரியப் பொறுப்பை வகிக்கிறார். முக்கியமாக சங்கத்தின் நிகழ்ச்சிகள், அறிக்கைகள், திருவனந்தபுரம் செய்திகளைப் பிரசுரிக்கும் இந்த இதழில் இலக்கியம் சம்பந்தமான கட்டுரைகளும் அவ்வப்போது இடம் பெறும். 'கேரளத் தமிழ்' ஆண்டு மலர் இலக்கிய ரசிகர்களுக்கு விருந்தாக அமையும். அதன் ஒரு மலர் எழுத்தாளர் தி. ஜானகிராமன் நினைவில் 'சிறுகதைச் சிறப்புமலர்' என்று தயாரிக் கப்பட்டிருந்தது. அதில் அருமையான சிறுகதைகள் பல இடம் பெற்றிருந்தன.

**அரும்பு** என்ற மாதப் பத்திரிகையை விசேஷமாகக் குறிப்பிட வேண்டும்.

பல வருடங்களாக, ஒரு கிறிஸ்துவ சங்கப் பத்திரிகையாக வெளி வருகிறது 'அரும்பு' 1983 ஜூன் முதல் இலக்கியத் தரமான இதழாக மலரத் தொடங்கியது.

1985 ஏப்ரல்–மே இதழில் அதன் சாதனைகள் குறித்து 'அரும்பு' மகிழ்ச்சியோடும் பெருமையோடும் குறிப்பிட்டுள்ளது !

'இலக்கியத் தரமான விஷயங்களை வெளியிட்டு தமிழ் இலக்கியத் துறையைப் புதிய பரிமாணங்களுடன் முன்னெடுத்துப் போகப் போகின் றோம் என்ற பிரகடனத்துடன் தொடங்கி சில இதழ்களைக் கனமாயும் தரமாயும் வெளியிட்ட பின் வியாபாரச் சந்தையிலே சமரசம் செய்து நீர்த்துப் போயும், இலக்கியக் குமுதங்களாயும் ஆகிவிட்ட சஞ்சிகைகளின் நடுவே, கடந்த இரண்டாண்டுக் காலமாகத் தீர்மானமான இலக்கியக் கருத்துடனும் பிடிவாதத்துடனும் இயங்கி வந்தது அரும்பு.'

இதற்கு அமிர்தராஜ் என்ற எழுத்தாளரின் உற்சாகமான உழைப் பும், இலக்கியவாதிகளுடன் நட்பு உணர்வோடு அவர் கொண்ட தொடர்பு களும் முக்கிய காரணம் ஆகும்.

செ. யோகநாதன், வண்ணதாசன், வல்லிக்கண்ணன், கர்ணன், பிரபஞ்சன், கார்த்திகா ராஜ்குமார், பாவண்ணன் முதலிய படைப்பாளி களின் கதைகளை அரும்பு இக்கால கட்டத்தில் பிரசுரித்தது. மற்றும் மசாலாப் பத்திரிகைகளில் வருகிற கதைகளிலிருந்து முற்றிலும் மாறு பட்ட, புதுமையான– பரிசோதனை ரீதியான–கதைகள் எழுதுகிற எழுத் தாளர்களின் படைப்புகளை ஒவ்வொரு இதழிலும் வெளியிட்டது.

தரமான கவிதைகளைப் பிரசுரிக்க முயன்றது. தமிழன்பன், ஆத்மா நாம், பாப்ரியா, நீலமணி, ப்ரதிபா ஜெயச்சந்திரன் முதலியவர்களின் கவிதைகள் வந்துள்ளன. பிறமொழிக் கவிதைகளின் தமிழாக்கமும் அதிகமாகவே பிரசுரிக்கப்பட்டது. பிரம்மராஜன் பல நாடுகளைச் சேர்ந்த கவிஞர்களின் படைப்புகளைத் தமிழில் தந்திருக்கிறார்.

கட்டுரைகள் த னி த் தன்மையோடும் சிந்தனை கனத்தோடும், வாழ்க்கைப் பிரச்னைகளை ஆராய்ந்து இளைஞர்களுக்கு வழிகாட்டக் கூடிய விதத்திலும் அமைந்துள்ளன.

பாவண்ணன் நல்ல தொடர்கதை ஒன்றை எழுதியுள்ளார். அதன் பிறகு, சுயசிந்தனையும் தன்மானமும் தன்னம்பிக்கையும் மெய்த்துணிவும் பெற்ற பத்திரிகை நிருபர் ஒருவரை கதாபாத்திரமாகக் கொண்ட தொடர் கதையை செ. யோகநாதன் எழுதிவருகிறார்.

விசேஷமான பேட்டிகளையும் 'அரும்பு' வெளியிட்டுள்ளது. வலம்புரி ஜான், வல்லிக்கண்ணன், கோமல் சுவாமிநாதன், ஓவியர் ஜெயராஜ் போன்றவர்களின் பேட்டிகள் முக்கியமானவை.

தனித்தன்மையோடு வித்தியாசமான பேட்டிகளை வெளியிடும் எண்ணத்தோடு, முடிதிருத்தும் தொழிலாளி, நடைபாதைத் தொழிலாளி, சுமை தூக்குவோர் முதலியவர்களைச் ச ந் தி த் து, அவர்களுடைய வாழ்க்கை முறைகளையும் பிரச்னைகளையும் கேட்டறிந்து நல்ல முறையில் எதார்த்தச் சித்திரங்களாகப் பிரசுரித்துள்ளது.

அமிர்தராஜ் பாராட்டப்பட வேண்டிய கதை, கவிதை, கட்டுரைகளை எழுதியிருக்கிறார்.

'அரும்பு' வின் ஒவ்வொரு மாத அட்டைப் படமும் வித்தியாசமான வையாக அமைந்து பத்திரிகைக்கு ஒரு தனித்தன்மை அளித்துள்ளது.

**தமிழ்ப் பணி :** கவிஞர் வா. மு. சேதுராமன் சிறப்பாசிரியராகப் பொறுப்பு வகித்து நடத்தும் மாத இதழ். இது மரபுக் கவிதைக்கு முக்கியத்துவம் அளிக்கிறது. வா. மு. சே. யின் கவிதைகள் மற்றும் பல கவிஞர்களின் படைப்புகள் அதிகமாக இடம் பெறும் இப்பத்திரிகையில் பேராசிரியர் டாக்டர் சஞ்சீவி, தில்லைநாயகம், நாரண துரைக்கண்ணன் போன்ற பிரபலஸ்தர்களின் கட்டுரைகள் வெளிவருகின்றன. நூலகம் பற்றிய விசேஷக் கட்டுரைகள், மலேசியத் தமிழ் எழுத்தாளர்களின் எழுத்துக்கள், தமிழின் சிறப்பை வலியுறுத்தும் கட்டுரைகள் தமிழ்ப் பணியில் பிரசுரம் பெற்றுள்ளன. புதுக் கவிதையை எதிர்த்து டாக்டர் தமிழண்ணல் எழுதிய கட்டுரைகள் இதில் தொடர்ந்து வந்தன.

மரபுக் கவிதையைப் போற்றி வளர்க்கும் பத்திரிகைகளில் '**முல்லைச் சரம்**' முக்கியமானது. கவிஞர் பொன்னடியான் கருத்துடன் வளர்த்து வரும் இந்தப் பத்திரிகை பல வருடங்களாக மரபுக் கவிதைக்குப் பணி யாற்றுகிறது. கவிஞரின் உணர்ச்சி பூர்வமான, கருத்து நயம் நிறைந்த கவிதைகள், இக்கவிதை ஏட்டுக்குத் தனிச் சிறப்புத் தருகின்றன. கவிதை எழுதும் ஆற்றல் பெற்ற பலரது படைப்புக்களைத் தாங்கி வருகிற முல்லைச்சரம் திறமையுள்ள இளம் கவிஞர்களையும் அறிமுகம் செய்து, வளர்ச்சிக்குத் துணை புரிகிறது.

பத்திரிகை நடத்துவது சிரமமான காரியம், நிச்சயமாக நஷ்டத்தை உண்டாக்கும் பணி என்று தெரிந்தும் கூட, புதிது புதிதாகப் பத்திரிகைகள் ஆரம்பிக்கும் முயற்சிகள் நடைபெற்றுக்கொண்டேயிருக்கின்றன. சிறு பத்திரிகைகளும் புதுசு புதுசாகத் தோன்றியவாறு இருக்கின்றன.

இவற்றில் பெரும்பாலானவை வெறும் ஆர்வத்தின் வெளிப்பாடுகளாகவும், இளம் எழுத்தாளர்களின் ஆசை மலர்ச்சிகளாகவுமே அமைகின்றன. இவை வெளியிடுகிற புதுக் கவிதைகளில் பெரும்பாலும் புதுமையும் இருப்பதில்லை; கவிதைத் தன்மையும் காணப்படுவதில்லை. கதைகளிலும் தரமோ நயமோ இல்லை.

எனினும் அபூர்வமாகச் சில முயற்சிகளில் முதல் இதழே பாராட்டத் தகுந்த சிருஷ்டிகளாக அமைந்து காணப்படுகின்றது. அப்படிப்பட்ட புது முயற்சிகளில் '**லயம்**' என்பதும் ஒன்று. இந்த 'காலாண்டிதழ்' பெரியார் மாவட்டம் அந்தியூர் அருகில் உள்ள நகலூரில், கே. ஆறுமுகம் என்ற

இலக்கிய நண்பரால் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. இதன் முதல் இதழ் ( ஜனவரி 1985 ) கனமான விஷயங்களைக் கொண்டுள்ளது.

இந்திய வைதீகமும் நாஸிகளும்– பிருமிள் தர்மு சிவராமின் கட்டுரை, ஞானியின் கல்லிகை, எனக்குள் ஒரு வானம் என்ற நெடுங் கவிதைகள் பற்றிய க. பூர்ணச்சந்திரனின் விரிவான விமர்சனம்; அலெக்சாண்டார் ஸோல்ஸெனிட்சின் எழுதிய 'பேரழிவை நோக்கிச் செல்லும் மேற்கத்திய உலகம்' என்ற கட்டுரையின் மொழிபெயர்ப்பு; போரிஸ் பாஸ்டர்நாக் கவிதை ஒன்றின் தமிழாக்கம்; மற்றும் தேவ தேவன், பிருமிள், கலாப்ரோதீப் சுப்ரமணியன் கவிதைகள் 'லயம்' முதல் இதழில் உள்ளன.

'எதிர்முனை' என்ற தலைப்பில் ஒரு பகுதி. சில முக்கியமான செய்திகள், தகவல்கள் மீதான சுதந்திரச் சிந்தனைக் குறிப்புகள்– சுயேச்சையான உரத்த சிந்தனைகள்– இதில் காணப்படுகின்றன. விறு விறுப்பான, சுவாரஸ்யமான விமர்சனங்களும் அபிப்பிராயங்களும் வெளியிடப்பட்டுள்ளன.

# 48. பொங்கும் தமிழமுதம்

'தமிழீழத்திலும் தமிழீழத்திற்கு வெளியிலும் வாழும் மாணவர் சக்தியை கிளர்ந்தெழ வைத்து, தமிழீழப் போராட்டத்திற்கு மாணவர் களை அணி திரளச் செய்வதற்காக', தமிழீழ மாணவர் பேரவை 'பொங்கும் தமிழமுதம்' என்ற மாதப் பத்திரிகையை வெளியிடுகிறது.

தமிழ் ஈழ மாணவர் பேரவையினர் தங்கள் குறிக்கோளை இந்தப் பத்திரிகையின் மூலம் தீர்க்கமாகவும் தெளிவாகவும் அறிவித்துள்ளனர்.

"உலகின் பல நாடுகளில் நடைபெற்ற போராட்ட வரலாறுகளில் நுரைத்தெழு வீர நடவடிக்கைகள் நடத்தப்பட்ட காலங்கள் உண்டு. இத்தகைய போராட்டங்கள் நீரில் நுரைக் குமிழ்கள் எவ்வளவு விரைவா கத் தோன்றி மறைகின்றனவோ, அவ்வளவு விரைவாகத் தோன்றி, அதைவிட வேகமாக மறைந்து விடுகின்றன. இவ்வகைப் போராட்டங் கள், கோரிக்கையை வென்றெடுப்பதோ அல்லது வரலாற்றில் நிலைப் பதோ இல்லை.

இத்தகைய நடவடிக்கைகளில் முன்னின்றவர்கள் அந்நாட்டு மாணவர்களே.

பொதுவாக இளைஞர் மத்தியில் எழக்கூடிய உணர்வுகளும், எதையும் ஆழமாகச் சிந்திக்காது வேகமாகச் செய்துவிடத் துடிக்கும் மனோபாவமும், இளங்கன்று பயமறியாது என்ற பழமொழிக்கேற்ப அவர் களது அச்சமற்ற உணர்வுகளும் விடுதலை என்பது ஓரிரு மாதங்களில் பெற்றுவிடக்கூடிய ஒரு அற்பவிடயம் என்ற எண்ணத்தைத் தோற்று வித்து விடுவதால் இத்தகைய திட்டமிடப்படாத போராட்ட வரலாறு உருவாவதற்குக் காரணமாயிற்று.

தமிழீழத்திற்கான விடுதலைப் போராட்டத்தில் மாணவர்கள் தங்களை இணைத்துக்கொள்ள வேண்டும் என்று அறைகூவல் விடும் எந்த ஒரு இயக்கமும், எந்த வகையான செயற்திட்டங்களைக் கொண்டுள்ளது எனபது பற்றியும் மாணவர்கள் ஆராய்ந்தே தம்மால் முடிந்த அர்ப்பணிப்பைச் செய்ய முன்வரவேண்டும். நாம் நடத்தும்

தமிழீழத்திற்கான விடுதலைப் போராட்டம் உலகின் எப்பகுதியிலும் நடத்தப்பட்ட விடுதலைப் போராட்டத்தை விடவும் இலகுவாக இருக்கப் போவதில்லை.

தமிழீழப் பிரதேச சமூகச் சூழ்நிலைகளையும் எதிரியின் சமூகச் சூழ்நிலைகளையும் மக்கள் தொகையையும் ஒப்பிட்டு நோக்குவோமாயின், தமிழீழப் போராட்டமானது ஏனைய போராட்டங்களைக் காட்டிலும், கடுமையாகத்தான் இருக்கும்.

தமிழீழ விடுதலைப் போராட்டத்தில் தன்னை இணைத்துக் கொள்ளும் ஒவ்வொரு செயல் வீரனையும் உலகின் ஏனைய விடுதலைப் போராட்ட வீரனைக் காட்டிலும் உயர்வாக்கப் போவது இக் கடுமையான போராட்டப் பரீட்சையே.

இத்தகைய கடுமையான போராட்டத்தில் தங்களை இணைத்து, தமிழீழ விடுதலைக்குத் தம்மை அர்ப்பணிக்க முன்வரும் ஒவ்வொரு இளைஞனும், மாணவனும், தமிழீழப் போராட்ட வரலாற்றில் ஒரு நுரைத் தெழு வீரசாகச காலகட்டத்தை ஏற்படுத்திவிட்டு இப்போராட்டக் களத்தி லிருந்து மறைந்து விடாமல், ஒரு நீண்ட முடிவான போராட்டத்திற்குத் தங்களைத் தயார்படுத்திக்கொள்ள வேண்டும்.

இவ்வகையில் தமிழீழப் போராட்ட வரலாறு உலகில் நாளைய விடுதலை வீரர்களுக்கு ஒரு வழிகாட்டியாக அமைய வேண்டும்.

இன்று ஒடுக்கப்படும் நமது மக்களால் நடத்தப்படும் விடுதலைப் போராட்டம், ஒடுக்கப்பட்டுக் கொண்டிருக்கும் பல நாட்டு மக்களுக்கும் ஒரு பாடமாக அமையும் என்பதில் ஐயமில்லை.'' ( தமிழமுது–கிண்ணம் –1, துளி–7 அக்டோபர் 1984 )

தங்கள் லட்சியத்தையும், வரலாறு காட்டும் உண்மையையும் திடமாக எடுத்துக் கூறும் 'தமிழமுது' குழுவினர், விடுதலைப் போராளிகளின் நோக்கையும் கடமையையும் இவ்வாறு நினைவில் பதித்துக் கொள் கிறார்கள்.

“நமது மண்ணையும் மக்களையும் சார்ந்து அவர்களது சொந்தப் பலத்திலும் பங்களிப்பிலும் இப்போராட்டத்தை எடுத்துச் செல்வதற்கு மக்களைத் தயார்படுத்த வேண்டும். இதனூடாகவே முழுமையான வெற்றியை ஈட்ட முடியும்.''

''சரியானதோர் பாதையில் மக்கள் போராட்டத்தை எடுத்துச் செல்வது இறுதி வெற்றிக்கு வழிகோலும்.'' இக்கொள்கை வழியை

வலியுறுத்தும் விதத்தில் கட்டுரைகள், கவிதைகள், கதைகள் 'தமிழமுது' இதழ்களில் பிரசுரிக்கப்படுகின்றன.

உலக நாடுகளில் நிகழ்ந்த விடுதலைப் போராட்டங்கள், மாணவர் போராட்டங்கள் பற்றிய கட்டுரைகளும், தமிழ் ஈழச் செய்திகளும் இதில் இடம் பெறுகின்றன.

போராட்ட உணர்வைக் காட்டும் சித்திரங்களை அட்டையில் வெளியிட்டு, அவற்றுக்கு ஏற்ற உணர்ச்சி செறிந்த கவிதைகளைத் தமிழமுது பிரசுரிக்கிறது.

தமிழகக் கவிஞர்கள், படைப்பாளிகளின் கவிதைகள், கதைகளை ஒவ்வொரு இதழிலும் வெளியிடுகிறது. கவிஞர்கள் மு, மேத்தா, வைரமுத்து, இன்குலாப், நா. காமராசன், குருவிக்கரம்பை சண்முகம், செவ்வண்ணன் மற்றும் இளைய கவிஞர்கள் பலர் உணர்ச்சியூட்டும் கவிதைகள் எழுதியிருக்கிறார்கள்.

எழுத்தாளர்களைப் பேட்டிகண்டு பல்வேறு பிரச்னைகள் குறித்தும் அவர்களது கருத்துக்களை அறிந்து தமிழமுது வெளியிட்டுள்ளது. இவ் வகையில், ஜெயகாந்தன், அசோகமித்திரன், கண முத்தையா, பால குமாரன், ராஜம் கிருஷ்ணன், தா. பாண்டியன், பரீக்ஷாஞாநி முதலியவர்களின் பேட்டிகள் அச்சாகியுள்ளன.

கேள்வி—பதில் பகுதி மூலம் பல விதமான சந்தேகங்களுக்கும், வினாக்களுக்கும் விளக்கம் அளிக்கப்படுகிறது.

சோவியத் எழுத்தாளர் பரீஸ் வஸிலியேவ் எழுதிய, விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்ட வீர மங்கையரின் அனுபவங்களைச் சித்திரிக்கும், ரசமான நவீனம் 'அதிகாலையின் அமைதியில் !' தொடர்கதையாக வருகிறது.

'தமிழீழத்தைப் பொறுத்தமட்டில் வெறும் இன விடுதலையாக மட்டுமே இருக்கக் கூடாது— இருக்கவும் முடியாது. இயக்கமானது சரியான சோஷலிசத் திசைமார்க்கத்தில் தனது கொள்கையை முன் வைப்பது தமிழீழ மக்களுக்கு நம்பிக்கை அளிப்பதாகவே இருக்கிறது' என்று குறிப்பிடும் 'தமிழமுது' நம்பிக்கை ஒளியை எங்கும் பரப்ப முயல்கிறது. தனது இலட்சியப் பாதையில் முன்னேறி வளர்கிறது.

# 49. வேறு சில பத்திரிகைகள்

## தென்புலம்

'இலட்சங்கள் இலட்சாதிபதிகளை உருவாக்குகின்றன. இலட்சியங்கள் இலட்சியவாதிகளை உருவாக்குகின்றன.' என்ற வரிகளை லட்சிய மொழியாக முகப்பில் அச்சிட்டு, அதனடியில் சி. என். அண்ணாதுரையும் ஈ. வே. ரா. பெரியாரும் சிரித்துப் பேசிக் கொண்டிருக்கும் சித்திரத்தை அச்சிட்டு, இ த ர பத்திரிகைகளிலிருந்து மாறுபட்ட விஷயங்களைத் தாங்கி 'தென்புலம்' என்ற திங்களிதழ் வெளிவருகிறது.

தோப்பூர் திருவேங்கடம் எம். ஏ. ஆசிரியராக இருந்து நடத்துகிற இம் மாத ஏடு பன்னிரண்டு ஆண்டுகளாக வந்து கொண்டிருப்பதாகத் தெரிகிறது.

வரலாற்றுத் தொடர்பான தகவல் கட்டுரைகள் ( இஸ்காராவும் லெனினும், இட்லர் ஏன் சர்வாதிகாரியானான், கரிபால்டியும் கிழவியும் போன்றவை ); கல்வித் துறை சம்பந்தமான கட்டுரைகள்; திரு. வி. க. போன்றோரின் கருத்துரைகளின் மறுபிரசுரம்; சிறுகதை மற்றும் ரசமான தகவல்களைத் தென்புலம் வெளியிடுகிறது.

மரபுக் கவிதை, புத்தக மதிப்புரை ஆகியவை அபூர்வமாக (எப்போதாவது ) இடம் பெறுகின்றன.

அம்பலவாணக் கவிராயர் எழுதும் 'உண்ணாமுலையும் மங்களம் மாமியும் உரையாடுகிறார்கள்' என்ற பகுதி இத்திங்களிதழின் சிறப்பு அம்சமாக விளங்குகிறது. படித்த, நாகரிகமான, அனுபவஞானம் பெற்ற மங்களம் மாமியும் நாட்டுப்புறத்திலிருந்து நகரத்துக்கு வ ந் து ள் ள உண்ணாமுலையும் நாட்டு நடப்புகள், செய்திகள் பற்றி உரையாடுவது போல் எழுதப்படுகிற இக்கற்பனை நிகழ்ச்சியில் சகலவிதமான விஷயங்களும் அலசப்படுகின்றன.

## சூத்ரதாரி

திருப்பூரில் தோன்றியுள்ள புதிய பத்திரிகை சூத்ரதாரி. இதன் முதல் இதழ் எடுப்பாக, நம்பிக்கை தருவதாக உள்ளது. கவிதைகள் நிறைய.

கேரளக் கவிஞர் சச்சிதானந்தம் கவிதை—புவியரசின் தமிழாக்கம், வித்யா ஷங்கர், பக்தவத்சலம், ஆத்மா கவிதைகள் அநேகம். மற்றும் கல்யாண்ஜி கவிதை, விக்ரமாதித்யன் கவிதை; சுப்ரபாரதி மணியன் கதை முதல் இதழில் இடம் பெற்றுள்ளன.

முதல் பக்க சுய விமர்சனம் சுவாரஸ்யமாக இருக்கிறது.

'இதுபோன்ற சிறு பத்திரிகைகள் தோன்றுவதும் மறைவதுமாய் இருக்கின்ற இந்தக் காலச் சூழலில் இப்படியொரு பத்திரிகையைத் திடீரென ஆரம்பிக்க வேண்டிய அவசியமென்ன ? சூத்ரதாரி புதியதாக என்ன சாதிக்கப் போகிறான் ? இது தொடர்ந்து வருவதற்கான சாத்தியங்கள் உள்ளனவா ? என்பன போன்ற கேள்விகள் எங்களுக்குள்ளேயே விசுவரூபமெடுத்துத் தலையைத் தட்டி கேட்கப்பட்டவைகள்தான்.

வெளிவந்த எந்த ஒரு சிறு பத்திரிகையும் வெளியீட்டு அளவில் நின்று போயிருக்கலாமே தவிர, நீண்ட காலத்திற்கு வாசகர்களால் நினைக்கப்பட்டுக் கொண்டிருக்கும்போது அது சிரஞ்சீவித்தனம் அடைந்து விடுகிறது. சிறு பத்திரிகைகளுக்கு என்றும் அழிவில்லை. வாழைக் கன்று மாதிரி ஒன்று வளர்ந்து மறையும்போது புதிதாக ஒன்று குருத்து விட்டிருக்கும். சூத்ரதாரிகூட அப்படி முளைத்ததாக இருக்கலாம். இது நின்றுபோனால் கூட இதன் பாதிப்பில் வேறு ஏதேனும் பத்திரிகையொன்றும் எங்காவது தோன்றலாம்.

சூத்ரதாரி எதைச் சாதிக்க எண்ணியுள்ளானோ, அதையே சாதிக்கும் எண்ணத்துடன் சில பத்திரிகைகள் வந்து கொண்டுதானிருக்கின்றன. பிறகு இது எதற்கு என்ற கேள்வி எழலாம். நல்ல விஷயங்களைப் போட்டி போட்டுக் கொண்டு செய்வதிலொன்றும் தவறில்லையே. மேலும், சிறு பத்திரிகைகள் விஷயங்களை எல்லாப் பகுதி வாசகர்களிடமும் கொண்டு செல்ல முடிவதில்லை. ஒரு குறிப்பிட்ட எல்லைக்குள்ளேயே அது தன் விஷயதானத்தை வழங்க வேண்டியதாய் உள்ளது. எனவே பரவலாக அனைத்துப் பகுதி வாசகர்களிடமும் நல்ல விஷயங்கள் சென்றடைய வேண்டுமெனில் ஆங்காங்கே பரவலாக சிறுபத்திரிகைகள் தோன்ற வேண்டியது அவசியமாகின்றது.

நல்ல வாசகனுடைய கடமை தரமான பத்திரிகைகளைத் தேடிப் படிப்பது. நல்ல பத்திரிகைகளின் கடமை தரமான படைப்புகளை வாசகனுக்கு வழங்குவது. இ ந் த நோக்கில் சூத்ரதாரி செயல்படுவான். உண்மையைத் தேடுகிறோம். உண்மையையே சொல்லுகின்றோம். இது

தொடர்ந்து வருவதற்கான சாத்தியங்கள் எங்கள் முயற்சியில் உள்ளது; உங்கள் ஒத்துழைப்பில் உள்ளது' ( சூத்ரதாரி ).

## த்வனி

இந்தப் பெயரில் ஒரு இலக்கியப் பத்திரிகை. இரண்டு மாதங்களுக்கு ஒரு முறை வெளிவருவது. இலக்கிய ஆர்வமும், தரமாக—கனமாக—புதுமையாக ஏதாவது செய்ய வேண்டும் என்ற துடிப்பும் பெற்றுள்ள இளைஞர்கள் கோவில்பட்டியிலிருந்து 'த்வனி' யைப் பரப்ப முனைந்திருக்கிறார்கள்.

'தமிழ் இலக்கியச் சூழல்—ஒரு ஆரம்ப விசாரணை' என்றொரு கட்டுரை ( ஷைலேந்தர் எழுதியது. மே 1985 ) தற்கால நிலையைத் தீவிரமாக அலசி ஆராய்ந்திருக்கிறது.

'இன்னமும் நாம் பழைய பாட்டையில் போய்க் கொண்டிருப்பதைப் பரிசீலிக்க வேண்டும். இப்போது நம்மால் செய்ய முடிந்ததும், செய்ய வேண்டியதும் என்ன ? க்ஷீண நிலையில் கிடக்கும் தமிழ்ப் பத்திரிகை உலகத்தை மீண்டும் தட்டியெழுப்பவேண்டும். மீண்டும் தரமுள்ள வாசகர்களைத் தமிழில் உருவாக்க வேண்டும். இப்போதிருக்கிற இந்தத் தேக்க நிலை புதிய பாய்ச்சலுக்கான பதுங்குதலாகக்கூட இருக்கலாம். ஆனால் அதற்கான ஆரோக்கியத்தை வளர்க்கவேண்டும். ஜனங்களின் ரசனைப் போக்கில் விஷயங்களைச் சொல்ல ஆரம்பித்து மெல்ல அவர்களை ரசனைக்குரியவர்களாக மாற்ற வேண்டும் என்கிற லட்சியத்துக்காக, விரிந்த அளவில் வாசகர்களிடத்தில் இயங்கிவரும் கலை இலக்கிய ஸ்தாபனங்களின் கைவசம் உள்ள பல ஆயிரம் வாசகர்களின் இருத்தலே நமக்கு இன்னமும் நம்பிக்கையூட்டுகிறது. நமக்கு நாமே நம்பிக்கை கொள்வதும் வாசகர்களை நம்பிக்கை கொள்ள வைப்பதும் அவசியமாகிறது.

முதலில் நம்முடைய குறுகிய குழுவாத மனப்பான்மைகளைச் சற்றே ஆரோக்கியமாக்க வேண்டும். யதார்த்த வாழ்வைச் சந்திக்காத நம்முடைய மண்டை வீக்கத்தைக் கரைக்க முயற்சி செய்யவேண்டும். எல்லாவித ஆக்கபூர்வமான மோதல்களையும், புதிய விளைவுகளையும், புணர்ச்சிகளையும் பல்கிப் பெருகிடச் செய்தல் வேண்டும். தனிநபர் வாதங்களில் மீண்டும் வீழ்ந்திடாமலிருக்க வேண்டும்.

இதெல்லாவற்றுக்கும் மேல் நம்மை நாமே திடப்படுத்திக் கொள்ள, சுயவிமர்சனப் பார்வையில் புரிந்துகொள்ளத் தைரியம் வேண்டும்' (த்வனி)

# 50. மல்லிகை

யாழ்ப்பாணத்திலிருந்து வெளிவரும் இலக்கிய மாதப் பத்திரிகை 'மல்லிகை' இருபத்தோரு ஆண்டுகளாக வெற்றிகரமாக வளர்ந்து முன்னேறிக் கொண்டிருக்கிறது.

இலங்கை எழுத்தாளர் டொமினிக் ஜீவா, இலட்சியத் துடிப்போடும் கடின உழைப்போடும் உற்சாகமாக மல்லிகையை வளர்த்து வருகிறார்.

'உழைப்பது, மல்லிகைக்காக உழைத்துக் கொண்டேயிருப்பது' தான் ஜீவாவின் வாழ்க்கை ஆகும்.

'உழைப்பும், பல பிரதேசங்களில் செறிந்து வாழும் ஈழத் தமிழர்களின் சுய முன்னேற்றமும் கலாச்சாரச் செழுமையும்தான் மல்லிகையின் குறிக்கோளாகும். மறைந்து— மறைக்கப்பட்டு— வாழும் கலைஞர்கள், படைப்பாளிகளை மக்கள் மத்தியில் அறிமுகப்படுத்துவதுதான் மல்லிகையின் பணியாகும். என்னதான் பாரிய கருத்து வித்தியாசங்கள் படைப்பாளிகளிடையே இருந்தபோதிலும்கூட, மல்லிகை எந்தக் கட்டத்திலும் சின்னத்தனமாகக் குறுகிய பார்வையுடன் நடந்துகொண்டதில்லை.'

இப்படி டொமினிக் ஜீவா மல்லிகையின் ஒரு இதழில் அறிவித்திருக்கிறார். அவருடைய 'இதய நேர்மையும் இலக்கிய நேர்மையும்' அவரை அறிந்திருப்பவர்களுக்கு நன்கு புரியும்.

'நான் சத்தியத்தைப் போல உண்மையானவனாக இருக்க விரும்புகிறேன்' என்பது ஜீவாவின் இதய ஒலி.

1984—ல் மல்லிகை தனது இருபதாவது ஆண்டு நிறைவைக் கொண்டாடும் வகையில் வெளியிட்ட சிறப்பு மலரில், அதன் 'ஈடு இணையற்ற சாதனை' குறித்து தி. க. சி. எழுதிய கட்டுரையின் சில பகுதிகள் நினைவுகூரத்தக்கவை.

"சுமார் 15 லட்சம் தமிழர்களைக் கொண்ட ஒரு நாட்டிலிருந்து, 20 ஆண்டுகளாக ஒரு முற்போக்கு மாத இதழாக மல்லிகை எவ்வாறு

வர முடிகிறது ? அதன் பின்னணி என்ன ? அதற்கு அடித்தளமாக விளங்கும் சக்திகள் யாவை ?

பிறக்கும்போதே (1964) தன்னை ஒரு முற்போக்கு மாத சஞ்சிகை என்று துணிச்சலாகப் பிரகடனம் செய்து கொண்டது மல்லிகை.

'ஆடுதல் பாடுதல் சித்திரம் கவியாதியினைய கலைகளில் உள்ளம் ஈடுபட்டென்றும் நடப்பவர். பிறர் ஈனநிலை கண்டு துள்ளுவர்' என்ற மகாகவி பாரதியின் வாக்கையும் தனது குறிக்கோள் வாசகமாகப் பொறித்துக் கொண்டது.

கவிதைக்கு மகாகவி பாரதி, சிறுகதைக்கு 'மணிக்கொடி' தந்த மாணிக்கம் புதுமைப்பித்தன் ஆகியோரைத் தனது முன்னோடிகளாகக் கொண்ட மல்லிகை உலகளாவிய ரீதியில் தனக்கொரு லட்சியத் தலை வனைக் கொண்டுள்ளது. அவர்தம் 'யுகப் புரட்சி' யின் சிற்பியான மாமேதை லெனினது நெருங்கிய தோழர், சோஷலிச எதார்த்தவாதம் என்னும் படைப்பு முறையின் தந்தை, மாக்சிம் கார்க்கி. அந்த மும் மூர்த்திகளின் பாதையில், எத்தனையோ இன்னல்களைப் புறம்கண்டு, இருபது ஆண்டுகளாக வெற்றிநடை போடுகிறது மல்லிகை.

ஓர் இலக்கிய இதழின் வெற்றிக்குக் கொள்கைபலம் மட்டும் போதுமா ? போதாது. பரந்து விரிந்த வாழ்க்கை அனுபவமும் வேண்டும்.

1954–ல் வெளிவந்த ரகுநாதனின் 'சாந்தி', 1959–62 காலகட்டத்தில் வெளியான விஜயபாஸ்கரனின் 'சரஸ்வதி', கடந்த 25 ஆண்டுகளாக வெளிவரும் 'தாமரை' முதலிய தமிழக ஏடுகளின் அனுபவமும் மல்லி கைக்கு முன்னுதாரணமாகவும் படிப்பினையாகவும் அமைந்தன. வேறு விதமாகச் சொன்னால், சாந்தி, சரஸ்வதி, தாமரை ஆகியவற்றின் மரபில் தோன்றியதே மல்லிகை. இந்த மரபை மேன்மேலும் செழுமைப் படுத்திவருவதே மல்லிகையின் தனிச் சிறப்பு.

மல்லிகையின் வெற்றிக்கு மற்றொரு முக்கிய காரணம், இலங்கை முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தின் குரலாக அது ஒலிப்பதுதான்.

இச்சங்கத்தின் கொள்கைகளைப் பட்டிதொட்டியெங்கும் பரப்பும் செயல்வீரனாக விளங்குகிறார் மல்லிகை ஆசிரியர் டொமினிக்

மல்லிகை அவரது 'சொந்தப் பத்திரிகை' என்றபோதிலும்—அதனால் ஏற்படும் பொருளாதார லாப நஷ்டங்களுக்கு அவரே பொறுப்பு என்ற போதிலும்—மல்லிகையை மக்கள் உடைமை என்றே ஜீவா கருதுகிறார். இதற்குக் காரணம், மார்க்ஸியம் லெனினியத்திலும் அதன் செயல்பாட்டிலும் அவர் கொண்டுள்ள பற்றும் உறுதியும் ஆகும்.

மல்லிகை ஆசிரியர் டொமினிக் ஜீவாவின் கொள்கைப் பிடிப்பு, அவர் உழைப்பு, பொறுமை, விவேகம், பெருந்தன்மை, தோழமை உணர்ச்சி, நாட்டுப்பற்று, மொழிப்பற்று இவையும் மல்லிகையின் வெற்றிக்கு அடிப்படைக் காரணங்களாகும்.'' ( தி. க. சி. )

மல்லிகை ஆசிரியரின் உழைப்பையும் சாதனையையும், மல்லிகையின் வளர்ச்சி மூலம் நன்குணர்ந்த வாசகர்கள் வியந்து பாராட்டத் தவறுவதில்லை.

'ஒரு சஞ்சிகை தனது இருபதாவது ஆண்டு விழாவை ஈழத்தில் கொண்டாடுகிறது என்ற யதார்த்தமான செய்தியே ஒரு சரித்திரமாகும். இந்தச் சாதனையைச் செய்வதற்கு நீங்கள் அதற்குப் பாத்தி கட்டிப் பசளையிட்டு உழைத்த உழைப்பை இலக்கிய உலகம் லேசில் மறந்துவிட முடியாது. அத்தனை உழைப்பு உழைத்துள்ளீர்கள். நானறிந்த வரை இத்தனை சிரமமான உழைப்பை உங்களைத் தவிர வேறு எவருமே தங்களது சஞ்சிகைக்கு செய்திருக்க முடியாது. ஒரு இலட்சிய வெறியும் தாகமும் இடைவிடாத நல்நோக்கமும் இருந்திருந்தால்தான் இது சாத்தியப்படும் என நான் நம்புகிறேன்' என்று கொழும்பு வாசகர் எஸ். ரவீந்திரன் பாராட்டியிருக்கிறார்.

'மனக் கிலேசமில்லாமல் துணிவாகவும் திட்டமிட்டும் சுயநலமற்றும் எவர் ஒரு காரியத்தைச் செய்தாலும் அது காலக் கிரமத்தில் மக்களால் மதித்துப் போற்றி வரவேற்கப்படும்.'

'யாழ்ப்பாணத்தில் இப்பொழுது உள்ள சூழ்நிலையில் வேறு எவருக்கும் இந்தப் பராக்கிரமத்தை அடைய இயலாது. அதற்கு முக்கிய ஏதுவாக நான் கருதுவது, உங்களுடைய சுயநலமற்ற துணிவுதான்.'

இப்படியும் இன்னும் பலவாறாகவும், மல்லிகை ஆசிரியரைப் பாராட்டி ஊக்குவிக்கிறார்கள் வாசகர்கள்.

டொமினிக் ஜீவாவின் மன உறுதிக்கும், துணிச்சலுக்கும், அயராத

உழைப்புக்கும் அடிப்படையாக அமைந்திருப்பது அவர் உள்ளத்தில் திடமாக உறைகின்ற நம்பிக்கை ஆகும்.

1983–ல் இலங்கையில் நிகழ்ந்த பயங்கரமான இனக்கலவரம் பற்றி அனைவரும் அறிவர். அச்சூழ்நிலையில்கூட ஜீவா 'மல்லிகை'யைப் பிரசுரித்துக் கொண்டுதான் இருந்தார்.

1983 நவம்பர் மாத இதழில் அவர் இப்படி அறிவித்துள்ளார்–

'கசப்பான பல அனுபவத் தாக்கங்களிலிருந்து நாடு கொஞ்சங் கொஞ்சமாக விடுபட்டுக் கொண்டிருக்கின்றது. விக்கித்துப்போய் மலைத்துவிட்ட இலக்கிய உலகமும் சற்று மூச்சுவிட்டு நிமிரப் பார்க்கின்றது. இவை அத்தனையும் கண்டு, நாம் அதிர்ச்சியடைந்தோ, விரக்திக் குட்பட்டோ செயலிழக்கவில்லை. மல்லிகை தனது கடமையைத் தொடர்ந்து செய்வதை வாசகர்கள் பலர் நன்கு அறிவார்கள். நம்பிக்கைதான் வாழ்வின் ஜீவநாடி என்பது நமக்குத் தெளிவாகத் தெரியும்.'

சங்கடங்களை எதிர்த்து எதிர்நீச்சல் போடுவதில்தான் வாழ்க்கையின் சாராம்சமே இருக்கின்றது என்பதை நன்கு உணர்ந்தவர் டொமினிக் ஜீவா.

நிதானம் தவறாமல், அடிப்படைக் கொள்கையை விட்டுக்கொடாமல், சிந்தனைத் தெளிவுடன் அவர் எழுதுகிற எழுத்துக்கள் மல்லிகைக்குக் கனமும் தனித்தன்மையும் சேர்க்கின்றன.

'இனவாதம் என்பது மானிடர்களுக்குப் பைத்தியம் போன்ற கடுமையான ஒரு சமூக வியாதி. வெவ்வேறு இனத்தவர்களுக்கு இடையில் உண்மையாகக் காணக்கூடியது புறம்பான சில தன்மைகளின் வேறுபாடு மாத்திரமே. உட்புறமாக அவர்களின் தேவைகள், உணர்வுகள், இன்ப துன்பங்கள், பிரச்னைகள் எல்லாம் ஒரே விதமாக இருக்கின்றன. ஒரு இனம் மற்றொரு இனத்துக்குக் காட்டும் பகையான மனப்பான்மைக்கு முக்கிய காரணம், உட்புறமாக அவர்களை அறிந்து கொள்ளாமை என்று கூறலாம். அவ்வகையான அறிந்து கொள்ளலை மிகச் சுலபமாகப் பரிமாறுதலுக்கு வழி இலக்கியமே.'

இவ்விதம் மல்லிகையில் ஜீவா தெளிவுபடுத்தியிருக்கிறார். அவ்வகையான அறிந்து கொள்ள உதவும் கதைகள், கட்டுரைகளை,

மொழிபெயர்ப்புகளை மல்லிகை பிரசுரித்துள்ளது. இப்பவும் வெளியிட்டு வருகிறது.

இலங்கைத் தமிழ் எழுத்தாளர்கள் தங்களது தேசிய இலக்கியத்தை வளர்க்க உறுதி பூண்டார்கள்.

'இலங்கை சுதந்திரம் அடைந்த பின், அதுவரை பழங்காலத்தைப் போல அலங்கார வாதங்களிலும் தேவதைக் கதைகளிலும் முழ்கி இருந்த தென் இந்திய இலக்கியச் செல்வாக்கிலிருந்து இலங்கைத் தமிழ் எழுத் தாளர்களை விடுவிக்கும் முகமாகத் தேசிய இலக்கியம் என்ற கோஷத்தை முன் வைத்து முற்போக்கு எழுத்தாளர்கள் கிளர்ச்சி செய்தார்கள். தாயகத்தின் மொழி நடையையும், சமுதாயப் பின்னணியையும் இணங்க இலக்கியம் படைத்தலும், சமுதாய யதார்த்தவாத நோக்கத்தை உண்டு பண்ணுதலும் அத் தேசிய இலக்கியச் சங்கற்பத்தின் லட்சியங்களாகும்.

'1956 க்குப் பிறகு ஏற்பட்ட அரசியல், சமுதாய மாற்றங்களினால் இந்தத் தேசிய இலக்கிய சங்கற்பம் பெரிதளவில் கூர்மையடைந்தது. இக் கிளர்ச்சியை மேலும் முன்னுக்குக் கொண்டு சென்ற முற்போக்கு எழுத்தாளர் சங்கம், தேசிய ஒற்றுமை இலக்கியச் சங்கற்பத்தை நிலை நாட்ட ஒரு இயக்கத்தை நடத்தியது. சிங்கள—தமிழ்—முஸ்லிம் இனத்தவர் களிடையில் நல்லெண்ணத்தை வளர்த்தல், இலங்கையின் தேசிய முன்னேற்றத்துக்கு ஒத்துழைத்தல், தேசியப் பிரச்னைகளின்போது இன வேற்றுமைகளைக் கருதாமல் பொதுவாகச் சிந்திக்க மக்களுக்கு வழி காட்டுதல் ஆகியவை அவ்வியக்கத்தின் பிரதான நோக்கங்களாக இருந்தன.'

மல்லிகையும் இவ்வழியில் செயல்பட்டது. பத்து வருட காலத்தில் 50 சிங்களச் சிறுகதைகளின் மொழிபெயர்ப்புகள் மற்றும் கவிதை, கட்டுரை, புத்தக விமர்சனம் என்று சிங்கள இலக்கியங்களைத் தமிழில் தந்துள்ளது. சிங்கள எழுத்தாளர்களையும் அவர்களது படைப்புகளையும் அறிமுகம் செய்யும் முறையில் மல்லிகைச் சிறப்பிதழ் வெளிவந்ததும் குறிப்பிடத்தகுந்தது.

ஈழத்துத் தமிழ் இலக்கியத்தின் பொதுவான வளர்ச்சியையும், குறிப்பாக அவ் இலக்கியத்தின் முற்போக்கு நிலைப்பட்ட ஆழப்பாட்டை யும் வற்புறுத்துவதும், அவற்றுக்காகச் செயல்படுவதுமே 'மல்லிகை' தமிழ் சஞ்சிகையுலகில் நிலைநிறுத்த விரும்பும் சுயநியாயப் பாடாகும் என்று இலக்கிய விமர்சகர் கா. சிவத்தம்பி கணித்திருக்கிறார்.

'கடந்த இருபது ஆண்டுகளாக வந்துள்ள மல்லிகை இதழ்களை ஒவ்வொன்றாகப் புரட்டி ஆராய்ந்தால், இன்றைய தமிழ் இலக்கியம் மற்றும் திறனாய்வின் வளர்ச்சிக்கு மல்லிகை ஆற்றியுள்ள அருந் தொண்டு நன்கு விளங்கும். குறிப்பாக, திறனாய்வுத் துறையின் வளர்ச் சிக்கு 'மல்லிகை' யின் வாயிலாகக் கைலாசபதி, சிவத்தம்பி, நுஃமான் மற்றும் பல ஆய்வாளரது பங்களிப்பு சாலச் சிறந்ததாகும். இன்றைய தமிழ் இலக்கியத்தின் பிற்போக்குச் சக்திகளுக்கு எதிராக இவர்கள் நடத்திய கருத்துப் போராட்டமும், ஒப்பீட்டு முறையில் திறனாய்வை வளர்ப்பதில் இவர்கள் காட்டிய ஆர்வமும் போற்றத்தக்கன.

பேராசிரியர் நா. வானமாமலை மற்றும் பல எழுத்தாளர்களின் படைப்புகளை வெளியிட்டு, இந்தியாவுக்கும் இலங்கைக்கும் இடையே நட்புறவை வளர்ப்பதில் மல்லிகையின் வீறுமிக்க பணி குறிப்பிடத் தக்கதாகும்.

'இந்திய இலக்கியத்தை மட்டுமின்றி, சோவியத் யூனியன் மற்றும் பிற சோஷலிச நாடுகளின் இலக்கியத்தையும் வாழ்க்கை முறையையும் தனது வாசகர்களுக்கு அறிமுகப்படுத்துவதில் மல்லிகை எப்போதும் முன் நின்றுள்ளது.' இது, தி. க. சி. யின் மதிப்பீடு.

இலங்கை எழுத்தாளர்களின், இளம்படைப்பாளிகளின் கதைகள், கட்டுரைகள், கவிதைகளை மல்லிகை வெளியிடுகிறது.

'விவாத மேடை' என்ற பகுதி மூலம் இலக்கியப் போக்குகளும், பிரச்னைகளும் விரிவாக சர்ச்சிக்கப்பட்டுள்ளன.

டொமினிக் ஜீவா வருடத்துக்கு ஒருமுறை தமிழ்நாட்டுக்கு வந்து, பரந்த அளவில் சுற்றுப்பயணம் செய்து, எழுத்தாளர்கள் பெரும்பாலோரைச் சந்திக்கிறார். அவர்களோடு மனம்விட்டுப் பேசி, கருத்துப் பரிமாற்றம் செய்து, தமிழ்நாட்டின் கலை, இலக்கியப் போக்குகள் பற்றி அறிந்து கொள்கிறார். தனது எண்ணங்களையும் அனுபவங்களையும் விமர்சனங் களையும் மல்லிகையில் எழுதுகிறார். தூண்டில் என்ற கேள்வி– பதில் பகுதி அவருடைய அபிப்பிராயங்கள், சிந்தனைகள், அனுபவக் குறிப்பு களை எல்லாம் ஒ ளி வு மறைவின்றி வெளியிடுகிற அரங்கமாக விளங்குகிறது.

இலங்கையின் பல பகுதிகளையும், அவற்றைச் சேர்ந்த கலை இலக்கியப் படைப்பாளிகளையும் கவுரவிக்கவும் அறிமுகப்படுத்தவும்

'மல்லிகை' அவ்வப்போது சில சிறப்பிதழ்களை உருவாக்கியது. திக்கு வல்லைச் சிறப்பிதழ், நீர் கொழும்புச் சிறப்பிதழ், மலையகச் சிறப்பிதழ், முல்லைத்தீவுச் சிறப்பிதழ் ஆகியவை இத் தன்மையன.

மல்லிகையின் ஒவ்வொரு ஆண்டுமலரும் வாசகர்களுக்கு நல் விருந்து ஆகும்.

'மல்லிகை வெறும் இலங்கைச் சஞ்சிகையல்ல. அது தமிழ்கூறும் நல்லுலகம் அனைத்தையும் அரவணைத்துப் போகும் மாசிகை' என்பதை அதன் இதழ்கள் நிரூபிக்கின்றன.

'எமக்கு வெகு தெளிவாகவும் துல்லியமாகவும் ஒன்று தெரியும். சரித்திரத்தில் பேசப்படப் போகும் சஞ்சிகை மல்லிகை. நாமும் மல்லிகை யின் சுவைஞர்களான நீங்களும் மறைந்துபோன பின்னரும் நின்று நிலைத்துப் பேசப்படப்போகும் மாசிகை ம ல் லி கை. மல்லிகையை ஆராய்ந்து கலாநிதிப் பட்டம் வாங்கக்கூடிய ஒரு காலம் வரத்தான் போகின்றது. அப்படியான நெடுந்தொலைவுப் பார்வையுடனேயே நாம் இன்று செயல்பட்டு வருகிறோம்.'

—இப்படி அறிவிக்கிறார் மல்லிகை ஆசிரியர் டொமினிக் ஜீவா. இதிலும் அவருடைய தீவிரமும் உறுதியும் நிறைந்த நம்பிக்கையே மேலோங்கி ஒலிக்கிறது.

# 51. இலங்கை இதழ்கள்

தமிழ்நாட்டில் தீவிரமான இலக்கிய முயற்சிகள் ஊக்கத்தோடும் உற்சாகத்துடனும் செயல்படுத்தப்பட்டு, வெற்றிநடை போடுகின்ற கால கட்டங்களில், இலங்கையிலும் அவற்றின் தாக்கம் நன்கு உணரப்படும். இலங்கையில் உள்ள இலக்கியவாதிகள் புது விழிப்புடனும் புதிய வேகத் தோடும், தமிழ்நாட்டில் நடைபெறுகிற முயற்சிகளைப் போல, அங்கும் உற்சாக முயற்சிகளில் ஈடுபடுவது வழக்கம். தமிழ்நாட்டில் 'மணிக்கொடி' வந்து கொண்டிருந்த காலத்தில், இலங்கையில் 'ஈழகேசரி' தோன்றி இலக்கிய மறுமலர்ச்சிக்காகப் பணிபுரிந்தது. பிறகு கிராம ஊழியன், கலா மோகினி காலத்தில் இலங்கை இளைஞர்கள் மறுமலர்ச்சி இலக்கியத்தில் ஆர்வம் காட்டினார்கள். 'மறுமலர்ச்சி' என்றொரு சிறு பத்திரிகையை நடத்தினார்கள். கே . கணேஷ் 'பாரதி' நடத்தினார். சரஸ்வதி நடந்து கொண்டிருந்தபோது அதை ஒட்டி 'சாந்தி', 'தாமரை' வர ஆரம்பித்த காலத்தில், இலங்கை முற்போக்கு இலக்கிய வேகம் தீவிரமாகச் செயல் படலாயிற்று. டொமினிக் ஜீவா 'மல்லிகை'யை ஆரம்பித்தார். இன்னும் எத்தனையே முற்போக்கு இலக்கியச் சிறு பத்திரிகைகள் தோன்றின; மறைந்தன.

இலங்கையில் வியாபாரம் செய்து கொண்டே இலக்கியப் புரவல ராகவும் எழுத்தாளராகவும், எழுத்தாளர்களின் நண்பராகவும் வாழ்ந்த ஒட்டப்பிடாரம் ஆ. குருசுவாமி பிற்காலத்தில் என்னிடம் அடிக்கடி சொன்னது உண்டு. இந்த இலக்கியத் தாக்கங்கள், செயல் அலைகள் பற்றியும் நீங்கள் எழுத வேண்டும் என்ற முடிவுரையோடு அவர் இப் பேச்சை முடிப்பது வழக்கம்.

இலங்கையின் இலக்கியப் பத்திரிகைகள் மற்றும் புத்தக வெளியீடு கள் குறித்து விரிவாக எழுதப்பட வேண்டியது அவசியமே. ஆனால் அவ்விதம் எழுதுவதற்கு எத்தனையோ தடங்கல்கள். அங்கே வெளியான புத்தகங்கள், பத்திரிகைகள் முதலியன தமிழ்நாட்டில் கிடைப்பதில்லை. இது பெரிய குறைபாடு.

கிராம ஊழியன், சரஸ்வதி, எழுத்து காலங்களில் இலங்கை நண்பர்களோடு ஓரளவு தொடர்புகொள்ள முடிந்திருந்தது. பின்னர் அது

நின்று போயிற்று. 1970 களில் இலங்கையில் பலப்பல சிறு பத்திரிகைகள் வெளிவந்திருப்பதாகத் தெரிகிறது. அவற்றைப் பார்க்கக் கூடிய வாய்ப்பு இங்கே யாருக்கும் கிட்டியதாகத் தெரியவில்லை. என் இனிய நண்பர்கள் சிலரது உதவியினால் ஓரளவுக்குத் தகவல்கள் எனக்குக் கிடைக்க வழி ஏற்பட்டது. அவற்றை ஆதாரமாகக் கொண்டுதான் நான் இக் கட்டுரையை எழுத வேண்டியிருக்கிறது. சம்பந்தப்பட்ட பத்திரிகைகளின் பல இதழ் களைப் பார்க்க முடியாத நிலையில், கிடைத்த ஒன்று இரண்டைப் பார்த்து விட்டு அவை பற்றி எழுத நேரிட்டிருப்பதால், இலங்கைச் சிறு பத்திரிகை கள் பற்றி மேம்போக்காய் சில தகவல்களை மட்டுமே தர முடிகிறது.

இலங்கை 'தினகரன்' நாளிதழின் வார மஞ்சரியில், தெளிவத்தை ஜோசப் என்ற ஈழத்து எழுத்தாளர் 'ஈழத்து முற்போக்கு இலக்கியப் பரம் பரைக்கு வித்திட்ட ஏடு பாரதி' என்ற தலைப்பில் சிற்றேடு பாரதி பற்றி விரிவாகவே எழுதியிருக்கிறார்.

ஜனரஞ்சகப் பத்திரிகைகளான வணிகப் பத்திரிகைகள், கொள்கைப் பிடிப்போடு நடத்தப்படுகிற சிற்றேடுகள் குறித்து விளக்கமாக அறிவிக்கும் அவருடைய கட்டுரையிலிருந்து சில வரிகள் :

"எவ்வித சமுதாய நோக்கமோ இன்னபிறவோ இன்றி வெறுமனே மக்களின் இரசனையை மழுக்கி, வியாபாரம் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டுள்ள பத்திரிகைகளுக்கு அரையிலும் குறையிலும் நிறுத்தப்பட வேண்டிய அவசியம் இருப்பதில்லை.

அவர்களுடைய இலக்கு பணம். இலக்கை நோக்கிப் பயணம் செய்யும் போது இடையே வரும் தடைகளை உடைத்தெறியப் பணத்தால் முடியும்.

மற்றவர்களின் இலக்கு பணம் அல்ல. ஒரு தர நிர்ணயம். இந்த இரண்டாவது குழுவினர் தங்களது இலக்கு நோக்கி நடக்கும்போது இடையில் குறுக்கிடும் முதல் தடை பணம்.

சில நேரங்களில் பணத்தால் இலட்சியங்களை உடைக்க முடியும். ஆனால் எல்லா நேரங்களிலுமே இலட்சியங்களால் பணத்தை உடைக்க முடிவதில்லை, ஆகவே ஏதாவதோர் இலட்சியத்துடன் ஓர் ஏட்டை ஆரம் பிக்கிறவர்கள் இடையில் குறுக்கிடும் பணத்துடன் மோதிப் பார்த்து முடியாமல் தோற்றுவிடுவதுண்டு. இந்தத் தோல்வியே பெருமைக் குரியதுதான்...

இவர்களுக்கு ஓர் எதிர்ப்புக் குரல்கூட நாம் கொடுக்காவிட்டால் இவைகளை நாமும் ஏற்றுக்கொண்டவர்களாகிறோம் என்று கூறிக் கொண்டு வெளிவரத் தொடங்கும் ஒரு சிற்றேட்டின் இலக்கு 'பணம்' அல்ல. இத்தனை சீரழிவுகளையும் அழித்தொழித்துவிட்டு, த ன து இலக்கை அடைந்துவிடுவதென்பதும் சாத்தியமானதொன்றல்ல. ஆனாலும் அவர்களுடைய நோக்கம் நாம் வாழும் காலத்தில் நடக்கும் இ ந் த அநீதிகளுக்கு நாமும் உடந்தையாகிவிடக் கூடாது என்னும் விழிப் புணர்வு போற்றற்குரியது.

தமிழ்நாட்டிலும் சரி, இங்கும் சரி; இலக்கியச் சிற்றேடுகளின் தோற்றம் தமிழ் இலக்கிய வளர்ச்சியில் குறிப்பிடத்தகுந்த மாறுதல்களை நிகழ்த்தியிருக்கின்றது என்பதை மறுக்க முடியாது.

1930–ம் ஆண்டு ஜூன் மாதம் தொடங்கப்பட்ட 'ஈழகேசரி', 1946 ஜனவரியில் தொடங்கிய 'பாரதி', 1946 மார்ச்சில் தொடங்கிய 'மறு மலர்ச்சி', அதற்குப் பின் தோன்றிய இலக்கியச் சிற்றேடுகளும் தம்மா லான பணியினைச் செய்தே மறைந்துள்ளன'' ( தினகரன் வாரமஞ்சரி, நவம்பர் 18, 1984).

'ஈழகேசரி' பல வருட காலம் நடைபெற்ற வார இதழ். ஆசிரியர் : சுன்னாகம் பொன்னையா. சோ. சிவபாதசுந்தரம் 'ஈழகேசரி' யில் பணி புரிந்திருக்கிறார். ஈழத்துச் சிறுகதைப் படைப்பாளிகள் பலரும் அதில் கதை எழுதினார்கள். பிற்காலத்தில் நல்ல நாவல்களைத் தொடர் கதை யாகப் பிரசுரித்தது. இலக்கியக் கட்டுரைகள், சர்ச்சைகள், புத்தக விமர் சனங்கள் இடம் பெற்றன.

'மறுமலர்ச்சி'– சில இதழ்களே வெளிவந்தன. வரதர், மகாகவி, அ. ந. கந்தசாமி, அ. செ. முருகானந்தன் போன்ற அந்நாளைய படைப் பாளிகள் இதில் எழுதினார்கள்.

'பாரதி' யை கே. கணேஷ் ஆரம்பித்து நடத்தினார். திரு. வி. க. விடம் தமிழ் படிப்பதற்காக சென்னைக்கு வந்த கணேஷ் இடதுசாரிகள் பலருடனும் பழகும் வாய்ப்பைப் பெற்றார். 'நவசக்தி' ஆசிரியர் குழுவில் இருந்த கே. ராமநாதன், ஐ. மாயாண்டி பாரதி, சக்திதாசன், சுப்பிரமணியன் ஆகியோருடன் அவருக்கு நட்பு ஏற்பட்டது. தமிழ்நாட்டின் பழம்பெரும் எழுத்தாளர்கள் சகலருடனும் பழகிய கணேஷ், கே. ஏ. அப்பாஸ், முல்க் ராஜ் ஆனந்த், கிருஷன்சந்த் போன்ற வட இந்திய எழுத்தாளர்களோடும்

பழகினார். பெரும்பான்மையான வெளிநாடுகளுக்குச் சென்றுள்ள அவர் அங்கே உள்ள எழுத்தாளர்கள், இலக்கியங்களுடன் தொடர்பு கொண்டவர். 1984–ல் கூட பல்கேரியா போய் வந்தார். பல்கேரியக் கவிதைகளைத் தமிழில் மொழிபெயர்த்துள்ளார். முல்க்ராஜ் ஆனந்த், கே. ஏ. அப்பாஸ் நாவல்களையும் அவர் தமிழாக்கியிருக்கிறார். 'கலாநேசன்' என்ற பெயரில் அவர் கவிதை கள் எழுதினார். இப்போதும் இலங்கைவாசியாகத்தான் இருக்கிறார்.

இலங்கையில் முற்போக்கு எழுத்தாளர் சங்கம் தோன்றுவதற்குக் காரணமாக இருந்தவர்களில் கே. கணேஷும் ஒருவர். இலங்கை இலக்கிய விமர்சகரான பேராசிரியர் கா. சிவத்தம்பி, 'இலங்கை முற்போக்கு எழுத்தா ளர் சங்கமும், ஈழத்தின் தமிழ் இலக்கிய வளர்ச்சியும்' என்ற கட்டுரையில் இவ்வாறு குறிப்பிட்டிருக்கிறார்–

"1946–ல் இச்சங்கம் தோன்றுவதற்குக் காரணமாயிருந்தோர் அக் காலத்தில் இலங்கை கம்யூனிஸ்ட் கட்சியின் முக்கிய உறுப்பினர்களாகவி ருந்த கே. ராமநாதன், கே. கணேஷ் ஆகியோரே. இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் உந்துதலையும் ஆற்றுப்படுத்தலையும் அடிக்கல்லாகக் கொண்டு இந்தியாவில் கே. ஏ. அப்பாஸ் முதலியோரின் தலைமையில் தோன்றிய முற்போக்கு எழுத்தாளர் சங்கம் போன்று ராமநாதனும் கணேஷும் இலங்கை முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தைத் தோற்றுவித்தனர்."

இதே கணேஷும் ராமநாதனும்தான் கூட்டாசிரியர்களாக இணைந்து 'பாரதி' சஞ்சிகையை நடத்தினர்.

'பாரதி' யின் முதலாவது இதழ் 1946 ஜனவரியில் வெளிவந்தது.

அந்த இதழின் தலையங்கத்தின் சிறு பகுதி இது–

'பாரதி அணுசக்தி யுகத்தின் சிற்பி. விஞ்ஞான முடிவுகளில் புரட்சி ஏற்படுத்திய அணுசக்தி போல் தமிழ் மொழிக்கும் புதுமைப் போக்களித்த மகாகவி பாரதியின் பெயர் தாங்கி வருகிறது இவ்விதழ். அவர் தமிழுக்குப் புது வழி காட்டியது போலவே பாரதியும் கண்டதும் காதல்கதைகள் மலிந்து விட்ட இன்றைய தமிழிலக்கியப் போக்கிற்குப் புது வழி காட்டும்...

தமிழ் தமிழுக்காகவே என்று தம் கூட்டத்திற்குள்ளேயே தமிழைச் சிறைப்படுத்திக் கொண்ட பண்டிதர்களின் இரும்புப் பிடியினின்று அதனை மீட்டு மக்கள் சொத்தாக்கினார் பாரதியார். இன்று பாரதி பரம்பரையில்

வந்தோம் என்று ஜம்பமடிக்கும் எழுத்தாளர் கோஷ்டி கலை கலைக்கா கவே என்று அப்பண்டிதர் பல்லவியையே வேறு இராகத்தில் பாடுகிறது. தமிழைச் சிறைமீட்ட பாரதியார் செய்த சேவையே பாரதியின் இலட் சியமும். '

கலை கலைக்காகவே என்று கூறி மொழி வளர்ச்சியைக் கட்டுப் படுத்தும் கலைஞர்களுக்கெதிராகவும்– ஏகாதிபத்தியத்துக்கெதிராகவும்– பாசிசத்துக்கெதிராகவும் – முதலாளித்துவத்துக்கு எதிராகவும் குரல் எழுப்பப் பாட்டாளி வர்க்கத் துணையுடன் பொதுவுடைமைச் சமுதாயத் துக்கு ஆதரவாகக் குரல் எழுப்பிய முதல் தமிழ் ஏடு பாரதிதான் என்று இலங்கை எழுத்தாளர்கள் கருதுகிறார்கள்.

1946 ஜனவரியில் தோன்றிய 'பாரதி' ஆகஸ்ட் முடிய உள்ள எட்டு மாதங்களில் ஐந்து இதழ்கள்தான் கொண்டுவர முடிந்தது. அதன் ஆறாவது இதழ் 1948 ஜனவரியில் பிரசுரம் பெற்றது. அதுவே பாரதியின் இறுதி இதழாகவும் அமைந்தது.

முற்போக்கு இலக்கிய இதழாக ஆரம்பித்து, இலக்கியத்துக்கும் அரசியலுக்கும் சமமான இடம் அளித்து வந்த பாரதி, மூன்றாவது இதழுக்குப் பிறகு இலக்கியப் பகுதிகளைக் குறைத்துக் கொண்டு ஒரு அரசியல் ஏடு ஆகவே மாறிவிட்டது.

இலக்கியவாதிகளின் ஆதரவையும் பெறாமல், அரசியல்வாதிகளின் பக்கபலத்தையும் பெற முடியாமல், 'பாரதி' தன் வரலாற்றை முடித்துக் கொண்டது.

முற்போக்கு இலக்கிய ஏடுகள் என்று சொல்லிக் கொண்டு இலங் கையில் அவ்வப்போது சிறு பத்திரிகைகள் வந்திருக்கின்றன. அவை சிறிது காலமே உயிர் வாழ்ந்துள்ளன.

நாவலாசிரியர் இளங்கீரனை ஆசிரியராகக் கொண்டு 1960 களில் **'மரகதம்'** என்றொரு பத்திரிகை வந்தது.

1968–ல் மருதூர்வாணன் ஆசிரியராக இருந்து **'தேன்மதி'** என்ற பத்திரிகையை நடத்தினார். இளம் எழுத்தாளர்களுக்கு உற்சாகம் அளிக் கும் அரங்கமாக அது விளங்கியது. 'கலைக் கூடல்' என்ற அமைப்பை யும் உருவாக்கி எழுத்தாளர்கள் சந்தித்து உரையாடிப் பழகுவதற்கும் அது ஏற்பாடு செய்தது.

யாழ்ப்பாணம் இ. செ. கந்தசாமி 1967—ல் 'வசந்தம்' மாத இதழை ஆரம்பித்தார். 'ஈழத்துக் கலை இலக்கியத் துறையில் முற்போக்கான பாதையில் செல்கின்றோம்' என்று அறிவித்தது அது. தமிழ்நாட்டி லிருந்து கட்டுப்பாடின்றி இறக்குமதியாகி, இலங்கை வாசகர்களின் மனதையும், இலங்கைப் பத்திரிகைகளையும் வெகுவாகப் பாதித்துத் தீமைபுரியும் 'தமிழ்ப் பத்திரிகைக் குப்பைகளுக்கு' பலத்த எதிர்ப்பு தெரி வித்தது வசந்தம். இளைய எழுத்தாளர்களின் கதை கவிதைகளுடன், லூ சூன் போன்ற முற்போக்கு இலக்கிய ஆசிரியர்களின் படைப்புகளை மொழிபெயர்த்தும் பிரசுரித்தது.

'புரட்சிகர சிந்தனையாளர்களின் எழு (த்துக்)களம்' என்று கூறிய வாறு புத்தளம் மன்னார் வீதியிலிருந்து 'பொன்மடல்' வந்தது.

'அக்னி' என்ற சிற்றேடு 'மனிதாபிமானப் படைப்பாளிகளின் முற் போக்குச் சிந்தனைக்களம்' ஆகச் செயல்பட்டது.

1971—ல் 'கற்பகம்' தோன்றியது. 'வண்மையுடையதொரு சொல்லி னால்—உங்கள் வாழ்வு பெற விரும்பி நிற்கிறோம்' என்ற பாரதி வாக்கை இலட்சிய வரிகளாகத் தாங்கி வந்தது. கலை, இலக்கியம், அறிவியல், பொருளாதாரம் போன்ற பல துறைகளிலும் கவனம் செலுத்திய கற்பகம், 'ஈழத்து மண் வாசனையையும் சாதாரண விவசாய, தொழிலாள மக்க ளுடைய வாழ்க்கை முறையையும் கருத்திற்கொண்டு ஆற்றல் இலக்கியங் கள் படைக்கப்பட வேண்டும்' என்று வலியுறுத்தியது.

களனி : 'நூறு சிந்தனை மலரட்டும்; நாறும் கீழ்மைகள் தகரட்டும்' என்ற கொள்ளை முழக்கத்துடன், யாழ்ப்பாணத்தில் 1973—ன் பிற்பகுதி யில் தோன்றியது.

'தேசத்தின் முற்போக்கு இலக்கியம் மட்டுமல்ல; முழு முற்போக்கு இயக்கமுமே பின்னடிக்கப்பட்ட நிலையில், ஒரு விவசாயப் பிரதேசமான கிளிநொச்சியை நிலைக்களமாகக் கொண்டு' களனி தீவிரமாகச் செயல் பட முயன்றது. ஆயினும், 1975—ன் முற்பகுதிவரை நான்கே நான்கு இதழ்களைத்தான் கொண்டுவர முடிந்தது இலக்கிய உற்சாகிகளினால்.

1976—ல் களனி மீண்டும் 'ஊற்றுக்கண்களைத் திறக்க' முற்பட்டது. 'வைரம் பாய்ந்த தனது கொள்கைக் கால்களில் ஊன்றி நின்று, ஈழத் தமிழ் இலக்கியப் பரப்பு ஏற்றமுற வளமூட்டும். நூறு பூக்கள் மலரட்டும்;

நாறும் கீழ்மைகள் தகரட்டும். இது அன்றும் இன்றும் என்றும் களனி யின் தாரக மந்திரம். அழகான ரோசாப்பூக்கள் களனியின் இலக்கல்ல. ஆனால் அவை அழகூட்டி அலங்கரிப்பதற்கு களனி எதிரல்ல' என்று அது அறிவித்தது.

'கிட்ட நிற்கும் நண்பர்களை மட்டுமல்ல, எட்டி நிற்கும் நண்பர் களையும் களனி அரவணைத்து முன்னேறும். காலை இளங்கதிர்போல் நாளும் தோன்றுகிற புதுமைச் சிற்பிகளின் புலமைக்குக் களமாய் களனி அமைவாகும். முதிய தலைமுறையின் முத்தான அனுபவங்கள் பிற்கால சந்ததிக்குப் பின்பலமாய் அமைவதற்குக் களனி துணையாகும்' என்றும் நம்பிக்கைக் குரல் கொடுத்தது.

சமுதாயப் பார்வையுடன் எழுதப்பட்ட கதைகள், கட்டுரைகள், கவிதைகளோடு கலை விமர்சனங்களையும் 'களனி' வெளியிட்டது. நாடக விமர்சனத்துடன், மிருணாள்ஸென் எழுதிய கட்டுரைகளையும் மொழிபெயர்த்து வெளியிட்டது.

**தாயகம் :** 1974-ல், யாழ்ப்பாணம் தேசிய கலை இலக்கியப் பேரவை வெளியீடாக 'தாயகம்' வெளிவந்தது. என். கே. ரகுநாதன், யோகன், சில்லையூர் செல்வராசன், அன்பு ஜவஹர்ஷா போன்றவர்களின் படைப் புக்களையும், க. கைலாசபதியின் கட்டுரைகளையும் தாங்கி வந்தது. 'தோட்டத் தொழிலாளரின் தொடர்ச்சியான சோக வரலாற்றை' முக்கியப் படுத்தும் கட்டுரைகளும் கதைகளும் அதில் அதிகம் இடம் பெற்றன.

**நவயுகம் :** காரைத் தீவில் பிரசுரம் பெற்றது. மருதூர்க் கொத்தன் கதைகளும், திக்குவெல்லைக் கமால், தில்லையடிச்செல்வன், மேமன் கவி போன்றோரின் கவிதைகளும் வெளிவந்தன.

1979-ல் 'சமர் இலக்கிய வட்டக் குழுவினருக்காக **'சமர்'** என்ற முற்போக்கு இலக்கிய ஏடு தோன்றியது. ஆசிரியர் டானியல் அன்ரனி.

**கீற்று** இலக்கிய வட்டம் என்ற அமைப்பு 1979-ல் **'கீற்று'** என்ற காலாண்டு சஞ்சிகையை நடத்தியது. கல்முனை எனும் இடத்திலிருந்து பிரசுரமான இது வழக்கமான கவிதை, கதை, மொழிபெயர்ப்புக் கதைகள், நாடக விமர்சனம் முதலியவற்றை வெளியிட்டது. சினிமா சம்பந்தமான கட்டுரைகளும் பிரசுரம் பெற்றன.

"உண்ணுவதற்கும் நல்ல உணவின்றி உழைப்பவனின் எண்ணத்தை

நாளும் இலக்கியமாய்ப் பாய்ச்சுகின்ற மின்னலெனும் கீற்று வீச்சாகும் எம் எழுத்து'' என்று பெருமையுடன் கூறிக்கொண்ட இக் காலாண்டு ஏட்டின் ஆசிரியப் பொறுப்பை ஆர். என். லோகேந்திரலிங்கம், கல்லூரன், கலைக்கொழுந்தன் ஆகியோர் கவனித்துக் கொண்டனர்.

சர்ச்சைக்குரிய விஷயங்கள், விறுவிறுப்பான தகவல்கள், பரபரப்பு ஏற்படுத்தும் அபிப்பிராயங்கள் முதலியவற்றை வெளியிடுவதில் 'கீற்று' ஆர்வம் காட்டியது. எனவே அது இலக்கிய அபிமானிகள், பொதுவான வாசகர்கள் முதலியோரது கவனத்தைக் கவர்ந்தது.

சிலோன் நியூஸ் பேப்பர்ஸ் லிமிடெட் 1975 ஏப்ரல் முதல் **சுடர்** என்ற கலை இலக்கியத் திங்கள் இதழை நடத்தியது. இது சில வருடங்கள் தொடர்ந்து பிரசுரம் பெற்றதாகத் தெரிகிறது.

இலங்கைத் தமிழ்ப் பத்திரிகைகளிடையே '**சிரித்திரன்**' தனி இடம் பெற்றுள்ளது. இது பரவலான கவனிப்புக்கு இலக்காகி, தமிழகத்தின் சஞ்சிகைகளின் கவனத்தையும் கவர்ந்து பெருமை பெற்றிருக்கிறது.

இதன் ஆசிரியர் சிவஞானசுந்தரம் (சிவா) ஒரு ஓவியர். இலங்கையின் பிரபல தினசரிகளான தினகரன், வீரகேசரி ஆகிய பத்திரிகைகளில் சவாரித் தம்பர், சின்னக் குட்டி, மைனர் மச்சான் போன்ற பாத்திரங்கள் மூலம் தனக்கெனத் தனி இடம் தேடிக்கொண்டவர் சிவா. இந்த நகைச்சுவைப் படைப்புகளைத் தூரிகை மூலம் அளித்து வாசகர்களை ஈர்த்துக் கொண்டவர்.

வட இந்தியாவிலிருந்து வெளிவரும் 'கொஞ்ச்', 'லோகசத்தா' ஆகிய மராட்டிய ஏடுகளிலும் சிவாவின் ஓவியப் படைப்புகள் இடம் பெற்றுள்ளன.

அரசாங்கக் கட்டிடக் கலைப்பகுதியில் கடமையாற்றிய சிவாவுக்கு 'தினகரன்' ஆசிரியராகப் பணியாற்றிய க. கைலாசபதியின் நட்பு கிடைத்தது. தினகரன் நாளிதழில் தொடர்ந்து தனது படைப்புகளைப் பிரசுரிப்பதற்கான வாய்ப்பு அவருக்குக் கிடைத்தது.

அவர் சிறிது காலம் பம்பாயில் தங்கி கட்டிடக் கலை இயலில் பயிற்சி பெற நேர்ந்தது. அப்போதுதான் சிவாவின் கார்ட்டுன் சித்திரங்கள் பிளிட்ஸ் முதலிய பத்திரிகைகளில் வரலாயின. இவருடைய சித்திரப்

படைப்புகளைப் பிரசுரித்த 'கொஞ்ச்' என்ற சஞ்சிகை இந்திய தேசியத் தலைவரான வல்லபாய் பட்டேலின் மகன் தாதாபாய் பட்டேல் நடத்தியது ஆகும்.

இலங்கை எழுத்து உலகத்தில் ஆட்சி செலுத்திய 'முற்போக்கு–பிற்போக்கு–நற்போக்கு என்ற எதிலும் சிக்காதவர்' சிரித்திரன் சிவா. சிரித்திரன் என்ற சஞ்சிகையை நடத்துவதற்காக அவர் தான் பார்த்து வந்த அரசாங்க உத்தியோகத்தைத் துறந்தார். தனக்குக் கிடைத்த பணத்தில் பத்திரிகையை ஆரம்பித்தார். அது வெற்றிகரமாக வளர்ந்தது.

'செய்தொழில் தெய்வம், சிரிப்பே சீவியம்' என்பதை இலட்சிய எண்ணமாகக் கொண்டது சிரித்திரன்.

சிரித்திரனில் முக்கிய இடம் பெறும் மகுடியின் கேள்வி பதில் பகுதி வாசகர்களுக்கு வெகுவாகப் பிடித்தது ஆகும். நகைச்சுவையோடு கூடிய சீர்திருத்தக் கருத்துக்களும், சமூகப் பார்வையும் படிப்பவர்களைச் சிரிக்க வைப்பதோடு சிந்திக்கவும் தூண்டும். இக்கேள்வி–பதில்கள் புத்தகமாகவும் வெளிவந்திருக்கின்றன.

இளம் எழுத்தாளர்களுக்கு ஊக்கம் அளிக்கும் நோக்கத்துடனேயே பல பத்திரிகைகள் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன.

குமரன், புதுசு, சமூகதீபம், களம், ஒளி, நதி – இப்படி அநேகம். இவற்றில் 'தாரகை' என்பதும் ஒன்றும்.

'வேள்வியொன்று காண வாரீர் !' என்று அது எழுத்தாளர்களை அழைத்தது.

'இளம் எழுத்தாளர்களின் உள்ளக் குமுறல்கள்–எழுதத் துடிக்கும் இலக்கிய ஆர்வலர்களின் இதயத்துடிப்புகள் எமக்கும் கேட்கிறது. தாள் தாளாக எழுதி அனுப்பிவிட்டு அவை பிரசுரிக்கப்படாமையால் பாழ் பாழாகப் போன பல படைப்பாளிகளின் இதயங்களையும் பரிசோதித்துப் பார்த்து விட்டோம்.

இமயமலையில் ஏறுவது மிகமிகக் கஷ்டமான காரியம், ஆனால் ஒரு இலக்கியப் படைப்பாளியின் இலட்சியப் படைப்பைப் பத்திரிகையில் வெளிக் கொணர்வது அதைவிடக் கஷ்டம். இப்படிச் சொல்லிக் கொண்டு, இலக்கிய உலகத்தையே கைவிட்டுச் சென்ற பல அன்பர்களோடும் நாம் பழகி விட்டோம்.

எனவேதான், பிரபலம் – புதுமுகம் என்ற பேதமின்றி, தரமாக எது வரினும் ஏற்றுப் பிரசுரிக்கும் நிலைக்குத் தயாராயிருக்கின்றோம்.

இந்த இலக்கிய வேள்வியில் கலந்து கொள்ளுமாறு படைப்பாளி களையும், ஆர்வலர்களையும் இருகரங்கூப்பி வரவேற்கின்றோம்.'

இவ்விதம் அறிவித்துக்கொண்டு 'தாரகை' ஆகஸ்ட் 1981–ல் தோன்றியது. ஆசிரியர்– சி. சங்கரம் பிள்ளை. ஆசிரியர் குழு : கண். மகேஸ்வரன், இந்திராணி தாமோதரம் பிள்ளை. பிரசுரமான இடம் மட்டக்களப்பு.

மரபுக் கவிதை, புதுக்கவிதை, கதைகள், நகைச்சுவைச் சித்திரம், சமூக சீர்திருத்த நோக்குடைய கட்டுரைகளை தாரகை பிரசுரித்தது.

முற்போக்கு இலக்கிய உணர்வுடன், 'மல்லிகை' போல் தரமான இலக்கிய ஏடு ஆகக் கொண்டுவர வேண்டும் என்ற நோக்கத்துடன் 'வசந்தம்' 1981–ல் ஆரம்பிக்கப்பட்டது. வசந்தம் இலக்கிய வட்டத்தினருக் காக நடத்தப்பெற்ற இந்த சஞ்சிகை யோகநாதன் கவனிப்பில் வளர்ந் தது. கைலாசபதி, சிவத்தம்பி கட்டுரைகள், யோகநாதன் கதைகள், கிருஷன்சந்தர் என்ற இந்தி ஆசிரியரது படைப்புகளின் மொழிபெயர்ப்பு முதலியவற்றை வெளியிட்டது. தமிழகத்திலிருந்து பொன்னீலன், கவிஞர் பாப்ரியா, ருத்ரய்யா ஆகியோரின் எழுத்துக்களும் இதில் பிரசுரமாகியுள்ளன

யாழ்ப்பாணத்திலிருந்து 1981–ல் வெளிவந்த மற்றுமொரு பத்திரிகை **'கிருதயுகம்'**. ஆசிரியர் : க. வீரகத்தி.

'ஊனுயிர் நான் உளவரைக்கும்
ஒருலகர சென்றே பாடி
மானுட நேசிப்பை வளர்ப்பேன்
என்பதை புன்னகை பூக்கும்'

இவ்வரிகளை இலட்சிய எண்ணமாகக் கொண்டிருந்தது. பேராசிரியர் கைலாசபதி 'ஒரே உலகம்' பற்றி எழுதிய கட்டுரை; சரியான இடத்தில் சரியான சொல்லைப் பயன்படுத்தக் கூடிய சீரான மொழியாட்சியை வலியுறுத்தி முனைவர் சாலை இளந்திரையன் எழுதிய கட்டுரை; மதுரை யில் நடைபெற்ற உலகத் தமிழ் மாநாடு ஆராய்ச்சிக் கருத்தரங்குகள் பற்றி முருகையன் எழுதிய கட்டுரை; மற்றும் காவலூர் ஜெகநாதன் கதை;

சில கவிதைகள், 'சீனாவில் பணிபுரியும் திருமதி ராணி சின்னத்தம்பியுடன் ஒரு பேட்டி'; 'பாரதி நூற்றாண்டு விழா 1982' என்று தலையங்கம்—இவை கிருதயுகம் இரண்டாவது இதழின் உள்ளடக்கம். இவை இந்தப் பத்திரிகையின் தனித்தன்மையை எடுத்துக் காட்டும் விதத்தில் இருக்கின்றன. கிருதயுகம் எத்தனை இதழ்கள் ( எத்தனை காலம் ) வெளிவந்தது என்று தெரியவில்லை.

பூரணி, அலை, கவிஞன் என்று சில இலக்கியப் பத்திரிகைகள் வந்ததாகவும், அவை இலக்கியவாதிகளின் கவனிப்புக்கும் பாராட்டுதலுக்கும் உரியனவாக இருந்தன என்றும் தெரிய வருகிறது. இவற்றின் பிரதிகள் என் பார்வைக்கோ, என் நண்பர்கள் பார்வைக்கோ கிடைக்கவில்லை.

இலங்கையில் பிரசுரமான சிறு பத்திரிகைகளில்— சிறிது கால அளவே வாழ்ந்த போதிலும்— முக்கிய கவனிப்புக்கு உரியதாகி, ஏதோ சில வகைகளில் தாக்கங்கள் ஏற்படுத்திய வெளியீடுகளில், '**தீர்த்தக் கரை**'க்கு முக்கிய இடம் உண்டு.

காலாண்டு ஏடு ஆக வெளிவந்த தீர்த்தக்கரை ஐந்து இதழ்கள் தான் பிரசுரம் பெற்றது என்று ஒரு இலக்கிய ரசிகர் குறிப்பிடுகிறார்.

'மலையகத்தின் இளைய தலைமுறையைச் சார்ந்த புத்திஜீவி வட்டத்தினரால்' தயாரிக்கப்பட்ட இந்தச் சஞ்சிகை 'தீர்த்தக்கரை இலக்கிய வட்டத்திற்காக', எல். சாந்தி குமாரை ஆசிரியராகவும், எஸ். நோபெட், எம். தியாகராம், எல். ஜோதிகுமார் ஆகியோரை ஆசிரியர் குழு ஆகவும் கொண்டு இயங்கியது.

'சிந்தனை பேதங்களுக்கெல்லாம் அப்பால் நின்று இலக்கியம் படைக்கும் நவீன கம்பர்கள் ஒருபுறமும், எமக்கு இளங்காலையின் கதகதப்புத் தேவையில்லை, நெருப்பைத் தாருங்கள் என்று யதார்த்தத்தை மறந்த நக்கீரர்கள் ஒருபுறமும் நின்று வரிந்து கட்டிக்கொண்டு மகத்தான கூப்பாடு போடுகையில், இவற்றின் இடையே அல்லலுறும் இளம் எழுத்தாளர்களைப் பார்த்தும், வந்து குவியும் மூன்றாந்தர சஞ்சிகைகளில் புதையுண்டு கிடக்கும் பல தரமான வாசகர் கூட்டத்தைப் பார்த்துமே நாம் எம்மை இந்தப் புதிய அக்கினிப் பரீட்சையில் இறக்கிக் கொள்ள நேரிட்டது.'

இவ்வாறு கூறிக்கொண்டு தீர்த்தக்கரை தோன்றியது. மலையகத்தின் முன்னேற்றத்தில் ஆர்வமும் அக்கறையும் கொண்டிருந்த அறிவு

ஜீவிகளின் கூட்டுறவு முயற்சிதான் இக் காலாண்டு ஏடு. மலையக மக்களின் வாழ்க்கை, அவர்களுடைய சூழ்நிலை, பிரச்னைகள் மற்றும் கலாச்சாரம் ஆகியவற்றில் கருத்து செலுத்தியது.

மலையக மக்கள் மத்தியில் எழுதாத இலக்கியமாய் வாழ்ந்து வளர்ந்த நாட்டுப் பாடல்களைச் சேகரித்து, 'ஏட்டில் எழுதாத இதயத்து ராகங்கள்' என்று இதழ்தோறும் நிறையவே அச்சிட்டு வந்தது குறிப் பிடத்தகுந்த முக்கியமான பணி ஆகும்.

மலையக மக்களின் வாழ்க்கையையும் உணர்ச்சிகளையும் பிரதிபலிக் கும் சிறுகதைகள் தீர்த்தக்கரையில் வெளிவந்தன. திறமையுள்ள இளைய எழுத்தாளர்களின் படைப்புக்கள் அவை.

"எளிய பதங்கள், எளிய நடை, எளிதில் அறிந்து கொள்ளக் கூடிய சந்தம். பொது ஜனங்கள் விரும்பும் மெட்டு இவற்றினையுடைய காவியமொன்று தற்காலத்தில் செய்து தருவோன் நமது தாய்மொழிக் குப் புதிய உயிர் தருவோனாகிறான்–சுற்றிலும் தமிழின் பெயரால் எழு கின்ற சந்தடிகளுக்கும், கலையின் பெயரால் நடக்கும் ஆரவாரங்களுக் கும் மத்தியில் பாரதியின் எளிமையான இந்தக் கூற்று இன்னும் அதன் மகத்துவத்தைத் தாங்கி நிற்கின்றது. இந்தக் கூற்றினையே எமது தெய்வ வாக்காகக் கொள்வதில் பெருமைப்படுகின்றோம்.

ஆனால் இப்படிக் கூறுவதின் நோக்கம், 'தமிழுக்கு உயிர்கொடுக்க வந்தோம்' என்று சாதிக்கும் மமதை அல்ல. நாம் ஆற்றும் பணி மிக மிகச் சொற்பமானது என்பதை பிரக்ஞை பூர்வமாகவே தீர்த்தக்கரை உணர்ந்துள்ளது.

குழந்தை பிறந்தவுடனேயே எழுந்து நின்று 'எனக்கு யாருடைய உதவியும் தேவைப்படாது. என்னை நானே கவனித்துக் கொள்ள எனக் குத் தெரியும்' என்று கூறி முகம் கழுவிச் சென்றால் யாருக்கும் சம்ம தம்தான். இல்லை என்றாலும் யார்தான் கோபிக்கப் போவது ? குழந்தை களாயிற்றே !

தீர்த்தக்கரையும் இந்தப் பருவத்தில் நின்றுதான் உங்கள் அரவணைப்புக்காகக் கரங்களை நீட்டுகின்றது, ஆனாலும் இந்தக் குழந்தையின் யாத்திரையில் முகம் கொண்டு அரவணைக்க முயலும் மழலைகளும்தான் எத்தனை. சமூகத்தில், பலவேறுபட்ட துறைகளில்

வாசகர்களாக, விமர்சகர்களாக, படைப்பாளிகளாகச் சங்கோஜத்தோடும் சில சமயங்களில் துணிவோடும் நிற்கிற இந்தப் புதிய கர்த்தாக்களுக்குத் தீர்த்தக்கரையின் தாய்மை ஆதர்சமாக விளையும்"

இவ்விதம் அதன் மூன்றாவது இதழ் தலையங்கம் பேசியது.

தீர்த்தக்கரை சமூகப் பிரச்னைகளிலும் அக்கறை காட்டியது. ஆப்பிரிக்க மக்களின் வாழ்க்கையையும் பிரச்னைகளையும் பிரதிபலிக்கும் படைப்பாளிகளின் எழுத்துக்களைத் தமிழாக்கி அறிமுகம் செய்வதில் ஆர்வம் கொண்டிருந்தது. கேள்வி பதில் பகுதியும் உண்டு.

குருக்ஷேத்திரம் என்ற பகுதி ஒவ்வொரு இதழிலும் வந்தது. இலக்கிய விமர்சனங்கள், எழுத்தாளர் பிரச்னைகள் முதலியன இதில் இடம் பெற்றன. பலபேர் தங்கள் அபிப்பிராயங்களை வெளிப்படையாக எடுத்துக் கூறியிருக்கிறார்கள்.

தீர்த்தக்கரை ஆசிரியர் சாந்திகுமார் மலையகம் பற்றி ஆய்வு ரீதியான கட்டுரைகள் எழுதியுள்ளார். 'தீர்த்தக்கரை' பாராட்டப்பட வேண்டிய நல்ல முயற்சி. ஐந்து இதழ்களோடு அது நின்று போனது ஒரு இழப்புதான்.

# 52. இன்னும் சில பத்திரிகைகள்

சிரமங்கள் பலவற்றை எதிர்கொள்ள நேரிட்டாலும் சிறு பத்திரிகைகள் ஆரம்பிக்கிறவர்கள் அங்கங்கே, அவ்வப்போது, உற்சாகமாகப் பத்திரிகைகளை ஆரம்பித்துக் கொண்டுதான் இருக்கிறார்கள். 'உண்மையைத் தேடுவதும், உண்மை தெரிந்து சொல்வதும்' இவர்களில் பலருடைய லட்சியமாக இருக்கிறது.

இந்த ரீதியில், 'உண்மையே நமது தோழனும் கேடயமும் ஆகும்' என்று அறிவித்தபடி 'புதிய மனிதன்' தோன்றி வளர்ந்து வருகிறது.

'மூடிய சருகுகளைப் புறந்தள்ளிவிட்டு மண்ணில் ஒரு முளை, சூரியனுக்கு முகம் காட்டுகிறது' என்று கூறிக்கொண்டு, புதிய மனிதன் 1985 மே மாதம் பிறந்தது. ஆசிரியர் சி. மதிவாணன். சிறப்பாசிரியர் கவிஞர் இன்குலாப்.

புதிய மனிதனுடைய 'கடமைகள் குறுகிய சுவர்களை உடைத்துப் பரந்த வெளியில் தனது கரங்களை நீட்டுவது. ஒடுக்கப்பட்ட மானுடத்தை ஆரத் தழுவுவது. . .

ஒரு சிலருக்கு மட்டும் இனிக்கும் கேக்குத் துண்டுகளை வழங்கும் வேலையைப் புதிய மனிதன் செய்யமாட்டான். உழைக்கும் மக்களின் பண்பாட்டுப் பசி தீர்க்கும் சமையற்காரனாகப் புதிய மனிதன் பணிபுரிய முயல்வான்.

ஆலைச் சங்குகளின் அலறலில் மலினப்பட்ட மானுட ஒலத்தை இடிகளாய் நிமிர்த்தவும்,

களத்துமேடுகளில் சிந்தப்படும் கண்ணீர்த் துளிகளைத் தீப்பொறிகளாய் உயர்த்தவும்,

இளைஞர் உதடுகளை ஆக்கிரமிக்கும் ஆபாசச் சீட்டிகளை எரிக்கும் உரிமைக் கொழுந்துகளை நிறுத்தவும்,

குடும்பச் சுவர்களுக்குள் புழுங்கும் பெண்மையின் முகங்களில் சமுதாய விடுதலைத் தென்றலை எழுதவும்,

புதிய மனிதன் முயற்சி செய்வான்.'

இப்படி நாவலித்தது அது தனது முதல் இதழில். மேலும் அது அறிவித்தது—

'இவனது இலக்கு—விடுதலை.

விடுதலைக்குப் போராட அனைத்து மக்களையும் புதிய மனிதன் அறைகூவுவான். விடுதலைக்கு வித்திடும் சிந்தனைகளை எல்லாம் திசைதோறும் கை நீட்டி புதிய மனிதன் வரவேற்கிறான்.

புதிய மனிதன் ஒரு கலை இலக்கியவாதி ஆகையால், வரும் சிந்தைனைகள் கலை இலக்கியமாக இருக்க வேண்டும் என்பதே இவனது விருப்பம்.

மக்களுக்காகப் படைப்பவர்களே! நீங்கள் மக்கள் விரும்புகிற, மக்களுக்குப் புரிகிற கலை இலக்கியமாகப் படையுங்கள்' என்று கூறியது.

புதிய மனிதன் ஒவ்வொரு இதழின் அட்டைச் சித்திரமும் அமைப்பும் கவிதை அழகோடு கருத்து நயம் செறிந்த ஓவியமாகத் திகழ்கிறது. இன்குலாப், இளவேனில், செ. கணேசலிங்கன், பாவண்ணன் கதைகள், கட்டுரைகள் வந்துள்ளன. பூமணி, ஆர். சூடாமணி கதைகளும் பிரசுரமாகியிருக்கின்றன. வண்ணச்சிறகு, தமிழன்பன், பாரதிவண்ணன், பாவண்ணன் கவிதைகள், எஸ். சண்முகம் மொழிபெயர்த்துத் தருகிற 'கறுப்புக் கவிதைகள்' இந்தப் பத்திரிகைக்கு உணர்வூட்டுகின்றன.

சிந்திக்கத் தூண்டுகிற மற்றும் பல விஷயங்களும் உண்டு.

**உங்கள் நூலகம் :** ஒரு வித்தியாசமான முயற்சி. புத்துலகம் காண நல்ல தரமான நூல்களை வெளியிட்டு வரும் நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், 'நியூ செஞ்சுரி வாசகர் பேரவை' அமைத்திருக்கிறது. அதன் சார்பில் 'உங்கள் நூலகம்' என்ற இரு மாதங்களுக்கு ஒருமுறை வெளிவரும் இதழ் ஒன்றை அது பிரசுரிக்கிறது.

இதன் முதல் ஏடு 1985 ஏப்ரலில் வெளிவந்தது.

'ஷேக்ஸ்பியரும் ஷெல்லியும் விட்மனும் ஜாக் லண்டனும் கதேவும் டிரீசரும் தாந்தேவும் விக்டர் ஹீகோவும் இப்சனும் டால்ஸ்டாயும்

கார்க்கியும் தாகூரும் பாரதியும் பிரேம்சந்தும் சிறந்த குறிக்கோளுக்கா கவும் உயர்ந்த பண்பாட்டுக்காகவும் பணியாற்றினார்கள். இலட்சிய நாட்டம், ஜனநாயகம், மனிதநேயம் என்னும் பண்பாடுகளை வளர்க்கும் சிறந்த மரபை உருவாக்கித் தந்துள்ளார்கள். இந்த மரபினை உங்கள் நூலகம் வளர்த்துச் செல்லும்' என்று அறிவித்த அவ் ஏடு தனது நோக்குகளையும் அச்சிட்டது.

அவை யாவன—

1. வாழும் சோஷலிச உலகத்தின் சாதனைகளை எடுத்தியம்பும் அரசியல், பொருளாதாரம், கலை, இலக்கியம், விஞ்ஞானம் பற்றிய நூல் களை அறிமுகம் செய்தல், ஆய்தல்.

2. நியூ செஞ்சுரி நூல் வெளியீட்டக நூல்களையும் இந்திய நாட்டின் பல்வேறு பதிப்பகங்கள் வெளியிடும் நூல்களையும் அறிமுகம் செய்தல், சிறந்தவற்றைத் தக்காரைத் கொண்டு திறனாய்வு செய்தல்.

3. கலைஞர்கள், கவிஞர்கள், சிறுகதை எழுத்தாளர்கள், நாவலாசி ரியர்கள், திறனாய்வாளர்கள் ஆகியோரை நேர் கண்டு உரையாடல், அவர்தம் நூல்களை அறிமுகம் செய்தல் ஆய்தல்.

4. வளரிளம் கலைஞர்களையும் படைப்பாளர்களையும் அறிமுகம் செய்தல், ஊக்குவித்தல்.

5. இலக்கியக் குறிப்புகள், விமர்சனக் குறிப்புகள், கட்டுரைகள் ஆகியவற்றைத் தக்காரையும் வல்லுநரையும் கொண்டு எழுத வைத்தல்.

6. நூலாய்வாளர்கள் திறனாய்வு நோக்குப் பெறவும், சொந்தமாக வீடுகளில் நூல் நிலையம் அமைக்கவும் உதவுதல்.

இதற்கேற்ப புத்தக உலகம் சம்பந்தமான தகவல்கள், கட்டுரைகள், புத்தக விமர்சனங்கள் முதலியவற்றை 'உங்கள் நூலகம்' வெளியிட்டு வருகிறது.

ஆர்வத்தின், உற்சாகத்தின் செயல்பாடுகளாக அநேகம் சிறு பத்திரி கைகள் தோன்றியிருக்கின்றன. எழுத வேண்டும் என்ற உணர்வோடு கையெழுத்துப் பத்திரிகையாக ஆரம்பித்து, பின்னர் அச்சுப் பத்திரிகை யாக மலரும் முயற்சிகள் பல உண்டு.

அவற்றிலே ஒன்று 'கவிக்குயில்' என்ற மாத வெளியீடு.

கவிஞர் டாக்டர் ஆனைவாரி ஆனந்தன் முதலில் 'மகரந்தம்' என்ற கையெழுத்துப் பத்திரிகை தொடங்கினார். 'சூல். 1. தாது-1' என்று கணக்கிட்டு எழுதிய அவர் 1983 செப்டம்பரில் அதை 'தட்டச்சு உருட்டுப்படி' (டைப்ட் சைக்ளோஸ்டைல்) ஏடு ஆக மாற்றினார். அடுத்து அதன் பெயரை 'சுகந்தம்' என்றாக்கி டைப் பத்திரிகையாக வெளியிட்டார். 1983 நவம்பரில் 'சுகந்தம்' அச்சுப் பத்திரிகையாக வளர்ச்சி பெற்றது. ஆசிரியர்: சி. பன்னீர்செல்வம். சிறப்பாசிரியர்: கவிஞர் ஆனைவாரி ஆனந்தன்.

ஆரம்பம் முதலே இவர்களுடைய பத்திரிகையின் குறிக்கோள்–

'ஊழலிலா ஓர் புதிய
சமுதாயம் வேண்டும்,
உழைப்புக்கும் உண்மைக்கும்
மதிப்பிருக்க வேண்டும்;
நீதிமுறை நேர்மைக்கு
வாழ்வளிக்க வேண்டும்,
நிம்மதியே பெருஞ்செல்வம்
நிலைநாட்ட வேண்டும்!'

'சமுதாயத்திற்குப் பயன்படும், பாடம் புகட்டும், பண்பாடு காக்கும், தன்மானப் படைப்புகளை' சுகந்தம் விரும்பி வரவேற்றது. 'சுகம்–1 மணம்–1' என்ற ரீதியில் எண்ணிக்கை வளர்த்த அது செய்திகள், சிந்தனைகள், துணுக்குகள், மாணவர் படைப்புகள், வாசகர் கடிதங்கள், கேள்வி– பதில் முதலியவற்றை வெளியிட்டது. 'ஊர்ச்சூழல்' என்ற தலைப்பில் கிராமியப் பிரச்னைகளை அலசியது. அட்டைப்படமும் உண்டு.

இப் பத்திரிகை வெளியீட்டாளர்கள் மீண்டும் பெயர் மாற்றம் செய்தார்கள். 1984 டிசம்பர் முதல் இவர்களுடைய பத்திரிகை **'கவிக்குயில்'** என்ற பெயரைப் பெற்று, குயில்–1, கீதம்–1 என்று கணக்கிட்டு வளர்ந்து வருகிறது.

நடந்தவை, நடப்பவை என்று செய்திகள் இடம் பெறுகின்றன. 'சமுதாய வீதியிலே' ஊர்ப் பிரச்னைகள் கவனிக்கப்படுகின்றன. மகளிர் இயல் என்று பெண்கள் பகுதி; 'நல்ல பெண்மணி' அறிமுகம், 'நல்லவர்

வல்லவர்' பற்றிய குறிப்பு, அறிவியல் சிந்தனைகள், 'தத்துவப் பாதையில்' என்று சிந்தனைக் கட்டுரை, 'கலைப்பூங்கா' வில் சினிமா விஷயங்கள், 'நூல் மணம்' என்று புத்தக மதிப்புரை இப்படிப் பலப்பல பகுதிகள். கவிமலர்கள் என்ற தலைப்பில் புதுக் கவிதைகளும், ஆனைவாரி ஆனந் தன் எழுதும் கவிதைகளும் தொடர்கதையும், வேறு ஒரு தொடர்கதையும் சிறுகதையும் இதில் வருகின்றன. 'உடல் நலம் காப்போம்' என்று ஆரோக்கியக் குறிப்புகளும் அவ்வப்போது இடம் பெறுகின்றன.

மு. விவேகானந்தன் என்ற எழுத்தாளர், ரசிகர், 'கவிக்குயில்' வளர்ச்சிக்கு உதவி புரிந்து வருகிறார்.

'வழக்கியல்' என்று சட்ட ஆலோசனைகள் கூறும் ஒரு பகுதியும், 'நமக்குள்ளே' என்ற கேள்வி பதில் பகுதியும் கவிக்குயிலில் உள்ளன.

**கறுப்பு மலர்**— மாத இதழ். 'சமூக மாற்றத்தில் கருத்தாய் இருக்கும் மலர். உழைக்கும் மக்களின் உறவு மலர். சமுதாயப் பிரச்னைகளை அலசுங்கள்' என்று அறிவித்தபடி வருகிற இச்சிறு பத்திரிகையின் பல இதழ்கள் 'சுட்டி' பத்திரிகையின் அளவிலும் தன்மையிலுமே அமைந் துள்ளன.

கவிஞர் பாரதிப்ரியா, இளைஞர் இலக்கிய வட்டம் அமைப்புக்காகத் தயாரிக்கும் தனிச்சுற்றிதழ் 'கறுப்பு மலர்.' மக்களுக்கான மக்கள் இலக்கி யம் படைப்பது; இளம் எழுத்தாளர்களை, கவிஞர்களை ஊக்குவிப்பது; மாதம் ஒரு கருத்தரங்கம், கவியரங்கம் நடத்துவது; சமூகப் பிரச்னை களை ஆராய்வது—அவற்றுக்கான தீர்வை நோக்கி விவாதிப்பது, புதுப் படைப்பாளிகளை வரவேற்பது; அவர்கள் புதுமைப் படைப்புகளை படைக் கத் தூண்டுவது; மக்கள் மத்தியில் விழிப்பு உணர்ச்சியை ஏற்படுத்து வது; மக்கள் இலக்கியத்தின் அருமையை மக்களுக்கு உணர்த்துவது; சாதி மத அமைப்புகளைச் சாராதிருப்பது, மடமைகளை எதிர்ப்பது—

இவை இளைஞர் இலக்கிய வட்டத்தின் நோக்கங்கள். இம்முற்போக் குச் சிந்தனைகள் 'கறுப்பு மலர்' பிரசுரிக்கும் கவிதைகளிலும் கதை கட்டுரைகளிலும் ஒலி செய்கின்றன. இச்சிற்றேடு 1983 மே முதல் வந்து கொண்டிருக்கிறது.

சமுதாயப் பார்வையுடன், முற்போக்குச் சிந்தனைகளையும் படைப்பு களையும் வரவேற்றுப் பரப்பும் நோக்குடன் தமிழ்நாட்டின் வெவ்வேறு

பகுதிகளிலும் சிறுசிறு பத்திரிகைகளை உழைக்கும் தோழர்கள் உற்சாகத்துடன் ஆரம்பிக்கிறார்கள். இப்படிப்பட்ட முயற்சிகள் சில பொருளாதார பலம் இன்மையால் வெகுவிரைவிலேயே பாதிக்கப்படுகின்றன. நல்ல விஷயங்கள் கிடைக்காத காரணத்தால் சில பிரசுரத்தை நிறுத்திக் கொள்கின்றன. வேறு சிலவற்றில் இவ்விரு தடங்கல்கள் இல்லை என்றாலும்கூட, பத்திரிகை நடத்த முற்படுகிற தொழிலாளித் தோழர்கள், பணத்துக்காக உழைக்க வேண்டியிருக்கிற வேலைகளையும் பத்திரிகை பணியையும் தொடர்ந்து செய்வதில் மிகுந்த சிரமங்கள் இருப்பதை உணர்ந்து, பத்திரிகையை நிறுத்திவிடத் தீர்மானித்திருக்கிறார்கள்.

இவ்விதம் முடிவு கட்ட வேண்டிய அவசியத்துக்கு உள்ளானவர்களில் **'வழிகள்'** என்ற பத்திரிகை நடத்திய தோழர்களும் சேர்கிறார்கள்.

கோவை மாவட்டம், பல்லடம் அருகில் உள்ள வடுகபாளையம் என்ற ஊரிலிருந்து வந்தது 'வழிகள்' முற்போக்குச் சிற்றிதழ். நவயுகனும் அவர் நண்பர்களும் சேர்ந்து நடத்திய இச்சிற்றேடு ஒன்பது இதழ்களோடு தனது சுற்றுலாவை முடித்துக்கொண்டது.

'வாழ்க்கை என்பது சிறைச்சாலை. இதில் நமக்கு இன்பமளிக்கப் பாடிவரும் பறவைகள் புத்தகங்கள்' என்ற கருத்துடன் அவர்கள் இப் பத்திரிகையை நடத்தி வந்தார்கள். 'வழிகள்' தனது பயணத்தை நிறுத்திக் கொள்வதாக அறிவிப்பு விடுத்துள்ள ஒன்பதாவது இதழில் காணப்படும் வரிகள் இவை :

'சிறு பத்திரிகை நடத்தினால் நிறையப் பணம் இழக்கவேண்டும் என்பது நாங்கள் அறியாததல்ல. இழப்பதற்குத் தயாராக இருந்ததினாலேயே வழிகள் தொடர்ந்து வெளி வர முடிந்தது; வழிகள் நிறுத்தப் படுவதற்குக் காரணம் பொருளாதாரப் பிரச்னை இல்லை.

எங்களுக்கு இருக்கும் மிகக் குறைந்த ஓய்வு நேரத்தில் இரு மாதங்களுக்கு ஒரு முறை கூட இதழைச் சிறப்பாக வெளியிட முடியவில்லை. மனநிறைவு இலலாமல் சும்மா வெறுமனே இதழை வெளியிட்டுக் கொண்டிருக்க விருப்பமில்லை.'

இத் தோழர்களின் சிந்தனைத் தெளிவும் தீர்க்கமான முடிவும் பாராட்டப்பட வேண்டியவை. 'இதழைச் சிறப்பாக வெளியிட

முடியவில்லை' என்று சுய விமர்சனம் செய்துகொண்டு பத்திரிகையை நிறுத்துவதற்கு ஒரு துணிவு வேண்டும்.

பத்திரிகை நடத்தும் ஆசையோடு முற்படுகிறவர்களுக்கு இப்படிப் பட்ட சிந்தனைத் தெளிவும் சுய விமர்சன நேர்மையும், மனத்துணிவும் இல்லாத காரணத்தினாலேயே பல சிற்றேடுகள் தரம் எதுவுமின்றி, வெகு சாதாரண ஏடுகளாகவும், வணிக நோக்குப் பத்திரிகைகளின் மசாலாத்தனங்களைக் காப்பி அடித்தபடி சாரமும் சத்தும் இல்லாத அச்சுத் தாள்களாகவும் வந்து கொண்டிருக்கின்றன. அந்த விதமான முயற்சிகளினால் யாருக்கும்– பத்திரிகை நடத்துகிறவர்களுக்கும், பத்திரிகை படிப்பவர்களுக்கும்தான், எந்தவிதமான பலனும் ஏற்படுவதில்லை. இதைச் சிறு பத்திரிகைகள் நடத்த முன்வருகிறவர்கள் கருத்தில் கொள்வது நல்லது.

# 53. கணையாழி

'கணையாழி' 1965–ல் புதுடில்லியில் தோன்றியது. டில்லியிலிருந்து வெளிவரும் ஒரே தமிழ் இலக்கியப் பத்திரிகை என்ற தனிப் பெருமை அதற்கு வாய்த்தது.

டில்லியில் வசித்த தமிழ் எழுத்தாளர்கள் அதில் கதைகள், கட்டு ரைகள், கவிதைகள் அதிகமாக எழுதினார்கள். டில்லி நகரச் சூழலை, அங்கு வாழ்கிற மக்களின் போக்குகளை, அரசியல்வாதியின் தன்மை களை விவரிக்கும் கதைகளும் தொடர்கதைகளும் கணையாழிக்கு ஒரு தனித்தன்மை சேர்த்தன. பிறகு அது சென்னைக்கு வந்தது.

1965லிருந்து கணையாழியின் வளர்ச்சியைக் கணித்து ஒரு வாசகர் எழுதிய விரிவான கடிதம் 1984 செப்டம்பர் மாதக் கணையாழியில் 'கணையாழிக்கு 20' என்ற தலைப்பில் பிரசுரமாயிற்று. நேர்மையான அந்த மதிப்பீட்டை இங்கு எடுத்து எழுதுவது பொருத்தமாக இருக்கும்.

"65 லிருந்து 70வரை டெல்லி வட்டார அறிவுஜீவிகளுக்காக நடத் தப்பட்டு வந்த கணையாழி தமிழ்ப் பிராந்திய மக்களையும் எட்டும் அள விற்கு 70களில் தன்னை மாற்றிக் கொண்டது. . .

கணையாழி தொடர்வதற்குக் காரணம், வெறுமனே அறிவுலக முக மூடியை அணிந்துகொண்டு பயமுறுத்தாமல் நவீன இலக்கியத்தில், சமூகத்தில், கலாச்சாரத்தில் தெளிவான பிரக்ஞையோடு வெளியாவது தான். முதல் ஐந்தாண்டுகளைத் தவிர்த்து அடுத்த ஐந்தாண்டுகளைப் (70–75) பார்த்தால், கணையாழியில் கஸ்தூரிரங்கன் அரசியல் கட்டு ரைகள் எழுதி அகில உலக அரசியலை அலசி வாசகர்களுக்குக் கருத்து பரிமாறுவார். என். எஸ். ஜெகந்நாதன் 'என்னைக் கேட்டால்' என்று ஆரம்பித்து சமூக அரசியலைத் தெளிவுபடுத்துவார். ஸ்ரீரங்கம் எஸ். ஆர். விஷயங்களை விவாதப் பொருளாக்குவார். பெரியவர் க. நா. சு. கவிதையில் சுயசரிதை சொல்வார். வைதீஸ்வரனும், தி. சோ. வேணு கோபாலனும், பாலகுமாரனும், கல்யாண்ஜியும், சேவற்கொடியோனும் புரியும்படியான புதுக்கவிதை படைப்பார்கள். தி. ஜா. ரா., இ. பா. பிரச் னைக் கதைகளை எழுதி வாசகர்களைத் திணறடிப்பார்கள். ஆதவன்,

அசோகமித்திரன், அம்பை, வண்ணநிலவன், ராஜரங்கன், சிவசங்கரா, தி. சா. ராஜு அறிவும் உணர்வும் எதார்த்த சூழ்நிலையும் கலந்து கதை படைப்பார்கள், ஜெயந்தன், அம்ஷன்குமார் நாடகத்தில் புதுமுயற்சி செய்வார்கள். முஸ்தபா, காஸ்யபன் சீ ண் டி விளையாடுவார்கள். டென்னிஸ் வீரர் பற்றிய கட்டுரையென்ன, எம். ஜி. ஆர். பேட்டியென்ன, அனந்துவுடைய நாடக உலக அறிமுகம், விமர்சனம் என்ன—அந்தக் கணையாழிதான் எவ்வளவு ஆத்மார்த்தமானது; எவ்வளவு இதமானது ! 'சிலி'யில் ஜனநாயகக் கொலை நடந்தால் கணையாழி கருத்து சொல்லும். இந்தியப் பாராளுமன்ற அரசியலமைப்பின் பலம், பலஹீனம் பற்றி அரசியல் கட்சி நிலவரங்களோடு சேர்ந்து புள்ளி விவரம் தரும். இரு தள உலகில் குறை போஷாக்குத் தன்மை, ஏர்முனை என விஞ்ஞான ஆய்வுகளைக் கட்டுரையாகக் கொடுக்கும். இத்துணை அளவிற்கு சமுகப் பொறுப் புணர்ச்சியோடு கருத்துப் பரிமாற்றம் செய்து ஆத்மார்த்தமான இலக்கியத் தேடலுக்கு, ரசனைக்கு அடியெடுத்துக் கொடுத்தது.

75 – 80 என்று பார்த்தால், இதற்கு முந்தைய ஐந்தாண்டுகளின் கனத்திற்குக் குறையாமல், புதிய சங்கதிகளும், புதிய எழுத்தாளர்களுமாய், மாதம் இருமுறை என சில காலம் வெளியாகி அறிவிற்கும் ஆத்ம தேடலுக்கும் பெருந்துணையாக விளங்கியது. ஞானி, கௌடில்யர், பரந் தாமன் வினையான அரசியலை விகட பாஷையில் சொல்ல, சுஜாதாவும் இ . பா . வும் சயன்ஸ் ஃபிக்ஷன் எழுத, நாஞ்சில்நாடன், எ . எச் . கே. கோரி, லட்சுமி கண்ணன் கதை எழுத, மாலனும் மலர்மன்னனும் துணுக்குத் தர, கணையாழிக்குப் புதிய உற்சாகம் பிறந்திருந்தது. கோஷ்டிச் சண்டைகள் பெருத்திருந்த அந்தக் காலகட்டத்திலும் தான் எதிலும் சிக்கிவிடாமல் ( சில சமயம், முஸ்தபா கோர்ட் மார்ஷல் தவிர்த்து ) தனி முத்திரையுடன் பொலிந்த அக்காலமே கணையாழியின் பொற் காலம்.

80க்கு மேல் கணையாழிக்குத் திடீரென்று வயதேறிவிட்டது. அரசியலிலிருந்து சந்நியாசம் வாங்கிக் கொண்டது. துணுக்குக் கச் சேரியை நிறுத்திக்கொண்டது. செய்திக் கட்டுரைகளைத் தவிர்த்து விட்டது. அங்கொன்றும் இங்கொன்றுமாய் வ ந் து கொண்டிருந்த வரைபடங்கள் முற்றிலும் காணாமல் போய்விட வெறும் எழுத்து. . . எழுத்து. . . எழுத்து.

80 லிருந்து இன்றை வரை கணையாழியைப் பொத்தாம் பொது வாய்த் தேக்க காலம் எனப் பொதுவாய் சொல்லக் கூடாது என்றாலும்,

வெறுமனே கதைகள், கவிதைகள் எனப் பக்கங்களை நிரப்பிவிட்டு, வாசகனைப் பிரக்ஞையற்ற ஒருவித மாயைக்கு இட்டுச் செல்வதாக உள்ளது ( ஒருவேளை தீவிரமான இலக்கியப் பத்திரிகைக்கு இதுதான் அடையாளமோ ! ).

83–84–ல் பிரசுரமான போட்டிக்கான நெடுங்கதைகளான அ. நாகராச னின் 'கொடுகொடியாட்டம்', ம. வே. சிவக்குமாரின் 'கடைச்சங்கம்,' சார்வபௌமனின் 'தோப்பில் தனிமரம்,' விட்டல்ராவின் நெடுங்கதை மற்றும் அநந்தநாராயணனின் 'யக்ஞம்' என வெற்றிப்பட்டியலில் கடைசியாக 20 ஆண்டு நிறைவிதழில் தி. ஜா. ரா. நினைவார்த்த போட்டிக் கதையான விசாலாட்சியின் நெடுங்கதை அனைத்தும் பிராமண சமுதாயத்தின் கழிவிரக்கங்களை வெளிக்கொட்டும் ஒரு தொட்டியாய் கணையாழியை உபயோகப்படுத்திக் கொண்டுள்ளவைதான். காகுத்தன் எழுதியிருந்த 'இப்படி' மரபுகளால் மன்னிக்க முடியாத–ஆனால் மரபிற்கெல்லாம் உயிர் கொடுக்க விரும்பாத எதார்த்தமான எதிர்மறைக் கருத்துக்களை வெளிப் படுத்தியதால் ஒரு அந்தஸ்து பெறுகிறது. யன்மே மாதா எழுதி மந்திரக் கோல் வீசிய ம. ந. ராமசாமியின் 'மாதே ஸ்வதந்திர தேசம்' ஆக்க பூர்வமான சமகாலத்து எழுத்து என்ற வகையில் பாதுகாப்பாகப் படிக்க வேண்டியது. இளம் கம்யூனிஸ்டுகளுக்கு பூச்சாண்டி காட்டும் வேலை யைச் சரியாகவே செய்துள்ளார்.

80க்கு மேல் வந்த கதைகளில் சமகால சமூக அரசியல் பிரக் ஞையைக் கதையின் பின்னணிக் கருவாகக் கொண்டு படைக்கப்பட்ட கணையாழி நாவல்கள் செ. யோகநாதன் எழுதிய 'இரவல் தாய்நாடு', ரவீந்திரனின் 'ரத்தம் ரத்தம் கொள்ளும்' இரண்டும் சிறப்பான முயற்சி கள்; அவ்வப்போது கணையாழி சிறப்பாக இருந்தாலும், தன்னை கதை, கவிதைகளுக்குள்ளேயே புதைத்துக் கொள்ளும் நெருப்புக் கோழித்தனம் கணையாழியின் அறிவார்த்தமான வாசகர்களுக்கு உடன்பாடானதாக இருக்காது.

கணையாழி கவிதைகள் ( தற்சமயம்) பற்றிச் சொல்லுமிடத்திலும் கணையாழி அக்டோபர் 73 தலையங்கத்தை நினைவுகூர வேண்டியுள் ளது. 'கணையாழி அலுவலகத்தில் குப்பைக் கூடைகள் பெருகிவிட்டன. புதுக் கவிதை எப்படி இருக்கவேண்டும் என்று தெரியாமல் இருப்பதற்கு நியாயமே இல்லை' (கணையாழிக்கு).

கடைசியாக ஒன்று, கணையாழியின் ஆரம்பகால முதல் இன்றைய வரை தொடர் வாசகர்களாய் இருக்கும் எங்களைப் போன்ற வாசகர்களை

நடைபழக்கும் பெருமை கணையாழியைச் சாரும். தற்சமயம் ஏற்பட்டுள்ள தொய்வினை நீக்கி, கணையாழி வெறும் 'பிராமணப் பொட்டைப் புலம்பல்' மட்டும் அல்ல. சகல தரப்பு அறிவுலக வாசகர்களுக்கும் பொறுப்பு என்று சொல்லக்கூடிய பொறுப்பு கணையாழிக்கு உண்டு– மேட்டுப் பாளையம் ஜெயச்சந்திரன்."

கணையாழியில் வாசகர்கள் கடிதம் எப்பவுமே சுவாரஸ்யமான அம்சமாகும். அந்தப் பகுதியில் தென்படுகிற அபிப்பிராய சுதந்திரம் வெகுவாகப் பாராட்டப்பட வேண்டிய ஒன்று. தரமான வாசகர்கள் தங்கள் சிந்தனைகளை தாராளமாகப் பரிமாறிக் கொள்கிறார்கள். எனவே இலக்கியம், சமூகம், அரசியல் முதலிய பல்வேறு விஷயங்கள் பற்றியும் சூடான, சுவையான, அறிவார்ந்த அபிப்பிராயங்களையும், சர்ச்சைகளையும் இந்தப் பகுதியில் காணமுடிகிறது. கடிதங்கள் பெரும் பாலும் விரிவாகவே எழுதப்படுகின்றன.

கணையாழியில் அவ்வப்போது சில தனிப்பகுதிகள் இடம் பெற்றி ருக்கின்றன. அவை 'இன்ட்ரஸ்டிங் அன்ட் இன்பர்மேட்டிவ்' என்ற தன்மையில், ரசமானவையாகவும் பலரகமான தகவல்களைத் தருவன வாகவும் அமைகின்றன. ஜன்னல்– சச்சிதானந்தன், சுகிர்தராஜாவின் 'லண்டன் குறிப்புகள்', இந்திரா பார்த்தசாரதியின் 'வார்ஸா டயரி', சுஜாதாவின் 'கடைசிப் பக்கம்', டெக்ஸன் எழுதும் அமெரிக்கா பற்றிய தகவல்கள், அசோகமித்திரன் பக்கங்கள், ஆர். முஸ்தபாவின் 'உள்ளது உள்ளபடி' ஆகியவை இவ் வகைப்பட்டவை.

க. நா. சுப்ரமண்யம் ஆங்கிலத்தில் எழுதி தேவகி குருநாத் தமிழாக்கிய 'பத்து சிறந்த இந்திய நாவல்கள்' என்ற கட்டுரைத் தொடரும் குறிப்பிடத்தகுந்தது.

சிறிது காலம், நல்ல புத்தகங்கள் பற்றி அவற்றை ரசித்தவர்கள் விரிவாக எழுதிய கட்டுரைகளை கணையாழி பிரசுரித்து வந்தது. இலக்கிய வாசகர்களுக்கு உதவக்கூடிய கட்டுரைகளாக அவை அமைந்திருந்தன.

ராஜம் அய்யரின் 'கமலாம்பாள் சரித்திரம்' நாவலை கணையாழி தொடர்கதையாகப் பிரசுரித்தது. தி. ஜானகிராமனின் மரணத்துக்குப் பின்னர், அவருடைய மிகப் பெரிய நாவலான 'மோகமுள்' ளைத் தொடர்ந்து மறு பிரசுரம் செய்து வந்தது.

ஜானகிராமனின் 'மரப்பசு', 'நளபாகம்' நாவல்கள் கணையாழியில் தொடர்கதைகளாக எழுதப்பட்டவைதான்.

அசோமித்திரன் படைப்புகளும் தண்ணீர், பதினெட்டாவது அட்சக் கோடு முதலியவை—கணையாழியில் தொடர்ந்து பிரசுரம் பெற்றுள்ளன. இந்திரா பார்த்தசாரதி நாவல்களையும் அது வெளியிட்டது.

குறுநாவல் வளர்ச்சிக்குக் கணையாழி வெகுவாக சேவை செய்து வருகிறது. அது அளிக்கும் ஆதரவின் பலனாக பல நல்ல குறுநாவல் கள் ஆண்டுதோறும் வெளிவருகின்றன.

கணையாழி எழுத்தாளர்களின் பத்திரிகையாக வளர்ந்து வந்திருக் கிறது என்று சொல்லலாம். வளர்ந்து பெயர் பெற்றுள்ள எழுத்தாளர்க ளும், வளர்ந்து கொண்டிருக்கும் இளைய எழுத்தாளர்களும், வளர்ச்சி பெற விரும்புகிற புதிய எழுத்தாளர்களும் கணையாழியில் கதைகள், கட்டுரைகள், கவிதைகள் எழுதியிருக்கிறார்கள், எழுதி வருகிறார்கள்.

ஆகவே, பல்வேறு ரகமான எழுத்துக்கள் கணையாழியில் இடம் பெறுகின்றன. கலைத்தரமான படைப்புகளும், சோதனை ரீதியான எழுத்துக்களும் அதில் காணப்படுகின்றன.

கணையாழி ஆசிரியர் கி. கஸ்தூரிரங்கன் புதுக் கவிதை வளர்ச்சி யில் அக்கறை உடைய ஒரு கவிஞராக இருப்பதால், கணையாழி கவிதை முயற்சிகளுக்கு ஆரம்பம் முதலே, ஊக்கமும் உற்சாகமும் காட்டி வருகிறது. 'எழுத்து', 'கசடதபற' வழிப்பட்ட கவிதைகள்—தனி மனித உணர்வுகள், மனப்பதிவுகள், அக உளைச்சல்கள் முதலியவற்றை அடிப்படையாக்கிக் க வி தை படைக்க முயல்வோரின் எழுத்துக்கள், கணையாழியில் வருகின்றன.

அவ்வப்போது கணையாழி புதிய திசைகளில் தனது கவனத்தைச் செலுத்த ஆசைப்படுகிறது.

உதாரணமாக, ஒரு சமயம் அது இப்படி ஒரு சிந்தனையை எழுப் பியது. 'விஞ்ஞானத்தின் தொழில்நுட்பம், நிர்வாக இயல், பொறிஇயல், கணிதம் போன்ற துறைகளிலும்தான் நூற்றுக்கணக்கான மேதைகள் நம் நாட்டில் தோன்றியிருக்கிறார்கள், தோன்றி வருகிறார்கள். ஆனால் இவர்கள் படிப்பதற்காகத் தேர்ந்தெடுக்கிற இலக்கியம், பார்க்கிற சினிமா, கேட்கிற இசை, இவற்றைக் காணும்போது, இவ்வளவு மேதையும் அறிவுப் பிரகாசமும், பாமர ரசிப்பும் எப்படி ஒரே உள்ளத்தில் சகவாழ்வு வாழ்கின்றன என்று பிரமிக்கத் தோன்றுகிறது. இதற்கு யார் பொறுப்பு ?

இவர்களை உற்பத்தி செய்கிற பள்ளிக்கூடமா, கல்லூரியா, பல்கலைக் கழகமா, பெற்றோர்களா, சமூகச் சூழலா?'

இந்தச் சிந்தனையின் பக்கம் வாசகர்களின் கவனத்தைத் திருப்பி, அவர்களைச் சிந்திக்கத் தூண்டியது. 'விஞ்ஞான மேதைகள்–நிபுணர்கள் மாணவர்கள் பலர் பாமரமான இலக்கியம், இசை, சினிமா, நாடக, நடனங்களைத்தான் ரசிக்கிறார்களா? இது உண்மையா? உண்மையா னால் காரணம் என்ன?' என்று கேட்டு, விஞ்ஞானத்தையே தங்கள் வாழ்வின் முக்கிய சிந்தனை–தொழிலாகக் கொண்ட இளம் வாசகர்களி டம் அபிப்பிராயங்களை எழுதி அனுப்பும்படி கேட்டது.

இப்போது 'ஸ்வச்சித் சிந்தனைகள்' என்ற இயக்கத்தில் கணையாழி மிகுந்த ஆர்வம் காட்டி வருகிறது.

'நல்ல குடிமகனாக இருக்க விரும்பும் சிந்திக்கத் தெரிந்த தனி மனிதன், நால்வகைப் பிரச்னைகளின் விளிம்பில் வாழ்ந்து கொண்டு பெரும்பகுதி மக்கள் பசியிலும் அறியாமையிலும் பிணைபட்டுச் சமூகமே ஊழல் சக்தியாகச் சீரழிந்து வருவதைப் பார்த்துக்கொண்டு வாளா விருக்க முடியாது.

நாட்டின் நால்வகைப் பிரச்னைகளும் தீரவேண்டுமென்றால், இப் பிரச்னைகளைத் தீர்க்கமுடியாமல் வளர்ந்து வரும் தற்போதைய அமைப் புகளை அடியோடு மாற்றி அமைக்க வேண்டும். ஊழலற்ற ஆட்சி, ஏழை– பணக்காரர் வித்தியாசமின்றி எல்லோருக்கும் சமவாய்ப்பு, நாட்டின் வளங்களைப் பயன்படுத்தி உற்பத்திகளைப் பெருக்கும் விதிமுறைகள், வாழ்க்கைக்குப் பயன்படும் கல்வி, சாதிசமய இன வேறுபாடுகள் ஒழிந்த ஒருமித்த சமூகம், சுத்தமான காற்று, குடிநீர், போதிய உணவு, குடியிருப்பு முதலான அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்யும் திட்டம்–இவை எல்லாவற்றையும் நோக்கமாகக் கொண்ட ஒரு புதிய இயக்கம் தேவை.

முதல் கட்டமாக ஒரு சிந்தனை இயக்கத்தைத் துவக்கி, ஊழல், பசி, அறியாமை, பிணி இந்நால்வகை அசுரப் பிரச்னைகளை எதிர்த்து போராடுவோமாக!' அதற்காக, சிந்திக்கத் தெரிந்தவர்களின் அணியை ஒன்று திரட்டும் முயற்சிக்குக் கணையாழி தீவிர ஒத்துழைப்புத் தர முன்வந்திருக்கிறது.

# 54. பாரதி சோலை

நம்மிடையே மண்டிக் கிடக்கும் எல்லா அநீதிகளுக்கும் சுரண்டல் களுக்கும், வறுமைக்கும் நமது சமுதாய அமைப்பே காரணம் என்று புரிந்துகொண்டு, இந்த அமைப்பை மாற்ற வேண்டும் என்ற குறிக் கோளுடன் திட்டங்களிட்டு, அவரவருக்குத் தோன்றிய முறைகளில் அங்கங்கே அநேகர் செயலாற்றிக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் தத்தமக்கெனத் தனிப்பெயர் கொண்ட சிறு சிறு இயக்கங்களாகப் பணிபுரிகிறார்கள்.

அப்படிப்பட்ட அமைப்புகளில் காட்பாடி அருகில் உள்ள கிறிஸ்டியன் பேட்டையில் அலுவலகம் வைத்துக் கொண்டு ஆக்கப் பணிகள் புரிந்து வருகிற சோலை இயக்கமும் ஒன்று.

**சோலை** (SOLAI) என்பது Social Life Animation India எனும் ஆங்கிலச் சொற்களிலிருந்து அமைக்கப்பட்டதாகும். 'இந்திய சமூக வாழ்க்கை மேம்பாட்டு இயக்கம்' என்பது அதன் பொருள்.

இந்த இயக்கம் 'பாரதி சோலை' என்ற மாத இதழை வெளியிடு கிறது. நலவாழ்வு மற்றும் சமூக மேம்பாட்டு இதழ் ஆக இது மூன்று வருடங்களுக்கும் மேலாகவே வளர்ந்து வருகிறது. சோலை இயக்கத்தின் இயக்குநராகச் செயலாற்றும் ஆர். டி. ராஜன் எம். ஏ. (சமூகவியல்), எம். ஏ. (பொது நிர்வாகம்), டி. எச். இ. தான் இந்த மாத இதழின் ஆசிரியருமாவார்.

'மக்கள் எழுச்சிக்குப் பயிற்சி, அதுவே மக்கள் வளர்ச்சிக்கு வழி. மக்கள் தலைமைக்குப் பயிற்சி; அதுவே மக்கள் எழுச்சிக்கு வலிமை' என்று பாரதி சோலை அறிவிக்கிறது.

'நலமிக்க சமுதாயம் காண்பதே நலவாழ்வு முயற்சிகளின் நோக்கம். எல்லார்க்கும் நலவாழ்வு ஏன் கிடைக்கவில்லை எனப் பகுப்பாய்வு செய் வதும், அதனை மக்கள் புரிந்துகொள்வதும், புரிந்து கொண்ட மக்கள் நல வாழ்வைப் பாதிக்கும் சமூக பொருளாதார அரசியல்—சுற்றுச் சூழ் நிலைப் பிரச்னைகளுக்கு முற்றுப்புள்ளி வைக்க எழுச்சிபெற்று ஒன்று பட்டு, சரியான முடிவுகளை எடுப்பதும் முக்கியமாகும்' என்று பாரதி சோலை கருதிச் செயல்படுகிறது.

சமூகத் தாக்கமும், சமூகப் பொருத்தமும் இல்லாத எந்த ஒரு சமூகச் செயல்பாடும் பயனற்றது எனப் பழித்துரைக்கப்பட்டு காலத்தால் ஒதுக்கப்படும். மனித மேம்பாடு நோக்கிய செயல்பாட்டையே சமூகச் செயல்பாடு என்று குறிப்பிடுகிறோம். எழுத்துப் படைப்பாக்கமும் ஒரு சமூகச் செயல்பாடே. சமூக விழிப்புணர்வுக்காக இக்கலை அர்த்தமுள்ள பங்கை வலுவாக ஆற்ற முடியும்.

எழுத்துக்கலை கருத்துப் பரிமாற்றத்துக்கும், கருத்து வளர்ச்சிக்கும், சமுதாய உயர்வுக்கும் ஆற்றியுள்ள மகத்தான சாதனைகளை வரலாறு நமக்குக் காட்டுகிறது. இத்தகைய வலுவான கலை, தனிமனித லாபத் துக்காகவோ, தனிமனித மன நிறைவுக்காகவோ, தனிமனிதச் சிறப்புக் காகவோ, சிலரது லாப நோக்கங்களின் கருவியாகவோ பயன்படுத்தப் படுமானால், அதன் சமூகக் குணாதிசயம் பழுதாகி, எதிரான திசையில் எளிதில் இழுக்கப்பட்டு அழிவுக் கலாசாரத்தின் 'எடுபிடி சக்தி' யாக மாறி சிறுமைப்பட்டுப் போகும்.

சமூக மேம்பாட்டில் அக்கறையுடைய எவரும் 'மனித வாழ்க்கையை மனித வாழ்க்கையாக இவ்வுலகில் பராமரிக்க நடத்தப்படும் செயல்களே, இயக்கங்களே, போராட்டங்களே சரியானவை-தேவையானவை என்று கருதுவர். இந்தக் கோணத்தில் தமிழ் எழுத்தாளர்களின் படைப்புப் பணி எந்த அளவுக்கு உரிய சமூகச் செயல்பாடாக அமைந்து இருக்கிறது என்பதை ஆய்வு செய்வதில் 'சோலை' அக்கறை காட்டுகிறது.

பெரும்பான்மையான எழுத்தாளர்கள் தங்கள் எழுத்துக் கடமையை, எழுத்து தர்மத்தை அறவே மறந்து, பெரும்பான்மை மக்களைப் பற்றிய சிரத்தையே இல்லாமல், ஆட்டுவிக்கும் சீரழிவுக் கலாச்சார சக்திகளின் ஆடும் பாவைகளாய் செயல்பட்டு வரும் அலங்கோலத்தை 'சோலை' உணர்கிறது.

இந்நிலையில், கருத்துப் புரட்சிக்கு ஆதாரமாக– பெரும்பான்மை மக்களின், குறிப்பாக அடித்தட்டு மக்களின், வாழ்க்கை மேம்பாட்டுக்காக அர்ப்பணிக்க வேண்டிய மானுட மரியாதையை, உரிமையை, ஒவ்வொரு மனிதனும் சமூக சமத்துவ அடிப்படையில் அனுபவிக்கத் தேவையான சமூக விடுதலை நோக்கிய பயணத்தின் முன்னணியினராகத் திகழ வேண்டிய எழுத்தாளர்களுக்கு அவர்களது பங்குப் பணியை நினை வூட்ட வேண்டிய முயற்சி சமூக மேம்பாட்டு இயக்கத்தின் முன்னுரிமைப் பணியாகும் எனக்கொண்டு 'சோலை' செயல் புரிந்து வருகிறது.

சமூக மேம்பாடு என்கிறபோது, அதன் பொருளாதார மேம்பாட்டை மட்டுமே கணக்கில் கொள்ளாது, சமூகத்தின் கூட்டு வாழ்க்கைக்குத் தேவையான ஒருமைப்பாட்டு உறவுணர்ச்சிகள், கலை நாகரிக எழுச்சிகள், மனோகாய ஆரோக்கிய வளர்ச்சிகள் ஆகிய அனைத்தின் மொத்தத்தையும் கொண்டு ஒரு முழுமையான சமூக மேம்பாடே குறிக்கப்படுகிறது.

இந் நோக்கிலான விஷயங்களை பாரதி சோலை வெளியிடுகிறது. கதைகள், கவிதைகளோடு சிந்திக்கத் தூண்டுகிற கட்டுரைகளை அதிகமாகப் பிரசுரிக்கிறது. புதிய சமுதாயம் எப்படி இருக்க வேண்டும் என்று சிந்திக்கும் கட்டுரைகள், பொருளாதாரக் கட்டுரைகள் இதில் இடம் பெறுகின்றன. மற்றும் உணவு வகையின் குணங்கள், மூலிகைகள், குழந்தை நலம், வேளாண்மை, கால்நடைப் பராமரிப்பு பற்றிய கட்டுரைகளையும் தருகிறது.

'லாபமே குறிக்கோள் எனக் கொண்ட பொருள் உற்பத்தியும் வாணிபமும் பெரும்பான்மை நாடுகளின் சமூக வாழ்க்கையையே மாசுபடுத்திவிட்டன. இத்தகைய வாணிபத்தை வளர்ப்பதற்கு உருவானதே காலனி ஆட்சிகள். இன்று, காலனி ஆட்சிகள் கரைந்துவிட்டன; எஞ்சியிருப்பதும் கரைந்து கொண்டிருக்கின்றன. ஆனால் அது விதைத்த கொடிய 'கலாச்சாரம்' இன்றும் ஆட்டிப் படைக்கிறது. இந்தக் கலாசாரத்தின் ஆதிக்கம் முற்றிலும் நீங்கினாலொழிய எளியநாடுகளின் மேம்பாட்டிற்கு வழியே இல்லை. இது குறித்துச் சிந்திப்பதும் செயல்படுவதும் இந்தத் தலைமுறையில் வாழும் ஒவ்வொரு அறிவுஜீவியின் தலையாய பொறுப்பாகும்' என்று பாரதி சோலை ஆசிரியர் வலியுறுத்துகிறார்.

# 55. தீபம்

'பரிசுத்தமான எண்ணங்களுடனும் தணியாத சத்திய வேட்கையுட னும் எல்லா இடங்களிலும் அறிவின் பிரகாசமும் உண்மையின் ஒளியும் துலங்க வேண்டுமென்ற உயர்ந்த இலட்சியத்துடனும் இன்று இந்தத் தமிழ்ப் புத்தாண்டு தினத்தில் நான் ஓர் இலக்கியத் தீபத்தை பக்தி சிரத்தையோடு ஏற்றி வைக்கிறேன். இதன் பிரகாசத்தில் பகைமை, போட்டி, பொறாமை, இலக்கிய மாரீசம், நாட்டைக் கெடுக்கும் நச்சு இலக்கியப் புல்லுருவிகள் ஆகிய விதவிதமான இருள்களெல்லாம் அகன்று விலகி ஓடுமாக! தீபம் நல்லவர்களாகிய எல்லார்க்கும் ஒளியா கவும் தீயவர்களாகிய எல்லார்க்கும் சுடு நெருப்பாகவும் இருக்கும்; அப்படித்தான் இருக்கவேண்டும்.

இதன் குணம் பிரகாசம் என்பது மட்டும்தான் இங்கு நமக்குத் தேவையான உண்மை. எனவே அதை மட்டுமே எடுத்துக்கொள்ள வேண்டும்.'

இவ்வாறு அறிவித்து நா. பார்த்தசாரதி 1965 ஏப்ரல் மாதம் 'தீபம்' மாத இதழைத் துவக்கினார்.

'இது இலட்சக்கணக்கில் பணம் முடக்கும் ஓர் 'காகித வியாபாரி' நடத்த முன்வரும் இச்சை பச்சை நிறைந்த கவர்ச்சிப் பத்திரிகை அல்ல. தன்மானமும், நேர்மையும் இருகரங்களென நம்பும் ஓர் அசல் எழுத்தாளரின் ஆத்ம சோதனைதான் இந்தப் பத்திரிகை' என்றும் முதல் இதழின் தலையங்கம் தெரிவித்தது.

'தீபம்' ஆசிரியர் மேலும் தெளிவாகக் கூறியிருக்கிறார்: 'மனோதர் மமும் தன்னம்பிக்கையுமே எனது பலமான மூலதனங்கள். ஒரு காகித வியாபாரி பத்திரிகை தொடங்கும் போது அவர் விற்கும் காகிதத்தைப் போலவே மற்றொரு வர்ணக் காகிதமாகிய பணமும் அதிகாரமுமே அதற்கு மூலதனமாகலாம். ஆனால் ஓர் எழுத்தாளன் பத்திரிகை தொடங்கும்போதோ பணத்தைவிட மனோதர்மமே பெரிய மூலதனமாக அமைய முடியும். அப்படித்தான் நானும் அமைத்துக் கொண்டிருக்கிறேன் இப்போது.'

ஆசிரியரின் மனோதர்மம், தன்னம்பிக்கை ஆகிய பலமான மூலதனங்களின் அஸ்திவாரத்தில் தீபம் தரமான இலக்கிய ஏடு ஆக வளர்ந்து வந்திருக்கிறது. அதன் இருபதாம் ஆண்டு நிறைவு விழா 1985–ல் சென்னையில் நல்ல முறையில் கொண்டாடப்பட்டது.

ஆரம்பம் முதலே நல்ல இலக்கியத்தின் வளர்ச்சியிலும் வளத்திலும் தீபம் அக்கறை கொண்டு, இலக்கியவாதிகளையும் இலக்கியப் படைப்பு களையும் பிரகாசப்படுத்தும் முயற்சியில் தீவிரமாக ஈடுபட்டுள்ளது.

'இலக்கியச் சந்திப்புகள்' மூலம், பெயர் பெற்ற எழுத்தாளர்களின் எண்ணங்களை இலக்கிய ரசிகர்கள் அறிந்து கொள்வதற்கு வகை

செய்தது தீபம். கி. வா. ஜகந்நாதன், லா. ச. ராமாமிர்தம், நாரண துரைக் கண்ணன், ந. சிதம்பரசுப்ரமண்யன், மணிக்கொடி சீனிவாசன், டி. எஸ். சொக்கலிங்கம், வெ. சாமிநாத சர்மா, தி. ஜ. ரங்கநாதன், பி. எஸ். ராமையா, நா. வானமாமலை, தூரன், தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், க. நா. சுப்ரமண்யம், தி. ஜானகிராமன், கு. அழகிரிசாமி, ஜெயகாந்தன், அ. சீனிவாசராகவன், ரகுநாதன், கி. சந்திரசேகரன், மௌனி, திருலோக சீதாராம் ஆகியோரின் பேட்டிகள் இப்பகுதியில் வெளிவந்துள்ளன.

தமிழ் எழுத்தாளர்கள் தவிர, எனைய இந்திய மொழி எழுத்தாளர் களின் சந்திப்புகளையும் தீபம் பிரசுரித்திருக்கிறது. இதன் மூலம் இதர மாநில இலக்கியப் படைப்பாளிகள் பற்றியும், பிறமொழி இலக்கியங்கள் குறித்தும் தமிழ் வாசகர்கள் புரிந்து கொள்வதற்கு நல்ல வாய்ப்பு ஏற்பட்டது.

பேட்டிகள் மூலம் படைப்பாளிகளைப் பற்றி அறிந்து கொள்வதற்கு வசதி செய்த தீபம், 'நானும் என் எழுத்தும்' என்ற தலைப்பில் பல எழுத்தாளர்கள் தங்கள் அபிப்பிராயங்களையும் அனுபவங்களையும் வெளியிடுவதற்கு அரங்கம் அமைத்துக் கொடுத்தது. சுந்தர ராமசாமி, நகுலன், கி. ராஜநாராயணன், வல்லிக்கண்ணன், ஹெப்சிபா ஜேசுதாசன் முதலியவர்களின் சுவாரஸ்யமான கட்டுரைகள் இப்பகுதியில் பிரசுரம் பெற்றிருக்கின்றன.

இவை போக, பிற மாநில இலக்கிய கர்த்தாக்களின் வாழ்க்கை பற்றி விரிவாகத் தெரிந்து கொள்வதற்கு உதவக்கூடிய கட்டுரைகளையும் தீபம் பிரசுரித்துள்ளது. சரத்சந்திரர் வாழ்க்கை, பங்கிம் சந்திரர், கேசவ தேவ் ஆகியோரின் அறிமுகம், எம். டி. வாசுதேவன் நாயர் எழுதிய இராஜலட்சுமி என்ற கதாசிரியை முதலியவை குறிப்பிடத்தகுந்தவை.

மலையாள எழுத்தாளர்கள் பற்றி விரிவாகவும் புதிய முறையிலும் எழுதப்பட்ட கட்டுரைகள் 'முழுமையைத் தேடும் முழுமையற்ற புள்ளிகள்' தொடர்ந்து பிரசுரிக்கப்பட்டது விசேஷமானது. இனிய முறையில் குறிஞ்சி வேலன் தமிழாக்கித் தந்த இக்கட்டுரைகள் ரசிகர்களின் கவனத்தைப் பெரிதும் கவர்ந்து மிகுந்த பாராட்டுதல்களைப் பெற்றுள்ளன.

இளைய தலைமுறையினருக்கு—முக்கியமாக இலக்கிய ஆய்வாளர் களுக்கு— அதிகம் பயன்படக்கூடிய கட்டுரைத் தொடர்களை 'தீபம்' விடாது வெளியிட்டு வருகிறது. பி. எஸ். ராமையாவின் 'மணிக்கொடி காலம்', வல்லிக்கண்ணன் எழுதிய 'சரஸ்வதி காலம்', 'புதுக் கவிதை யின் தோற்றமும் வளர்ச்சியும்', 'பாரதிக்குப் பின் தமிழ் உரைநடை', தமிழில் சிறு பத்திரிகைகள் ஆகியவை முக்கியமானவை. சி. சு. செல்லப் பாவின் 'எழுத்து அனுபவங்கள்' தனியாகக் குறிப்பிடத்தகுந்தது.

ஒரு நல்ல இலக்கியப் பத்திரிகை செய்ய வேண்டிய அவசியப் பணிகளை 'தீபம்' ஆரம்பம் முதலே செய்து வருகிறது. இலக்கியத்தின் பல்வேறு அம்சங்கள் பற்றிய ஆய்வுகளை உற்சாகத்துடன் அது பிரசுரிக் கிறது. அகிலன் எழுதிய 'கதைக் கலை', கு. அழகிரிசாமியின் 'கதாநாய கர்கள்—ஓர் இலக்கியச் சிந்தனை', எழில் முதல்வன் எழுதிய 'விடுதலைக்

குப் பின் தமிழ் நாவல்கள்', கு. ராஜவேலு ஒப்பியல் ரீதியில் எழுதிய சிலப்பதிகாரக் கட்டுரைகள் போன்றவை தொடர்ந்து வெளிவந்திருக் கின்றன.

சுதந்திரத்துக்குப் பின் இலக்கிய வளர்ச்சி என்று ஒவ்வொரு மொழி வாரியாகவும் கட்டுரைகள் வந்திருப்பது பிற மொழி இலக்கிய வளர்ச்சி குறித்து அறிந்து கொள்வதற்கு வகை செய்த முயற்சி ஆகும்.

'திரைக்கு ஒரு திரை' என்ற தலைப்பில் ஜெயகாந்தன் திரை உலக உண்மைகளை வெளிச்சமிட்டுக் காட்டும் தொடர் ஒன்றை எழுதி யிருக்கிறார்.

'நினைவில் நிற்கும் முன்னுரைகள்' என்று குறிப்பிடத்தகுந்த நூல் முன்னுரைகளைத் தொடர்ந்து பிரசுரித்ததும், 'காலத்தை வென்ற சிறுகதைகள்' என்று அருமையான கதைகளைத் தேடிக் கண்டு வெளி யிட்டதும் நல்ல இலக்கிய விருந்து ஆகும்.

அவ்வப்போது, இலக்கியப் பிரியர்களின் கவனத்தை ஈர்க்கும் அம்சங்களைப் புதிது புதிதாக வெளியிடுவதில் தீபம் உற்சாகம் காட்டத் தவறவில்லை.

கா. நா. சு. எழுதி வந்த 'மறைவாக நமக்குள்ளே' மற்றும் வம்பு மேடை, மனம் வெளுக்க, இலக்கிய மேடை (கேள்வி–பதில்) போன்றவை இரசிக்கத்தக்கவை.

'ஊஞ்சல்– ஒரு புதிய இலக்கியப் பாலம்' என்ற பகுதி ரசம் நிறைந்தது. சில முக்கிய எழுத்தாளர்கள் தங்களுக்குள் பரிமாறிக் கொண்ட கடிதங்கள் இதில் வெளியிடப்பட்டன.

எழுத்தாளர்களும் வாசகர்களும் கலந்து கொண்டு கருத்துப் பரி மாறிக் கொள்வதற்கு வசதியாகச் சில பகுதிகள் இடம் பெற்றுள்ளன. 'பட்டிமன்றம்' அப்படிப்பட்ட ஒரு பகுதி ஆகும்.

தமிழ்ச் சிறுகதை, தமிழ் நாடகம், தமிழ்க் கவிதை, நாட்டின் மொழிப் பிரச்னை, தமிழ் நாவல் முதலிய பொருள்கள் பற்றி காரசார மான விவாதங்கள் பட்டிமன்றத்தில் நிகழ்த்தப்பட்டன.

இலக்கிய வட்டக் கருத்தரங்கு என்று, வெவ்வேறு ஊர்களில் நடைபெற்ற கருத்தரங்குகள் பற்றிய விரிவான தகவல்கள் தரப்பட்டுள்ளன.

'ஆறங்கம்' என்ற தலைப்பில் பல்வேறு பொருள்கள் குறித்தும் ஆறு பேர்களிடம் யோசனைகள் சேகரம் செய்து பிரசுரித்திருக்கிறார்கள்.

"என் வாழ்வில் எதிர்பாராத சம்பவம்" என்று அநேகர் தங்களுக் குப் பிடித்த முறையில் சுவையாக எழுதினார்கள்.

சர்வதேச இலக்கியம் பற்றி, ஐரோப்பிய மற்றும் அமெரிக்கப் படைப் பாளிகள் குறித்து அசோகமித்திரன் எழுதி வந்த தொடர் பயனுள்ளதாகும்.

'பொதுப்பணியில் இவர்கள்' என்று தொழில் அதிபர்கள் பற்றியும் பிரமு கர்கள் குறித்தும் பேட்டிகளும் கட்டுரைகளும் வெளியிடப்பட்டிருக்கின்றன.

நா. பா. ஆழ்ந்த கருத்துக்களும், அழுத்தமான அபிப்பிராயங்களும் தெரிவித்துத் தலையங்கங்கள் எழுதினார். 'எனது குறிப்பேடு' என்ற

தலைப்பில் பல்வேறு விஷயங்கள், நிகழ்ச்சிகள் குறித்து சுவாரஸ்யமான அபிப்பிராயங்கள் எழுதி வந்தார். 'இரத்தினச் சுருக்கம்' என்ற தலைப்பில், பொன்முடி என்னும் பெயரில்,சிந்தனைப் பொறிகளைத் தொகுத்துத் தந்தார்.

'இரத்தினச் சுருக்கம்' ரசமான, புதுமையான ஒரு பகுதியாக விளங்கியது. உதாரணத்துக்கு 'ரத்தினங்கள்' இங்கே எடுத்து எழுதப்படுகின்றன—

'நீங்கள் பிரமுகராக வேண்டுமானால் முதலில் மற்றவர்களைக் சாதாரணமானவர்களாக்கிவிட்டு முன்னால் வந்து நில்லுங்கள். மற்றவர்களைப் பிரமுகர்களாக்க வேண்டுமானால் நீங்கள் பின்னால் சாதாரணமானவர்களாக ஒதுங்கி நின்றுகொண்டு மற்றவர்களுக்குத் தாராளமாக வழி விட்டுவிடுங்கள். பிரமுகராவதன் இரகசியம் முன்னால் ஓடுவதிலும், பின்னால் ஒதுங்கத் தயங்குவதிலும்தான் இருக்கிறது.'

'சொல் அமைவது உரைநடை. சொல் இசைவது கவிதை. பூ இணைவது சரம். பூக்களைத் தொடுப்பது மாலை.'

'குழந்தைப் பருவத்தில் மெல்லிய ஊசி ஊசியாக விழும் பன்னீர் மாலைச் சாரலில் விரும்பி நனைவதுபோல் சிலரோடு உரையாடுவது தான் எத்தனை சுகமாயிருக்கிறது !'

இந்த விதமான, சுவையான, நயமான, எண்ண ஓட்டங்கள் நிறைந்தது இந்தப் பகுதி.

நா. பா. நாவல்கள் பல தீபம் இதழ்களில் தொடர்ந்து வந்தன. மணிவண்ணன், பொன்முடி என்ற பெயர்களில் நாவல்கள், குறுநாவல்கள், சிறுகதைகள் அதிகமாகவே அவர் எழுதினார். நெஞ்சக்கனல், கண், கபாடபுரம், செய்திகள், ஆத்மாவின் ராகங்கள் மற்றும் சில அவர் எழுதிய நாவல்களாகும்

நாவல் வளர்ச்சிக்கும் வளத்துக்கும் தீபம் ஆற்றியுள்ள பங்கு கணிசமானது. ஆதவனின் காகிதமலர்கள், அசோகமித்திரனின் கரைந்த நிழல்கள், இந்திரா பார்த்தசாரதியின் தந்திர பூமி, தி. ச. ராஜுவின் காளியின் கருணை, ஆதிவாசிகளின் தலைவனான (பீகார் பழங்குடியினரின் பகவான்) பிர்ஸா பகவான் வரலாற்றை ஆதாரமாகக் கொண்டு மலர்மன்னன் எழுதிய மலையிலிருந்து வந்தவன், ஆர். சூடாமணியின் தீயினில் தூசு ஆகியவை தீபம் தொடர்கதைகளாக வந்தவைதான்.

இளைய எழுத்தாளர்கள் நாஞ்சில்நாடன், தேவகோட்டை வா. மூர்த்தி நாவல்களையும் அது வெளியிட்டிருக்கிறது.

ஆரம்ப முதலே தரமான, அருமையான குறுநாவல்களை தீபம் பிரசுரித்திருக்கிறது. இவை எண்ணிக்கையிலும் அ தி க ம். பிரபல எழுத்தாளர்கள், புதிய எழுத்தாளர்கள் என்ற பேதமின்றி நல்ல படைப்புக்களை வெளியிட்டு குறுநாவலின் வளர்ச்சிக்கு அது நல்ல சேவை செய்திருக்கிறது.

சிறுகதையின் வளத்துக்கும் வளர்ச்சிக்கும் தீபம் ஆற்றியுள்ள பங்கு பெரிதாகும். சிறந்த கதைகள் எண்ணற்றவை இந்த இருபது ஆண்டு

களில் தீபம் இதழ்களில் வெளிவந்துள்ளன. திறமையுள்ள படைப்பாளிகள் பலரும் இதில் எழுதியிருக்கிறார்கள். புதிதாகத் தோன்றி வளர்ச்சி பெற்ற இளைய படைப்பாளிகளுக்கும் தீபம் பேராதரவு அளித்துள்ளது. கே. ராமசாமி, வண்ணதாசன், நாஞ்சில்நாடன் குறிப்பிடத் தகுந்தவர்கள்.

கு. அழகிரிசாமியும், கி. ராஜநாராயணனும் தொகுத்தளித்த நாடோடிக் கதைகள் சிறப்பானவை. தமிழ்நாட்டு நாடோடிக் கதைகளை மட்டுமல்லாது அரேபிய, பர்மிய, சீன மற்றும் பல நாடுகளின் கதைகளையும் சேகரித்து அழகிரிசாமி தமிழில் தந்திருக்கிறார்.

குறிஞ்சிவேலன் மலையாள மொழி நாவல்களைத் தமிழாக்கி உதவியுள்ளார். மலையாற்றூர் இராமகிருஷ்ணனின் 'ஐந்து சென்ட் நிலம்' குறிப்பிடத்தகுந்த நாவல்.

விமர்சனத்துக்கும் தீபம் தன்னால் இயன்ற அளவு பணிபுரிந்து வருகிறது. ஆரம்ப வருடங்களில், மாணவர்கள் புத்தக விமர்சனங்கள் எழுதுவதற்காக 'இரசனை அரங்கம்' அமைத்துக் கொடுத்தது. வாசகர்கள் எழுதி அனுப்பிய புத்தக விமர்சனங்களை வெளியிட்டது. புத்தக மதிப்புரைப் பகுதி தொடர்ந்து வந்துகொண்டிருக்கிறது. குறித்த ஒரு புத்தகம் பற்றி யாரேனும் ஒரு எழுத்தாளர் மதிப்புரைக்கும் விரிவான கட்டுரையும் மாதம்தோறும் வருகிறது.

இப்படியாக 'தீபம்' அயராது இலக்கியப் பணி புரிந்து கொண்டிருக்கிறது.

'ஓர் இலக்கியப் பத்திரிகைக்குள்ள சிரமங்களும் பெருமிதங்களும் தீபத்திற்கும் உண்டு. சிரமங்கள் இல்லாத பெருமிதங்கள் உலகில் கிடையாது. சிரமப்படுவதால்தான் பெருமிதம் அடைய முடிகிறது. சிரமங்களைக் கடக்க முயல்வதுதான் பெருமிதமாகவும் இருக்கிறது' என்று தீபம் ஆசிரியர் ஒரு இதழில் குறிப்பிட்டிருப்பது நினைவில் நிற்கும் உண்மை ஆகும்.

# 56. முடிவு இல்லாத வரலாறு

சிறு பத்திரிகைகளின் வரலாறு முடிவு இல்லாமல் வளர்ந்து கொண்டிருப்பது.

என்றாலும், தொடர்ந்து நான் எழுதி வருகிற இந்த வரலாற்றை ஒரு இடத்தில் நிறுத்தத்தான் வேண்டும்.

இத் தொடரில் பெரும்பாலான சிறு பத்திரிகைகள் குறித்து நான் தகவல்கள் தந்திருக்கிறேன். அநேகப் பத்திரிகைகள் இதில் இடம் பெறாமல் போயிருப்பதும் சாத்தியம்தான்.

நான் குறிப்பிட்டுள்ள பத்திரிகைகளில் சில நின்று விட்டதாக அறிவிக்கப்பட்டிருந்தாலும், திடீர் திடீரென்று புத்துயிர் பெற்று இயங்குவதும் சகஜமாக நிகழ்கிறது. அவற்றில் சில தொடர்ந்து நிலையாக வளர்வதும் இல்லை.

புதிது புதிதாக அநேக முயற்சிகள் தோன்றிக் கொண்டும் இருக்கின்றன. அவற்றில் பெரும்பாலானவை வெறும் ஆர்வத்தின் வெளிப்பாடுகளாக இருக்கின்றனவே தவிர, ஆற்றலின் மலர்ச்சியாக அமைவதில்லை. அத்தகைய பத்திரிகைகளை நான் இத்தொடரில் குறிப்பிடாமலே விட்டுள்ளேன்.

சிறு பத்திரிகைகளின் தோற்றம்–இயக்கம்–மறைவு ஆகியவற்றை மேலோட்டமாகக் கவனிக்கிறவர்கள் கூட பல உண்மைகளை எளிதில் புரிந்து கொள்ள இயலும்.

சிறு பத்திரிகைகளின் தோற்றம் பற்றிய சில உண்மைகள்.

1. ஆற்றலும் ஆர்வமும், லட்சிய வேகமும் உடையவர்கள், பெருவாரியாக வியாபித்துள்ள வணிகப் பத்திரிகைகள் தங்களுடைய எண்ணங்களுக்கும் எழுத்துக்களுக்கும் ஒத்து வருவதில்லை என்பதால், தங்கள் கருத்துக்களை எடுத்துச் சொல்வதற்காகத் தனிப் பத்திரிகையைச் சிறு அளவில் தோற்றுவிக்கிறார்கள்.

2. பெரிய பத்திரிகைகளுக்குப் படை எடுத்து, பிரசுர வாய்ப்புப் பெறாமல் போகவும், நமக்கென்று நாமே பத்திரிகை நடத்துவோம் என்று இளைஞர்கள் சிலர் குழுவாகச் சேர்ந்து பத்திரிகை நடத்துகிறார்கள்.

3. நமக்கு முற்பட்டவர்களும், நம் சமகாலத்தவரும் செய்துள்ளவை –செய்கிறவை– எல்லாம் பயனற்றவை; எவரும் உருப்படியாக எதுவும் செய்யவில்லை; நம்மால்தான் புதுமைகள், அற்புதங்கள், சாதனைகள் புரிய முடியும்; அவற்றை நாம் செய்து காட்டுவோம் என்று நினைக்கிற, நம்புகிற 'கோபம் கொண்ட இளைஞர்கள்' சிலர் கூடி ஒரு பத்திரிகையை ஆரம்பிக்கிறார்கள்.

4. நாமும் எழுத வேண்டும்; நாம் எழுதுகிறவை எல்லாம் அச்சில் வர வேண்டும் என்று ஆசை கொண்டு, சில சங்கத்தின் உறுப்பினர்கள் அல்லது ஏதேனும் நிறுவனத்தில் பணிபுரியும் இளைஞர்கள் உற்சாகத் தோடு ஒரு பத்திரிகையைத் துவக்குகிறார்கள்.

5. எழுத ஆசைப்படும் இளைஞர்கள் கையெழுத்துப் பத்திரிகை நடத்துகிறார்கள். அந்த அனுபவமும் ஆசையும் தூண்டிவிட அதையே அவர்கள் அச்சுப் பத்திரிகையாக மாற்றுகிறார்கள்.

6. அவனும் இவனும் பத்திரிகை நடத்துகிறான்; எது எதையோ எழுதுகிறான்; நாமும் நடத்தினால் என்ன, நம் இஷ்டம்போல் எழுதி னால் என்ன என்ற மன அரிப்பினாலும்–நாமும் பத்திரிகை ஆசிரியர் என்றாகிவிட்டால் நமக்கும் ஒரு மதிப்பும் தனி கவனிப்பும் கிட்டும் என்று ஆசைப்பட்டும்–சிலர் பத்திரிகை ஆரம்பிக்கிறார்கள்.

7. ஒரு குழுவாக இயங்கி, சிலர் ஒரு பத்திரிகையை நடத்துகிற போது, சில மாதங்களிலேயே அவர்களுக்குள் கருத்துவேற்றுமையும் பிணக்கும் ஏற்பட்டு, பிளவும் பிரிவும் உண்டாகிவிடவும், விலகியவர்கள் தனியாக ஒரு பத்திரிகை தொடங்குகிறார்கள்.

ஆற்றல், ஆர்வம், ஆசை, அரிப்பு, கனவு, லட்சியம், இவை அனைத்துமோ இவற்றில் சிலவோ உடையவர்கள் பொருளாதார பலம் பெற்றிருப்பதில்லை. அதனால் பத்திரிகையின் வளர்ச்சி பாதிக்கப்படுகி றது. விரைவிலேயே நின்றுவிடவும் நேர்கிறது.

லட்சிய வேகம் பெற்ற ஒருவர் கொள்கைப் பிடிப்போடு பிடிவாதத்தோடு பத்திரிகை நடத்துகிறபோது, சிரமங்களையும் நஷ்டங்களையும் அவர் பொருட்படுத்துவதில்லை. எப்படியும் சமாளித்து, தாக்குப் பிடிப்பதில் அவர் தீவிரமாக இருப்பார். அப்படிப்பட்ட தனிநபர் ஆரம்பிக்கிற சிறு பத்திரிகை மட்டுமே வருடக் கணக்கில் நீடித்திருக்க முடியும்– தொடர்ந்து நடைபெற முடிகிறது. இதை இந்த வரலாறு உணர்த்துகிறது.

ஏதாவது ஒரு அரசியல் கட்சியின் ஆதரவில் வெளிவருகிற பத்திரி கையும் நீண்ட காலம் பணிபுரிய இயலும்.

தனிநபர்கள், உள்ளடக்கத்தினால் ( தன்மையால் ) சிறு பத்திரிகை யாகவும், அதே சமயம் வியாபார முயற்சியாகவும் இலக்கியப் பத்திரிகை நடத்த முற்படுகிறபோதும், அந்தப் பத்திரிகை நெடுங்காலம் வருவது சாத்தியமாகிறது.

இதே நோக்குடன் இயக்க ரீதியில் பிரசுரம் பெறும் பத்திரிகையும் நஷ்டத்தைப் பொருட்படுத்தாமல் வளரக் கூடும்.

மற்றபடி, வெறும் உற்சாகத்தோடு ஆரம்பிக்கப்பட்ட அநேக முயற்சிகள் ஒரு வருடம் அல்லது சில மாத காலம் வாழ்வதற்கே நித்தியப் போராட்டம் அனுபவிக்க நேரிட்டுள்ளது. அநேக முயற்சிகள் இரண்டு அல்லது மூன்று இதழ்களோடு முடிந்து போகின்றன. ஒரே ஒரு இதழோடு மறைந்து போன முயற்சிகள் பலவாகும்.

இந்த விதமாக சிறு பத்திரிகைகள் அல்பாயுசுடன் முடிந்து போவதற்குப் பொருளாதாரம்தான் மிக முக்கியமான காரணம் ஆகும்.

நீண்டகாலம் நீடித்திருப்பதற்குத் தேவைப்படக் கூடிய பணபலத்துடன் சிறு பத்திரிகைகள் துவக்கப்படுவதில்லை. பொருள் பலம் பெற்றவர்கள் ஆதரவையும் அருளையும் அவை பெறுவதில்லை. விளம்பரம், ஆயுள் சந்தா, தொடர்ந்து சந்தாப் பணம் என்று பண வரவுக்கான வாய்ப்பு அவற்றுக்கு இல்லை.

'தனிச் சுற்றுக்கு மட்டும்' என்று ஆரம்பிக்கப்படுகிற சிறு பத்திரிகைகள் 200 அல்லது 300 பிரதிகளே அச்சிடப்படுகின்றன. அதிகம் போனால், 500 பிரதிகள் அச்சாகலாம். போகப் போக அந்த எண்ணிக்கை குறைந்து, இறுதியில் 150 அல்லது அதற்கும் கீழே என்றாகிவிடும். அநேகமாக இவை முழுவதும் இலவசமாகவே வழங்கப்படும்.

பத்திரிகை நடத்துகிறவரின் நட்புக்காக, அன்புக்காக, முகத்துக்காக, தொந்தரவுக்காக—இவற்றில் எதுவோ ஒன்றுக்காக— ஆரம்பத்தில் பணம் கட்டுகிறவர்கள்கூட அப்புறம் சந்தாவைப் புதுப்பிப்பதில்லை. இதனால் பத்திரிகையின் வளர்ச்சி இயல்பாகவே பாதிக்கப்படுகிறது.

எனவேதான், பத்திரிகை உலகத்தில் பிறப்புகளைப்போலவே இறப்புகளும் சகஜமாகவும் சர்வசாதாரணமாகவும் இருக்கின்றன.

தன்மையினால் சிறு பத்திரிகையாகவும், நடைமுறையில் வியாபார முயற்சியாகவும் விளங்க முயல்கிற பத்திரிகைகள்கூட லாபகரமாக அமைவதில்லை. இவை வியாபார வெற்றிகளாக விளங்குவதில்லை, விளங்க முடிவதில்லை.

'தனிச் சுற்றுக்கு மட்டும்' என்று கூறிக்கொள்கிற சிறு பத்திரிகைகள் சில நூறு பிரதிகளே அச்சிடப்படுமானால், வியாபார ரீதியிலும் இயங்க முடியுமா என்று பார்க்கிற சிற்றேடுகள் சில ஆயிரம் பிரதிகள் அச்சாவது நடைமுறை. சந்தாதார்கள் போக, நாட்டின் பல முக்கிய இடங்களிலும் ஏஜண்டுகள் நியமிக்கப்பட்டு இவை விற்பனைக்கு அனுப்பப்படுகின்றன. சில நகரங்களில் ரயில்வே புத்தக நிலையங்களிலும் இவற்றில் சில கிடைக்கக் கூடும்.

தொழில் முறையில் ஜனரஞ்சகமாக மிகப்பெரும் அளவில் நடத்தப்படுகிற வணிகப் பத்திரிகைகள் வாரம்தோறும் பல லட்சம் பிரதிகள் விற்பனையாகின்றன. அந்தச் சந்தையில் சிறிய பத்திரிகைகள் போட்டியிட வேண்டியதாகிறது. ஒரு சில ஆயிரம் பிரதிகள், மாதம்தோறும் என்பது மிகவும் குறைவானதுதான். ஆயினும், அவைகூட விற்பனையாவது இல்லை என்பது வருத்தத்துக்கு உரிய உண்மை ஆகும்.

இதற்கு வாசகர்களின் ரசனை, ஈடுபாடு, தரம் முக்கியக் காரணம் என்பதில் சந்தேகம் இல்லை. அதைவிட வெகு முக்கியமான காரணம், விற்பனையாளர்களின் நோக்கும் போக்கும்.

ஜனரஞ்சகமான வணிகப் பத்திரிகைகளை விற்பனை செய்கிற ஏஜண்டுகளைத்தான் சிறு பத்திரிகைகளும் நாடவேண்டியிருக்கிறது. 'பெரிய பத்திரிகைகள்' வாரம்தோறும் இருநூறு– முந்நூறு (அதற்கும் அதிகமாகவும்) பிரதிகள் செலவாகக் கூடிய ஊர்களில், கனமான– சிந்தனைக்கு உரிய– 'சீரியஸ்' தன்மை உள்ள கதைகள், கட்டுரைகள், கவிதைகளைப் பிரசுரிக்கிற சிற்றேடுகள் மாசத்துக்கு இருபது அல்லது முப்பது பிரதிகளே விலை போகின்றன. இதனால் வியாபாரிக்கு அதிகமான லாபம் இல்லை. அவர் கவனமும் சிரத்தையும் அதிகக் கமிஷன் கிடைக்க வகை செய்கிற வணிகப் பத்திரிகைகளை விற்பதிலும், அவற்றின் விற்பனைத் தொகையை உடனுக்குடன் அனுப்பி வைப்பதிலும் தீவிரமாக இருக்கின்றன.

எனவே, தபால் மூலம் வரப் பெறுகிற சிறு பத்திரிகைகளை வியாபாரி எடுப்பாக, வாங்க வருகிறவர் பார்வையில் படும்படியாக, முன்னே வைப்பதில்லை. சில சமயம், அந்தப் பத்திரிகை இருக்கிறதா என்று கேட்டு வாங்க வருகிற வாசகருக்கு எடுத்துக் கொடுக்கவும், உரிய பதிலைச் சொல்லவும்கூட, உற்சாகம் இல்லாதவர் ஆகிவிடுகிறார் கடைக்காரர். விற்பனைத் தொகை சிறு அளவாக இருப்பதால் அதை மாதம்தோறும் அனுப்ப மனம் வருவதில்லை அவருக்கு அனுப்புகிற செலவு குறையுமே என்பதற்காக, இரண்டு மாதம் மூன்று மாதம் சேர்த்துப் பணம் அனுப்பலாமே என்று லாபத்தில் குறியாக உள்ள வியாபாரி நினைக்கிறார். இப்படிப் பல மாதங்கள் ஆகிவிடவும், பணம் அனுப்புவது அவருக்குச் சிரமமாகி விடுகிறது; அனுப்பாமலே இருந்து விடுகிறார்.

எந்த வகையில் பார்த்தாலும் பத்திரிகைக்குத்தான் நஷ்டம் ஏற்படுகிறது.

தொழில் முறை ஏஜண்டுகளை நம்பாமல் இலக்கிய ரசனையும் ஈடுபாடும் கொண்ட நண்பர்களுக்கு 10 பிரதிகள் (சில ஊர்களுக்கு 5 பிரதிகளாவது) அனுப்பி, பத்திரிகையைப் பரப்புவதற்கு முயற்சி பண்ணலாமே என்று சிறு பத்திரிகை நடத்துகிறவர்கள் சோதனையில் ஈடுபடுகிறார்கள்.

உற்சாகமுள்ள நண்பர்கள் சிறிது காலம் ஒத்துழைக்கிறார்கள். போகப் போக இவர்களும் தொழில்முறை ஏஜண்டுகள் போக்கில்தான் செயல்படுகிறார்கள். ஒரு கட்டத்தில், அந்த ஊருக்கு பத்திரிகை அனுப்புவதையே நிறுத்த வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுவிடுகிறது.

ஊர் ஊருக்கு இப்படி ஆகி, பத்திரிகைகள் பிரதிகள் அச்சிடும் எண்ணிக்கையைக் குறைக்க நேர்கிறது. இவ்வாறு தேய்ந்து தேய்ந்து பத்திரிகை நிற்க வேண்டிய நிலையை அடைந்து விடுகிறது.

தமிழ்நாட்டில் சிறு பத்திரிகைகளின் வரலாறு தொடர்ந்து எடுத்துக் காட்டிக்கொண்டிருக்கிற உண்மை நிலை இதுதான்.

சிறு பத்திரிகை தொடர்ந்து நீடித்து நடக்க வேண்டுமானால், தரம் அறிந்து படிக்கிற வாசகர்களின் எண்ணிக்கை பெருக வேண்டும்.

ரசனைமிக்க வாசகர்களை விடாது பிடித்து வைத்திருக்கக் கூடிய விதத்தில் சிறு பத்திரிகையின் ஒவ்வொரு இதழும் தரத்தோடும் புதுமைச் சுவையோடும் விளங்க வேண்டும்.

அப்போது இலக்கியப் பிரியர்கள் சந்தா கட்டுவதில் ஆர்வம் உடையவர்கள் ஆவார்கள். அந்தப் பத்திரிகையை விற்க முனைகிற இலக்கிய நண்பர்களுக்கும், ஒவ்வொரு இதழையும் தெரிந்தவர்களிடம் 'தள்ளிவிடவோ தலையில் கட்டவோ,' சிரமப்பட வேண்டிய தேவை ஏற்படாது.

பரவலாகச் சிறு பத்திரிகைகளைக் கவனிக்கிறபோது, 1970 களிலும் 80களிலும் சிறு பத்திரிகைகள் எண்ணிக்கையில் அதிகமாகத் தோன்றி மறைந்திருக்கின்றன என்பது புலப்படும்.

இப்படி அவை அதிகமாக வந்திருந்த போதிலும், உருப்படியான சாதனைகள் வெகு குறைவுதான் என்பதும் புலனாகும். அநேக முயற்சிகள் பேப்பர் வியாபாரிக்கும் பிரஸ்காரருக்கும் பிசினஸ் தேடிக்கொடுத்த புண்ணியத்தைத் தவிர, எழுத்துக்கோ கலைக்கோ சமுதாயத்துக்கோ எந்தவிதமான பயனையும் அளிக்கவில்லை.

அநேக வெளியீடுகள், வணிக நோக்குப் பொழுது போக்குப் பத்திரிகைகளைப் போல ஒரு தடவை பார்த்துவிட்டு அப்படியே ஒதுக்கி விடக்கூடிய தன்மையில்தான் இருக்கின்றன. பத்திரமாக பாதுகாத்து வைத்து, அடிக்கடி படித்து இன்புறக்கூடிய விதத்தில் நல்ல தரமான, உயர்ந்த படைப்புகளை பெரும்பாலான பத்திரிகைகள் தரவில்லை.

சிறு பத்திரிகைகள் சக்தி நிறைந்த வலிய சாதனங்கள் ஆகும்; ஆக முடியும்.

புதிய எழுத்துக்கு, புதிய புதிய பரிசோதனைகளுக்கு அவை இடம் தரும்—தர வேண்டும். புதிது புதிதாகத் திறமைசாலிகளைக் கண்டு கொள்ள அவை உதவக்கூடும். திறமையாளர்களின் வளர்ச்சிக்குத் துணைபுரியக் கூடிய பயிற்சித் தளமாக அவை விளங்க முடியும். கனமான சிந்தனைகள், வளமான கருத்துக்கள், அறிவு வளர்ச்சிக்கு உதவக்கூடிய விவாதங்கள் முதலியவற்றை வளர்த்து, கலை இலக்கியங்களை வளம் செய்ய முடியும்.

இப்படி எல்லாம் இன்று எத்தனை சிறு பத்திரிகைகள் இருக்கின்றன?

வணிக நோக்கில் பெரிய அளவில் பத்திரிகை நடத்துகிறவர்கள் வாசகர்களின் மன அரிப்பைத் தணிக்கும் விதத்தில் எதெதையோ அச்சிட்டு நல்ல தாளைப் பாழாக்குகிறார்கள் என்றால், தங்கள் மன அரிப்பைத் தணித்துக் கொள்வதற்காக சிறு பத்திரிகைகள் நடத்துகிறவர்களில் பெரும்பாலானவர்கள் பணத்தை வீணாக்கி, தரமற்ற, நயமற்ற, சுவையற்ற, சாரமற்ற எழுத்துக்களை அச்சிட்டு நல்ல காகிதத்தைப் பாழ் பண்ணுகிறார்கள் என்றே சொல்ல வேண்டியிருக்கிறது.

தரமான படைப்புகளையே தருவோம் என்று அறிவித்த ஒரு சில பத்திரிகை அன்பர்கள்கூட, சில இதழ்களுக்குப் பிறகு சாரமற்ற எழுத்துக்

களால் தங்கள் பத்திரிகையின் பக்கங்களை நிரப்பி வைக்கிறார்கள். தரமான, நயமான, கனமும் ஆழமும் கொண்ட எழுத்துக்கள் கிடைப்பதில்லை என்று சொல்கிறார்கள்.

இக் குறைபாட்டைத் தவிர்ப்பதற்காகச் சிலர் மொழிபெயர்ப்பு விஷயங்களை அதிகம் தர முனைகிறார்கள். இவற்றிலேகூட, காலத்துக்கும் நாட்டுக்கும் நமது சமூக நிலைமைகளுக்கும் பொருந்தி வராத கட்டுரைகளையே சிலர் தேர்ந்தெடுக்கிறார்கள். அல்லது எங்கோ, எப்பவோ வெளியான ஒரு அரசியல் நூல் பற்றி ஏதோ ஒரு பத்திரிகையில் எவரோ ஒருவர் எழுதிய கடுமையான விமர்சனத்தைத் தமிழாக்கித் தருகிறார்கள்.

பத்திரிகைகள் நடத்துகிறவர்கள் தங்களை 'அறிவு ஜீவிகள்' (இன்டெலக்சுவல்ஸ்) என்று காட்டிக்கொள்ள விரும்புகிற ஆசைதான் இவற்றின் மூலம் வெளிப்படுகின்றனவே தவிர, இந்த விதமான விஷயங்களால் தமிழ் வாசகர்களுக்கு ஒரு பயனும் கிடையாது. நம் நாட்டு நிலைமைகள், வாழ்க்கைப் பிரச்னைகள், தற்காலச் சிக்கல்கள் பற்றிய சிந்தனைக் கட்டுரைகளை வெளியிட்டால் பிரயோசனம் உண்டு. தமிழில் வெளிவந்து, போதிய கவனிப்புப் பெறாமல் போய்விட்ட நல்ல புத்தகங்கள் பற்றி எழுதினால் பலன் இருக்கும். தமிழ்ப் புத்தகங்கள் படைப்பாளிகள் பற்றிய அபிப்பிராயங்களையும் விமர்சனங்களையும் எழுதினால் அவை வளர்ச்சிக்கு வகை செய்யும்.

பத்திரிகையின் ஒவ்வொரு பக்கத்தையும் தரமும் நயமும் கலையும் உள்ளதாகத் தர முயல்வதே சிறு பத்திரிகை நடத்துகிறவர்களின் நோக்கமாக அமையவேண்டும்.

சும்மா பொழுதுபோக்காகவும், 'காலவகை' என்றும் பத்திரிகை நடத்த முற்படாமல், படிக்கிற ரசிகனின் பொழுதைப் பொன்னாக்கக்கூடிய– அவனுக்கு மனநிறைவும், சிந்தனைக்கு உணவும் அறிவுப் பசிக்குத் தீனியும் தரக்கூடிய ஆக்கங்களாகச் சிறு பத்திரிகைகள் விளங்க வேண்டும்.

கால ஓட்டத்தில் அடிபட்டுப் போகிற தாள்களாக இராது, காலத்தினூடு நிலைபெற்று நின்று பெயர் சொல்லக்கூடிய சாதனையாகத் திகழ வேண்டும் என்ற லட்சிய தாகத்தோடு நடத்தப்படுகிற சிறு பத்திரிகைகளே சிறப்பானவையாக அமையும். அவையே இலக்கியத்துக்கும் மொழிக்கும் நல்லது செய்யமுடியும்.

# எண்பதுகளிலும் பிறகும்

இலக்கியத்துக்கென்று தொடங்கப்படும் சிறு பத்திரிகைகள் அவ்வப் போது தோன்றிக் கொண்டுதான் இருந்தன.

கவிஞர் ஆத்மாநாம் ஆசிரியராகப் பொறுப்பேற்று நடத்திய 'ழ' என்ற இதழ் 1978 மே முதல் பிரசுரம் பெற்றது. 1983 ஜனவரியில் அதன் 24– ம் இதழ் வந்த பின் அது தேக்கமுற்றது. பிறகு 1987–ல் 'ழ' மறுமலர்ச்சி பெற்றது. கவிஞர் ஞானக்கூத்தன் அதன் ஆசிரியரானார். கவிதைகளையும், கவிதை சம்பந்தமான கட்டுரைகளையும் அது வெளியிட்டு வந்தது. 1988–ல் சில இதழ்கள் வந்தன. பின்னர் 'ழ' நின்று விட்டது.

1983 ஆகஸ்டில் பிரம்மராஜன் 'மீட்சி' மாத இதழை ஆரம்பித்தார். சர்வதேசக் கவிஞர்கள் வரலாறு, உலகக் கவிதைகள் தமிழாக்கம், திரைப்படம் பற்றிய கட்டுரைகள், இலக்கியக் கோட்பாடுகள் குறித்த விளக்கங்கள் முதலியவற்றைத் தாங்கி வந்தது அது. சில வருடங்களுக்குப் பிறகு 'மீட்சி' காலாண்டிதழாக மாற்றப்பட்டது.

'மீட்சி' காலாண்டிதழ் கனமான விஷயங்களோடும், அழகிய அட்டை அமைப்புடனும் இப்போதும் வந்து கொண்டிருக்கிறது. Non linear writting, Post Modern Literature என்று புதிய இலக்கியப் போக்குகளை அறிமுகம் செய்வதோடு, அவ்விதமான படைப்புகளைச் சோதனை ரீதியில் எழுதி வெளியிடுவதிலும் 'மீட்சி' ஆர்வம் காட்டுகிறது.

1980 களின் மத்தியில் மறுமலர்ச்சியும் வளர்ச்சியும் காட்டிய முக்கியமான பத்திரிகைகள் 'கொல்லிப்பாவை', 'ஞானரதம்' ஆகியவை.

'கொல்லிப்பாவை' அ. ராஜமார்த்தாண்டன் பொறுப்பில், மிகுந்த 'இன்னல்களுக்கும் இடையூறுகளுக்கும் இடையே' சில வருடங்கள் வளர்ந்தது. பன்னிரண்டு இதழ்களுக்குப் பிறகு அவர் அந்தக் காலாண்டிதழை நடத்தும் பொறுப்பை ஆர். கே. ராஜகோபாலனிடம் ஒப்படைத்தார். 1985 ஜூலை முதல், அதன் பதின்மூன்றாவது இதழிலிருந்து, 1988 ஜூன் வரை, இருபதாவது இதழ் முடிய 'கொல்லிப் பாவை' நல்ல இலக்கியப் பணி புரிந்தது.

சுந்தர ராமசாமியின் ஒத்துழைப்பு 'கொல்லிப்பாவை'க்கு அதிகம் கிடைத்து வந்ததை அதன் ஒவ்வொரு இதழும் எடுத்துக்காட்டியது. சுந்தர ராமசாமியின் கதை– கட்டுரைகள், பசுவய்யா கவிதைகள், மேல் நாடுகளின் கவிதை மொழிபெயர்ப்பு என்று பல வகைகளில் அது வெளிப்பட்டது.

பிறகு, 1988–ல் சுந்தர ராமசாமி காலச்சுவடு என்ற சொந்தப் பத்திரிகையைத் தொடங்கி விட்டார்.

தேவ. சித்ரபாரதி என்ற பெயர் கொண்ட அப்பாஸ் இப்ராகிம் 'ஞானரதம்' பத்திரிகையைப் பல வருடங்கள் நடத்தினார். 1986– ல் அதன் ஆசிரியப் பொறுப்பை அவர் க. நா. சுப்ரமண்யத்திடம் ஒப்படைத்தார்.

க. நா. சு. கவனிப்பில் 'ஞானரதம்' நல்ல இலக்கிய ஏடாக ஒரு வருட காலம் வெளிவந்தது. பொருளாதார நெருக்கடி காரணமாக இப்ராகிம் பத்திரிகையைத் தொடர்ந்து நடத்த விரும்பவில்லை. ஆகவே, 1987 ஜனவரி இதழ் அதன் கடைசி இதழ் ஆயிற்று.

அந்த இறுதி இதழில் க. நா. சுப்ரமண்யம் எழுதிய தலையங்கம் நினைவுகூரத்தகுந்தது. 'தமிழில் எழுத்துத் தரம் உயர' என்பது தலைப்பு. அதில் அவர் குறிப்பிட்டுள்ளார்—

"பொதுவாகத் தமிழில் படிப்பது என்பதும், சிந்திப்பது என்பதும் ஆண்டுக்காண்டு குறைகிற மாதிரி தெரிகிறது.

இலக்கியம், பொதுவாகக் கலைகள் என்பது பற்றி எந்தச் சமுதாயத்தில் சிந்தனைகள் பெருகி வளரவில்லையோ அந்தச் சமுதாயத்தில் மற்ற வளங்களும் பெருகுவதில்லை என்பது சரித்திர அனுபவம்.

சரித்திர ரீதியில் மூன்று நாலு தலைமுறைகளாகவே ஒரு கலாச்சார நசிவுக்குத் தமிழ்ச் சமுதாயம் உட்படுத்தப்பட்டு வந்திருக்கிறது. மற்ற இந்தியச் சமுதாயத்தில் ஏற்படாத இந்தக் கலாச்சார நசிவு இயக்கம் தமிழர்களிடையே இந்த நூறு ஆண்டுகளில் தன் வேலையைப் பூர்த்தி செய்துவிட்டது. இப்போது அதன் விளைவுகளை நாம் அனுபவிக்கத் தொடங்கியிருக்கிறோம்.

கலை என்றால் சினிமா, படிப்பு என்றால் குப்பைக் கூளங்களைப் படிப்பது, மனித உறவுகள் என்பது கேலிக்கிடமானவையாக நினைப்பது, எந்தச் சந்தர்ப்பத்திலும் சுயலாபம் தேடுவது, அறிவு என்றால் பதவி வகிப்பது, பதவிகள் வகித்து முடிந்ததும் இந்தப் பதவிகளினால் லாபமில்லை என்று சொல்வது போலப் பல விஷயங்களை நாம் பார்க்கிறோம்.

அறிவுத் துறைகளில் விஞ்ஞானத் துறையிலும் விமரிசனத் துறையிலும் இன்று ஏற்பட்டிருக்கிற பஞ்சம் சொல்லி முடியாது.

அறிவுப் போலிகளும் இலக்கியப் போலிகளும் கல்விப் போலிகளும் மலிந்துவிட்டதை நாம் பொருட்படுத்துவதாகத் தெரியவில்லை.

வாழ்க்கையைப் பற்றிப் புதிய பார்வை, புதிய நோக்கம் தமிழனுக்கு மிக அவசரமான தேவை. சமுதாயத்தில் தன் நிலையையும் தன்னிடம் உள்ள சமுதாய நோக்கையும் அவன் தெளிவு செய்து கொண்டு செயல்பட வேண்டிய நேரம் வந்துவிட்டது என்றுதான் தோன்றுகிறது.

இதைத் தெளிவு செய்துகொள்ள எழுத்து, கலை உபயோகப்பட வேண்டும். நல்ல எழுத்தைத் தெரிந்துகொள்ள இயலாத சமுதாயம் நசிவுப் பாதையில் காலடி எடுத்து வைத்துவிட்டது என்று நிச்சயமாகச் சொல்லலாம்."

இதை எழுதிய க. நா. சு. சிறு பத்திரிகைகள்— இலக்கியப் பத்திரிகைகள்—படிக்கிற வாசகர்களின் எண்ணிக்கை குறித்துப் பெருமைப்படலாம் என்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

"தமிழ் வாசகர்களை மட்டும் குறை கூறிப் பயனில்லை. பேராசிரியர்கள், பாப்புலர் பத்திரிகைக்காரர்கள் எல்லோரும் பொதுஜன இலக்கிய

ரசனையின்மையை வைத்து லாபம் பண்ணத் தயாராக இருக்கிறார்கள். இலக்கியப் பத்திரிகைகள் படிக்க இந்தக் கால நிலையில் 200, 300 பேர்வழிகளாவது முன்வருகிறார்களே என்று மகிழ்ச்சியடையலாம் என்று கூடத் தோன்றுகிறது.

இந்த எண்ணிக்கை அதிகரிக்க வழி என்ன என்பதுதான் எனக்கும் தெரியவில்லை'' என்றும் க. நா. சு. கூறியிருக்கிறார்.

இன்றுவரை இது யாருக்கும் தெரியவில்லைதான். இலக்கியப் பத்திரிகை நடத்துகிறவர்களுக்கும், இலக்கியத்தின் வளர்ச்சியில் நாட்டமும் ஈடுபாடும் கொள்கிற இலக்கியவாதிகள் யாருக்குமே தான்!

என்றாலும், 'தமிழ்ச் சிந்தனையை ஆழப்படுத்தும் நோக்கத்தோடும்', தமிழ் இலக்கியத்தை வளம் செய்ய வேண்டும் என்ற எண்ணத்தோடும், பொதுவாகப் புதுமைகள் பண்ணவேண்டும்– தங்கள் ஆற்றலை நிரூபிக்க வேண்டும் என்ற ஆசையோடும் அவ்வப்போது சிலர் சிறு பத்திரிகை வெளியீட்டு முயற்சியில் உற்சாகமாக ஈடுபட்டுக் கொண்டுதான் இருக்கிறார்கள்.

1980 களிலும் இந்த விதமான புதிய முயற்சிகளுக்குக் குறைவில்லை. லயம், இனி, புதுயுகம் பிறக்கிறது, மண், பாலம், எதிர்வு, பயணம், அஸ்வமேதா, நிஜம் என்று அநேகம். இவை ஒவ்வொன்றும் தனித்தன்மை காட்ட முயன்றதைப் பாராட்ட வேண்டும்.

இவையாவும் ஒரு சில இதழ்களே பிரசுரம் பெறும் வாய்ப்பினையே பெற்றிருந்தன. நம்பிக்கையையும் எதிர்பார்ப்பையும் விதைத்தபடி வெளிவந்த இச் சிற்றிதழ்கள் தங்களால் இயன்ற அளவு ஒளிவீச முயன்றுள்ளன என்பது பெருமைக்குரிய விஷயம்தான்.

இப்படிப்பட்ட ஒரு சூழ்நிலையிலும் கால நிலையாலும்தான் சுந்தர ராமசாமி 'காலச்சுவடு' என்ற காலாண்டிதழை ஆரம்பித்தார், 1988 ஜனவரியில், 'கனவுகளும் காரியங்களும்' நிறைந்த உள்ளத்தோடு, 'தமிழ்ச் சிந்தனையை ஆழப்படுத்தும் நோக்கத்தை முதன்மையாகக் கொண்டு', படைப்பு, சமூக விமர்சனம், சரித்திரம், தத்துவம், கலைகள் ஆகிய துறைகளைச் சார்ந்த எழுத்துக்களை இயன்றவரை தரமாகத் தர முயலும் என்ற அறிவிப்புடன் 'காலச்சுவடு' தோன்றியது.

'காலச்சுவடு' இதழ் ஒவ்வொன்றும் ஒரு சிறப்பிதழே என்று கருதப்பட வேண்டிய விதத்தில் அமைந்திருந்தது. தோற்றத்திலும் உள்ளடக்கத்திலும் அது தனித்தன்மை காட்டியது. 1989 இறுதியில் அதன் எட்டாவது இதழ் பிரசுரமாயிற்று.

கவனிப்புக்கு உரிய மற்றொரு பத்திரிகை 'முன்றில்'. க. நா. சுப்ரமண்யத்தைச் சிறப்பாசிரியராகக் கொண்டு 1988 செப்டம்பரில், மாதப் பத்திரிகையாக 'முன்றில்' பிறந்தது. க. நா. சு. எழுத்துக்களை அதிகம் பிரசுரித்து வந்தது. 1988 டிசம்பர் மாதம் 'க. நா. சு. நினைவு மலர்' வெளியிட நேரிட்டது.

'முன்றில்' கால ஒழுங்கைக் கடைப்பிடிக்க முடியாத நிலையும் வந்தது. இருப்பினும் ஒவ்வொரு இதழும் தரமான தயாரிப்பாக, இரு

மாதம் ஒருமுறை வெளியீடெனா, அது வந்துகொண்டிருந்தது. அதன் எட்டாவது இதழிலிருந்து அசோகமித்திரன் சிறப்பாசிரியரானார்.

'முன்றில்' ஒன்பதாவது இதழ் ஆண்டுமலர் ஆகப் பிரசுரமாயிற்று. 1989 நவம்பர்–டிசம்பர் இதழ் அது. 1990–ல் மூன்று இதழ்களைக் கொண்டு வந்தது 'முன்றில்'. சிறுகதை, கவிதை படைப்பிலக்கியத்துக்கு 'முன்றில்' நன்கு பணியாற்றியுள்ளது.

1987–ல் பிறந்து, நல்லமுறையில் வளர்ந்து, இப்பவும் வந்து கொண்டிருக்கிற இலக்கியச் சிற்றேடு **'கனவு'**. சுப்ரபாரதி மணியன் செகந்திராபாத்திலிருந்து இக் காலாண்டிதழை நடத்தி வருகிறார். ஒவ்வொரு ஆண்டின் முடிவிலும், பாராட்டப்பட வேண்டிய விதத்தில் 'கனவு' ஆண்டு மலர் வெளியிடப்படுகிறது. சிறுகதை மலர், மலையாளக் கவிதைகள் சிறப்பிதழ், கட்டுரைச் சிறப்பிதழ் என்றெல்லாம் 'கனவு' இதழ்கள் மலர்ச்சி பெற்றுள்ளன. படைப்பிலக்கியத்துக்கு 'கனவு' நல்ல தொண் டாற்றிக் கொண்டிருக்கிறது.

சிரத்தையோடு தனது ஒவ்வொரு இதழையும் ஒரு சிறப்பிதழாக உருவாக்கி வருவது, கோணங்கி என்ற படைப்பாளியை ஆசிரியராகக் கொண்டுள்ள **'கல்குதிரை'**. கோணங்கி திறமை உள்ள படைப்பாளி. புதுமைகள் செய்வதில் ஆர்வம் உடையவர். அவரது 'கல்குதிரை' தனித் தன்மை கொண்ட பத்திரிகையாக வந்து கொண்டிருக்கிறது.

சிறப்பிதழ்கள் தயாரிப்பதில் கோணங்கி ஒரு ஒழுங்குமுறையை அனுஷ்டிப்பதாகத் தெரியவில்லை. இந்தி எழுத்தாளர் அக்ஞேயா பற்றி ஒரு சிறப்பிதழ் வெளியிட்டார். அடுத்து, அரவிந்தரின் 'சாவித்திரி' காவியம் பற்றியும், தமிழ்நாட்டுச் சித்தர்கள் இயல்பு பற்றியும் ஒரு சிறப்பிதழ். அப்புறம் டாஸ்டயேவ்ஸ்கி பற்றிய மாபெரும் சிறப்பிதழ். இந்தப் போக்கு எப்படி இருந்தாலும், 'கல்குதிரை' ஒரு சிறப்பான சிற்றிதழாக வந்து கொண்டிருப்பது மகிழ்ச்சிக்கு உரிய விஷயம்தான்.

விசேஷமான தனித்தன்மை கொண்ட இன்னொரு சிற்றிதழ், கோயமுத்தூரிலிருந்து வெளிவரும் **'நிகழ்'**. ஆழ்ந்த சிந்தனை, தீர்க்கமான ஆய்வு, தெளிவான அபிப்பிராயங்கள், புத்தக, விமர்சனம், சமுதாய மேம்பாடு குறித்த தத்துவச் சிந்தனைகள் 'நிகழ்' பத்திரிகையில் இடம் பெறுகின்றன. கோவை ஞானியின் ஆழ்ந்த சிந்தனைத் திறமும், பரந்த கல்வி அறிவும் 'நிகழ்' உள்ளடக்கத்துக்குக் கனம் சேர்க்கின்றன.

சென்னையிலிருந்து பிரசுரமாகும் **'விருட்சம்'** தரமான இலக்கிய ஏடு ஆக வளர்ந்து வருகிறது. 1988 பிற்பகுதியில் தோன்றிய இக் காலாண்டு ஏடு அழகியசிங்கர் என்ற படைப்பாளியை ஆசிரியராகக் கொண்டிருக்கிறது. கவிதை வளத்துக்குக் கணிசமான பங்கு செலுத்தி வருகிறது 'விருட்சம்'.

புதுக் கவிதையில் புதுமைகள் பண்ணுவதில் ஆர்வம் காட்டிய 'கிரணம்' காலாண்டிதழும் குறிப்பிடத்தகுந்த இலக்கியப் பத்திரிகை ஆகும்.

எழுபதுகளில் பேராசிரியர் நா. வானமாமலை **'ஆராய்ச்சி'** என்ற காலாண்டிதழை நடத்திவந்தார். பல்கலைக்கழக ஆய்வுகள் தன்மையில்

தமிழ் நாவல்களையும், சமூக– பொருளாதாரப் பிரச்னைகளையும் மார்க்ஸியக் கண்ணோட்டத்துடன் ஆய்வு செய்யும் கட்டுரைகளை 'ஆராய்ச்சி' வெளியிட்டது. நா. வா. இறந்த பிறகு தேங்கி நின்ற 'ஆராய்ச்சி' இதழ், எண்பதுகளில் நா. வா. ஆராய்ச்சிக் குழுவினரால் மீண்டும் கொண்டுவரப்பட்டது. இ த ழி ன் பெயரை அவர்கள் 'நா. வா. வின் ஆராய்ச்சி' என்று மாற்றிக்கொண்டார்கள். இக் காலாண்டிதழ், தரமான விஷயங்களைத் தாங்கி இப்பவும் வந்துகொண்டிருக்கிறது.

மார்க்ஸியப் பார்வையுடன் சோஷயலிஸ்ட் ரியலிச இலக்கியம் படைக்க முயல்கிற முற்போக்கு எழுத்தாளர்களை ஊக்குவித்து, முற்போக்கு இலக்கியப் பணிபுரிகிற 'தாமரை', 'செம்மலர்' பத்திரிகைகள் தங்கள் பணியை வெற்றிகரமாகச் செய்து கொண்டிருக்கின்றன.

அவை காட்டிய வழியில் தோன்றிய பத்திரிகைகளில், 'புதிய பாசறை' குறிப்பிடத் தகுந்தது. கவிஞர் பாரதிவிஜயன் ஆசிரியர். காஞ்சிபுரத்திலிருந்து வெளிவந்த இந்த இதழ் நல்ல கதைகளையும் சிந்தனைக் கட்டுரைகளையும் பிரசுரித்துள்ளது.

முற்போக்கு அம்சங்களுடன் தீவிரமாகச் செயல்படுகிற மனஓசை, புதிய கலாசாரம், கேடயம் போன்ற பத்திரிகைகளும் வளர்ச்சிப் பாதையில் நடைபோடுகின்றன.

இலக்கிய வளத்துக்கும் படைப்பாளிகளின் வளர்ச்சிக்கும் பெரிதும் துணைபுரிந்துள்ள 'தீபம்' பத்திரிகை அதன் இருபத்து மூன்றாவது ஆண்டில் நின்றுவிட நேரிட்டது. மிகுந்த சிரமத்தோடு வளர்ந்து வந்த 'தீபம்', ஆசிரியர் நா. பார்த்தசாரதி திடீர் மரணம் அடைந்ததும், 1987–ல் ஒன்றிரண்டு இதழ்கள் வெளியிட்ட பிறகு, ஒடுங்கி விட்டது

மற்றொரு இ ல க் கி ய இதழான 'கணையாழி' வெள்ளிவிழா ஆண்டைக் கொண்டாடி வருகிறது. சமீபத்தில் அது உருவ மாற்றம் பெற்று, இலக்கிய வளர்ச்சிக்கு நன்கு பணிபுரிகிறது.

எண்பதுகளில் நின்றும் தோன்றியும், சிரமங்களுடன் வெளிவந்த– லட்சிய நோக்குடன் நடத்தப்பட்ட–பத்திரிகைகளில் 'புதிய நம்பிக்கை' யும் ஒன்று. பொன்விஜயன் ஆசிரியராக இருந்து நடத்தும் இந்த இதழ் 90 களில் புதிய உருவ அமைப்பும் புதிய வேகமும் பெற்று வெளிவருகிறது.

நாடகத்துக்கென்று கவிஞர் புவியரசு நடத்திய 'காற்று' எண்பதுகளின் பிற்பகுதியில் மீண்டும் புதிய உற்சாகத்துடன் தோன்றியது. நாடகக் கலை பற்றிய கட்டுரைகள், புதிய நாடகங்களை வெளியிட்டது. இம்முறையும் அது நீடித்து வளர முடியவில்லை.

ரெங்கராஜன் நாடகத்துக்கென்றே தனிப் பத்திரிகையாக 'வெளி' என்ற காலாண்டிதழை நடத்துகிறார். சென்னையிலிருந்து வெளிவரும் இந்த இதழ் சிறப்பாக விளங்குகிறது.

கவிஞர் மீரா சிவகங்கையில் 'கவி' என்ற காலாண்டிதழை ஆரம்பித்திருக்கிறார். கவிதைகள், கவிதை நூல்களின் விமர்சனம், கவிதை பற்றிய கட்டுரைகளோடு வெளிவரும் நல்ல பத்திரிகை இது.

புதுக்கோட்டையில் 'ஒ ரு' என்ற சிற்றிதழ் தோன்றி, நான்கு

இதழ்களை வெளியிட்டுள்ளது. இலக்கியத்தரமான விஷயங்களை சேகரித்து வெளியிட முயல்கிறது அது.

பாளையங்கோட்டையில், பல்கலைக்கழக ஆய்வு ரீதியான விஷயங்களுக்காகவே 'மேலும்' என்ற பத்திரிகை பேராசிரியர்களால் நடத்தப்படுகிறது.

பேராசிரியர்– முனைவர் சாலை இளந்திரையன்–சாலினி, தமிழகத்தில் அறிவு விழிப்பு ஏற்படுத்தவும், பகுத்தறிவுச் சிந்தனைகளைப் பரப்பவும் '**மனித வீறு**' என்ற இதழை, 1987 செப்டம்பர் முதல் ஓராண்டுக் காலம் வெளியிட்டனர். ஆழமும் கனமும் நிறைந்த விஷயங்களைக் கொண்டிருந்தது இதழ்.

ஐந்திணைப் பதிப்பகம், ஐந்திணை வாசகர் பேரவை சார்பில், 'ஐந்திணை ஆய்விதழ்' என்ற காலாண்டிதழை வெளியிடுகிறது. தமிழ் இலக்கணம், இலக்கியம், மொழியியல், நுண்கலைகள் சார்ந்த கட்டுரைகள், நூல் மதிப்புரைகள், குழந்தை இலக்கியம், அறிவியல்—சமூகம்—பொருளாதாரம்—வரலாறு—தத்துவம் முதலியன சம்பந்தப்பட்ட கட்டுரைகள், புதிய வெளியீடுகள் பற்றிய தகவல்கள் இவ்விதழில் இடம் பெறுகின்றன.

இலக்கிய நோக்குடன், கனமான விஷயங்களையும் ஆழ்ந்த சிந்தனைகளையும் நாடுகின்ற உள்ளத்தோடு, வலிந்து சிரமங்களையும் சோதனைகளையும் எதிர்கொள்ளச் சித்தமாக இருப்பவர்கள் இப்பவும் உள்ளனர் என்பது மகிழ்ச்சி தரும் விஷயம் ஆகும்.

'சிறு பத்திரிகைகள் குடிசைத் தொழில் போன்றவை' என்று தி. ஜ. ரங்கநாதன் (தி. ஜ. ர. ) ஒரு கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார். குடிசைத் தொழில் முயற்சிகள் போல் பலப்பல சிற்றேடுகள் தமிழ்நாட்டில் வெளி வந்து கொண்டிருக்கின்றன.

முகம், நண்பர் வட்டம், தாராமதி, சுகன் போன்ற சிற்றிதழ்களை இவ்வகையில் குறிப்பிடலாம். சமூகம், அரசியல், மொழி மற்றும் தனி மனிதப் பிரச்னைகள் சம்பந்தமான கூரிய சிந்தனைகளைக் கட்டுரைகளாகவும், கவிதை வடிவத்திலும் இவை பிரசுரிக்கின்றன.

'முகம்', மாமணி என்ற எழுத்தாளரின் எழுத்தாற்றலையும் உழைப்புத் திறனையும் வெளிப்படுத்துகிறது. 'தாராமதி' குன்றம் மு. இராமரத்நம் என்ற எழுத்தாளரின் சிந்தனை ஆற்றலையும் தனித்த பார்வையையும் எடுத்துக்காட்டுகிறது.

சிறு பத்திரிகைகளின் வளர்ச்சியையும் நலன்களையும் கருத்தில் கொண்டு, அவற்றின் பிரச்னைகளை ஆராய்ந்து தீர்வு காண்பதற்கு உதவியாக அமைப்பு ரீதியில் ஏதேனும் செய்யவேண்டும் என்ற எண்ணம் சிறு பத்திரிகை நடத்துகிறவர்களுக்கு அவ்வப்போது ஏற்பட்டு வருகிறது.

இந்த நோக்கத்துடன், கோவை 'தாராமதி' ஆசிரியர் குன்றம் மு. இராமரத்நத்தைத் தலைவராகக்கொண்டு 'TASNA' —தாஸ்னா—என்ற அமைப்பு துவக்கப்பட்டு, மூன்று வருடங்களாகச் செயல்படுகிறது. 'தமிழ் நாடு ஸ்மால் நியூஸ்பேப்பர்ஸ் அசோஸியேஷன்' என்ற அவ் அமைப்பு பலம் பொருந்தியதாக வளரவில்லை இன்னும்.

இதுபோன்ற ஒன்றிரு முயற்சிகள் சென்னையிலும் திட்டமிடப்பட்டன. அவையும் சரியாக உருவாகவில்லை.

# 1980களில் சிற்றிதழ்கள்

தமிழ்ச் சிற்றிதழ்களின் வரலாறு சுவாரசியமானது பல உண்மை களை வெளிப்படுத்தக்கூடியது. இலட்சிய நோக்குடைய ஒரு சிலருடைய விடாப்பிடியான முயற்சிகளையும், மனப்போராட்டங்களையும், அவர்கள் ஏற்றுக் கொண்ட சிரமங்களையும் எடுத்துக்காட்டுவது அது. அதேசமயம், அவர்களுடைய தோல்விகளையும் ( தோல்வி என்ற சொல் சரியில்லை என்று தோன்றினால், செயல் முடக்கம் அல்லது செயலற்ற தன்மை என்று சொல்லலாம் ), இவ்வரலாறு பளிச்செனப் புலப்படுத்துகிறது.

சிறுபத்திரிகைகளின் வரலாறு முழுவதும், உற்சாகமான பத்திரிகை எழுச்சிகளையும், அவற்றின் 'சென்று தேய்தல்'களையும், முடிவில் உரிய மரியாதை பெறாது, நேரிய புகழ் பாடப்பெறாது, நினைவுகூர யாருமின்றி– Unhonoured, unsung and unwept–என்ற தன்மையில் அவை கவனிப் பற்று மறைந்துபோக நேர்வதையும் கொண்டிருக்கிறது.

1970களில் இலக்கிய உணர்வோடும், இலட்சிய நோக்கத்துடனும் சிற்றிதழ்கள் அதிகமாகவே தோன்றின. அவற்றில் ஒருசிலவே 1980களி லும் தொடர்ந்து வாழும் வாய்ப்பைப் பெற்றிருந்தன.

1970களின் பிற்பகுதியில், சிற்றிதழ்கள் இலக்கியத்தில் மட்டும் கவனம் செலுத்துவதோடு நின்றுவிடாது. கலை, கலாச்சாரம், சமூகவியல், அரசியல், தத்துவம் முதலிய பல்வேறு விஷயங்களிலும் அக்கறை காட்ட வேண்டியது அவசியமாகும் என்ற உணர்வு தீவிரம் பெற்றிருந்தது. சில பத்திரிகைகள், சாதி– சமய– இனப் பிரச்சினைகளிலும் மும்முரமான ஈடுபாடு காட்டலாயின.

வற்றா இருப்பு– புதுப்பட்டி என்ற ஊரில் 1976–ல் ஆரம்பிக்கப்பட்ட 'இலக்கிய வெளிவட்டம்', இவ்வகையில் முன்னின்றது. 1980களில், சர்ச்சைக்குரிய சூடான கட்டுரைகளை அது பிரசுரித்தது. 1 983–ல் இலங்கையில் நிகழ்ந்த இனப்படுகொலை பற்றி அதிகக் கவலையும் தீவிர அக்கறையும் காட்டியது. தமிழகத்தின் தென்மாவட்டங்களில் உள்ள சிறுபத்திரிகைச் சூழல் சேர்ந்தவர்கள் மற்றும் கலாச்சார அமைப்பு கள் இணைந்த கருத்தரங்கம் ஒன்றை 1983 ஆகஸ்டில், மதுரையில், 'இலக்கிய வெளிவட்டம்' ஏற்பாடு செய்தது. சுயேச்சை எழுத்தாளர்கள்

பலர் அதில் கலந்து கொண்டனர். அப்போது வெளியிடப்பட்ட கருத்துகள், தீர்மானங்கள் அனைத்தையும் தொகுத்து, 'இலக்கிய வெளிவட்டம்' ஒரு சிறப்பிதழ் வெளியிட்டது. இலங்கைத் தமிழர் பிரச்சினைகளையும் போராட்ட அனுபவங்களையும் தமிழ் நாட்டினருக்கு உணர்த்தும் நோக்குடன் அது தயாரிக்கப்பட்டிருந்தது. அந்தச் சிறப்பிதழுக்குப் பிறகு, அச் சிற்றிதழ் தொடர்ந்து நெடுநாள் வாழமுடியாமல் ஆகிவிட்டது.

"'படித்தல்' என்பது உண்மையைத் தேடுவது; அந்தத் தேடல் சுலப மற்றதும் முடிவற்றதும் ஆகும்" என்று அறிவித்தபடி, 'மானுடம்' எனும் இருமாதம் ஒருமுறைச் சிற்றேடு, திருச்சியிலிருந்து 1979 முதல் வெளி வந்தது. தரமான படைப்புகள்— சமூக விழிப்புணர்வு, சமுதாய மாற்றத்திற் கான உந்துதல்கள்— இவற்றில் நம்பிக்கை கொண்டு செயற்படுபவர்களிட மிருந்து வந்தாலும், அத்தகைய நோக்கங்களை மறைமுகமாகக் கொண்டு கலை— இலக்கியம் மூலமாய் வாழ்வின் தீவிரத்தை உணர்த்துவோ ரிடமிருந்து வந்தாலும், அவைகளின் இலக்கியத் தரத்தையே பெரிதாக மதித்து வரவேற்று வெளியிட்டது, 'மானுடம்'. படைப்பிலக்கியத்துடன் இலக்கிய விமரிசனம், நவீனத் திரைப்படம், ஓவியம் பற்றிய கட்டுரைகள், அரசியல் விமரிசனங்கள் ஆகியவற்றையும் அது பிரசுரித்தது; வீதி நாடகங்கள் மீதும் ஆர்வம் கொண்டிருந்தது.

1981முதல் 'மானுடம்', தன்னை, நவீன இலக்கியத்தின் குரல்' என அறிவித்துக்கொண்டது. படைப்பிலக்கியத்துடன், சமூகவியல், காலச்சாரம், மற்றும் சார்புடைய துறைகள் பற்றிய விமரிசனக் கட்டுரைகளை வெளி யிடுவதில் உற்சாகம் காட்டியது. 1983 ஜனவரியில் வெளிவந்த 'மானுடம்' 10ஆவது இதழ் விசேஷமான சிறப்பிதழ் ஆகும்.

1982 அக்டோபரில், திருச்சியில், 'இலக்கிய— கலாச்சார இயக்கத்தின்' திருச்சிக் குழு, 'சினிமாவும் நமது கலாச்சாரமும்' பற்றி இருநாள் கருத்தரங்கு நடத்தியது. அங்குப் படிக்கப்பட்ட கட்டுரைகளைத் தொகுத்து விசேஷ வெளியீடாகப் பிரசுரித்தது, 'மானுடம்'.

கவனிப்புக்குரிய சிற்றிதழாக வளர்ந்துவந்த 'மானுடம்', அதன்பிறகு பிரசுரம் பெறுவதற்கான வசதிகளைப் பெறாது நின்றுபோயிற்று.

1983—ஆம் வருடம், தரமான அநேக சிற்றிதழ்களின் இறுதி ஆண்டாக அமைந்திருந்தது என்று சொன்னால் அதில் தவறில்லை.

மதுரை இலக்கிய வட்டம் சார்பில் வந்து கொண்டிருந்த 'விழிகள்', அந்த ஆண்டின் 'பாடுவாசியான' மற்றொரு இதழ் ஆகும். கிண்டல் தொனியிலும், காரசாரமான செய்திகளை வெளியிட்டுவந்த இதழ் அது.

'ரிப்போர்ட்டு', 'மியாவ்' என்னும் தலைப்புகளில் பல தகவல்களையும், விறு விறுப்பான அபிப்பிராயங்களையும், சூடான எண்ணங்கயையும் 'விழிகள்' தந்து கொண்டிருந்தது. சோதனை ரீதியிலான சிறுகதைகளையும் புதுக் கவிதைகளையும் அது வெளியிட்டது. கவி பாரதியார் நூற்றாண்டுச் சமயத்தில், 1983 ஜனவரி இதழைப் 'பாரதி மலர்' என்று பிரசுரித்தது. 'விழிகள்', தெருக்கூத்து, பகல்வேஷம் ஆகிய மக்கள் கலைகளின் ஆய்வு தொடர்பான கட்டுரைகளையும் வெளியிட்டுள்ளது.

கவிஞர் ஆத்மாநாம் ஆசிரியராக இருந்து நடத்திய 'ழ' இதழும், 1983 ஜனவரியுடன் முடிந்துபோயிற்று. 1978 மே முதல் பிரசுரம்பெற்று வந்த 'ழ', அதன் 24ஆம் இதழை, 1983 ஜனவரியில் வெளியிட்டது; அவ்வளவுதான்.

பின்னர் 1987–ல், 'ழ' மறுமலர்ச்சி பெற்றது. கவிஞர் ஞானக்கூத்தன், அதன் ஆசிரியரானார். அந்த வருடமும் 1988லும், 'ழ'வின் சில இதழ்கள் வந்தன; நீடித்து வளர முடியவில்லை, அதனால்.

1981 மார்ச்சு மாதம், கவிஞர் ஞானக்கூத்தன், 'கவனம்' என்று இதழைத் தொடங்கினார். 1982 மார்ச்சில், அதன் ஏழாவது இதழ் வந்தது; அதனுடன் 'கவனம்' நின்றுவிட்டது.

'கவனம்' வலியுறுத்திய ஒரு கருத்து முக்கியமானது:

"இலக்கியப் பத்திரிகைகளை வாசிப்பது மட்டுமின்றி, அவற்றில் பிரசுரமாகும் படைப்புகளைக் குழுவாக விவாதித்து விமரிசனம் செய்வது, அதன் ஆசிரியர்களை நேரடியாகச் சந்திக்கச் செய்து விவரங்களில் தெளிவு காணுவது போன்றவை மிகவும் பயனுள்ளவையாகத் தோன்று கிறது. இது இன்றைய இலக்கிய அமைப்புகள் தொடர்ந்து செயல்படும் போது சரியாகவே தெரிய வருகிறது எனலாம். இலக்கியப் பத்திரிகைக ளின் பணிகளுக்குத் தொடர்ச்சியான அடுத்த கட்ட முக்கியப் பணியாக இதைக் கருதவும் முடியும்போது, இலக்கிய அமைப்புகளின் முக்கியம் இன்னும் கூடிப்போகிறது."

பூம்புகார்– மேலையூரில், 1980–ல் தோன்றிய 'முழக்கம்', திருநெல் வேலி மாவட்டத்தில் 1978–ல் தொடங்கப்பெற்ற 'தேடல்', பண்ணை மூன்றடைப்பு எனும் இடத்திலிருந்து 1978முதல் வந்துகொண்டிருந்த 'யாத்ரா' ஆகியனவும், 1983–ல், தங்கள் முடிவை அடைந்துள்ளன.

'யாத்ரா', தனது 27ஆவது இதழில் சிறுபத்திரிகையாளர்களின் கவனத்துக்குக் கொண்டு வந்த ஒரு கருத்து முக்கியமானது; இன்றைக் கும் பொருந்திவரக்கூடியது.

'யாத்திரா'வின் அறிவிப்பு இது:

"தற்போதைய தமிழ்ச் சூழலில், ஒரு கலாச்சார விழிப்புணர்வுக்குச் சிறுபத்திரிகை இயக்கம் எந்த அளவு தேவை என்பதைக் கருத்தில் கொண்டே, நாங்கள், பலவித சிரமங்களுக்கிடையிலும் 'யாத்ராவை' நடத்துவதில் ஒரு விடாப்பிடியான தீவிரத்தைக் கொண்டிருக்கிறோம். இதில், எங்களுடைய தீவிரம்மட்டும் போதாது; இவ்வியக்கத்தில் பங்கு கொள்ளும் உங்களிடமிருந்தும் ஒரு பொறுப்புணர்வின் ஒரு அம்சம், யாத்ராவிற்கு சந்தா அனுப்புவதும் ஆகும். ஒரு சிறுபத்திரிகையை நடத்தும் சிரமத்தை ஒருசிலர்மட்டுமே தாங்கக்கூடுமா என்பதை நீங்கள் நினைத்துப் பார்க்க வேண்டும். இன்றைய சூழலில், சிறு பத்திரிகை ஒன்றோடு சம்பந்தம் கொள்வது என்பது, வெறுமனே அதனை வாசிப்ப தோடு மட்டும் நின்றுவிடக் கூடாது. அப் பத்திரிகை தொடர்ந்து வெளிவரத் தங்களால் ஆன உதவிகளையும் செய்யக்கூடிய பொறுப் புணர்வு நமக்கு வேண்டும் என நாங்கள் நினைக்கிறோம்.

"இந்தச் சமயத்தில், இன்னொரு விஷயத்தையும் சொல்ல வேண்டும். சிறுபத்திரிகை இயக்கம் வெறுமனே எழுத்து, இலக்கியம் என்றில்லாமல், தன்னுடைய இயக்கக் களனை மற்றக் கலாச்சாரங்களுக்கும் விரித்து ஒரு சமூக அக்கறையுடன் செயல்பட்டுவரும் சமயத்தில், இத்துறை சம்பந்தப்பட்டவர்கள், சிறு பத்திரிகைகளிடம் காட்டும் அலட்சியம் எங்களுக்கு மிகுந்த வேதனையை அளிக்கிறது. அதேசமயத்தில், இக் கலாச்சாரத் துறைகளின் பாதிப்பினால் விழிப்புணர்வு பெற்ற பலர் சிறு பத்திரிகையின் இயக்கத்தின் அவசியத்தை உணர்ந்து, இதனோடு தங்களை இணைத்துக்கொள்ள முன்வருவது எங்கள் அனுபவத்தில் நாங்கள் கண்ட உண்மை; எங்களுக்கு மிகுந்த ஆறுதல் அளிக்கும் விஷயமும் கூட.

"மிகுந்த ஒருங்கிணைப்புடன் செயல்பட வேண்டிய சூழல் இது. ஒரு கலாச்சாரத் துறையில் ஏற்படும் வளர்ச்சி என்பது ஒரு பொறியாக மாறி, மற்றக் கலாச்சாரத் துறைகளையும் பாதிக்க வேண்டும்; அதற்கான சூழல் உருவாக வேண்டும் என்று நாங்கள் விரும்புகிறோம். . . இன்றைய சிறுபத்திரிகை இயக்கங்கள் விரிந்து, மற்றக் கலாச்சாரத் துறைகளோடு சம்பந்தம் கொண்ட ஒன்றாகி விட்டது. இந் நிலையில், அனைவரும் பங்கு கொண்டு பேணிப் பாது காக்க வேண்டிய ஒரு இயக்கம் சிறு பத்திரிகை இயக்கம் என்பதை நாம் உணரவேண்டும்."

இவ்வாறு 'யாத்ரா', தனது கருத்தை வெளியிட்டது. இத்தகைய வலுவான சிந்தனைகளை 'யாத்ரா' வளர்த்தபோதிலும், அந்தக்

காலாண்டிதழ் காலம் தவறாது வெளிவர இயலவில்லை. 1980லும் ஒருசில இதழ்களையே அது வெளியிட முடிந்தது. 1983–ல், 44–45–46 என்ற எண்கள் இட்ட ஒரு இதழைத் தயாரித்து விட்டுத் தனது இயக்கத்தை அது நிறுத்திக்கொண்டது.

1970களில் உற்சாகமாக இலக்கியம் வளர்க்க முயன்ற நாகர்கோவில் 'சதங்கை', கோயம்புத்தூர் 'வானம்பாடி', உதகமண்டலம் 'ஸ்வரம்' ஆகியனவும் நீடித்து வாழமுடியாமல், 1980களின் முற்பகுதியில் மறைந்து போயின.

1983–ல், தனது 16ஆவது இதழைக் கடைசி இதழாகக் கொண்டு முடிவுற்ற 'ஸ்வரம்' சிற்றிதழின் வளர்ச்சி சுவாரசியமானதாகும். இலக்கிய ஆர்வம் கொண்ட ஒரு மாணவர், 'ஸ்வரம்' முதலாவது இதழை 'இண லண்ட் லெட்டர்' தாளில் அச்சிட்டு அனுப்பினார். தொடர்ந்து இதழுக்கு இதழ் வெவ்வேறு வடிவம் கொண்டு வெளிவந்த 'ஸ்வரம்', 8ஆவது இதழ் முதல் ( 1982 செப்டம்பரில்), புதிய வடிவமும் உள்ளடக்க மாற்றமும் பெற்றது. பிரம்மராஜன், அதன் சிறப்பாசிரியரானார். ஐரோப்பியக் கவிஞர் அறிமுகம், சர்வதேசக் கவிதைகள் மொழிபெயர்ப்பு எல்லாம் அதில் இடம் பெறலாயின. அட்டையும், நவீன ஓவியத்துடன், வசிகரத் தோற்றம் பெற்றது. ஆயினும், 16 இதழ்களுக்குமேல் 'ஸ்வரம்' வளரவில்லை.

அதன் தொடர்ச்சி போல, 1983 ஆகஸ்டில், பிரம்மராஜன், சொந்தமாக 'மீட்சி' மாத இதழை ஆரம்பித்தார். சர்வதேசக் கவிஞர்கள் வரலாறு, உலகக் கவிதைகள் தமிழாக்கம், திரைப்படம் பற்றிய கட்டுரைகள், இலக்கியக் கோட்பாடுகள் குறித்த விளக்கங்கள் முதலியவற்றைத் தாங்கி வந்தது, 'மீட்சி'. சில வருடங்களுக்குப் பிறகு, பிரம்மராஜன், 'மீட்சி'யை காலாண்டிதழாக மாற்றிவிட்டார்.

'மீட்சி' காலாண்டிதழ், கனமான விஷயங்களோடும், அழகிய அட்டையமைப்புடனும் தொடர்ந்து வந்தது. Nonlinear எழுத்துகள், 'போஸ்ட் மாடர்ன் லிட்டரேச்சர்' என்று புதிய இலக்கியப் போக்குகளை அறிமுகம் செய்து, அவ்விதமான படைப்புகளைச் சோதனை ரீதியில் எழுதி வெளியிடுவதிலும் 'மீட்சி' ஆர்வம் காட்டியது.

தரமான முறையில் சிறபத்திரிகை நடத்துவதில் அக்கறை கொண்டிருந்தவர்கள், இலக்கியச்சூழல், வாசகர் மனநிலை, நாட்டின் நிலை பற்றியெல்லாம் சிந்தனை வளர்த்துக் கவலையோடு அபிப்பிராயங்கள் தெரிவிக்கத் தவறியதில்லை. தனியான குணங்களைக் கொண்ட முறையில், பெங்களூரிலிருந்து வெளிவந்த 'படிகள்' என்ற காலாண்டு ஏடு, அவ்வப்போது ஆழ்ந்த சிந்தனைகளை ஒலிபரப்பியது.

"சிறுபத்திரிகை என்பது இன்று தனக்கானதொரு தத்துவத்தையும் இலக்கணத்தையும் உருவாக்கிக் கொண்டுள்ளது. பல்லாயிரக் கணக்கான சாதாரன வாசகப் பெருமக்களினின்றும் வேறுபட்டிருப்பதுமட்டுமேயன்றிப் பல இடர்ப்பாடுகளுக்கிடையிலும் தங்களுக்கான மதிப்புகளை (values)த் தேடுவதிலும் தமிழர்களில் ஒரு சிலரேனும் மாறுபட்டிருக்கிறார்கள் என்பதைச் சிறுபத்திரிகைகள் ஓர் இயக்கமாக இயங்குவதிலிருந்து தெரிந்து கொள்ள முடிகிறது. இது தமிழுக்கு மட்டுமே உரிய நிகழ்வு" என்று கணித்த 'படிகள்', சிறுபத்திரிகைகள் பற்றிய தனது 'திடமான கொள்கைகளையும்'யும் அறிவித்தது. அது பின்வருமாறு:

"சிறுபத்திரிகைகளை, முதலில், இரண்டாகப் பிரிக்க வேண்டும். வெறும் இலக்கியம் பற்றிப் பேசும் கொல்லிப் பாவை, யாத்ரா, சுவடு, வைகை, சாதனா போன்றவை ஒருபுறம்; விழிகள், பரிமாணம், இலக்கிய வெளிவட்டம், பிரக்ஞை போன்ற, கட்சிக்குட்படாத, இடதுசாரிப் பண்புடன் வரும் சிறுபத்திரிகைகள் மற்றொரு புறம். (கட்சிப் பார்வை கொண்ட பத்திரிகைகளை இங்கே விட்டுவிடுகிறோம்; வேறுசில பத்திரிகைகளின் நிலைப்பாடு தெளிவாகவில்லை என்பதால், அவையும் இங்கே சேர்க்கப்படவில்லை.)

இவ்விரு வகைச் சிறுபத்திரிகைகளையும் முக்கியமானவைகளாகக் காண்கிறோம்.

வெறும் இலக்கியச் சிறுபத்திரிகைகள், மிகுந்த ஜனரஞ்சகத்திற்கு எப்படியும் எதிர்ப்பானவைதாம். கசடதபற, எழுத்து, நடை போன்ற இலக்கியப் பத்திரிகைகளின் சாதனை மறக்கக்கூடியதல்ல. குங்குமம், குமுதம், ராணி வகைகளால் நாநயமான தமிழின் மரபைச் சாகக்கொடுத்துள்ளோம்; அதுபோல் நகரக் கலாச்சாரங்களும் அழிகின்றன. இலக்கியப் பத்திரிகைகள் என்று கூறிக்கொள்பவை கலாச்சாரத்தின் ஓர் அங்கமான இலக்கியத்தைமட்டும் கவனிக்கின்றன; அல்லது சினிமா, நாடகம்மட்டும் கவனிக்கப்படுகிறது. இப்பத்திரிகைகள் தங்களை உயர்த்திக் கலாச்சார இதழ்களாய் மாற்றிக்கொள்ளாதபடி, அவற்றின் குறுகிய இலக்கிய அறிவும், பரந்த பார்வையின்மையும் செல்கின்றன. என்றாலும், தங்களின் அஞ்ஞானத்தையும் மீறி, இந்த இலக்கியப் பத்திரிகைகள், வியாபார இலக்கியத்தையும் அவற்றின் நடைமுறைகளையும் எதிர்ப்பதால், அவற்றிலும் ஓரளவு இடதுசாரித் தன்மை உண்டு என்று நம்புகிறோம்.

விழிகள், பரிமாணம், இலக்கிய வெளிவட்டம் போன்ற பத்திரிகைகளை நாங்கள் மிகுந்த மதிப்புடன் அரவணைக்கிறோம். இவைகள், எங்களை ஒத்த சமூக, இலக்கிய, கலாச்சாரப் பார்வை கொண்டிருக்கின்றன.

மேலும், அவை அரசியலிலும் தங்களுக்கான நிலைப்பாட்டைத் தேர்ந்துள் ளது மிக்க மகிழ்ச்சியைத் தருகிறது. காரணம், தமிழகச் சூழலில் இன்று செயற்படும் வெறும் இலக்கியப் பத்திரிகைகூடத் தன் இலட்சியத்தை உண்மையில் நிறைவேற்ற, வெறும் இலக்கிய சிரத்தை மட்டும் காட்டி னால் போதாது என்பதை ஒரு சித்தாந்தமாகவே முன்வைக்கத் தயாராக உள்ளோம்.

தற்சமயம், கலாச்சார இயக்கம் எதுவும் அரசியலைப் புறக்கணிக்க முடியாது என்று நினைக்கிறோம்; அதற்காக நேரடி அரசியலில் ஈடுபடச் சொல்லவில்லை. உங்களுக்கென்று அரசியலிலும் ஒரு பார்வை வேண்டும் என்கிறோம். சிறுபத்திரிகைகளுக்குப் பொருந்தும் இப்பார்வை, எழுத் தாளர்களுக்கும் பொருந்தும்.

மொத்தத்தில், இருவகைப் பத்திரிகைகளுக்கும் உள்ள பொதுப் பண்பு இப்போது முக்கியமாய்க் கவனிக்கப்படவேண்டும். வியாபார கலாச்சாரம் என்ற அரக்கிதான் நம் எல்லோரின் முதல் குறி; காரணம், தமிழில் பத்திரிகை வியாபாரம், அமெரிக்கா மாதிரிப் பூதாகாரமாய்ப் பெருக ஆரம்பித்துள்ளது. சிறுபத்திரிகைகளின் முதல் எதிரி ஜனரஞ்சகப் பத்திரிகைகள்தான் என்பதைக் காணவேண்டும். அதன்பின், ஜனரஞ்சகம் என்பது பற்றிய ஆழமான ஆய்வில், பண்டிதரும் பட்டதாரிக் கும்பலும் கண்ணில் தென்படுவர். அதுபோது, சிறுபத்திரிகைகளுக்குள் உள்தாக்கு தல் குறையும்; கட்சிக் கட்டுப்பாட்டுடன் வெளிவரும் பத்திரிகைகளின் வறட்டுத்தனமும் வெளிப்படாதிருக்காது. மும்முரமான தாக்குதல் பெரும் பத்திரிகை, பல்கலைக் கழகங்கள் என்று திரும்பும்; சிற்றிலக்கியப் பத்திரிகைகளின் லட்சியமான இலக்கியப் பார்வையும் ஆழங்கொள்ளும்.''

1979ல் 'படிகள்' வெளியிட்ட இந்தக் கண்ணோட்டத்தின் முக்கியத் துவம் கருதியே, இவ்விரிவான மேற்கோளை இங்குக் காட்ட நேர்ந்தது. இது இன்றைக்கும் வெகுவாகப் பொருந்திவரும் கருத்தாகவே உள்ளது. சிறுபத்திரிகையாளர்களையும் எழுத்தாளர்களையும் சிந்திக்கவைக்கும் கருத்தும் இதுவாகும்.

'படிகள்' இதழும் நீண்ட காலம் தனது வளர்ச்சியைத் தொடர இயலவில்லை.

1980களின் மத்தியில் மறுமலர்ச்சியும் வளர்ச்சியும் காட்டிய முக்கிய மான பத்திரிகைகள்– 'கொல்லிப் பாவை', 'ஞானரதம்' ஆகியவையாம்.

'கொல்லிப் பாவை' அ. ராஜமார்த்தாண்டன் பொறுப்பில், மிகுந்த 'இன்னல்களுக்கும் இடையூறுகளுக்கும் இடையே', சில வருடங்கள் வளர்ந்தது. பன்னிரண்டு இதழ்களுக்குப் பிறகு, அவர், அந்தக்

காலாண்டிதழை நடத்தும் பொறுப்பை ஆர். கே. ராஜகோபாலனிடம் ஒப்படைத்துவிட்டார். 1985 ஜுலை முதல், 'கொல்லிப் பாவை', அதன் பதின்மூன்றாவது இதழிலிருந்து, 1988ஜூன் வரை– இருபதாவது இதழ் முடிய, நல்ல இலக்கியப் பணிபுரிந்தது. சுந்தர ராமசாமியின் ஒத்துழைப்பு 'கொல்லிப் பாவை'க்கு அதிகம் கிடைத்துவந்ததை அதன் ஒவ்வொரு இதழும் எடுத்துக்காட்டியது. சுந்தர ராமசாமியின் கதை கட்டுரைகள், பசுவய்யாவின் கவிதைகள், மேல்நாடுகளின் கவிதைகள் மொழிபெயர்ப்பு எனப் பலவகைகளில் அது வெளிப்பட்டது.

பிறகு, 1988–ல் சுந்தர ராமசாமி 'காலச்சுவடு' என்ற சொந்தப் பத்திரிகையைத் தொடங்கினார்.

'ஞானரதம்', தேவ. சித்ரபாரதி என்ற பெயர் கொண்டிருந்த அப்பாஸ் இப்ராகிமால், பல வருடங்கள் நடத்தப்பெற்றது. 1986–ல் அவர், 'ஞானரதம்' ஆசிரியர் பொறுப்பை, க. நா. சுப்ரமண்யத்திடம் ஒப்படைத்தார். க. நா. சு. கவனிப்பால் அது ஒரு நல்ல இலக்கிய ஏடாக ஒரு வருடம் வளர்ந்தது. பொருளாதார நெருக்கடி காரணமாக, இப்ராகிம், 'ஞானரத'த்தைத் தொடர்ந்து நடத்த விரும்பவில்லை. ஆகவே, 1987 ஜனவரி இதழ், 'ஞானரதம்' மாசிகையின் கடைசி இதழாக அமைந்தது.

அந்த இறுதி இதழில் க. நா. சுப்பரமண்யம் எழுதிய தலையங்கம் நினைவு கூரத்தகுந்தது. 'தமிழில் எழுத்துத் தரம் உயர' என்பது தலைப்பு. அதில் அவர் குறிப்பிட்டிருந்தார்:

"பொதுவாகத் தமிழில் படிப்பது என்பதும், சிந்திப்பது என்பதும் ஆண்டுக்காண்டு குறைகிற மாதிரித் தெரிகிறது.

இலக்கியம், பொதுவாகக் கலைகள் என்பன பற்றி எந்தச் சமுதாயத்தில் சிந்தனைகள் பெருகி வளரவில்லையோ அந்தச் சமுதாயத்தில் மற்ற வளங்களும் பெருகுவதில்லை என்பது சரித்திர அனுபவம்.

சரித்திர ரீதியில், மூன்று நாலு தலைமுறைகளாகவே ஒரு கலாச்சார நசிவுக்குத் தமிழ்ச் சமுதாயம் உட்படுத்தப்பட்டு வந்திருக்கிறது. மற்ற இந்தியச் சமுதாயங்களில் ஏற்படாத இந்தக் கலாச்சார நசிவு இயக்கம், தமிழர்களிடையே இந்த நூறு ஆண்டுகளில் தன் வேலையைப் பூர்த்தி செய்துவிட்டது.

இப்போது, அதன் விளைவுகளை நாம் அனுபவிக்கத் தொடங்கியிருக்கிறோம்.

கலை என்றால் சினிமா, படிப்பு என்றால் குப்பை கூளங்களைப் படிப்பது, மனித உறவுகள் என்பதைக் கேலிக்கிடமானவையாக நினைப்

பது, எந்தச் சந்தர்ப்பத்திலும் சுயலாபம் தேடுவது, அறிவு என்றால் பதவி வகிப்பது, பதவிகள் வகித்து முடிந்ததும் இந்தப் பதவியினால் லாப மில்லை என்று சொல்வது போலப் பல விஷயங்களை நாம் பார்க்கிறோம்.

அறிவுத் துறைகளில், விஞ்ஞானத் துறையிலும் விமரிசனத் துறையி லும் இன்று ஏற்பட்டிருக்கிற பஞ்சம் சொல்லி முடியாதது.

அறிவுப் போலிகளும், இலக்கியப் போலிகளும் கல்விப் போலிகளும் மலிந்துவிட்டதை நாம் பொருட்படுத்துவதாகத் தெரியவில்லை.

வாழ்க்கையைப் பற்றிய புதிய பார்வை, புதிய நோக்கம் தமிழனுக்கு மிக அவசரமான தேவை. சமுதாயத்தில் தன் நிலையையும் தன்னிடம் உள்ள சமுதாய நோக்கையும் அவன் தெளிவுசெய்துகொண்டு செயல்பட வேண்டிய நேரம் வந்துவிட்டது என்று தோன்றுகிறது.

இதைத் தெளிவு செய்துகொள்ளவே எழுத்து, கலை உபயோகப்பட வேண்டும். நல்ல எழுத்தைத் தெரிந்து கொள்ள இயலாத சமுதாயம் நசிவுப் பாதையில் காலடி எடுத்துவைத்துவிட்டது என்று நிச்சயமாகச் சொல்லலாம்.”

இதை எழுதிய க. நா. சுப்ரமண்யம், சிறுபத்திரிகைகள்– இலக்கியப் பத்திரிகைகள்– படிக்கிற வாசகர்களின் எண்ணிக்கை குறித்துப் பெருமைப் படலாம் என்றும் சொல்லியிருக்கிறார்:

“தமிழ் வாசகர்களைமட்டும் குறைகூறிப் பயனில்லை. பேராசிரியர் கள், பாப்புலர் பத்திரிகைக்காரர்கள் எல்லோரும் பொதுஜன இலக்கிய ரசனையின்மையை வைத்து லாபம் பண்ணத் தயாராக இருக்கிறார்கள். இலக்கியப் பத்திரிகைகள் படிக்க இந்தக் காலநிலையில் 200–300 பேர்வழிகளாவது முன்வருகிறார்களே என்ற மகிழ்ச்சியடையலாம் என்று கூடத் தோன்றுகிறது.”

“இந்த எண்ணிக்கை அதிகரிக்க வழி என்ன என்பதுதான் எனக் குத் தெரியவில்லை” என்றும் க. நா. சு. குறிப்பிட்டிருக்கிறார். இன்று வரை இது யாருக்கும் தெரியவில்லைதான்! இலக்கியப் பத்திரிகை நடத்துகிறவர்களுக்கும், இலக்கியத்தின் வளர்ச்சியில் நாட்டமும் ஈடுபாடும் கொள்கிற இலக்கியவாதிகள் யாருக்குமேதான்!

என்றாலும், 'தமிழ்ச் சிந்தனையை ஆழப்படுத்தும் நோக்கத்தோடும், தமிழ் இலக்கியத்தை வளம் செய்யவேண்டும் என்ற எண்ணத்தோடும், பொதுவாகப் புதுமைகள் பண்ண வேண்டும்– தங்கள் ஆற்றலை நிரூபிக்க வேண்டும்' என்ற ஆசையோடும் அவ்வப்போது சிலர் சிறுபத்திரிகை

வெளியிடும் முயற்சியில் உற்சாகமாக ஈடுபட்டுக் கொண்டு தான் இருக்கிறார்கள்.

1980களிலும் அந்தவிதமான புதிய முயற்சிகளுக்குக் குறைவில்லை. லயம், இனி, புதுயுகம் பிறக்கிறது, மண், பயணம், பாலம், எதிர்வு, அஸ்வமேதா, நிஜம் என்று அநேகமானவை. இவை ஒவ்வொன்றும் தனித்தன்மை காட்டுவதில் ஆர்வங்கொண்டு உழைத்ததைப் பாராட்ட வேண்டும்.

இவை பலவும் ஒருசில இதழ்களே பிரசுரம் பெறக்கூடிய வாய்ப்பி னையே பெற்றிருந்தன. நம்பிக்கையையும் எதிர்பார்ப்பையும் விதைத்தபடி வெளிவந்த இச்சிற்றிதழ்கள் தங்களால் இயன்ற அளவு ஒளிவீச முயன்றுள் ளன என்பது மகிழ்ச்சிக்கும் பெருமைக்கும் உரிய விஷயமேயாகும்.

இப்படிப்பட்ட ஒரு சூழலிலும் காலநிலையிலும்தான், சுந்தர ராமசாமி, 'காலச்சுவடு' காலாண்டிதழை ஆரம்பித்தார். 1988 ஜனவரியில், 'கனவுக ளும் காரியங்களும்' நிறைந்த உள்ளத்தோடு, 'தமிழ்ச் சிந்தனையை ஆழப்படுத்தும் நோக்கத்தை முதன்மையாகக் கொண்டு', படைப்பு, சமூக விமரிசனம், சரித்திரம், தத்துவம், கலைகள் ஆகிய துறைகளைச் சார்ந்த எழுத்துகளை இயன்றவரை தரமாகத் தர முயலும், என்ற அறிவிப்புடன் 'காலச்சுவடு' தோன்றியது.

'காலச் சுவடு' இதழ் ஒவ்வொன்றும் ஒரு சிறப்பிதழே என்று கருதப் பட வேண்டிய விதத்தில் அமைந்திருந்தது. தோற்றத்திலும் உள்ளடக்கத்தி லும் அது தனித்தன்மை காட்டியது. 1989 இறுதியில், அதன் எட்டாவது இதழ் பிரசுரமாயிற்று; அதன்பிறகு, 'காலச் சுவடு' வரவில்லை.

1/4, கிரணம் என்ற காலாண்டிதழ்களும் புதுமை செய்ய முயன்றன. 'கிரணம்', கவிதையில் தீவிரச் சோதனைகள் செய்தது. '1/4' என்ற பத்திரிகை, நான்கு இதழ்களைத்தான் பிரசுரிக்க முடிந்தது. 'கிரணமும்' அதிக காலம் சாதனைகள் புரியக்கூடிய வாய்ப்பைப் பெறவில்லை.

கவனிப்புக்குரிய மற்றொரு பத்திரிகை, 'முன்றில்'. க. நா. சுப்ரமண்யத் தைச் சிறப்பாசிரியராகக் கொண்டு, 1988 செப்டம்பரில், மாதப் பத்திரிக் கையாக 'முன்றில்' பிறந்தது. க. நா. சு. எழுத்துகளை அது அதிகம் பிரசுரித்துவந்தது. 1988 டிசம்பர் மாதம், 'க. நா. சு. நினைவு மலர்' வெளியிட நேரிட்டது. 'முன்றில்' கால–ஒழுங்கைக் கடைப்பிடிக்க முடியாது நிலையும் வந்தது. இருப்பினும், ஒவ்வொர் இதழும் தரமான தயாரிப்பாக, இருமாதம் ஒரு முறை வெளியீடு என வந்து கொண்டிருந்தது. அதன் எட்டாவது இதழிலிருந்து அசோகமித்திரன் சிறப்பாசிரியரானார். ஒன்பதா

வது இதழ், 'ஆண்டு மலர்' ஆகப் பிரசுரம் பெற்றது; 1989 நவம்பர்–டிசம்பர் இதழ் அது. 1990–ல் மூன்று இதழ்களை வெளியிட்டது, 'முன்றில்'. சிறுகதை, கவிதைப் படைப்பிலக்கியத்தக்கு 'முன்றில்' நன்கு பணியாற்றியுள்ளது.

1987–ல் பிறந்து , நல்ல முறையில் வளர்ந்து, இப்போதும் வந்து கொண்டிருக்கிற இலக்கியச் சிற்றேடு, 'கனவு'. சுப்ரபாரதி மணியன், செகந்திராபாத்திலிருந்து, இந்தக் காலாண்டிதழை நடத்தினார். ஒவ்வொர் ஆண்டின் முடிவிலும், பாராட்டப்பட வேண்டிய தன்மையில், 'கனவு' ஆண்டுமலர் தயாரித்து வெளியிட்டது. சிறுகதை மலர், மலையாளக் கவிதைகள் சிறப்பிதழ், கட்டுரைச் சிறப்பிதழ் என்றெல்லாம் 'கனவு' இதழ்கள் மலர்ச்சிபெற்றன. ( பின்னர், 'கனவு', திருப்பூருக்கு மாற்றப் பெற்றது; அதன் போக்கிலும் மாறுதல்கள் ஏற்பட்டன. இவை 1990களில் நிகழ்ந்தவையாகும்.)

சிரத்தையோடு சிறப்பு இதழாகத் தனது ஒவ்வொர் இதழையும் உருவாக்குவதில் கவனிப்புப் பெற்றது, கோணங்கி என்ற படைப்பாளியை ஆசிரியராகக் கொண்டுள்ள, 'கல்குதிரை'. கோணங்கி, திறமையுள்ள படைப்பாளி; புதுமைகள் செய்வதில் ஆர்வம் உடையவர். அவரது 'கல் குதிரை' தனித்தன்மை கொண்ட பத்திரிகையாக வளர்ந்துள்ளது.

சிறப்பிதழ்கள் தயாரிப்பதில் கோணங்கி ஓர் ஒழுங்கு முறையைக் கையாளவில்லை. இந்தி எழுத்தாளர் அக்ஞேயா பற்றி ஒரு சிறப்பிதழ் வெளியிட்டார். அடுத்து, அரவிந்தரின் சாவித்திரி காவியம் பற்றியும், தமிழ்நாட்டுச் சித்தர்கள் இயல்பு குறித்தும் ஒரு சிறப்பு இதழ். அப்புறம், டாஸ்டாவ்ஸ்கி பற்றிய ஒரு மாபெரும் சிறப்பிதழ். இந்தப் போக்கு எப்படி இருந்தபோதிலும், 'கல்குதிரை' தனி வகையான ஒரு சிறந்த சிற்றிதழாக வளர்ந்துவந்திருக்கிறது என்பது மகிழ்ச்சிக்குரிய விஷயம்.

விசேஷமான தனித்தன்மை கொண்ட மற்றொரு சிற்றிதழ், கோயம் புத்தூரிலிருந்து வெளிவந்த, 'நிகழ்'. ஆழ்ந்த சிந்தனை, தீர்க்கமான ஆய்வு, தெளிவான அபிப்பிராயங்கள், புத்தக விமரிசனங்கள், சமுதாய மேம்பாடு குறித்த தத்துவச் சிந்தனைகள் ஆகியவை 'நிகழ்' இதழில் இடம்பெற்றுள்ளன. கோவை ஞானியின் ஆழ்ந்த சிந்தனைத்திறனும், பரந்த கல்வியறிவும் 'நிகழ்' பத்திரிகையின் உள்ளடக்கத்துக்குக் கனம் சேர்த்தன.

'ழ', 'கவனம்' ஆகிய இதழ்களின் தொடர்ச்சிபோல் விளங்கியது, சென்னையில் தோன்றிய 'விருட்சம்'. 1988 பிற்பகுதியில் ஆரம்பமான

இக்காலாண்டிதழ் நல்ல வளர்ச்சி காட்டியது. கவிதை வளத்துக்குக் கணிசமான பங்கு செலுத்தியது. 1990களில் அது 'நவீன விருட்சம்' என்று பெயர்மாற்றம் கொண்டு, பல புதுமைகள் செய்வதில் முனைப்புக் காட்டியுள்ளது.

'விருட்சம்' தோன்றுவதற்கு முன்னர், 'ழ' பத்திரிகையுடன் தொடர்பு கொண்டிருந்த சில நண்பர்கள், 'மையம்' என்ற புதுமை இதழைத் திருவல்லிக்கேணியிலிருந்து வெளியிட்டார்கள். இலக்கியத்துடன், நவீனக் கலைகளுக்கும் நவீனப் படைப்பாளிகளுக்கும் உரிய இடம் அளிப்பதை நோக்கமாகக் கொண்டிருந்தது, 'மையம்'. ஓவியர் ஆதிமுலத்தின் ஓவியங் களை வெளியிட்டு, 'ஆதிமூலத்தின் அக உலகம்' என்றொரு கட்டுரை யைப் பிரசுரித்தது. ஆனால் 'மையம்' நீடித்து வளரவில்லை.

எண்பதுகளில், கோவையிலிருந்து வெளிவந்த 'உயிர் மெய்' வித்தியாசமான ஒரு பத்திரிகையாகக் காணப்பட்டது. 'I try to disturb you and get disturbed in the process' என்று மிருணாள் சென் கூறினார்; 'இதுதான் உண்மையான கலையின்–கலைஞனின் எதிர்பார்ப் பும்' என்று அறிவித்த 'உயிர்மெய்', வித்தியாசமான விஷயங்களைக் கொடுக்க முயன்றது; ஆனால், நீண்டகாலம் உயிரோடு உலாவவில்லை.

எழுபதுகளில், பேராசிரியர் நா. வானமாமலை 'ஆராய்ச்சி' என்ற காலாண்டிதழை நடத்திவந்தார். பல்கலைக்கழக ஆய்வுகளின் ரீதியில் தமிழ் நாவல்களையும் சமூக–பொருளாதாரப் பிரச்சினைகளையும் மார்க்சி யக் கண்ணோட்டத்துடன் ஆய்வு செய்யும் கட்டுரைகளை, 'ஆராய்ச்சி' வெளியிட்டது. நா. வா. இறந்த பிறகு, தேங்கி நின்ற இந்த இதழ், எண்பதுகளில், நா. வா. ஆராய்ச்சிக் குழுவினரால் மீண்டும் கொண்டு வரப்பட்டது. அவர்கள், இதழின் பெயரை, 'நாவாவின் ஆராய்ச்சி என்று மாற்றிக் கொண்டார்கள். இக்காலாண்டிதழ், தரமான விஷயங்களைத் தாங்கித் தொடர்ந்து பிரசுரம்பெற்றது.

மார்க்சியப் பார்வையுடன் சோஷியலிஸ்ட் ரியலிச இலக்கியம் படைக்க முயல்கின்ற முற்போக்கு எழுத்தாளர்களை ஊக்குவித்து, முற் போக்கு இலக்கியப் பணி புரிகிற 'தாமரை', 'செம்மலர்' பத்திரிகைகள், எண்பதுகளிலும், தங்கள் பணியை வெற்றிகரமாகச் செய்துவந்தன.

முற்போக்கு அம்சங்களோடு தீவிரமாகச் செயற்படுகிற மன–ஓசை, புதிய கலாச்சாரம், கேடயம் போன்ற இதழ்களும் வளர்ச்சிப் பாதையில் தடம்பதித்துள்ளன.

தனி இலக்கிய நோக்குக் கொண்ட தீபம், கணையாழி பத்திரிகைகள், 1980களில் நல்ல வளர்ச்சி காட்டின. வெள்ளி விழா ஆண்டை நெருங்கிக்கொண்டிருந்த 'தீபம்' மிகுந்த சிரமங்களோடு வளர்ந்தது. 1986 இறுதியில், 'தீபம்' நா. பார்த்தசாரதி திடீர் மரணம் அடையவும், 'தீபம்' இதழ், சில இதழ்களை வெளியிட்டுவிட்டு ஒடுங்கியது.

'கணையாழி', வெள்ளிவிழா ஆண்டைக் கொண்டாடியது. 1990களில், இவ்விதழ் உருவமாற்றம் பெற்றுத் தனது இலக்கியப் பணியைத் தொடர்ந்தது.

எண்பதுகளில் நின்றும் தோன்றியும், சிரமங்களோடு, இலட்சிய நோக்கை விடாது கைக்கொண்டு வெளிவந்த சிற்றிதழ்களில், 'புதிய நம்பிக்கை'யும் ஒன்று. 90களில், 'புதிய நம்பிக்கை' புதிய உருவமைப்புடனும் புதிய உத்வேகத்தோடும் வரலாயிற்று.

1980களில், சிறு பத்திரிகை வட்டாரத்தில் ஒரு புதிய நோக்கு வெளிப்பட்டது. கனமான விஷயங்களைத் தாங்கிக் குறைந்த அளவு வாசகர்களைமட்டுமே எட்டக் கூடிய சிற்றிதழ்கள்; மற்றும், நிரம்ப 'லைட்டான' விஷயங்களோடு மிக அதிக அளவு வாசகர்களை அடைகிற ஜனரஞ்சகப் பத்திரிகைகள். இவ்விரண்டுக்கும் இடைப்பட்ட, நடுவாந்தரமான இதழ்களே– 'மிட்வே ஜர்னல்'– தற்காலத் தேவையாகும். இந்த வகையான இதழ்கள்– நிரம்பவும் கனமான விஷயங்களாகவும் இல்லாது, மிக லைட்டான விஷயங்களாகவும் இல்லாது, வாசகர்களின் ரசனையை வளர்த்துப் பண்படுத்தக்கூடிய விஷயங்களை வெளியிடும் பத்திரிகைகள்– நடத்தப்படவேண்டும் என்ற கருத்துப் பல இடங்களிலும் எழுந்து ஒலித்தது.

அத்தன்மையில், கவிஞர் மீராவும் சில பேராசிரியர்களும் சேர்ந்து, 'அன்னம் விடு தூது' என்ற மாதப் பத்திரிகையை ஆரம்பித்து நடத்தினார்கள். பத்திரிகை நன்றாக இருந்தது; ரசிகர்களின் பாராட்டுகளை அதிகம் பெற்றது; ஓரளவு வரவேற்பும் இருந்தது அதற்கு. ஆனாலும், பத்து மாதங்களில், பத்தாயிரம் ரூபாய் நஷ்டம் என்று கூறி, பத்தாவது இதழுடன் பத்திரிகையை நிறுத்திவிட்டார்கள்.

பேராசிரியர் தமிழவனும் சிலரும் சேர்ந்து, பெங்களூரில், ஒரு 'மிட்–வே ஜர்ன'லை ஆரம்பித்தார்கள். 'இன்று–இங்கே' என்ற பெயரில், இலக்கிய நோக்குடன் தொடங்கப்பெற்ற இந்த இதழ், போகப் போக, வாசகர்களுக்குப் பிடித்தமான பரபரப்பு விஷயங்களை வெளியிடுவதில் ஆர்வம் காட்டலாயிற்று. அப்படியும் ஒரு வருடத்துக்கு மேலாக அது தாக்குப்பிடிக்க முடியவில்லை.

ஆகவே, 'இருவேறு உலகத்து இயற்கை' என்ற நியதி பத்திரிகை யுலகிலும் நிலைபெற்றுள்ளது என்பது தொடர்ந்து நிரூபணமாகிக் கொண்டிருக்கிறது.

அதாவது, ஆழ்ந்த, கனமான இலக்கிய– கலை– கலாச்சார– சமூகச் சிந்தனைகளை விரும்பிப் பிரசுரிக்கிற சிற்றிதழ்கள் எப்போதும் குறைந்த வாசகர் வட்டத்தையுடைய தனி இனம்தான். ஜிலுஜிலுப்பும் விறுவிறுப்பும் பரபரப்பும் கிளுகிளுப்பும் மசாலாக்களாகச் சேர்கிற 'லைட்ரீடிங் மேட்டரை' மட்டுமே வெளியிடுகிற, வியாபார வெற்றிபெறுகிற ஜனரஞ்சகப் பத்திரி கைகள், மிகுந்த அளவு வாசகர்களை வசீகரிக்கும் சக்தியாக விளங்கு கின்றன.

இருப்பினும், இலக்கியத் தாகத்துடன் கனமான விஷயங்களையும் ஆழ்ந்த சிந்தனைகளையும் நாடுகிற உள்ளத்தோடு, வலிந்து சிரமங்க ளையும் சோதனைகளையும் எதிர்கொள்ளச் சித்தமாக இருப்பவர்கள் இப்போதும் உள்ளனர்; இது மகிழ்ச்சிக்குரியது. இல்லாவிடில் ஆங்காங்கே உற்சாகத்தோடு புதிய முயற்சிகள் தலைதூக்குமா என்ன?

புதுக்கோட்டையில் 'ஒரு' என்ற சிற்றிதழ், சிவகங்கையில் 'கவி' என்பது, பாளையங்கோட்டையில் பல்கலைக்கழக ஆய்வுரீதியான விஷயங்களுக்காகவே 'மேலும்' என்ற இதழ், மிகுந்த கனமும் ஆழமும் கொண்ட சிந்தனைக் கட்டுரைகளை வெளியிடும் 'நிறப்பிரிகை', நாடகத்துக்கென்றே ஒரு தனி இதழாக 'வெளி', திருத்துறைப்பூண்டியி லிருந்து வெளிவரும் 'தகழி' போன்ற சிற்றிதழ்கள் தோன்றியிருப்பது, நாம் நம்பிக்கை இழக்க வேண்டியதில்லை என்ற எண்ணத்தை உண்டாக்குகிறது.

இவை போன்ற கனமும் ஆழமும் கொண்ட புது முயற்சிகள் எனக்குத் தெரியவராமலே இன்னும் எத்தனையோ இருக்கவும்கூடும்.

1960களில், 'சரஸ்வதி' பத்திரிகை பற்றி எழுதிய தி. ஜ. ர. ( தி. ஜ. ரங்கநாதன்), 'சிறுபத்திரிகைகள் குடிசைத் தொழில் போன்றவை' என்று குறிப்பிட்டிருந்தார். குடிசைத் தொழில்களினுள்ளும் குட்டிக் கைத்தொழில் முயற்சிகள்போல அநேகம் சிற்றிதழ்கள் தமிழ்நாட்டில் வெளிவந்து கொண்டிருக்கின்றன.

முகம், சுட்டி, தாராமதி, சுந்தரசுகன், நண்பர் வட்டம் போன்ற இதழ்களை இவ்வகையில் குறிப்பிடலாம். சமூகம், அரசியல், மொழி, மற்றும் தனிமனிதப் பிரச்சினைகள் சம்பந்தமான கூரிய சிந்தனைகளைக் கட்டுரைகளாகவும், கேள்விபதில்கள் என்றும், கவிதை வடிவத்திலும்

இவை பிரசுரிக்கின்றன. ஆயினும், இவை போதிய தாக்கம் ஏற்படுத்தக் கூடியனவாக இல்லை.

மேலும், ஆசை பற்றியும், பத்திரிகை நடத்த வேண்டும் என்ற மன—அரிப்புக் காரணமாகவும், சிறுபத்திரிகைகள் பலராலும் தொடங்கப்பெறு கின்றன. தமிழ்நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்தும், இப்படி எண்ணற்ற இதழ்கள் வந்துகொண்டிருக்கின்றன. எண்பதுகளிலும், இத்தகைய முயற்சி கள், எண்ணிக்கையில் அதிகமாகவே தோன்றியுள்ளன. அமைப்பிலும் பக்க அளவிலும் இவை சிற்றிதழ்களாகவே இருக்கின்றன. ஆனால், உள்ளடக்கம் பற்றி இவை அதிக அக்கறை காட்டுவதில்லை; 'தரம்' பற்றிய கவலை, இவற்றைத் தொடங்கி நடத்துகிற இளைஞர்களுக்குக் கிடையாது. தங்களைத் தாங்களே தகுதிப் படுத்திக்கொள்ள வேண்டும் என்ற உந்து தலும் முனைப்பும், அவர்களிடம் இல்லை. எனவே, மிகப் பல சிற்றிதழ் கள், வெறும் ஆர்வத்தின் வெளிப்பாடுகளாகவே காணப்படுகின்றன.

சிறுபத்திரிகைகளின் வளர்ச்சியையும் நலன்களையும் கருத்தில் கொண்டு, அவற்றின் பிரச்சினைகளை ஆராய்ந்து தீர்வுகாண்பதற்கு உதவியாக அமைப்பு ரீதியில் ஏதேனும் செய்ய வேண்டும் என்ற எண்ணம், சிறுபத்திரிகை நடத்துகிறவர்களுக்கு அவ்வப்போது ஏற்பட்டு வருகிறது. இந்த நோக்கத்துடன், கோயம்புத்தூர் 'தாராமதி' ஆசிரியர் குன்றம் மு. இராமரத்திநம் தலைவராக இருந்து, 'தாஸ்னா'— தமிழ்நாடு ஸ்மால் நியூஸ் பேப்பர்ஸ் அசோஸியேஷன்—என்ற அமைப்பு துவக்கப்பெற்றது. சில வருடங்களாக இது செயற்படுகிறது எனினும், இவ்வமைப்பு பலம் பொருந்தியதாக வளர்ச்சி பெறவில்லை.

இதுபோன்ற ஒன்றிரு முயற்சிகள், சென்னையிலும் திட்டமிடப்பட்டன; அவையும் சரியாக உருவாகவில்லை.





# மணிவாசகர் பதிப்பகம்

31, சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை – 600 108.
தொலைபேசி – 25361039

| | | |
|---|---|---|
| நிறுவனர் | : | பதிப்புச்செம்மல் **ச. மெய்யப்பனார்** |
| நிறுவிய ஆண்டு | : | **1961** |
| வெளியீடுகள் | : | **1500** |
| பரிசுபெற்ற நூல்கள் | : | **65** |
| பல்கலைக்கழகப் பாடநூல்கள் | : | **60** |

6 மொழிகளில் நூல்கள் வெளியிடும் பதிப்பகம்.

10 வகை அகராதிகள் வெளியிட்டுள்ள நிறுவனம்.

குன்றக்குடி அடிகளார் நூல் வரிசை 16 தொகுதிகள் 7200 பக்கங்கள்

நாட்டுப்புறப்பாடல் களஞ்சியம் 10 தொகுதிகள் 3000 பக்கங்கள்

நாட்டுப்புறக் கதைக்களஞ்சியம் 15 தொகுதிகள் 3000 பக்கங்கள்

அறிவியல் வினா–விடை வரிசை, கணித வரிசை, இலக்கியம், இலக்கணம், மானிடவியல், மொழியியல், ஆய்வு நூல்கள், வாழ்க்கை வரலாறு வெளியிடுவதில் முன்னணி நிறுவனம்.



ராஜவல்லிபுரம் கிருஷ்ணசுவாமி – வல்லிக்கண்ணன்

ஆக மலர்ச்சி பெற்று, 65 வருடங்களாக எழுத்துத் துறையில் ஈடுபட்டிருக்கிறார். சிறுகதை, நாவல், குறுநாவல், கவிதை, நாடகம், வரலாறு, தன்வரலாறு, மொழிபெயர்ப்பு, கட்டுரை முதலிய இலக்கிய வடிவங்கள் பலவற்றிலும் தனது திறமையை வெளிப்படுத்திப் பெயர்பெற்றவர். இவர் எழுதிய சரஸ்வதி காலம், புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும், பாரதிக்குப் பின் தமிழ் உரைநடை, தமிழில் சிறுபத்திரிகைகள் ஆகிய ஆய்வுநூல்கள் தமிழ் வரலாற்று ஆவணங்களாக விளங்குகின்றன. இப்போது இவருக்கு 85 வயது. இப்பவும் படிப்பது, எழுதுவது, கடிதங்கள் எழுதுவது, இளைய எழுத்தாளர்களுக்கு ஊக்கம் அளிப்பது என்பதை வாழ்க்கை முறையாகக் கொண்டு இயங்கி வருகிறார்.